உ

பவணந்தி முனிவரியற்றிய

# நன்னூல் மூலமும் 155

# மயிலைநாதருரையும்.

இவை

சென்னை, பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பண்டிதராகிய

உத்தமதானபுரம்

## வே. சாமிநாதையரால்

பல பிரதிகளைக்கொண்டு பரிசோதித்து,

நூதனமாக எழுதிய பலவகைக் குறிப்புக்களுடன்



சென்னை:

வைஜயந்தி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றன.

1918

 [விலை ரூ. 3-2-0.

# இப்புத்தகத்திலடங்கியவை.

# இப்புத்தகத்துள்ள நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி.

---

அகத் - அகத்தியம்.
அகநா - அகநானூறு.
ஆசார - ஆசாரக்கோவை.
இ. வி - இலக்கணவிளக்கம்.
இ. ள் - இதன்பொருள்.
இள, இளம் - இளம்பூரணம்.
இறை - இறையனாரகப்பொருள், இறையனாரகப்பொருளுரை.
இனியது - இனியதுநாற்பது.
ஐங், ஐங்குறு - ஐங்குறுநூறு.
ஐந். எழு - ஐந்திணையெழுபது.
ஐந். ஐம் - ஐந்திணையைம்பது.
கலி, கலித் - கலித்தொகை.
கள, களவழி - களவழிநாற்பது.
குறு, குறுந் - குறுந்தொகை.
சில, சிலப், சிலப்பதி - சிலப்பதிகாரம்.
சிறப்பு - சிறப்புப்பாயிரம்.
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை.
சீவக - சீவகசிந்தாமணி.
சூ - சூத்திரம்.
சூளா - சூளாமணி.
சே - சேனாவரையம்.
திணை. நூற், திணைமா - திணைமாலை நூற்றைம்பது.
திரி - திரிகடுகம்.
திருக் - திருக்குறள்.
திருச்சிற் - திருச்சிற்றம்பலக்கோவையார்.
திருநா - திருநூற்றந்தாதி.
[illegible] - திருமுருகாற்றுப்படை.
திருவிளை - திருவிளையாடற்புராணம்.
தே - தேவாரம்.
தொல் - தொல்காப்பியம்.
ந - நச்சினார்க்கினியம்.
நற் - நற்றிணை.
நான்மணி - நான்மணிக்கடிகை.
நே, நேமி - நேமிநாதம்.
பக் - பக்கம்.
பட், பட்டின - பட்டினப்பாலை.
பதி - பதிகம்.
பதிற் - பதிற்றுப்பத்து.
பரி - பரிபாடல்.
பழ - பழமொழி.
பா - பாயிரம்.
பிங் - பிங்கலந்தை.
பி. ம் - பிரதிபேதம்.
புறத் - புறத்திரட்டு.
புறநா - புறநானூறு.
பு. வெ - புறப்பொருள்வெண்பாமாலை.
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்படை.
பெருமாள் - பெருமாள்திருமொழி.
பொருந - பொருநராற்றுப்படை.
மணி - மணிமேகலை.
மலை, மலைபடு - மலைபடுகடாம்.
முத் - முத்தொள்ளாயிரம்.
முது, முதுமொழி - முதுமொழிக்காஞ்சி.
முருகு - திருமுருகாற்றுப்படை.
மேருமந்தா - மேருமந்தரபுராணம்.
மேற் - மேற்கோள்.
யா. கா - யாப்பருங்கலக்காரிகை.
யா. வி - யாப்பருங்கலவிருத்தி.
வீர - வீரசோழியம்.

---

# முகவுரை.

"ஆதியிற் றமிழ்நா லகத்தியற் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போதமெய்ஞ் ஞான நலம்பெறற் பொருட்டே."

"சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப்
பரமா சாரியன் பதங்கள்
சிரமேற் கொள்ளுதுந் திகழ்தரற் பொருட்டே."

இமிழ்திரை வரைப்பி னமிழ்தமீ தென்னுந்
தமிழெனு மளப்பருஞ் சலதியி னுளவாய்ப்
புலக்கணக் கருவியா மிலக்கணந் தெரிக்கும்
பன்னூ லுட்கிளர் நன்னூ லென்பது
நாவல மிகுத்த பாவலர் யாரும்
அருத்தியிற் கூட்டுணும் விருத்தி யுரையுடன்
ஆரிய மொழியுஞ் சீரிய தமிழும்
சமையத் தொடுநன் கமையத் தழைப்புறு
மடந்தோறும் புலவ ரிடந்தோறு நிலைஇப்
பின்னரவ் வுரையொடும் பேணுகாண் டிகையொடும்
அளவறு புலவரா லச்சிடப் பெறீஇப்
பழக வினிக்குங் கழகந் தோறும்
பல்லாண் டாகப் பயின்றிலங் குறுமே.

*ஆயினும், நன்னூலுக்கு முதலிற் செய்யப்பெற்றதும் இலக்கணவிளக்கவுரை, மேற்கூறிய விருத்தியுரை முதலியவற்றிற்கு ஆதாரமாகவுள்ளதுமான இந்த* மயிலைநாதருரை, *சில நூற்றாண்டுகளாகப் படிப்பாரும் படிப்பிப்பாருமின்றிப் பெயர்வழக்குமற்றுக் கிடந்தமையாலும், சிலசில பகுதிகள் பிற்காலத்தவர்களால் மறுக்கப்பட்டிருப்பினும் தமிழ்நாட்டின் பழையநிலைமையையும் அக்காலத்துப் புலவர்களுடைய கோட்பாடுகளையும் இவைபோன்ற அரிய பலவற்றையும் தெரிவித்தலாலும் இதனைப் பதிப்பிக்கத் துணிந்தேன்.*

இவ்வுரையைப் பெரும்பாலும் உபயோகித்துக்கொண்டோர் இதன் பெருமையைத் தெரிவியாவிடினும் இதன் கருத்துக்களை மறுக்குமிடங்களுள் ஒன்றிலேனும் இவ்வுரையாசிரியர் பெயரை எழுதியிருப்பின், நன்னூலுக்கு மயிலைநாதருரையென ஒன்றுண் டென்பதாவது தெரிந்திருக்கும்; ஆயினும், "நன்னூலுக்குச் சைன ருரையென்று ஒன்றுண்டு; அது பயனற்றது" என்ற ஒரு செய்தி மட்டும் கன்னபரம்பரையில் வழங்கிவந்தது; இவ்வுரை ஏட்டுப் பிரதிகளுள் மிகப்பழையவான சிலவற்றின் தலைப்பில், "மயிலைநாத ருரை" என்பது காணப்பட்டது; அங்ஙனம் காணப்படாதிருப் பின், இக்காலத்தில் இஃது இன்னாருடைய உரையென்று தெரிந்து கொள்ளுதற்கே இடமிராது.

சிவகங்கையைச் சார்ந்த மிதிலைப்பட்டி யென்னும் ஊரில் இருந்த ஸ்ரீ அழகியசிற்றம்பலக்கவிராயரவர்கள் வீட்டில் 1886-ஆம் வருஷத்தில் முதன்முறை இவ்வுரையைப் பெற்றுப்படித்துப்பார்த்த பொழுது, "சனகை" என்பதற்கு, "சனநாதபுரம்" (பக்கம், கஅ) என்று பொருளெழுதியிருந்ததையும், "முன்னோர் மொழிபொரு ளே" (பக். ச) என்பது தனிச்சூத்திரமாகக்காட்டப்படாமல் மேற் கோளாகக் காட்டப்பெற்றிருந்ததையும், "தோன்று தோற்றி" (பக். கரு) என்பது முதலிய இரண்டு சூத்திரங்களும் பனம்பார மென்று தெரிவித்திருந்ததையும், யாப்பருங்கலவிருத்தியுரை, காரி கையுரைகளில் விளங்காமற்கிடந்த "ஓங்கெழின் முதலாக், குன்று கூதிர்" (பக். கருஙு-ச) என்பதை முதனினைப்பாகக்காட்டி அதிற் குறிப்பிட்டசெய்யுட்களை முறையாகப் பின்னர்த் தெரிவித்திருந்த தையும், "எப்பொருளெச்சொலின்" (பக். உகூஉ) என்னுஞ் சூத்திர வுரையில் மரபுப்பெயர்கள் பலவற்றை மிகச்செவ்வையாக விளங்கச் செய்திருந்ததையும், "விதந்த மொழியினம் வேறுஞ்செப்பும்" (பக். உஎச) என்பது பரிமாண மென்றிருந்ததையும், "அறிவருளா சை" (பக். ஙoச) என்பதில் அறிவு முதலிய ஒவ்வொன்றற்கும் மேற்கோள்காட்டி விளக்கியிருந்ததையும், இன்னும் இவை போன்ற பிறவற்றையுங்கண்டு வியப்புற்று, இதனைவாங்கிவந்து படித்துப் பார்க்கையில் இடையிடையே சிலசில ஏடுகள் தவறியிருந் தமை எனக்குத் தெரிந்தது; பின்பு முற்றும் படித்துப்பார்க்கக் கரு திப் பிரதிகளைத் தேடுகையில் திருவாவடுதுறையாதீனம் முதலிய இடங்களிலிருந்து பழைய ஏட்டுப்பிரதிகள் பல கிடைத்தன.

அவற்ருல் முதற் பிரதியிலிருந்த குறைகளெல்லாம் ஒருவாறு தீர்ந்தன.

என் வேண்டுகோளுக்கு இரங்கித் தங்கள் புத்தகசாலையிலுள்ள ஏட்டுப்பிரதிகளை வழக்கம்போலவே அன்புடன் உதவியும், பிரதி தேடும்பொருட்டு அயலிடங்களுக்குச் செல்லுந்தோறும் அங்கங்கே எனக்கு வேண்டிய அனுகூலங்களைச் செய்வித்தும், சில சமயங் களில் அயலிடங்களிலிருந்து வேண்டிய நூல்களை வருவித்தளித்தும் பலவருடங்களாக உபகரித்துவரும் திருவாவடுதுறையாதீனகர்த்த ரவர்களும் அருங்கலைவிநோதர்களுமான ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகரவர்களுடைய அருமை பெருமைகளும் பாஷாபிமானமும் எப்போதும் என் உள்ளத்தே குடிகொண்டிருக்கின்றன.

மூலம், உரை, மேற்கோள் முதலியவற்றிற் காணப்பட்ட பிரதி பேதங்களை உரிய இடங்களில் அமைத்தும், மேற்கோள்களுள் விளங்கியவற்றைப் புலப்படுத்தியும், பத்துப்பாட்டு, சீவகசிந்தாமணி போன்ற உரைபெற்றநூல்களிலிருந்து இவ்வுரையாசிரியர் எடுத்துக் காட்டிய மேற்கோள்களுட் சிலசில பகுதிகள் அவ்வுரைக்கருத்துக்கு வேறுபட்டிருந்தும் பண்டைக்காலத்து வழங்கிய பாடத்தைத் தெரிவித்தற்பொருட்டு உள்ளவாறே காட்டியும் பதிப்பிக்கலானேன்.

சில சூத்திரங்களின் பாடங்கள் இக்காலத்து வழங்குகிற பாடங்களுக்கு வேருகத் தோற்றும்; அவை இவ்வுரைக்கு ஏற்பப் பழைய பிரதிகளிற் காணப்பட்டன வென்று கொள்க. அவற்றுட் சில மிகவும் நயமானவை.

உரையிற் சிலவாக்கியங்களும் சில மேற்கோள்களும் சந்தேகத் திற்கு இடமாக இருந்தும் பிரதிகளின் சிதைவு வேறுபாடு முதலிய வற்ருல் உரையாசிரியருடைய கருத்து விளங்காததுபற்றி அவற் றைத்திருத்திப் பதிப்பித்தற்கு என்மனம் துணியவில்லை; ஆளு லும் நாளடைவில் அவற்றின் உண்மை விளங்கலாம்.

சில சொற்கள் பிரதிகளிற் பலவாருகக் காணப்பட்டமையா லும் பிழையென்று தோற்ருமையாலும் அவை இருந்தவாறே காட் டப்பெற்றன; அவற்றுட் சில வருமாறு:—

அவிநயம், அவினயம், அவிணயம்; புறநடை, புறனடை; குருசில், குரிசில்; பருதி, பரிதி.

பழையபிரதிகள் சிலவற்றில் உயிரும் உயிர்மெய்யுமாகிய ஈகார ஏகார ஐகாரங்களின்பின் யகரம் எழுதப்பெற்றும் இப்போது வழங்குகிற எகரம் மேல்விலங்கு பெற்றும் காணப்பட்டன. இந்நூலில், "எய்து மெகர மொகரமெய் புள்ளி" (சூ. 97) என்றதற்கு ஏற்ப உயிரும் உயிர்மெய்யுமாகிய எகர ஒகரங்கள் புள்ளியுடன் சில பிரதிகளில் வரையப்பெற்றிருந்தன; உயிர் எகரஒகரங்கள் பண்டைக்காலத்துப் புள்ளிபெற்று வழங்கியதை * "நேரிழையார் கூந்தலினோர் புள்ளிபெற நீண்மரமா, நீர்நிலையோர் புள்ளி பெற நெருப்பாம்", "வாம மணிமே கலையார்" (பக். ௩௫௫) என்னும் வெண்பாக்களும் உயிர்மெய் எகர ஒகரங்கள் புள்ளிபெற்று வழங்கியதை † "நெய்கொண்டெ னெட்கொண்டெ னெற்கொண்டென் கொட் கொண்டென், செய்கொண்டென் செம்பொன்கொண் டென்" என்னும் பிந்துமதி உதாரணச் செய்யுளும் விளக்கும்.

சில அன்பர்கள் விரும்பியபடி இந்நூற் சூத்திரங்கள் விளங்குதற்பொருட்டுச் சந்திபிரித்தே பதிப்பிக்கப்பெற்றன.

சில மேற்கோள்களை வசனமென்றாவது செய்யுளென்றாவது இவ்வுரையில் நிச்சயிக்கக்கூடவில்லை; இக்காலத்து வழங்காத சில மொழிகளுக்கும் சில வாக்கியங்களுக்கும் பொருள் புலப்படவில்லை.

"உவர்க்கடலன்ன......கொள்வோயே" (பக். ௩௫௪) என்னும் பகுதி ஓரேபாடலாக வேறிடத்திற் காணப்பெறும் இதில் இடையிடையே பிரித்துப் பிரித்துக் குறிப்புரை எழுதப்பட்டிருந்தமையின், அவ்வாறே பதிப்பிக்க நேர்ந்தது; இதுபோல்வன சில.

இப்புத்தகத்தின் பின்னுள்ள அகராதியில் இந்நூல் மூலம், உரை, மேற்கோள் என்பவற்றிற்கண்ட அரிய மொழிகளும் விஷயங்களும் சிறிய வாக்கியங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. விரிவஞ்சி எல்லாச் சொற்களுக்கும் பொருளெழுதவில்லை; இந்தப் புத்தகத்தைக்கொண்டு வேறு நூல்களையும் அவற்றைக்கொண்டு இதனையும் ஆராய்ந்து உண்மை காணுதற்குக் கருவியாகவே இவ்வகராதி எழுதப்பெற்றது.

---

* **தண்டியலங்காரம்**, மாத்திரைச்சுருக்கமேற்கோள்; கூந்தல் ஓதி, மரம் ஓதி; நீர்நிலை ஏரி, நெருப்பு எரி.

† **யா - வி.** ஒழிபியலுரையிற்கண்ட மேற்கோள்.

இதனை ஆராய்ச்சி செய்யுங்காலத்தும் பதிப்பிக்குங்காலத்தும் உடனிருந்து ஒப்பு நோக்குதல் முதலிய உதவிசெய்து வந்த அன்பர்களுள், மயிலாப்பூர் பி. எஸ். ஹை ஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் பிரஹ்மஸ்ரீ இ. வை. *அநந்தராமையரவர்களும், சென்னை இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலைத் தமிழ்ப் பண்டிதர் சிரஞ்சீவி **ம. வே. துரைசாமிஐயரும்** தத்தமக்குக்கிடைத்த ஓய்வுநேரங்களிலெல்லாம் சிறிதும் சலிப்பின்றி அன்புடன் செய்த பேருதவிகள் ஒருபொழுதும் மறக்கற்பாலனவல்ல.

ஒரு நூலைப் பதிப்பிக்குங்காலத்தில் உளவாகும் காலப்போக்கு பொருட்செலவு உழைப்பு முதலியவற்றைக்காட்டிலும் அதனைத் தேடுதலிலும் பரிசோதித்தல் முதலியவற்றிலும் உளவாகும் காலப்போக்கு முதலியன எத்தனையோமடங்கு அதிகமென்பது சொல்லாமலே விளங்கும்.

பழைய தமிழ் நூல்களின் பரிசோதனைக்கு உடனிருந்து உதவி செய்வோர்கள் விஷயத்தில் எனக்குச் சிறிதும் பொருட்கவலையுண்டாகாதபடி ஸ்ரீஸேது ஸம்ஸ்தானாதிபதிகளும் மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவர்களும் சென்னைச் சட்ட நிரூபணசபை அங்கத்தினர்களுமான கௌரவம் பொருந்திய ம-ா-ா-ஸ்ரீ **பா. இராஜராஜேசுவர ஸேதுபதி மஹாராஜா அவர்கள்** கைம்மாறு கருதாமற் சில வருடங்களாகப் பேரன்புடன் பொருளுதவிசெய்து ஆதரிக்கின்றார்கள் இவர்களுடைய பெருந்தகைமையும் வண்மையும் வித்தியாபிமானமும் மிகவும் மதிக்கற்பாலன.

இவ்வுரைப்பரிசோதனைக்குக் கருவியாக இருந்த பிரதிகள் 15; முற்றுமுள்ளவை 6; அபூர்த்தியானவை 9. அவை வருமாறு:—

| | | | |
|---|---|---|---|
| திருவாவடுதுறை யாதீனத்துப் புத்தகசாலைப் | | பிரதி. | 3 |
| சென்னை இராசாங்கத்துக்கையெழுத்துப் புத்தகசாலை | ... | ,, | 1 |
| மதுரைத் தமிழ்ச்சங்கத்து ... | ... | ,, | 3 |
| மிதிலைப்பட்டி ஸ்ரீ அழகியசிற்றம்பலக்கவிராயரவர்கள் | | ,, | 1 |
| ஆழ்வார் திருநகரி ஸ்ரீ தே. லக்ஷ்மணகவிராயரவர்கள் | ... | ,, | 1 |

* இதுவரையில் அகப்படாமலிருந்த **பழமொழி**யின் முதற்செய்யுளைக் கண்டுபிடித்தவர்கள் இவர்களே; உ அரு-ஆம் பக்கம் பார்க்க.

| | | |
|---|---|---|
| திருநெல்வேலி ம-া-া-ஸ்ரீ கவிராஜ ஈசுவரமூர்த்தியா பிள்ளையவர்கள் | ... | பிரதி 1 |
| ,, இந்து காலேஜ் தமிழ்ப் பண்டிதர் ம-া-া-ஸ்ரீ சொர்ணம் பிள்ளையவர்கள் | ... | * ,, 1 |
| சிதம்பரம் சைவப்பிரகாச வித்தியாசாலைத் தருமபரி பாலகர் ம-া-া-ஸ்ரீ பொன்னம்பலம் பிள்ளையவர்கள் | ... | ,, 1 |
| சென்னைச் சைவவித்தியானுபாலனயந்திரசாலைத்தலைவர் ம-া-া-ஸ்ரீ சாமிநாத பண்டிதரவர்கள் | ... | ,, 1 |
| திரிசிரபுரம் நாஷனல் ஹைஸ்கூல் வித்துவான் ஸ்ரீமத் உ. வே. A. M. அப்பு சடகோபராமானுஜாசாரியரவர்கள் | ... | ,, 1 |
| காஞ்சீபுரம் ம-া-া-ஸ்ரீ ம. தெய்வசிகாமணி முதலியா ரவர்கள் | ... | ,, 1 |

மேற்கூறிய பலவகையான உதவிபுரிந்தவர்களை மறவாமலிருப்பதுடன் இவர்களுடைய க்ஷேமங்களைக் குறித்துத் திருவருளைச் சிந்தித்தலன்றி என்னாற் செய்தற்குரிய கைம்மாறு யாதுளது?

இப்பதிப்பிற் காணப்படுந் தவறுகள் என்னுடைய மறதி முதலியவற்றால் நேர்ந்தனவென்றெண்ணிப் பொறுத்துக்கொள்ளும்படி அன்பர்களை வேண்டிக்கொள்ளுகின்றேன்.

ஒன்றுக்கும்பற்றாத என்னையும் இது போன்ற காரியங்களிற் புகுத்தி இந்த அளவிலாவது நடத்தி நிறைவேற்றியருளும் தோன்றாத் துணையின் பெருங்கருணையைச் சிந்தித்துத் துதித்து வந்திக்கின்றேன்.

"தியாகராஜ விலாஸம்,"
திருவேட்டீசுவரம்பேட்டை,
சென்னை. 6—5—18.

இங்ஙனம்:
வே. சாமிநாதையன்.

* இஃது ஆழ்வார் திருநகரி, ஸ்ரீ அரங்கநாத கவிராயரவர்களால் எழுதப்பெற்றது; இதனை ஸேது ஸம்ஸ்தான வித்துவான் ஸ்ரீமத். உ. வே. ரா. இராகவையங்காரவர்கள் வருவித்து உபகரித்தார்கள்.

உ

# நூலாசிரியர் வரலாறு.

"முன்னோ ரொழியப் பின்னோர் பலரினுள் நன்னூலார் தமக் கெந்நூலாரு மிணையோவென்னுந் துணிவே மன்னுக" (இ. கொ. சூ. 8 - உரை.) எனவும், "பலகலைக் குருசில் பவணந்தி யென்னும் புலவர்பெருமான்" (நன். வி. சூ. 136.) எனவும் பாராட்டப் பெற்றவரான இந்நூலாசிரியரை அறியாதார்யாவர்?

இவர் சைனமதத்தினர்; இந்நூலிலுள்ள * கடவுள் வணக்கங்களிரண்டும், † மொழிக்கு முதற்காரணம் அணுத்திரளென்ற கோட்பாடும், உயிர்களை ‡ ஓரறிவுயிர் முதல் ஐந்தறிவுயிர் இறுதியாக அமைத்திருக்குமுறையும், பவணந்தி யென்னும் பெயரும் இதனைப் புலப்படுத்தும். பிரயோக விவேகவுரையில், "செயப்படுபொருளை ஆக்கல் அழித்தல் அடைதல் முதலாகச் சினேந்திரன் மதம்பற்றி நன்னூலார் பலவாகக் கூறுவர்", "நன்னூலார் வாமனன் சினேந்திரன்செய்த சத்தநூல் பற்றிக் கூறுவர்" (கலித்துறை, 12, 49) என்று வந்துள்ள வாக்கியங்களும் இங்கே கருதற்பாலன.

இவர் துறவறத்தினர்; "பவணந்தி யென்னு நாமத் திருந்தவத் தோனே" (சிறப்பு. அடி, 22) என்பதும் நந்தி முனிவரென இவர் வழங்கப்படுதலும் இதனைப் புலப்படுத்துகின்றன; சைனருள் துறவிகள் நந்தி யென்று வழங்கப்படுதலை அச்சணந்தி, வச்சணந்தியென்னும் பெயர் வழக்குக்களாலும், "கனக நந்தியும் புட்ப நந்தியும் பவண நந்தியுங் குமணமா சுனக நந்தியுந் திவண நந்தியும்" என்னும் தேவாரத்தாலும் அறியலாகும்.

---

* நன். சூ. 55, 257. † நன் சூ. 57, 73; "ஆற்றலுடையுயிர்" (பக்கம். ௯௧) என்னும் சூத்திரமும் இதனை வலியுறுத்துகின்றது.

‡ ஷை ஷை 444 - 48; "ஒன்றி ரண்டொரு மூன்று நாலைந்தாய், நின்ற வைம்பொறி நெறியின் வாழுயி, ரொன்று நீர்மர நிலநெ ருப்புக்காற், றென்றிக் காயமைந் தெய்தி வாழுமே", "நந்து சிப்பிசங் காதி நாவண, குந்தெறும்புகோ பாதி மூன்றண, அந்து தும்பிவண் டாதி நாலவைந், திந்தி யம்பசு நரகர் தேநரர்" (மேருமந்தா. வச்சிரா யுதனுத்தரம். 10. 11.)

திருவல்லத்திற்கு வடக்கேயுள்ள வள்ளிமலையின் குகையொன்றில் அமைந்திருக்கும் பழைய சைனபிம்பங்களுள் ஒன்றன்கீழே வரையப்பெற்றிருக்கும் அடியிற்காட்டிய சாஸனத்திற்கண்ட பவணந்தி பட்டாரரென்பவர் இந்நூலாசிரியராக இருத்தல் கூடுமென்று சிலர் கருதுகின்றனர்; சில காரணங்களால் இஃது அங்கீகரிக்கத் தக்கதாயினும் ஷை சாஸனத்தின் காலம் விளங்காமையால் இதனை உறுதியாக எண்ணக்கூடவில்லை.

"ஸ்வஸ்திஸ்ரீ பாணராயர் குருகளப்ப பவணந்தி பட்டாரர சிஷ்யரப்ப தேவஸேனபட்டாரர பிரதிமா" [Epigraphica Indica, Vol. IV. Page, 142.]

இவருடைய ஆசிரியர் சனகை யென்னு மூரிலிருந்த சன்மதி முனிவரென்பார்; இதனை, "பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள், பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி" (சிறப்பு. அடி, 20 - 21) என்பதனாலும்,

"தன்னூர்ச் சனகையிற் சன்மதி மாமுனி தந்தமைந்தன்
நன்னூ லுரைத்த பவணந்தி மாமுனி நற்பதியுஞ்
சின்னூ லுரைத்த குணவீர பண்டிதன் சேர்பதியும்
மன்னூபுரத் திருவன்ன மின்னே தொண்டை மண்டலமே."

என்னும் தொண்டைமண்டலசதகச்செய்யுளாலும் அறிக.

மாணாக்கரை ஞானபுத்திரரென்றும் ஆசிரியரை ஞானபிதாவென்றும் வழங்குதல் மரபு. சைனர்களால் தெரியவருகின்ற கன்னபரம்பரைச் செய்தியும் இதுவே. இங்கே கூறிய சனகை யென்பது முற்காலத்திற் சனநாதபுரமென்று வழங்கி வந்ததாக மயிலைநாதருரையால் தெரிகின்றது; இதைப்பற்றி விசாரித்த பொழுது, சனநாதபுரமென்னும் பெயரையுடைய ஊர்கள் தென்னாட்டில் நான்கிற்குக் குறையாமலுள்ளன வென்று திருவனந்தபுர ஸம்ஸ்தானத்துச் சிலாசாஸன பரிசோதனைத் தலைவர் ம-ா-ா-ஸ்ரீ டி. ஏ. கோபிநாதராயரவர்கள் எம். ஏ. அன்புடன் தெரிவித்தார்கள்.

இந்நூலாசிரியருடைய ஊரும் மேற்கூறிய சனகையென்றே மேலே காட்டிய தொண்டைமண்டலசதகச் செய்யுளைக்கொண்டு சிலர் நிச்சயிக்கின்றனர். தொண்டை நாட்டிற் * சனகாபுரமென்று

* இவ்வூர், வேலூர் ஜில்லா, அரக்கோணந் தாலுகாவில், சோளசிங்கபுரம் (Sholinghur) போஸ்டைச்சார்ந்த ஊர்களிலொன்றாகத் தெரிகின்றது.

இக்காலத்து வழங்கப்படுகின்ற ஊர் இச்சனகையாக இருக்கலாமென்பது சிலர் கொள்கை; இந்நூலைச் செய்வித்த சீயகங்கன் மனைவியாகிய அரியபிள்ளை யென்பவள், திருவல்லத்தில் திருவல்லமுடைய நாயனருக்கும் அம்பிகைக்கும் சந்தி விளக்கு ஒவ்வொன்று வைத்ததைத் தெரிவிக்கும் *சாஸனமும் திருவேகம்பமுடையார்க்கு அவன் திருநுந்தாவிளக்கு வைத்ததைத் தெரிவிக்கும் காஞ்சீபுரசாஸனமும் இதற்கு அனுகூலமாக இருக்கின்றன.

கொங்குமண்டலத்திலுள்ள இருபத்துநான்கு நாடுகளுள் ஒன்றாகிய † குறும்புநாட்டில், இக்காலத்திற் ‡ சீனபுரம் என்று வழங்கப்படுவதும் முதல் தீர்த்தங்கரராகிய ஆதிநாதருடைய கோயில் உள்ளதுமான சனகாபுரம் இந்நூலாசிரியருடைய ஊரென்று பின்னுள்ள செய்யுளைக்கொண்டு நிச்சயிப்பாருமுளர்:—

(கொங்குமண்டலசதகம்.)

§ "கங்கக் குருசி லுவக்கநன் னூலைக் கனிந்துபுகல்
துங்கப் புலமைப் பவணந்தி மாமுனி தோன்றிவளர்
கொங்கிற் குறும்பு தனிலாதி நாத குருவிளங்கு
மங்குற் பொழிற்சன காபுர முங்கொங்கு மண்டலமே."

இவ்வூர், சீயகங்கனுடைய கங்க நாட்டிற்கு அயலதும் அவனாட்சிக்கு உட்பட்டிருந்ததுமான கொங்குநாட்டில் இருத்தலாலும் சினாலயத்தைப் பெற்றிருத்தலாலும் இதுவும் அங்கீகரிக்கற்பாலதே.

---

* "ஸ்வஸ்திஸ்ரீ குலோத்துங்கசோழதேவர்க்கு யாண்டு முப்பத்து நாலாவது அமராபரணசீயகங்கனம்பிராட்டியான அரியபிள்ளை திருவல்லமுடைய நாயனார்க்குவைத்த சந்திவிளக்கு ஒன்றும் நாச்சியார்க்குவைத்த சந்திவிளக்கு ஒன்றும் இவ்விளக்கு இரண்டுக்கும்........." (South Indian Inscriptions, Vol. III, Part I, Pages, 122 - 123.)

† "கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய்" (தே. ஊர்த்தொகை)

‡ இவ்வூர் ஈரோட்டுத் தாலூகாவிலுள்ளது.

§ இதனையும் பின்னுள்ள "சொல்காப் பியத்தின் குண தோடம்" என்னும் செய்யுளையும் திருச்செங்கோடு, உதயதிவாகரன் பத்திராதிபர் ம-ா-ா-ஸ்ரீ தி. அ. முத்துசாமிக்கோனாரவர்கள் அன்புடன் எழுதியனுப்பினார்கள்.

அமராபரணனென்ற சிறப்புப்பெயர் வாய்ந்த சீயகங்கனென்னும் அரசன் தமிழிலக்கியங்களின் ஆராய்ச்சிக்கு இன்றியமையாததும், பரந்து கிடப்பதுமான தொல்காப்பியத்தைக் கற்று விதி விலக்குக்களை அறிந்துகொள்வது சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராகிய மனிதர்க்கு அரிதென்பதையறிந்து அந்நூலிற் கூறப்படும் எழுத்து முதலிய ஐந்திலக்கணங்களையும் யாவரும் வருத்தமின்றி அறிந்து கொள்ளும்படி ஒவ்வொரு பகுதியையுஞ் சுருக்கித் தொகைவகை விரியால் விளக்கி ஓர் இலக்கண நூலைச் செய்தருளுகவென்றுவேண்டிக்கொண்டமையாலும், இயல்பாகவேயுள்ள இரக்க மிகுதியாலும் இவர் இந்நூலையியற்றி வெளிப்படுத்தினர் ; "அரும் பொருளைந்தையும்...........வகுத்தனன்" (சிறப்பு. அடி 10 - 19) என்பதனாலும்,

"சொல்காப் பியத்தின் குணதோடந் தேர்ந்து சொலுவதற்குத்
தொல்காப் பியங்கற்க நீண்ட ததனைச் சுருக்கியிசை
யொல்காப் பெரும்பவ ணந்தீயென் றோதி யுபகரித்த
வல்கா வலன்சீய கங்கனுந் தான்கொங்கு மண்டலமே"

என்னும் **கொங்குமண்டலசதகச்** செய்யுளாலும் இது விளங்கும்.

"முன்னோர் நூலின் வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்" (சிறப்பு. 18—19) என்பதனால், இவர் தொல்காப்பியத்தில் மட்டுமன்றி அக்காலத்து வழங்கிய **அகத்தியசூத்திரங்களிலும் அவிநயம்** முதலிய பழைய இலக்கண நூல்களிலும் **சைனேந்திரம்** முதலிய வடமொழி வியாகரணங்களிலும் இருவகைவழக்குக்களிலும் முன்பு வழங்கிப் பின்பு வீழ்ந்தொழிந்தவற்றை நீக்கி வழங்குவனவற்றைத் தழுவி மரபுவழுவின்றி இந்நூலையியற்றினமை வெளியாகின்றது.

அகத்தியசூத்திரங்களைப் பின்பற்றினமை, இந்நூலிலுள்ள 130, 258, 259, 272, 290, 294, 299, 322, 326, 332, 339, 341, 354, 377, 381, 394-ஆம் சூத்திரவுரைகளாலும், தொல்காப்பியத்தைப் பின்பற்றினமை தானெடுத்துமொழிதலாக இவரெடுத்துக்கொண்ட "குறியதன் முன்னர்" என்பது முதலிய ஏழு சூத்திரங்களாலும், 105, 130, 319, 357, 371, 377, 388, 448-ஆம் சூத்திர உரைகளாலும், பிற அமைதிகளாலும், அவிநயத்தைப்பின்

பற்றினமை, 59, 73, 101, *124, 127, 130, 149, 263, 319, 359, 369-ஆம் சூத்திரவுரைகளாலும், அகத்தியத்தையும் அவிநயத்தையும் பின்பற்றினமை **நுண்பொருண்மாலையுடையார்** 571-ஆம் திருக்குறட் குறிப்பில், † "பரிபாட்டினுள், நிவந்தோங்குயர்கொடிக்கும் இவ்வாறுரைத்தாராதலால், 'ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ' என்னுஞ் சூத்திரம் **நன்னூலில்** வருதலால், **அகத்தியமாதல் அவிநயமாதலாக** வேண்டுமென்க" என்று எழுதியிருத்தலாலும் ‡ ஆல், ஆன் என்பவற்றையும் மூன்றனுருபாகக் கூறியிருத்தலாலும் விளங்கும்.

திருவாரூரிற் றிருக்கூட்டத்திற் றமிழ்க்கிலக்காகிய **வைத்தியநாதநாவலர்** தாமியற்றிய **இலக்கணவிளக்கத்தில்** இந்நூலி லிருந்து ஏறக்குறைய இருநூற்றைம்பது சூத்திரங்களையெடுத்து அமைத்திருத்தலை உற்றுநோக்கும்பொழுது, பழைய நூல்களிலிருந்து பொருள்களைத் தொகுத்தல் முதலியவற்றிலும் சில்வகை யெழுத்திற்பல்வகைப் பொருளைச் செவ்வனாடியிற் செறித்தினிது விளக்கித் திட்பநுட்பம் பொருந்தச் சூத்திரஞ் செய்தலிலும் இவர் வல்லுநரென்பது புலப்படும்.

கி - பி. 1178முதல் 1216 - ஆம் வருடம் வரையில் அரசு புரிந்த **மூன்றாங்குலோத்துங்கசோழன்** காலத்தவனான மேற்கூறிய சீயகங்கன்காலத்தில் இருந்தவராகத் தெரிதலால், இவருடைய காலமும் அதுவேயெனக் கொள்ளவேண்டும்; "பிங்கல முதலா, நல்லோ ருரிச்சொலி னயந்தனர் கொளலே" (459) என்பது இந்நூற் சூத்திரமாதலால், **பிங்கல** நூலாசிரியர்காலத்திற்கு இவர்

---

* "அம்மு னிகர மாய்த மென்றிவை யெய்தின்" என்னும் பாடபேதம் இங்கே கொள்ளற்பாலது ; "ஆய்தமும் யவ்வு மவ்வொடு வரினே, ஐயெனெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்" என்பது **அவிநயம்; (யா. வி. எழுத்தோத்து,** சூ. 2 - உரை, மேற்.)

† **செந்தமிழ்,** ௭-ஆம் தொகுதி, பக். ௫௨௬.

‡ இந்நூல், 296-ஆம் சூத்திரவுரையைப் பார்க்க ; **ஆல், ஆன்** என்பன **அகத்தியத்திலன்றி அவிநயத்திலும்** மூன்றாம்வேற்றுமையுருபுகளாகக் கூறப்பெற்றுள்ளன ; " ஆலு மானு மூன்றனுருபே என்றனரவிநயனார் " என்பது, **வீரசோழியம்,** வேற்றுமைப்படலம், 6 - ஆம் கலித்துறை உரையிலுள்ள மேற்கோள்.

காலம் பிற்பட்டதென்று தெரிகின்றது; 'பைங்கண், பைந்தார், காரா, சேதா என்றாற்போலும் பண்புத்தொகையாகிய சொற்களைப் பசுமை, கருமை, செம்மையெனப் பண்புப்பெயராக நிறுத்தி, ஈற்றுயிர் மெய்யும் ஈற்றயலுயிருங்கெட்டு வருமொழிக்கேற்ப ஒற்றுத்திரிந்தும் திரியாதும் ஆதிநின்ற அகரம் ஐகாரமாயும் திரிந்தனவென்றும், ஈற்றுயிர்மெய்யும் ஈற்றயலுயிருங்கெட்டு ஆதி நீண்டதென்றும், ஈற்றுயிர்மெய்யும் இடையிலொற்றுங்கெட்டு ஆதி நீண்டதென்றும், பின்னுள்ளோர்சந்திமுடிக்கின்றது பொருந்தாது' (தோல். எச்ச. சூ. 3-ந உரை.) என்னும் பகுதியை "ஈறுபோதல்" (135) என்னும் சூத்திரத்தின் மறுப்பாகக் கொள்ளின், நச்சினார்க்கினியர் காலத்திற்கு இந்நூலாசிரியர்காலம் முற்பட்டதென்று நினைத்தற்கு இடமுண்டு.

---

## நூல்.

இந்நூல், நூற்பா அகவல்களால் யாக்கப்பெற்றது; "முன்னோர் நூலின், வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்" (சிறப்பு அடி 18—9) என்றதனால், இது முதனூலன்று; * எதிர்நூலுமன்று; தொல்காப்பிய முதலியவற்றை நோக்கும்போது வழிநூலாகவும் அகத்தியத்தை நோக்கும்போது † சார்புநூலாகவும் இது கருதப் படும்; இந்நூலுள் ஆங்காங்குச் சூத்திரங்களினிறுதிகளில் அமைத் திருக்கும் 'என்ப' என்னும் பகுதிகளும் இதற்குச் சான்றாகும்.

தொல்காப்பியத்தின் பின்பு இயற்றப்பெற்ற இலக்கண நூல் களுள் இதைப்போலச் சிறந்தது வேறொன்றில்லையென்பது பெரி யோர்கருத்து; பவணந்தி முனிவருடைய நூலாராய்ச்சிப் பெருமை யையும் நூற்பாவியற்றும் வன்மையையும் நன்கு புலப்படுத்துவது; 48 - ஆம் சூத்திரவுரையில் தன்மையாற் பெயர்பெற்ற நூலுக்கு இந்நூற்பெயர் உதாரணமாகக்காட்டப்பெற்றிருத்தலே இதன்பெரு மையை நன்குவிளக்கும்.

இந்நூல், ஐந்ததிகாரங்களை யுடையதாகவே ஆதியிற் செய்யப் பெற்றதென்பதை, "பல்வகைத் தாதுவின்" என்னும் சூத்திரத் தின் விசேடவுரையிலுள்ள "சொல் எழுத்தாற் பெறப்படுதலின்,

---

* இந்நூல் 62 - ஆம் சூத்திரத்தின் விசேடவுரையையும் அதன் கீழ்க் குறிப்பையும் பார்க்க. † 90 - ஆம் சூத்திரவுரையைப்பார்க்க.

எழுத்துச் சொற் பொருள் அணியென்னும் நான்கினும் நடப்பது யாப்பென்பதாயிற்று; ஆகவே ஐந்ததிகாரங்களும் தம்முள் ஒன்றையொன்று இன்றியமையாவெனக்கொள்க" என்பதும், "பழையன கழிதலும்" என்னுஞ் சூத்திரத்தின் கருத்துரையிலுள்ள, "இந்நூலிற் சொன்ன ஐந்ததிகாரத்திற்கும் சிங்கநோக்காய் நிற்பதொரு புறநடையுணர்த்துதல் நுதலிற்று" என்பதும், இந்நூல் விருத்தியுரையில், "இயற்றமிழை அரும்பொருளைந்தெனக் கூறினமையின், இந்நூலுட்கூறிய பொருள் யாப்பு அணிகளென்னும் மூன்றதிகாரங்களும் அக்காலத்துள்ளனபோலும்" (சிறப்பு. உரை) என எழுதப் பெற்றிருத்தலும், "தமிழநன் னூற்றுறைக ளஞ்சுக் கிலக்கியம்" (பெரிய திருமொழித் தனியன்) என்றதும், அதனுரையாசிரியரான ஸ்ரீபிள்ளைலோகாரியசீயர், "தமிழுக்கு எழுத்து முதலான அஞ்சு லக்ஷணத்தையும் அறுதியிடுவதான நன்னூலென்று ஒரு சாஸ்திரம் உண்டு" என்று அதற்கு ஒருவகையாகப் பொருள் செய்திருத்தலும் வலியுறுத்துகின்றன.

பவணந்திமுனிவர், எழுத்து முதலிய ஐந்திலக்கணங்களையும் தொல்காப்பியத்திற்போல எழுத்துச் சொற்பொருளென்னுமூன்றதிகாரத்தினுளடக்கினரென்றும் அவற்றின்முதலில் படைப்பு முதலிய முத்தொழிற்குமுரிய நான்முகன் முதலிய மூன்று கடவுளராயுள்ளான் அருகதேவனேயென்னும் தமது சமயக்கொள்கைக்கு இயைய*நான்முகன் முதலிய மூவர்க்கும் முறையே பொருந்துமாறு சமற்காரமாக அருகக்கடவுள்வணக்கங் கூறினரென்றும், பின்னது இறந்து போகவே முன்னவை இரண்டுமட்டும் வழங்கலாயின வென்றும் சைனரிற் சிலர் கூறுகின்றனர்.

இவ்விருவகைக் கொள்கைகளிலும் அதிகாரத் தொகையில் வேறுபாடுண்டேயன்றி இந்நூல் ஐந்திலக்கணத்தையுமுணர்த்துவதென்பதில் வேறுபாடில்லை.

வழங்கப்பெற்ற பகுதிகளைக்கண்டு இந்நூல் இரண்டதிகாரங்களையேயுடையதென்று பிற்காலத்து ஆசிரியர் வழங்குவாராயினர்;

---

* அருகதேவனை அம்மூன்று பெயர்களால் அவர்கள் வழங்குதலை, "முனிமைமுகடாய" (சீவக. 1609) என்பது முதலிய மூன்று செய்யுட்களாலும், அவற்றின் இறுதியில் உள்ள "அயனும் அரியும் அரனும் இவனே யென்பது கருத்து" என்னும் விசேடவுரையாலும், "திருமாலே திசைமுகனே சிவனே" (திருப்பருத்திக்குன்றப்பத்து, 9) என்பதனாலுமறிக

இக்காரணம் பற்றியே இது சிற்றதிகாரமென்றும் கூறப்படு வதாயிற்று.

விருத்தியுரை முதலியவற்றிற் பாயிரமுள்படச் சூத்திரங்கள் 462 - ஆகக் காணப்படினும் "முன்னோர் மொழிபொருளே" என்னும் வெண்பா மயிலைநாதரால் மேற்கோளாகக் காட்டப்பட்டிருத்தலின், இவ்வுரையின்படி கொள்ளவேண்டுவன 461; அவற்றுள் நூற்பா அகவல் 458; வெண்பா 3.

இந்நூற் சூத்திரங்களெல்லாம் பவணந்திமுனிவராலே செய்யப்பெற்றவையல்ல; தானெடுத்து மொழிதலாக இவராற் பழைய நூல்களிலிருந்து எடுத்தாளப் பெற்றவையுமுண்டு.

இதன் பாயிரப்பகுதிகளுட் சிலசில இறையனாரகப்பொருட் பாயிரத்திலும் **தோல்காப்பியப்**பாயிரவுரைகள் முதலிய உரைகளிலும் வேறுபட்டும் வேறுபடாமலும் சூத்திரங்களாகவும் உரை நடையாகவும் காணப்படுகின்றன; அப்பகுதிகளுள், மூன்று சூத்திரங்கள் (6, 15, 16) தொல்காப்பியம்; ஐந்து (9 - 13) *பாடலனார் செய்தவை; இரண்டு (51 - 2) பனம்பாரம். "பூமலியசோகின்" என்பது முதலியனவே பவணந்தி முனிவராற் செய்யப்பெற்றன வென்றும் அவற்றுள், ஏழுசூத்திரங்கள் (89, 251, 316, 395, 403, 407, 438) தொல்காப்பியமென்றும், திருக்குறள்நுண்பொருண் மாலையுடையார் கொள்கையின்படி †"ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ" என்பது, இந்நூலாசிரியர் வாக்கன்றென்றும் இப்போது தெரியவருகின்றன. தொல்காப்பிய உரையாசிரியர்களைப் போலவே மயிலைநாதரும், சிறப்புப்பாயிரத்துக்கும் அதன் உரைக்கும் இடையே பாயிரச் சூத்திரங்களை அமைத்திருத்தல்இக்கருத்தை வலியுறுத்துகின்றது.

இந்நூற் சிறப்புப்பாயிரமும், "அடையெண்பெயர்", "எழுபானிரண்டெழுத்தின்", "இருதிணைமூவிடம்", "பேரறுபத்திரண்டு" என்னும் பாடல்களும் இன்னாரின்னாரால் இயற்றப்பெற்றவையென்று தெரியவில்லை.

**பிரயோகவிவேகத்தில்,** 2, 5, 6, 7, 8, 12, 16, 18, 19, 21, 24, 26, 33 – 7, 39, 42, 49 - ஆம் கலித்துறைகளினுரை

---

* இப்பெயர் மாடலனரென்றும் வழங்கும். † சூ. 397.

களில் அந்நூலுரையாசிரியரும், இலக்கணக்கொத்தில், 6, 7, 8, 12, 43, 85, 86, 117, 129, 131 - ஆம் சூத்திரங்களினுரைகளில் அந்நூலுரையாசிரியரும், *தொல்காப்பியப்பாயிரவிருத்தியில் "திரிபுடையவாயினும் மரபுநிலை திரியாதன யாவையெனின்" என்பது முதலியவற்றிலும், இலக்கணவிளக்கச் சூறாவளியில் எழுத்தியல், 6, 23, 27, 31, பதவியல், 1, உயிரீற்றுப்புணரியல், 2,7,9,19, 35, பெயரியல், 37 - ஆம் சூத்திரவுரைகளிலும் திருவாவடுதுறையாதீனத்து ஸ்ரீசிவஞானயோகிகளும் எழுதியிருக்கும் இனிய அரிய வாக்கியங்கள் இந்நூலின் அருமை பெருமைகளையும் ஆசிரியருடைய கல்விவன்மையையும் இவர்பால் அவர்களுக்குள்ள நன்மதிப்பையும் விளங்கத் தெரிவிக்கும்.

தொல்காப்பியத்திற் குற்றியலுகரப்புணரியலிலுள்ள விதிகளை இந்நூலில் 180 - ஆம் சூத்திரமுதலியவற்றிலும், அந் நூலில் வேற்றுமையியல் முதலிய மூன்றுறுப்புக்களிலடங்கியவற்றை இந்நூலில் 290 - ஆம் சூத்திரமுதலியவற்றிலும் அடக்கியிருப்பது முதலியனவும் அந்நூலிற் சுருங்கிக்கிடந்த கால இடைநிலை முதலியவற்றை இதில் விரித்துக்கூறியிருப்பது முதலியனவும் அந்நூலில் இல்லாத வடமொழி விதிகளைப்பெயர்த்து இதிற் பதவியலில் அமைத்திருத்தலும் தொகுத்தல் விரித்தல் மொழிபெயர்ப்பு என்னும் நூல்யாப்புக்கள் இந்நூலில் அமைந்திருத்தலை முறையே காட்டுகின்றன. தொகை விரியென்னும் நூல்யாப்பு, சூத்திரக் கிடக்கை முறையால் இந்நூலுள் ஆங்காங்கு உணரலாகும்.

இந்நூற் பொருளையும் இதன் பெயரையும் அமைத்து நலமுறப்பாராட்டிய தமிழ்நூல்களுமுண்டு; அவற்றுட் சில வருமாறு:—

(பிரபுலிங்கலீலை.)

'குறில்வழி லகரந் தனிநிலை யாயுங் கூடிய தகரமுன் னெழுத்தென்
றறிகுறி வடிவந் திரிதல்போ னந்தி யடல்விடை மெய்திரிந் துறினு
நறுமலர் விழியிற் கண்டவ ரெல்லா நந்தியே யென்றுள மகிழ்ந்தார்.''

(திருவேங்கையுலா, 393 - 4.)

"புன்றுரும்பு போன்றலைந்தார் போற்றுமவி காரிமுனஞ்
சென்று வருசொற் றிரிதல்போன்-மென்றளிராம்
மேனிதிரிந்தார்.''

* பழையபதிப்பு, பக். ௬; புதியபதிப்பு, பக். எ.

(திருத்தணிகையுலா, அரிவை.)

" சிற்றதிகா ரங்களெலாந் தேவர் முதலாக
உற்றவதி காரிகளுக் கோர்ந்தளித்தான் - முற்றுலகாள்
போரதிகா ரந்தனைத்தான் பேணுந் திருத்தணிகை
யூரதிகா ரன்றேர்வந் துற்றிடலுங் - காரிகையு
நன்னூ லிடையைய நண்ணிப் பணிந்தெழுந்து
முன்னூ லுரையகல மோகித்தாள் - பன்னாலும்
ஓதா துணரு முயர்புலவீர் மெய்யினுயிர்
போதா திருக்கப் புணர்ப்பதுண்டோ - தாதாரும்
ஆய்தங் குறுகி யரைமாத் திரையினுடல்
தேய்தந்த தென்விதியோ செப்பிடீர் - வாய்தமிழ்சேர்ந்
தேறு முயிரளவா யேய்ந்த வுடலளவு
மாறி யழிந்த வகையென்னே - கூறிடீர்
வல்லினத்து ளோரிரண்டு மற்றை மருங்கான
மெல்லினத்துக் கேபகையாய் விட்டதென்னே - புல்லொருசார்
அல்வழியும் வேற்றுமையே யாகி மதிமருட்டுஞ்
சொல்வழிவா ராததென்ன சூழ்ச்சியோ - நல்ல
இயற்கைக் குயின்மொழிதா னென்னே மிகுத்த
செயற்கைக் கொழிபதனைச் செப்பீர் - பயிற்சிபெறு
நேமிநா தத்தா னிலைதெரியாச் சொற்புணர்ச்சி
காமர்நன் னூற் சூத்திரத்தாற் காட்டிடீர் - சேமமுறு
செவ்வேழ மெய்க்குமுனஞ் சேர்ந்துதட வாமென்கை
ஒவ்வா வியல்பென்கை யோதிடீர் ''

(கோடீச்சுரக்கோவை, 44.)

"செறிப்புறு வான்புகழ்க் கோடீச்சு ரேசர் சிலம்பிடைநாம்
உறுப்பமை நன்னூ லிடைநீடு மைம்பா லுறுதொடர்பைச்
சிறப்புறு கேள்வி பெறுபாங்க னுக்குத் தெளிவுபெறக்
குறிப்பினு மோதும் வெளிப்படைச் சொல்லினுங் கூறுதுமே."

# உரையாசிரியர் வரலாறு.

இந்நூலின் உரையாசிரியராகிய மயிலைநாதர், தொல்காப்பியம் அவிநயம் முதலிய இலக்கணநூல்களிலும் அவற்றின் உரைகளிலும் அக்காலத்துவழங்கிய அகத்தியசூத்திரங்களிலும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு முதலிய சங்கநூல்களிலும் ஐம்பெருங்காப்பியம் முதலிய இலக்கியங்களிலும் சைனசமய நூல்களிலும் பிறவற்றிலும் பயிற்சியுள்ளவர்.

மயிலைநாதர் என்னும் பெயரை உடைமையாலும் இவ்வுரையுள், சைனசமய வழக்குக்களையும் அச்சமயநூற்செய்யுட்களையும் ஆங்காங்கு எடுத்துக் காட்டியிருத்தலாலும், அருகதேவனைப் பலபடப் பாராட்டியிருத்தலாலும் இவர் சைனமதத்தினராக எண்ணப்படுகிறார்.

இப்பொழுது மயிலாப்பூர் என வழங்கும் மயிலையில் முன்பு இருந்ததான * சினாலயத்தில் எழுந்தருளியிருந்த † நேமிநாதருடைய திருநாமமாகிய மயிலைநாதரென்பதே அம்மதத்தினராகிய இவருக்கு இடப்பட்டதென்பர்.

"கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத், திருந்திய செங்கோற் சீய கங்கன்" (சிறப்பு. அடி, 15 - 6) என்பதனுரையில்

---

* மயிலையில் சினாலயம் இருந்தமையும் பிறவும் "மறமே முனிந்து மயிலா புரிநின்று மன்னுயிர்கட், கறமே பொழியு மருட்கொண் டலே" (திருநூற். காப்பு), "தேனிமிர் பைம்பொழிற் றிருமயி லாபுரி,நீனிறக் கடவுணேமி நாதர்" (நேமி. பாயிரவுரை) என்பவற்றாலும், மயிலாப்பூர்ப்பத்து, திருமயிலாபுரிப்பதது, திருமயிலாபுரிநேமிநாதர்பத்து என்னும் சைனப் பதிகங்களாலும் தெரியவருகின்றன. இவ்வாலயம் சில நூற்றாண்டுகளுக்கு முன்பு கடல் கொள்ளப்பட்டதென்றும் கடல்கொள்ளுமென்பதை முன்னதாக அறிந்த சைனப் பெரியோர் இதிலிருந்த படிமை மூன்றையும் எடுத்துச் சென்று அவற்றுள் நேமிநாதருடைய சிலாவிக்கிரகத்தைச் சித்றாமூரிலும், அவருடைய தாம்பிரவிக்கிரகத்தையும் இயக்கிவிக்கிரகத்தையும் இளங்காட்டிலும் தாபித்தனரென்றுங் கூறுவர்; ஷெ இயக்கி வடிவைப் பெருமண்டூரில் தாபித்ததாகச்சொல்லுவதுமுண்டு.

† நேமிநாதர் இருபத்திரண்டாந் தீர்த்தங்கரர்.

சீயகங்கனை இவர் மிகவும் பாராட்டியிருத்தலையும், "பல்வகைத் தாதுவின்" என்பதனுரையில் "கங்க னகன் மார்பன்" என்னும் இனியவெண்பாவொன்றை உதாரணமாகக் காட்டியிருத்தலையும், கங்கனென்னும் பெயரைக் குடிப்பெயருக்கு உதாரணமாகக் கொடுத்திருத்தலையும் நோக்கும்போது இந்நூலை ஆக்குவித்த சீய கங்கனாலோ அல்லது அவன் பரம்பரையில் விளங்கிய ஓர் உபகாரி யினாலோ இவர் ஆதரிக்கப் பெற்று இந்நூலுக்கு உரை செய்யும்படி தூண்டப் பெற்றவரென்று தோற்றுகின்றது.

சூத்திரங்களுள், பொருள் விளங்குவனவற்றிற்குச் சுருக்கமாக வும் ஏனையவற்றிற்கு விரிவாகவும் சிலவற்றிற்கு வினாவிடையாக வும் சிலவற்றிற்கு மோனை எதுகை முதலிய தொடைநயம்படவும் ஒவ்வொன்றைப் பிரித்துப் பிரித்துத் தனித்தனியாகவும் பலவற் றைத் தொகுத்து அவற்றின் இறுதியிற் பிண்டமாகவும் பொரு ளெழுதிச் செல்லுதல் இவர்க்கு இயல்பு.

இவ்வுரையிற் சிலசில இடங்களில், "உரைப்பாருமுளர்", "கூறுவாருமுளர்" என்றுவந்துள்ள பகுதிகளைக்கொண்டு இவ் வுரைக்குமுன் நன்னூலுக்கு வேறுஉரை இருந்திருக்கவேண்டு மென்று சிலர் ஊகித்தல் கூடும்; ஆயினும், அப்பகுதிகளிற் கண்ட வை இப்போது வழங்கிவரும் பிறஉரைகளிற் காணப்படாமை யாலும், விருத்தியுரைகாரரால் மறுக்கப்பட்டவை இதிற்காணப்படு வதாலும் நன்னூலுக்கு இப்போது வழங்கிவரும் உரைகளுள் இதுவே பழமையானதென்று தெரிகிறது.

"மிகத்தெளி கேள்வி யகத்தியனூர்", "ஒல்காப் பெருமைத் தொல்காப்பியனூர்", "அளவறு புலமை யவிநயனூர்", "புவிபுகழ் பெருமை யவிநயனூர்", ஆசிரியர் அகத்தியனூர் ஆசிரியர் தொல்காப் பியனூர் ஆசிரியர் அவிநயனூரென நூலாசிரியர்களையும், "உளங்கூர் கேள்வி யிளம்பூரணரெனு மேதமின் மாதவர்", "தண்டலங் கிழ வன் றகைவரு நேமி யெண்டிசை நிறைபெய *ரிராச பவித்திரப் பல் லவ தரையன்" என உரையாசிரியர்களையும் இவர் பாராட்டிக் கூறி யிருத்தலால், முன்னோர்களிடத்து இவருக்குள்ள அன்பும் மதிப் பும் நன்கு விளங்கும்.

---

* இவர் அவிநயவுரையாசிரியர்.

இளம்பூரணர், அவிநயவுரையாசிரியர் இவர்களுடைய உரைகளை அங்கங்கே எடுத்தாண்டிருத்தலின் அவர்கள் காலத்திற்கும், 'அன்' என்பது, தன்மையொருமை வினைமுற்று விகுதியாக வருமென்பதற்குக் காரிகைக் கடவுள் வாழ்த்திலுள்ள "பாவினங்கூறுவன்" என்னும் பகுதியை மேற்கோள்காட்டியிருத்தலின் அமுதசாகரர் காலத்திற்கும் இவ்வுரையாசிரியர் காலம் பிற்பட்டதென்று தெரிகின்றது.

பாயிரவுரை, இறையனாரகப் பொருட்பாயிரவுரைக் கருத்துக்களையும் ஏனைய பாகங்களினுரைகள் தொல்காப்பிய இளம்பூரணருரையையும் பெரும்பாலும் பின்பற்றிச் செல்லுகின்றன.

இவ்வுரையாசிரியர், தாமெடுத்துக்காட்டும் மேற்கோள்களுட் சிலவற்றை இன்னாரின்னார் வாக்கென்று புலப்படுத்தியிருத்தலும், சில இடங்களில் நூலாசிரியர் கொள்கைக்கும் தம்முடைய கொள்கைக்கும் ஆதாரங் காட்டியிருத்தலும், ஆசிரியர் பொருள்களைத் தொகை வகை விரியாகக் கூறியிருத்தலை அங்கங்கே விளக்கிச் செல்லுதலும் பாராட்டற்பாலன.

அக்கால வழக்கங்களும், சில நூலாசிரியர் உரையாசிரியர் பெயர்களும், சில நூற்பெயர்களும், இக்காலத்து வழங்காத சில செய்யுட்கள் சில வாக்கியங்கள் சிலசொற்கள் சிலசொன்முடிபுகள் சில சொற்களின் உண்மைப்பொருள்கள் சில மரூஉப் பெயர்களின் பண்டை வடிவங்களும், சில தெய்வப் பெயர்கள் சில அரசர் பெயர்களும், சில ஆற்றின் பெயர்கள் சில தேயப்பெயர்கள் சில நகரப் பெயர்கள் சில ஊர்ப்பெயர்களும், சில சாதிப்பெயர்கள் சில பட்டப் பெயர்களும், சில மரபுப் பெயர்கள் சில தொகைப் பெயர்களும், சில மரங்கள் செடிகள் கொடிகளின் பெயர்களும் இவைபோல்வன பிறவும் இவ்வுரையால் தெரியவந்தன; இன்னும், சில மேற்கோள்களின் தொடக்கங்கள் இன்னவையென்றும், மேற்கோள்களுள் வேறுரைகளில் இரண்டாகக் காணப்பெற்றவை ஒன்றென்றும், சில உரைநடைக்கு ஆதாரமான சூத்திரங்களின் முழுவடிவங்கள் இன்னவையென்றும் விளங்கின.

இது வரையில் விளங்காதிருந்தவற்றிற்பல இவ்வுரையால் விளங்கின; அவற்றுட் சிலவருமாறு:—

1. அனுத்திரளை மொழிக்கு முதற்காரணமாகக் கோடலின்,

அவிநயநூலாசிரியர் சைனமதத்தின ரென்பதும், "தன்னையுணர்த்தி னெழுத்தாம்" என்னும் வெண்பா அவிநயமென்று தெரிதலால், அதில் நூற்பாவன்றி வெண்பாவு முண்டென்பதும்; (பக். ௩0, ருச)

2. இதுவரையிற் கையெழுத்துப் பிரதியொன்றிலுங் காணப் படாம லிருந்த பழமொழியின் முதற் செய்யுள் இன்னதென்பது; (பக். உஅரு)

3. "தாதிவர் தாமரை" என்னுங் கடவுள் வாழ்த்தால், எண் ணூலெனப் பண்டைக்காலத்தில் ஒரு நூல் தமிழிலிருந்ததென் பது; (பக். உ0கூ)

4. "விதந்த மொழியினம் வேறுஞ் செப்பும்" என்பது பரி மாண நூலிலுள்ளதென்பது ; (பக். உஎச)

5. அவிநயநூலுரையாசிரியர் இன்னாரென்பது ; (பக். உ௩கூ)

6. இளம்பூரணர் துறவி யென்பது ; (பக். உ௩எ)

7. உரைநடையாகவுள்ள இலக்கண வாக்கியங்களுக்குரிய பழைய சூத்திரங்கள் இன்னவையென்பது. (பக். ருச, கஉ0)

இவர் காட்டும் வசனமாகிய மேற்கோள்களுள், சில பழைய செய்யுட்களின் உறுப்புக்களாகவும், சில அவற்றின் உரைநடைக ளாகவும், சில மோனை எதுகைத்தொடைகளமைந்த கட்டுரைகளா கவும், சில ஒன்றன் பரியாயப் பெயர்களாகவும் காணப்படுகின்றன:

(பழைய செய்யுட்களின் உறுப்புக்கள்.)

1. ஆடாவடகு (பக். கருக)—"ஆடாவடகினுளுங்காணேன்" (திணைமாலை. 4.)

2. தீத்தீண்டுகையார் (பக். கருக)—"தீத்தீண்டுகையார் தெரி வித்தல்காண்" (திணைமாலை. 5.)

3. இதனை, இதனால் (பக். அஎ)—"இதனையிதனாலிவன் முடிக்கும்" (குறள். 517.)

4. அமரீர், அசுரீர் (பக். ககூச)—"அமரீரசுரீரழனுகரையீர்" (யா - வி. உறுப்பியல், சூ. ரு௩ - உரை, மேற்.)

(பழைய செய்யுட்களின் உரை நடை.)

1. தச்சனால் இயற்றப்பட்டவையம் (பக். கஅ௩)—" தச்சன் செய்த சிறுமா வையம் " (குறுந்-61.)

2. குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையவர் (பக். உஎசு)—"நேரிழை மகளி ருணங்குணாக் கவருங்,கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை" (பட். 22-3.)

3. குறுங்கானம்போப (பக். உஉரு)—(சிறுபஞ்ச. 92. உரை.)

4. தைந்நீராடுப(பக். உஉரு)—"தவத்தைந்நீராடுதல்"(பரி.11.)

5. எறும்பு முட்டைகொண்டு திட்டை யேறின் மழைபெய்தது (பக். உசுo)—"பொய்யா வெழிலி பெய்விடநோக்கி, முட்டை கொண்டு வற்புலஞ்சேருஞ்,சிறு நுண் ணெறும்பின் சில்லொழுக்கு" (புறநா. 173.)

(மோனை எதுகைத் தோடைகளமைந்த கட்டுரை.)

1. அடை, ஆடை; நரை, நாரை; மூளை, மூளை: (பக். சரு.)

2. பைதல், பொய்தல் (பக். சரு).

121 - ஆம் சூத்திரத்தின் உதாரணங்கள் முதலிய வற்றாலு முணர்க.

(ஒன்றன் பரியாயப் பெயர்கள்.)

கமலம், சரோருகம், தாமரை, பங்கயம். (பக். அஅ.)

இவருடைய கோள்கைகளுட் சிலவருமாறு:—

1. ஆவி, உயிர், மெய், உடம்பு (எழுத்து) என்னும் பெயர்கள் இடுகுறியென்பது (பக். உரு)

2. அவன்முதலியவற்றைப் பகாப்பதமென்றல் (பக். ருசு)

3 சாரியை இன்னொலியே பயனாக வருமென்றல் (பக். ருகூ)

4. வாவென்பது வம்மென்றாகுமென்றல் (பக். எo)

5. தமிழில் வரும் வடமொழிப் பதங்களுட் பொதுவெழுத்தால் வருவன சிறப்புடையன, அல்லவை சிறப்பில்லாதன வென்றல் (பக். எகூ)

6. ஏகார வினை இடமுதலிய ஐந்தினும் யாவினைக் காலமுதலிய நான்கினும் வருதலரிதென்றல் (பக். கசுகூ)

7. 'அனைத்து'என்னும் சொல் பன்மை யென்றல்(பக். உசரு)

பகுபதமுடிபில் இவர் கொள்கை வேறு; பிற்காலத்தவர் கொள்கை வேறு.

இவர் இவ்வுரையில் எடுத்துக் காட்டிய மேற்கோள்களுள்ள நூல்களுள் இதுவரையில் தெரிந்தவற்றின் பெயர்கள் வருமாறு:—

## I. இலக்கியம்.

அகநானூறு.
ஐங்குறுநூறு.
ஐந்திணையெழுபது.
ஐந்திணையைம்பது.
கலித்தொகை.
களவழிநாற்பது.
குறுந்தொகை
சிலப்பதிகாரம்.
சிறுபாணாற்றுப்படை.
சீவகசிந்தாமணி.
சூளாமணி.
திணைமாலை நூற்றைம்பது.
திரிகடுகம்.
திருக்குறள்.
திருச்சிற்றம்பலக்கோவையார்.
திருமுருகாற்றுப்படை.
நற்றிணை.
நாலடியார்.
நான்மணிக்கடிகை.
பதிற்றுப்பத்து.
பரிபாடல்.
பழமொழி.
புறநானூறு.
பெரும்பாணாற்றுப்படை.
பொருநராற்றுப்படை.
மணிமேகலை.
மலைபடுகடாம்.
முத்தொள்ளாயிரம்.
முதுமொழிக்காஞ்சி.

## II. இலக்கணம்.

அகத்தியம்.
அவிநயம்.
தொல்காப்பியம்.
பனம்பாரம்.
புறப்பொருள் வெண்பாமாலை.
யாப்பருங்கலக்காரிகை.

சில ஏட்டுப் பிரதிகளின் இறுதியில், "காண்டிகையுரை முற்றிற்று" என்னும் வாக்கியம் காணப்படுதலால் இவ்வுரை காண்டிகை யுரையென்று கொள்ளற்பாலது.



# சீயகங்கன் வரலாறு. *

இந்நூலை ஆக்குவித்தோனாகிய சீயகங்கனென்பவன் கங்கர் குடியிற் பிறந்தவன்; மூன்றாங் குலோத்துங்கனுடைய ஆட்சிக்கு அடங்கி யொழுகிய ஓரரசன்; வீரத்திற் சிறந்தவன்; இவன் குலத்தினர், "நன்ன னேற்றை நறும்பூ ணத்தி, துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி" (அகநா. 44), "பங்களர் கங்கர் பல்வேற் கட்டியர்" (சிலப். 25: 157) எனப் பழைய நூல்களிலும் "கங்கரிவ ரையகரு நாடரிவ ரைய" (திருவிளை. மெய்க்காட்டிட்ட. 30) எனப் பிற்காலத்து நூலிலும் கூறப்படுதல் காண்க.

"துன்னருங் கடுந்திறற் கங்கன்" என இவன் முன்னோனொருவனும், 'அமராபரணன்' என இவனும் விதந்து கூறப்பெற்றிருத்தலை நோக்குகையில், இக்குடியிற் பிறந்தாருடைய வீரச்சிறப்பு நன்கு புலனாகும்.

கங்கமென்பது நாட்டின் பெயராகவும் வழங்கும்.

கங்கராச்சியத்தைத் தாபித்தவர் சைனாசாரியர்களில் ஒருவரான ஸிஹ்மநந்தி யாசாரியரென்றும், கங்க பரம்பரையினரிற் பலர் சைன மதத்தைத் தழுவியொழுகினரென்றுஞ் சொல்லுவதுண்டு.

அமராபரணன், ஸ்ரீமத்குவளாலபுரபரமேசுவரன், கங்ககுலோற்பவனென்று சீயகங்கன் தன் மெய்க்கீர்த்திகளிற் பாராட்டப் பெறுவன். மூன்றாங் குலோத்துங்க சோழ தேவனுடைய ஆட்சியின் 27-ஆம் ஆண்டான கி.பி. 1205-ல் வெட்டப்பெற்ற சாசனமொன்றால் இவனுக்குத் திருவேகம்ப முடையானென்று ஒரு பெயருண்டென்றுந் தெரிகின்றது.

குவளாலபுர பரமேசுவரனென்று கூறப்படுதலால் இவனுடைய இராசதானி †குவளாலபுரமென்று தெரிகின்றது. வடமொழி நூல்களில் இது கோலாகலபுரமென்று கூறப்படுகின்றதென்பர்.

இந்நூலாசிரியர் உரையாசிரியர் வரலாறுகளால் இவனுடைய பிறவரலாறுகள் சில புலப்படும்.

---

* இந்நூற் சிறப்புப்பாயிரத்தையும், ம-௱-௱-ஸ்ரீ டி. ஏ. கோபிநாதராயரவர்கள் எம். ஏ. செந்தமிழ், நான்காந்தொகுதியில் எழுதிய 'நன்னூல்' என்னும் ஆராய்ச்சிக்குறிப்பு முதலியவற்றையும் கருவியாகக்கொண்டு இவ்வரலாறு எழுதப் பெற்றது.

† இவ்வூர், ஜோலார்ப்பேட்டையிலிருந்து பங்களூருக்குப் போகும் வழியிலுள்ள கோலாரென்பது.

# பரிசோதனைக் குறிப்பு.



பக்கம் ௪௧, வரி ௭-ல் உள்ள 'பிறப்புமுற்றும்' என்பதை வரி ௮-ல் உள்ள 'வ - று' என்பதற்குப் பின் அமைத்துக்கொள்க.

பக். ௮௨, வரி ௨௩ - ல் உள்ள மருத்துவமாணி, இறைவனெடு வேட்டுவனென்பனவற்றை முறையே மருத்துவமாணிக்கர், இறைவநெடுவேட்டுவரெனத்திருத்திக்கொள்க.

பக். ௬௭, வரி ௨௫-ல் உள்ள ௩௧ - என்னும் சூத்திர எண் முதலியவற்றை ௩௨ - முதலியனவாகத் திருத்திக்கொள்க.

பக். ௧௧௩, வரி ௧௫ - ௧௭ - ல் உள்ள உதாரணங்களுள் தேக்கடிது முதலியவற்றை, தேக்குடம் முதலியவற்றின்முன்னும், தேங்கடிது முதலியவற்றை, தேங்குடம் முதலியவற்றின்முன்னும் அமைத்துக்கொள்க.

பக். ௧௮௬ வரி ௧௦-ல் உள்ள "குயில்சேர்" என்னும் மேற்கோளை "உறைப்புழி' என்பதன் பின்னே அமைத்துக்கொள்க.



உ

கணபதி துணை.

# நன்னூல்

மூலமும்,

## மயிலைநாதருரையும்.

### நன்னூற்சிறப்புப்பாயிரம்.

மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
இலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
[1]பரிதியி னொருதா னாகி முதலீ
றொப்பள வாசை முனிவிகந் துயர்ந்த
அற்புத மூர்த்திதன் னலர்தரு தன்மையின்
மனவிரு ளிரிய மாண்பொருண் முழுவதும்
முனிவற வருளிய மூவறு மொழியுளும்
குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலுள்
அரும்பொரு ளைந்தையும் யாவரு முணரத்
தொகைவகை விரியிற் றருகெனத் துன்னார்
இகலற நூறி யிருநில [2]முழுவதும்
தனதெனக் கோலித் தன்மத வாரணம்
திசைதொறு நிறுவிய திறலுறு தொல்சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீய கங்கன்
அருங்கலை விநோத னமரா பரணன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்

உ௦ பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்
பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
என்னு நாமத் திருந்தவத் தோனே.

என்பது சிறப்புப்பாயிரம். இதற்குப் பொருள் மேலேசொல்லுதும்.

(பிரதிபேதம்.) [1] பருதி. [2] முழுதும்.

---

## பாயிரம்.



### பாயிரத்தின் பெயர்கள்.

(1.) முகவுரை பதிக மணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்.

(இதன்பொருள்.) இவை [1]பாயிரத்திற்குக் காரணப்பெயர்களாம். என்றவாறு.

(பி - ம்.) [1] பாயிரத்துக்குக் காரணப்பெயராம். (க)

### பாயிரத்தின்வகை.

(2.) பாயிரம் பொதுச்சிறப் பெனவிரு பாற்றே.

(இ - ள்.) மேற்சொன்னபாயிரம் பொதுப்பாயிரமும் சிறப்புப்பாயிரமுமென இருவகைப்படும். எ - று.

அவற்றுள், பொதுப்பாயிரமாவது எல்லா நூன்முகத்தும் உரைக்கப்படுவதெனவும், சிறப்புப்பாயிரமாவது ஒரு நூன்முகத்து உரைக்கப்படுவதெனவும் கொள்க. (உ)

### பொதுப்பாயிரம்.

(3.) நூலே நுவல்வோ னுவலுந் திறனே
கொள்வோன் கோடற் கூற்றா மைந்தும்
எல்லா நூற்கு [1]மிவைபொதுப் பாயிரம்.

(இ - ள்.) இவ்வைந்தும் எல்லா நூன்முகத்தும் பொருந்தும் பொதுப்பாயிரமாம். எ - று.

(பி - ம்.) [1] இவை. (௩)

க. நூலின் இயல்பு.

(4.) நூலி னியல்பே நுவலி னோரிரு
பாயிரந் தோற்றி மும்மையி னொன்றாய்
நாற்பொருட் பயத்தோ டெழுமதந் தழுவி
ஐயிரு குற்றமு மகற்றியம் மாட்சியோ
ரு டெண்ணான் குத்தியி னோத்துப் படலம்
என்னு முறுப்பினிற் சூத்திரங் காண்டிகை
விருத்தி யாகும் விகற்பநடை பெறுமே.

(இ - ள்.) இவ்வியல்பினது [1]நூலாவது. எ - று.

ஓரிருபாயிரந்தோற்றலாவது பொதுப்பாயிரமும்சிறப்புப்பாயிரமும் முன்னுடைத்தாதல்.

ஏனைப்பகுதிகளைத் [2]தத்தம் இலக்கணச்சூத்திரத்துட்காண்க.

(பி - ம்.) [1] நூலென்றவாறு. [2] தத்தம்சூத்திரத். (௪)

நூலின்வகை.

(5.) *முதல்வழி [1]புடையென நூன்மூன் றாகும்.

(இ - ள்.) இம்மூன்றுகூற்றதாம் நூல். எ - று.

பி - ம். [1] சார்பென. (௫)

முதல்நூல்.

(6.) அவற்றுள்,—
†வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்.

(இ - ள்.) இவ்வகையால்வருவது [1]முதனூலாவது. எ - று.

(பி - ம்.) [1] முதனூலென்றவாறு. (௬)

வழிநூல்.

(7.) முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
அழியா மரபினது வழிநூ லாகும்.

* இச்சூத்திரமுதலியநான்கும் இறையனாரகப்பொருள் முதற்சூத்திரவுரையிலும், யாப்பருங்கலம் முதற்சூத்திரவுரையிலும் காணப்படுகின்றன.

† தொல்காப்பியம், மரபியல், கசு.

(இ - ள்.) இவ்வகையால்வருவது [1]வழிநூலாவது. எ - று.

(பி - ம்.) [1] வழிநூலென்றவாறு. (எ)

சார்புநூல்.

(8.) இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்.

(இ - ள்.) இப்பெற்றியான்வருவது சார்புநூலாவது. எ - று. இம்மூன்றனுள் ஒன்றாய்வருவது நூலென்றறிக.

தொல்லாசிரியர்சூத்திரங்களை ஈண்டுவைத்துப் பயந்தது என்னையோவெனின், உண்டு பயந்தது ; யாது ?

*"முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கும் - முன்னோரின்
வேறுநூல் செய்துமெனு மேற்கோளில் லென்பதற்குங்
கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்."

என்பதனாற்கொள்க. (அ)

நூற்பொருட்பயன்.

(9.) †அறம்பொரு ளின்பம்வீ டடைதனூற் பயனே.

(இ - ள்.) இந்நாற்பொருளையும்பெறுதல் நூற்குப்பயனாவது. எ - று. (கூ)

எழுமதம்.

(10.)‡எழுவகை மதமே [1]யுடம்படன் மறுத்தல்
பிறர்தம் மதமேற் கொண்டு களைவே
தாஅ னாட்டித் தனாது நிறுப்பே
இருவர் மாறுகோ ளொருதலை துணிவே
பிறர்நூற் குற்றங் காட்ட லேனைப்
பிறிதொடு படாஅன் றன்மதங் கொளலே.

(இ - ள்.) இவ்வெழுமதமும்படவருதல் நூற்கு இயல்பு. எ-று.

(பி - ம்.) [1] உடன்படல். (க0)

---

* இம்மேற்கோளைப் பிற்காலத்தோர் தனிச்சூத்திரமாக வழங்கினர்.

† இதுமுதலிய ஐந்துசூத்திரங்களிலுள்ள சொற்றொடர்களை எடுத்துக்காட்டி, இவ்வாறுசொன்னார் பாடலனாரென்னுமாசிரியரென்பர், குணசாகரர்; (காரிகை, ஒழி. அ - உரை.)

‡ இச்சூத்திரமுதலியமூன்று, யாப்பருங்கலம், முதற்சூத்திரவுரைமுதலியவற்றிலுமுள்ளன.

பத்துக்குற்றம்.

(11.) குன்றக் கூறன் மிகைபடக் கூறல்
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்
வழூஉச்சொற் புணர்த்தன் மயங்க வைத்தல்
வெற்றெனத் தொடுத்தன் மற்றொன்று விரித்தல்
சென்றுதேய்ந் திறுத னின்றுபய னின்மை
என்றிவை யீரைங் குற்ற நூற்கே.

(இ - ள்.) இப்பத்துக்குற்றமும்சாராமல்வருவது நூலாவது. எ - று. (கக)

பத்து அழகு.

(12.) சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசை யுடைமை யாழமுடைத் தாதல்
முறையின் வைப்பே யுலகமலை யாமை
விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த
தாகுத னூலிற் கழகெனும் பத்தே.

(இ - ள்.) இப்பத்து [1]மாட்சியும் வேண்டும்நூற்கு. எ - று.

(பி - ம்.) [1] மாட்சிமையுடைத்தாதல்வேண்டும்நூல். (கஉ)

முப்பத்திரண்டு உத்தி.

(13.) நுதலிப் புகுத லோத்துமுறை வைப்பே
தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்
முடித்துக் காட்டன் முடிவிடங் கூறல்
தானெடுத்து மொழிதல் பிறன்கோட் கூறல்
சொற்பொருள் விரித்தறொடர்ச்சொற் புணர்த்தல்
இரட்டுற மொழித லேதுவின் முடித்தல்
ஒப்பின் முடித்தன் [1]மாட்டெறிந் தொழுகல்
இறந்தது விலக்க லெதிரது போற்றல்
முன்மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்
விகற்பத்தின் முடித்தன் [2]முடிந்தவை முடித்தல்
உரைத்து மென்ற லுரைத்தா மென்றல்

ஒருதலை துணித லெடுத்துக் காட்டல்
எடுத்த மொழியி னெய்த வைத்தல்
இன்ன தல்ல திதுவென மொழிதல்
எஞ்சிய சொல்லி னெய்தக் கூறல்
பிறநூன் முடிந்தது [4]தானுடம் படுதல்
தன்குறி வழக்க மிகவெடுத் துரைத்தல்
சொல்லின் முடிவி னப்பொருண் முடித்தல்
[5]ஒன்றின முடித்த றன்னின முடித்தல்
உய்த்துணர வைப்பென வுத்தியெண் ணான்கே.

(இ - ள்.) இவைமுப்பத்திரண்டும் தந்திரவுத்தியாவன. எ - று.

இவை ஒருசாரார்வேண்டுவன. இவற்றுட் சிலவற்றை மாற்றிச்சொல்லுவாரும் முப்பத்திரண்டின்மேலும் பலவென்பாருமுளர்; அவையும் அறிந்துகொள்க.

(பி - ம்.) 1 மாட்டெறிந்தொழிதல். 2 முடிந்ததுமுடித்தல். 3 உரைப்பாமென்றல். 4 தானுடன்படுதல். 5 ஒன்றனமுடித்தல். (கங)

உத்தி இன்னதென்பது.

(14.) நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி
ஏற்புழி யறிந்திதற் கிவ்வகை யாமெனத்
தகும்வகை செலுத்துத றந்திர வுத்தி.

(இ - ள்.) இவ்வாறுவழங்குதல் தந்திர[1]வுத்தியாம். எ - று.

(பி - ம்.) 1 உத்தியாவது. (கச)

ஓத்திலக்கணம்.

(15.) நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்.

(இ - ள்.) இவ்வகைத்தாவது ஓத்து. எ - று. (கரு)

படலவிலக்கணம்.

(16.) ஒருநெறி [1]யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரினது படல மாகும்.

(இ - ள்.) இப்படிநடப்பது [2]படலமாம். எ - று.

(பி - ம்.) [1] அன்றி. [2] படலமாவது. (கசு)

சூத்திர இலக்கணம்.

(17.) சில்வகை யெழுத்திற் [1]பல்வகைப் பொருளைச்
செவ்வ னாடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்.

(இ - ள்.) இப்பெற்றியான்வருவன [2]சூத்திரங்கள். எ - று.

(பி - ம்.) [1] பல்பயப்பொருளை. [2] சூத்திரங்களாவன. (கஎ)

சூத்திரநிலை.

(18.) ஆற்றொழுக்,—
[1]கரிமா நோக்கந் தவளைப் பாய்த்துப்
பருந்தின் விழுக்கா டன்னசூத் திர நிலை.

(இ - ள்.) இந்நான்குவகையால்நிற்பனவாம், சூத்திரங்கள். எ - று.

* ஆற்றொழுக்கு என்பது, ஆற்றுநீர் தொடர்வறாது ஒழுகுமது போலச் சூத்திரங்களும் தம்முள் இயைபுபட்டொழுகுவது. அரிமா நோக்கமென்பது சிங்கநோக்கம். சிங்கம் நோக்குமிடத்து முன்னை யாரையும் பின்னையாரையும் நோக்குமதுபோல இறந்தசூத்திரத்தி னோடும் எதிர்ந்தசூத்திரத்தினோடும் இயைபுபடக்கிடப்பது. தவளைப்பாய்த்தென்பது, தவளை பாய்கின்றவிடத்து இடையிடை நிலம் கிடப்பப்பாய்வதுபோலச் சூத்திரம் இடையிட்டுப்போய் இயைபு கொள்ளுவது. பருந்தின்விழுக்காடென்பது, பருந்து நடுவேவிழுந்து தான் கருதும்பொருளை எடுத்துக்கொண்டுபோவதுபோல இதுவும் முடிக்கப்படும்பொருளை முடித்துப்போம் இயைபினது.

(பி - ம்.) [1] அரிமான். [2] பருந்தின்வீழ்வன்ன. (கஅ)

சூத்திரவகை.

(19.) பிண்டந் தொகைவகை குறியே செய்கை
கொண்டியல் புறனடைக் கூற்றன சூத்திரம்.

(இ - ள்.) இக்கூற்றனவாம் சூத்திரங்கள். எ - று.

* 'ஆற்றொழுக்கு' என்பது முதலாக, 'முடித்துப்போமியைபினது' என்பது இறுதியாகவுள்ள பகுதிகள் சிலபிரதிகளில் இல்லை.

இவற்றுள்ளே *பொதுமுதலானவிகற்பமெல்லாம் அடங்குமெனக்கொள்க. (கக)

உரையின் பொதுஇலக்கணம்.

(20.) பாடங் கருத்தே சொல்வகை சொற்பொருள்
தொகுத்துரை யுதாரணம் வினாவிடை விசேடம்
விரிவதி காரந் துணிவு பயனோ
டாசிரிய வசனமென் றீரே ழுரையே.

(இ - ள்.) பாடம்சொல்லலும், கருத்துரைத்தலும், [1]சொல்வகுத்தலும், [2]சொற்பொருள் உரைத்தலும், பொழிப்புரைத்தலும், உதாரணங்காட்டலும், வினாத்தோற்றலும், விடைகொடுத்தலும், விசேடங்காட்டலும், விரிவுகாட்டலும், அதிகாரவரவுகாட்டலும், துணிவுகூறலும், பயனொடுபடுத்தலும், ஆசிரியவசனங்காட்டலுமென்னும் இப்பதினான்குபகுதியானும் உரைக்கப்படும், சூத்திரப் பொருள். எ - று.

†தொகுத்துக் கண்ணழித்தல் விரித்துக் கொணர்ந்துரைத்தலென்னும் இருகூறும், பொழிப்பு, அகலம், நுட்பமென்னு மூவகையும், எடுத்துக்கோடல், பதங்காட்டல், பதம்விரித்தல், பதப்பொருளுரைத்தல், வினாதல், விடுத்தலென்னும் அறுகூறும், பொழிப்பு, அகலம், நுட்பம், நூலெச்சம், பதப்பொருளுரைத்தல், ஏற்புழிக்காட்டல், எண்ணலென்னு மேழும், "சொல்லே சொல்வகை சொற்பொருள் சோதனை, [4]மறைநிலை யிலேசெச்ச நோக்கே துணிவே, கருத்தே செலுத்தலென் றீரைந்து கிளவியு, நெறிப்பட வருவது பனுவலுரையே" என்னும் இப்பத்தும், [5]சூத்திரந்தோற்றல், சொல்வகுத்தல், சொற்பொருளுரைத்தல், வினாதல், விடுத்தல், விசேடங்காட்டல், உதாரணங்காட்டல், ஆசிரியவசனங்காட்டல், [6]அதிகாரவரவு காட்டல், தொகுத்துமுடித்தல், விரித்துக்காட்டல், துணிவுகூறல், பயனொடுபுணர்த்தலென்னும் ‡இப்பதின்மூப்பகுதியுமான இம்மத விகற்பமெல்லாம் இப்பதினான்கினுள்ளே அடங்குமெனக்கொள்க.

(பி - ம்.) 1 சொல்வகுத்துரைத்தலும். 2 சொற்பொருளுணர்த்தலும்; சொற்பொருள்விரித்தலும். 3 விரித்துத்தேர்ந்துரைத்தல். 4 மறைநிலையெச்ச நோக்கே. 5 சூத்திரம்வகுத்தல் ஐயந்தோற்றல். 6 அதிகாரவடைவு. (உ0)

---

* பொதுச்சூத்திரமுதலியவேறுபாடுகள்.

† இங்கேகாட்டிய உரைவிகற்பங்களாறும் யாப்பருங்கலம், மூதற்சூத்திரவுரையிலும் காணப்படுகின்றன.

‡ இவற்றோடு கருத்துரைத்தலென்பதொன்றைக்கூட்டி, உரை, கச-என்பர். (வீர. அலங். ந௪ - உரை.)

காண்டிகையுரை.

(21.) கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்
அவற்றொடு வினாவிடை யாக்க லானும்
சூத்திரத் துட்பொரு டோற்றுவ காண்டிகை.

(இ - ள்.) [1]இவ்விருவகையானும் வருவன காண்டிகைகள். எ - று.

காட்டாவது உதாரணம். (உக)

(பி - ம்.) [1] இவ்வகையான்வருவன.

விருத்தியுரை.

(22.) சூத்திரத் துட்பொரு ளன்றியு மாண்டைக்
கின்றி [1]யமையா யாவையும் விளங்கத்
தன்னுரை யானும் பிறநூ லானும்
ஐய மகலவைங் காண்டிகை யுறுப்பொடு
மெய்யினை யெஞ்சா திசைப்பது விருத்தி.

(இ - ள்.) இவ்விதி [2]யனைத்துமுள்ளது விருத்தியாவது. எ-று.

(பி - ம்.) [1] அமையாதியாவையும். [2] அனைத்தும்விருத்தி. (உஉ)

நூலென்னும்பெயர்க்காரணம்.

(23.)*பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா—எஞ்சாத
கையேவா யாகக் கதிரே மதியாக
மையிலா நூன்முடியு மாறு.

(24.) உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப்
புரத்தின் வளமுருக்கிப் பொல்லா—மரத்தின்
கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன் [1]மாந்தர்
மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு.

(இவற்றின்பொருள்.) இவ்வாறு நூற்கப்படுதலானும், நூலே போலச் செப்பஞ்செய்தலானும் நூலெனப்படும். எ - று.

நூலென்றசொற்குக் காரணங்கூறினமெனக்கொள்க. (உங-ச)

(பி - ம்.) [1] மாக்கள்.

* நூலென்றசொல்லுக்கு இவ்வெண்பாக்களிற் கூறப்பெற்றபொருள்கள் இறையனாகப்பொருளுரையிலுமுள்ளன (க - கூ).

உ. ஆசிரியரியல்பு.

நல்லாசிரியர்.

(25.) குலனரு டெய்வங் கொள்கை மேன்மை
கலைபயி றெளிவு கட்டுரை வன்மை
நிலமலை நிறைகோன் மலர்நிகர் மாட்சியும்
உலகிய லறிவோ டுயர்குண மினையவும்
அமைபவ னூலுரை யாசிரி யன்னே.

(26.) தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும்
பருவ முயற்சி யளவிற் பயத்தலும்
மருவிய நன்னில மாண்பா கும்மே.

(27.) அளக்க லாகா வளவும் பொருளும்
துளக்க லாகா நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே.

(28.) ஐயந் திரப் பொருளை யுணர்த்தலும்
மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே.

(29.) மங்கல மாகி யின்றி யமையா
தியாவரு மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்
பொழுதின் முகமலர் வுடையது பூவே.

(இ - ள்.) இவ்வியல்பினையுடையார் [1]கற்கப்படும் ஆசிரியர். எ - று.

(பி - ம்.) [1] கற்பிக்கப்படுமோசிரியர். (௨௫-௧)

ஆசிரியரல்லாதவர்.

(30.) மொழிகுண மின்மையு மிழிகுண வியல்பும்
அழுக்கா றவாவஞ்ச மச்ச மாடலும்
கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை
முடத்தெங் [1]கொப்பென முரண்கொள் சிந்தையும்
உடையோ ரிலரா சிரியரா குதலே.

(31.) [2]பெய்தமுறை யன்றிப் பிறழ வுடன்றரும்
செய்தி கழற்பெய் குடத்தின் சீரே.

(32.) தானே தரக்கொளி னன்றித் தன்பால்
மேவிக் கொளக்கொடா விடத்தது மடற்பனை.

(33.) அரிதிற் பெயக்கொண் டப்பொரு டான்பிறர்க்
கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை.

(34.) பல்வகை யுதவி வழிபடு [3]பண்பின்
நல்லோரொழித்,
தல்லோர்க் களிக்கு மதுமுடத் தெங்கே.

(இ - ள்.) இப்பெற்றிக் குற்றங்களையுடையோர் கற்கப்படாதோர். எ - று.

(பி - ம்.) 1 ஒப்பன. 2 பெய்தல். 3 பண்பினல்லோர்க்கு. (௩0-௩௪)

௩. பாடஞ்சொல்வதன் இலக்கணம்.

(35.) ஈத லியல்பே யியம்புங் காலைக்
காலமு மிடனும் வாலிதி னோக்கிச்
சிறந்துழி யிருந்துதன் றெய்வம் வாழ்த்தி
உரைக்கப் [1]படுபொருள் ளுள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து [க்
கொள்வோன் கொள்வகை யறிந்தவ னுளங்கொள
கோட்டமின் மனத்தினூல் கொடுத்த லென்ப.

(இ - ள்.) இவ்வாறளித்தல் [2]ஈதலியல்பு. எ - று.

(பி - ம்.) 1 படும்பொருள். 2 இயல்பு. (௩௫)

௪. மாணாக்கர்.

(36.) தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளற் குரைப்பது நூலே.

(இ - ள்.) கற்பிக்கப்படுமாணாக்கராவாரிவர். எ - று. (௩௬)

மாணாக்கர்வகை.

(37.) அன்னமாவே மண்ணொடு கிளியே
இல்லிக் குடமா டெருமை நெய்யரி
அன்னர் தலையிடை கடைமா ணாக்கர்.

(இ - ள்.) அன்னமும் பசுவும்போல்வார் தலைமாணாக்கர்; [1]மண்ணும் கிளியும்போல்வார் இடைமாணாக்கர்; இல்லிக்குடம், ஆடு, எருமை, பன்னாடைபோல்வார் கடைமாணாக்கர். எ - று.

இவரியல்பு விரித்துரைத்துக்கொள்க.

(பி - ம்.) [1] பசுமண்ணும். (௩௭)

கற்பிக்கப்படாதோர்.

(38.) களிமடி மானி காமி கள்வன்
பிணிய னேழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் றொன்னூற் கஞ்சித்
தடுமா றுளத்தன் றறுகணன் பாவி
படிறனின் னோர்க்குப் பகரார் நூலே.

(இ - ள்.) [1]இவர் கற்பிக்கப்படாமாணாக்கர். எ - று.

(பி - ம்.) [1] இவர்கள். (௩௮)

௫. பாடங்கேட்குமுறை.

(39.) கோடன் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று [1]வழிபடன் முனியான்
குணத்தொடு பழகி யவன்குறிப் பிற்சார்ந்
திருவென விருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவ னன்ன வார்வத்த னாகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை [2]கேட்டவை விடாதுளத் தமைத்துப்
போவெனப் போதலென்மனார் புலவர்.

(இ - ள்.) இது நூல்கேட்குமியல்பு. எ - று.

(பி - ம்.) [1] வழிபட. [2] கேட்பவை. (௩௯)

பயிற்சி.

(40.) நூல்பயி லியல்பே நுவலின் வழக்கறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
*ஆசாற் சார்ந்தவை [1]யமைவரக் கேட்டல்

* இவ்வடி சிலபிரதிகளில்லை.

அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினுதல் வினுயவை விடுத்த லென்றிவை
கடனுக் கொளினே [2]மடநனி யிகக்கும்.

(இ - ள்.) இவ்வகையொழுகல் நூல்பயிறலாவது. எ - று.

(பி - ம்.) [1] அமைவுற. [2] மடன். (சo)

(41.) ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பிற்
பெருக நூலிற் பிழைபா டிலனே.

(42.) முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும்.

(43.) ஆசா னுரைத்த தமைவரக் கொளினும்
காற்கூ றல்லது [1]பற்றல னுகும்.

(44.) அவ்வினை யாளரொடு பயில்வகை [2]யொருகாற்
செவ்விதி னுரைப்ப வவ்[3]விரு காலும்
மையறுபுலமை மாண்புடைத் தாகும்.

(இ - ள்.) [4]இவ்வாறொழுகுவர், நூல்கற்பவர். எ - று.

(பி - ம்.) [1] பற்றிலனுகும்; பற்றலவாகும். [2] ஒருபால். [3] இருபாலும். [4] இவ்வாறு நூல் கற்கப்படுவது; இவ்வாறொழுகல் நூற்கியல்பு. (சக-ச)

வழிபாடு.

(45.) அழலி னீங்கா னணுகா னஞ்சி
நிழலி [1]னீங்கா னிறைந்த நெஞ்சமோ
டெத்திறத் தாசா னுவக்கு மத்திறம்
மறத்திற் றிரியாப் படர்ச்சி வழிபாடே.

(இ - ள்.) இவ்வாறொழுகல் வழிபாடாவது. எ - று.

(பி - ம்.) [1] நீங்கா னிறைந்த. (சரு)

---

## சிறப்புப்பாயிரம்.

(46.) ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ [1]டாயவெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே.

(47.) காலங் களனே காரண மென்றிம்
மூவகை யேற்றி மொழிநரு முளரே.

(இ - ள்.) இப்பதினொன்றும் சிறப்புப்பாயிரமாம். எ - று.

சிறப்பென்றது ஈண்டு ஒன்றற்கேயுரியதென்றவாறு.

(பி - ம்.) [1] ஆயெண். (சசு-எ)

நூற்பெயர்வகை.

(48.) முதனூல் கருத்த னளவு மிகுதி [னும்
பொருள்செய் வித்தோன் றன்மைமுத னிமித்தி
இடுகுறி யானுநூற் கெய்தும் பெயரே.

(இ - ள்.) இவ்வெட்டனுள் ஒன்றுபற்றிவரும் நூற்குப்பெயர். எ - று.

அவற்றுள், முதனூலாற்பெயர்பெற்றன [1]ஆரியபடலம், பாரத முதலாயின. கருத்தனாற் பெயர்பெற்றன, அகத்தியம், தொல்காப்பிய முதலாயின. அளவினாற் பெயர்பெற்றன பன்னிருபடலம், *நாலடி நானூறு முதலாயின. மிகுதியாற்பெயர்பெற்றன †களவியல் முதலாயின. பொருளாற் பெயர்பெற்றன அகநானூறு, புறநானூறு முதலாயின. செய்வித்தோனாற்பெயர்பெற்றன சாதவாகனம், இளந்திரைய முதலாயின. தன்மையாற்பெயர்பெற்றன சிந்தாமணி, சூளாமணி, நன்னூல் முதலாயின. இடுகுறியாற்பெயர்பெற்றன [2]நிகண்டு, கலைக்கோட்டுத்தண்டு முதலாயின.‡

(பி - ம்.) [1] ஆரியப்படலம். [2] நிகண்டுநூறலைக்கோட்டுத்தண்டு. (சஅ)

நூல்யாப்பு.

(49.) தொகுத்தல் விரித்த றொகைவிரி [1]மொழிபெயர்ப்
பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப.

(இ - ள்.) நூலியாப்பு இந்நாற்கூற்றதாம். எ - று.

(பி - ம்.) [1] மொழிப்பெயர்ப்பு. (சகூ)

---

* நாலடியார்; நாலடி நானூறென்னும் பெயர், யாப்பருங்கலவிருத்தி முதலியவற்றிலும் காணப்படுகின்றது. † இறையனாரகப்பொருள்.

‡ செய்தானாற்பெயர்பெற்றன: அகத்தியம், தொல்காப்பியமென இவை; செய்வித்தோனாற்பெயர்பெற்றன சாதவாகனம், இளந்திரையமென இவை; இடுகுறியாற்பெயர்பெற்றன நிகண்டு, கலைக்கோட்டுத்தண்டென இவை; அளவினாற்பெயர்பெற்றது பன்னிருபடலமென்பது; சிறப்பினாற்பெயர்பெற்றது களவியலென்பது (இறை. க - சூ. உரை).

சிறப்புப்பாயிரம் செய்தற்குரியோர்.

(50.) தன்னா சிரியன் றன்னொடு கற்றோன்
தன்மா ணாக்கன் றகுமுரை காரனென்
றின்னோர் பாயிர மியம்புத [1]லியல்பே.

(இ - ள்.) இவருள் ஒருவர் பாயிரம் [2]சொல்லுதலியல்பு எ-று.

(பி - ம்.) 1 கடனே. 2 செய்தல். (ருo)

சிறப்புப்பாயிரம் பிறர்செய்தற்குக் காரணம்.

(51.) தோன்று தோற்றித் துறைபல முடிப்பினும்
தான்றற் புகழ்த றகுதி யன்றே.

(இ - ள்.) நூல்செய்தோன் பாயிரஞ்செய்தல் இயல்பன்று. எ - று. (ருக)

(52.) மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினும்
[1]தன்னுடை யாற்ற லுணரா ரிடையினும்
[2]மின்னிய வவையிடை வெல்லுறு பொழுதினும்
தன்னை மறுதலை பழித்த காலையும்
ரு தன்னைப் [3]புகழ்தலுந் தகும்புல வோர்க்கே.

(இ - ள்.) [4]நூல்செய்தோன் பாயிரஞ்செய்யிற் றன்னைப்புகழ்ந் தானும்; ஆகவே தன்னைப்புகழ்தல் தகுதியன்றென்றார்; ஈண்டுச் சொன்ன [5]இடங்களிலாயின், தன்னைப் புகழ்தலும் தகும். எ - று.

இவ்விரண்டு சூத்திரமும் * [6]பனம் பாரம்.

(பி - ம்.) 1 தன்னிடை. 2 மன்னிய. 3 புகழ்வதும். 4 மேல்நூல் செய்தவன். 5 இடங்களிற்றன்னை. 6 பனம்பாரனார்; பனம்பாரனம்; பனவிபாரம். (ருஉ)

பாயிரம் நூற்கு இன்றியமையாத தென்பது.

(53.) ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே.

(இ - ள்.) அளவிறந்த இடத்ததாய்ப் பரந்ததாயினும் பாயிர மில்லாதது நூலன்று. எ - று.

ஈண்டுப் பாயிரமென்றது சிறப்புப்பாயிர மென்றுணர்க. (ருங)

* ஆசிரியர் பனம்பாரனாாலியற்றப்பெற்ற நூல்.

(54.) மாடக்குச் சித்திரமு [1]மாநகர்க்குக் கோபுரமும் [ன்
ஆடமைத்தோ ளல்லார்க் கணியும்போல்-நாடிமு
ஐதுரையா நின்ற [2]வணிந்துரையை யெந்நூற்கும்
பெய்துரையா வைத்தார் பெரிது.

இஃது, அச்சிறப்புப்பாயிரத்தைச் சிறப்பித்ததெனக் கொள்க.

அஃதேல் நூல்கேட்கப்புகுந்தார்க்குப் புறவுரைகேட்டுப் பயன் என்னையோவெனின், கொழுச்சென்றவழித் துன்னூசி இனிது செல்லுமாறுபோலப் பருப்பொருட்டாகிய பாயிரங்கேட்டார்க்கு நுண்பொருட்டாகிய நூல் இனிது விளங்குமென்பதனானும், 3' சில வெழுத்தினானியன்ற நூற்கு இன்றியமையாத பாயிரமறியாதாய்! 4 பலவெழுத்தினானாகிய நூல் யாங்ஙனம் அறிதியோ? பேதாய்' என்று இகழப்படுதலானும் இவ்விருவகைப்பாயிரமும் வேண்டும் என்க.

இப்பாயிரச்சூத்திரங்களை விரித்தெழுதிற் பரக்குமென்பதனானும் பெரும்பாலும் தாமே பொருள்விளங்கிக்கிடத்தலானும் உரை விரித்தெழுதிற்றிலம்; இவற்றை விளங்க விரித்துரைத்துக்கொள்க.

(பி - ம்.) 1 மாணகர்க்கு. 2 அணிந்துரையே. 3 சில்லெழுத்தினான். 4 பல்லெழுத்தினான். (ருச)

---

இனித் 1தமிழினது தன்மையும் இந்நூற்குச் சிறப்புப்பாயிரமும் சொல்லுதும்.

(பி - ம்.) 1 தமிழது.

*மலர்தலை யுலகின் * * * இருந்தவத் தோனே.

என்பது, தமிழினது தன்மையும் இந்நூற்குச் சிறப்புப்பாயிரமும் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மலர் தலை உலகின் - பரந்த இடத்தையுடைய பூமியின்கண், மல்கு இருள் அகல - செறிந்த இருள்நீங்க, இலகு ஒளி பரப்பி - விளங்காநின்றகதிரைவிரித்து, யாவையும் விளக்கும் - நிலம் நீர் 1முதலாகிய எல்லாப்பொருள்களையும் விளங்கக்காட்டும்,—பரிதியின் - ஆதித்தனைப்போல, ஒருதானாகி - 2உலகிற்கெல்லாம் தான் ஒருவனேயாகி, முதல் ஈறு ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து

* இதன் முழுப்பாகத்தை முதற்பக்கத்திற் காண்க.

உயர்ந்த - பிறப்பும் இறப்பும் உவமையும் அளவும் 3ஆர்வமும் செற்றமுமின்றி ஞானகுணங்களான் மிக்க, அற்புதமூர்த்தி - ஆச்சரியத்தையுடைய இறைவனானவன், தன் அலர்தரு தன்மையின் - தன்னுடைய பரவாநின்ற ஆற்றலானே (தன்னுடைய விரிந்த தன்மையாகிய கருணையெனினுமமையும்), மன இருள் இரிய - உலகத்துள்ள உயிர்களினுடைய மனங்களிலுண்டான அறியாமையாகிய இருள் நீங்க, மாண் பொருள் முழுவதும் - மாட்சிமைப்பட்ட 4அறமுதற்பொருள் அனைத்தினையும், முனிவு அற அருளிய - (5பதினெண்ணிலத்திலுள்ளார் எல்லாரும்) விரும்ப அருளிச்செய்த, மூவறு மொழியுளும் - பதினெட்டு மொழிகளுள்ளும், குணகடல் குமரி குடகம் வேங்கடம் எனும் நான்கு எல்லையின் இரு தமிழ் கடலுள் - இச்சொன்ன நான்கு 6கரைக்கும் உட்பட்டு வழங்காநின்ற பெரிய 7தமிழாகிய கடலிலுள்ள, அரு பொருள் ஐந்தையும் - எழுத்துச் சொற்பொருள் யாப்பு அணியென்னும் 8அரியபொருளைந்தையும், யாவரும் உணர - எல்லாரும் உணரும்படி, தொகை வகை விரியின் தருக என - இம்மும்மையானும் விளங்கச்சொல்லுக என, துன்னார் இகல் அற நூறி - பொருந்தாருடைய மாறுபாடெல்லாம் மாயும்படி கெடுத்து, இரு நிலம் முழுவதும் - பெரிதாகிய பூமி அனைத்தினையும், தனதென கோலி - தனதென்றே பற்றிக்கொண்டு, தன் மத வாரணம் - தனக்கேயுரிய மதயானையை, திசைதொறும் நிறுவிய - எட்டுத்திக்கிலும் எல்லைக்குறியாகநிறுத்திய, திறல் உறு தொல் சீர் - வலியோடுபொருந்திய உலகுள்ளதான அன்று9தொடங்கி இடையறுது வாராநின்ற புகழினையும், கரு கழல் - *கூடாதாரைக் கொன்று கட்டின குரைகழலினையும், வெண்குடை - பற்றலர்பகரும் பழிமாசறுத்து 10மற்றுலகளிக்கும் மணிமுத்தக்குடையினையும், கார்நிகர் வண்கை - 11விழைபயன்கருதாது மேதினியவர்க்கு மழைபோலுதவும் மாமலர்க்கையினையும், திருந்திய செங்கோல் - குற்றமற்றுலகிற் கொடுங்கலிதுரந்து செப்பம்வளர்க்கும் செய்யகோலினையுமுடையவனை, சீய கங்கன் - தங்கலர்குலமாம் 12வெங்கயமனுங்கும் சிங்கமாகிய கங்கனென்பான், அரு கலை விநோதன் - அரியநூல்களை ஆராய்தலே தனக்கு இன்பமாகவுடையான், அமராபரணன்-பொரும் போரினையே புனைகலனாகவுடையானென்னும் அழகமை பெயரினையுடையான், மொழிந்தனனாக - 13ஏவ, முன்னோர் நூலின் வழியே - பழையோர்சொன்ன நூல்களின்படியே, நன்னூற்பெயரின் - நன்

---

* உரைநடை கட்டுரைச்சுவைபட அமைந்துநிற்றல் பாராட்டற்பாலது.

னூலென்னும் [14]பெயரினானே, வகுத்தனன் - செய்தனன்; அவன் யாவனெனின்,—பொன் மதில் சனகை - பொன்மதில் புடைசூழ்ந்த [15]சனகாபுரத்து, சன்மதி முனியருள் - சன்மதியென்னும் நன்முனி யளித்த, பன் அரு சிறப்பின் - சொல்லுதற்கரிய [16]பெருந்தன்மை யையும், பவணந்தி என்னும் நாமத்து - பவணந்தியென்னும் பெரிய பெயரினையும், இருதவத்தோன் - பெரிய தவத்தினையுமுடையோன். எ - று.

'மலர்தலை * * * * * மொழியுளும்' எனவே இயம்பலுறும் தமிழ்தான், இடையே சிலரான் இயற்றப்பட்டதன்றி வரம்பிலறிவ னால் ஏனைப் பதினேழுநிலத்து மொழிகளோடு ஒருங்குவிளங்கச் செய்யப்பட்டதென்று இதன் உண்மைச்சிறப்பு உரைக்கப்பட்டது.

'குணகடல் * * * * * எல்லையின்:' இஃது இவ்வெல்லையுள் நடக்குமென எல்லை போந்தது.

'இருந்தமிழ் * * * * * ஐந்தையும்' என [17]நுதலிய பொருள் போந்தது.

'யாவரு முணர:' எல்லாருமுணர்தல் பயனாகவெனப் பயன் போந்தது.

'தொகைவகை விரி' என யாப்புப் போந்தது.

'தருகென * * * * * மொழிந்தனனாக:' அருங்கலை விநோத னாகையாலே தமிழின் அருமைபெருமைகளையறிந்து எல்லாரும் இனிதறிய விளங்கச்செய்கவென்று இவன் ஏவுதலாலேயெனக் கார ணம் போந்தது.

'முன்னோர் நூலின் வழியே' என வழி போந்தது.

'நன்னூற் பெயரின் வகுத்தனன்' என நூற்பெயர் போந்தது.

'பொன்மதில் * * * * * தவத்தோனே' என ஆக்கியோன் பெயர் போந்தது.

'துன்னரிகலறநூறி * * * * * மொழிந்தனனாக' எனவே இவன்காலத்தெனவும் இவன் அவைக்களத்தெனவும் இவன் அவை யிலுள்ளார் கேட்டாரெனவும் காலமும் களனும் கேட்டாரொடும் போந்தன,

இவ்வாற்ருன் இதற்குப் பதினெருபாயிரமும் போந்தவாறு இதனகத்தே கண்டுகொள்க.

(பி - ம்.) [1] முதலிய. [2] உலகெல்லாம் தான் ஒருவனுமேயாகி. [3] ஆர்வும்; ஆசையும். [4] அறம்பொருளின்ப மனைத்தையும். [5] பதினெண்ணிலத்துள்ளாரும். [6] எல்லைக்கும். [7] தமிழென்னும். [8] பெரிய. [9] துடங்கி. [10] முற்றுலகு. [11] விளைபயன்; வினைப்பயன். [12] வெங்கயநுங்குஞ். [13] அவனேவ. [14] பெரியபெயரிணுனே. [15] சனநாகபுரத்து; சனகாபுரத்து. [16] பெருந்தன்மையையுடைய. [17] தமிழ்ப்பொருள் நுதவிற்றென்பது.

நன்னூற்சிறப்புப்பாயிரமுற்றிற்று.*



* இதன்பின், 'இருவகைப்பாயிரமும் ஒருவகையான் முடிந்தன' என்னும் தொடர்மொழியொன்று, சிலபிரதிகளிற் காணப்படுகின்றது.

முதலாவது,

# எழுத்ததிகாரம்.

## க.—எழுத்தியல்.

### கடவுள்வணக்கமும் அதிகாரமும்.

(55.) பூமலி யசோகின் புனைநிழ லமர்ந்த
நான்முகற் றொழுதுநன் கியம்புவ னெழுத்தே.

எ - து சூத்திரம். இவ்வதிகாரம் [1] என்னுதலி எடுத்துக்கொள்ளப்பட்டதோ வெனின், அதிகார நுதலியதூஉம் அதிகாரத்தினது பெயருரைப்பவே விளங்கும். ஆயின், இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோவெனின், எழுத்திலக்கண முணர்த்தினமையின் எழுத்ததிகாரமென்னும் பெயர்த்து. *எழுதப்படுதலின் எழுத்தெனக் கொள்க. அதிகாரமென்றது முறைமை. எ - று. இவ்வதிகாரத்துள் எனைவகை யோத்தினன் எழுத்திலக்கண முணர்த்தினனோ வெனின், ஐவகை யோத்தினான் உணர்த்தினனென்க. அவற்றுள், இம்முதலோத்து என்னுதலிற்றோவெனின், ஒத்துநுதலியதூஉம் ஓத்தினது பெயருரைப்பவே விளங்கும். ஆயின், இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், எண் பெயர் முதலான எழுத்திலக்கணம் பத்தும் உணர்த்திற்றாகலான், எழுத்தியலென்னும் பெயர்த்து. இவ்வோத்தினுள், இத்தலைச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், ஒரு சாரார் வேண்டும் சிறப்புப்பாயிரம் உணர்த்துதல் நுதலிற்று. என்னை? "வணக்க மதிகார மென்றிரண்டுஞ் சொல்லச், சிறப்பென்னும் பாயிர மாம்." (யா. வி. க. உரை) என்றாராகலின். 'பூமலி***** றொழுது' என வணக்கம் சொன்னவாறு. 'நன்கியம்புவனெழுத்து' என அதிகாரம் சொன்னவாறு. அஃதேல், நூல் நுவல்வான் புகுந்து ஈண்டு வணக்கம் வைக்கவேண்டியது என்னையோவெனின், நன்று சொன்னாய்! "வழிபடு தெய்வ வணக்கஞ் செய்து, மங்கல மொழி முத லாக வகுத்தே, யெடுத்துக் கொண்ட விலக்கண விலக்கியம், இடுக்க ணின்றி யினிது முடியும்" (யா. வி. க. உரை) என்பவாகலின், ஈண்டு வணக்கம் செய்யப்பட்டது.

---

* "எழுதப் படுதலி னெழுத்தே" (யா. வி. உரை)

(இ - ள்.) பூ மலி அசோகின், எ - து பூக்களால் மிக்குள்ள அசோகினது. எ - று. புனை நிழல் அமர்ந்த, எ - து அலங்கரியா நின்ற நிழலிலே எழுந்தருளியிருந்த. எ - று. நான்முகன் தொழுது, எ - து நான்கு திருமுகங்களையுடையானை வணங்கி. எ - று. நன்கு இயம்புவன், எ - து அழகிதாகச் சொல்லுவன். எ - று. எழுத்து, எ - து எழுத்திலக்கணத்தை. எ - று.

ஏகாரம், ஈற்றசை. பதப்பொருளுரைத்தவாறு. என்னை? "என்ன சொல்லினு மியன்ற மருங்கிற், பன்னி யுரைப்பது பதப் பொருளாகும்" என்றாராகலின்.

(பொழிப்புரை.) *நால்வகைப்பூக்களினால் மிக்குடைய அசோகினது [2]தன் எல்லையை இகவாதே எப்பொழுதும் அலங்கரியா நின்ற நிழலிலே எழுந்தருளியிருந்த நான்முகத் தொருவனை மன மொழி மெய்களின் மகிழ்ந்துடன் வணங்கி ஈரைங்குற்றமுமகற்றி ஈரைந்தழகொடும் புணர்ந்து அரிதின்றி விளங்க எழுத்திலக்கணத் தை யான் சொல்லுவன். எ - று.

இது பொழிப்புரை; என்னை? "பொழிப்பெனப் படுவது பொருந்திய பொருளைப், பிண்ட மாகக் கொண்டுரைப் பதுவே" (யா. கா. வி. உரை) என்றாராகலின்.

(பி - ம்.) [1] என்னுதலிற்றோவெனின். [2] எல்லையை. (ச)

எழுத்திலக்கணத்தின் பகுதி.

(56.) எண்பெயர் முறைபிறப் புருவ மாத்திரை
முதலீ றிடைநிலை போலியென்றா
பதம்[1]புணர் பெனப்பன் னிருபாற் றதுவே.

எ - ன், மேல் எழுத்திலக்கணமியம்புவனென்றார்; அஃது இத்துணைப்பகுதியான் உணர்த்தப்படுமென்று அதுபடும் [2]பாகுபா டுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) எழுத்துக்களது தொகையும் பெயரும் முறையும் பிறப்பும் வடிவும் அளவும் மொழிக்கு முதலாவனவும் ஈறுவனவும் இடையாவனவும் போலியுமென்னும் இவ்வெழுத்துக்கூறுபாடுபத் தும் இவ்வெழுத்தானும்பதமும் அப்பதம் தம்மோடும் உருபோடும்

* "பூநான்கும் பொதுளிவெறி திசைநான்கும் போயுலவத், தேனூர்ந்து சுரும்பாடத் திகழ்பிண்டி." (திருக்கலம்பகம், க)

புணரும் புணர்ச்சியுமெனப் பன்னிரு 3பகுதியினையுடைத்து, மேற் சொன்ன எழுத்திலக்கணம். எ - று.

என்றுவென்பது எண்ணிடைச்சொல். ஏகாரம் ஈற்றசை.

(பி - ம்.) 1 புணர்ப்பென. 2 பொருட்பாகுபாடு. 3 பகுதித்து. (உ)

க. எழுத்தின் எண்.

(57). மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி
எழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே.

எ - ன், இயம்பப்பெறும் எழுத்தாவது இன்னதென்பதூஉம் அதன்பாகுபாடும் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மொழிக்கு முதற்காரணமாகிய பரமாணுக்களது இயைபினுன் ஆகுவதான ஒலி எழுத்தெனப்படும்; அது [1]முதலெழுத்தும் சார்பெழுத்துமென இரண்டுகூறும். எ - று.

ஈண்டு ஒலியெழுத்துச் சிறப்புடைமையின் எடுத்தோதினர். என்னை? "சிறப்புடைப் பொருளைத் தானெடுத்து மொழிதல்" என்பது தந்திரவுத்தியாகலான். ஒருசாரார்வேண்டும் உணர்வெழுத்து முதலான விகற்பமெல்லாம் இவ்வதிகாரப் *புறநடையுட் கண்டுகொள்க.

(பி - ம்.) 1 முதலெழுத்துச் சார்பெழுத்தென. (ங)

முதலெழுத்து.

(58.) உயிரு முடம்புமா முப்பது முதலே.

எ - ன், முதலெழுத்தாவன உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) உயிரென்றும் உடம்பென்றும்சொல்லப்பட்ட முப்பதெழுத்தும் [1]முதலெனப்படும். எ - று.

எனவே முதலெழுத்தெனத் தொகையான் ஒன்றும், உயிரெழுத்து உடம்பெழுத்தென வகையான் இரண்டும், உயிர் பன்னிரண்டும் உடம்பு பதினெட்டுமென்று வகுத்துக்கூட்ட விரியான் முப்பதுமாம், முதலெழுத்து. எ - று.

(பி - ம்.) 1 முதலெழுத்தெனப்படும். (ச)

* "இதற்கிதுமுடிபு" என்னும் சூத்திரவுரையுள்.

சார்பெழுத்து.

(59.) உயிர்மெய் யாய்த முயிரள பொற்றள
பஃகிய இ-உ ஐ-ஒள மஃகான்
தனிநிலை பத்துஞ் சார்பெழுத் தாகும்.

எ - ன், சார்பெழுத்தாவன உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) உயிர்மெய்யும், ஆய்தமும், உயிரளபெடையும், ஒற்றளபெடையும், குற்றியலிகரமும், குற்றியலுகரமும், ஐகாரக்குறுக்கமும், ஔகாரக்குறுக்கமும், மகரக்குறுக்கமும், ஆய்தக்குறுக்கமுமென்னும் இப்பத்தும் சார்பெழுத்தாம். எ - று.

என்னை? "எழுத்தெனப் படுப, வகாரமுத னகர விறுவாய் முப்பஃ தென்ப சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே" (தோல். நூன். க) என ஆசிரியர் தோல்காப்பியனாரும் [1]இவ்வாறு முதல் சார்பென வகுத்துக்கொண்டாரென்க. *அஃதே, அவர் சார்பெழுத்தென மூன்றே கொண்டாராலோவெனின், அஃதே, நன்று சொன்னாய்! ஒழிந்தவை எப்பாற்படுமென்றார்க்கு மூன்றுவதோர் பகுதி சொல்லலாவதின்மையானும் முதலெழுத்தாந்தன்மை அவற்றிற்கின்மையானும் சார்பிற்றோன்றுதலானும் இப்பத்தும் சார்பாகவேகொள்ளவேண்டுமென்பது. அஃதே அமைக. ஒற்றளபெடையும் ஐகாரக்குறுக்கமும் ஔகாரக்குறுக்கமும் மகரக்குறுக்கமும் ஆய்தக்குறுக்கமும் யாண்டுப்பெற்றாமோவெனின், "வன்மையொடு ரஃகான் ழஃகா [2]னொழிந்தாங், [3]கன்மெய் யாய்தமோ டளபெழுமொரோவழி," "அளபெடை தனியிரண் டல்வழி ஐஔ, உளதாமொன்றரை தனிமையு மாகும்," "பதினெண் மெய்யு மதுவே மவ்வோ, டாய்தமு மளபரை தேய்தலு முரித்தே" என்றார், ஆசிரியர் [4]அவிநயனாருமெனக்கொள்க.

(பி - ம்.) [1] இவ்வாறுகொண்டாரென்க. [2] ஒழித்தாங்கு. [3] அன்மை. [4] அவினயனாரும்; அவினையினாரும். (ரு)

சார்பெழுத்தின் விரி.

(60.) உயிர்மெய் யிரட்டுநூற் றெட்டுய ராய்தம்
எட்டுயி ரளபெழு மூன்றொற் றளபெடை
ஆறே ழஃகும் மிம்முப் பானேழ்

* அப்படியா? "அஃதே யடிகளும்முளரோ." (சீவக. கனக. ௩௨அ.)

உகர மாறு றைகான் மூன்றே
ரு. ஔகா னொன்றே மஃகான் மூன்றே
ஆய்த மிரண்டொடு சார்பெழுத் துறுவிரி
ஒன்றொழி முந்நூற் றெழுபா னென்ப.

எ - ன், [1]சார்பெழுத்தின் விரித்தொகை உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயிரும் மெய்யுங்கூட்டி உச்சரிக்கப்படாநின்ற எழுத்து இருநூற்றொருபத்தாறும், விகாரப்படாதுநின்ற ஆய்தமெட்டும், உயிரளபெடை இருபத்தொன்றும், ஒற்றளபடைநாற்பத்திரண்டும், குற்றியலிகரம் முப்பத்தேழும், குற்றியலுகாம் முப்பத்தாறும், ஐகாரக்குறுக்கம் மூன்றும், ஔகாரக்குறுக்கம் ஒன்றும், மகரக்குறுக்கம் மூன்றும், ஆய்தக்குறுக்கம் இரண்டும் ஆகச் சார்பெழுத்தின்விரித்தொகை முந்நூற்றறுபத்தொன்பதாம். எ - று.

இக்கூறுபாடுகள் தத்தம் இலக்கணச் [2]சூத்திரத்துள்ளே கண்டுகொள்க. எனவே சார்பெழுத்தெனத் தொகையான் ஒன்றும், வகையாற் பத்தும், விரியான் முந்நூற்றறுபத்தொன்பதுமாம் சார்பெழுத்து. எ - று.

எனவே இச்சூத்திரங்களாற் போந்த பொருள் எழுத்தெனத் தொகையான் ஒன்றும், [3]முதலெழுத்துச் சார்பெழுத்தென வகையான் இரண்டும், இவ்விரண்டன் விரியும்கூட்ட விரியான் முந்நூற்றுத் தொண்ணூற்றொன்பதூஉமாம், எழுத்தென்பதாயிற்று. இன்னும் இவற்றைக் குற்றுயிர், நெட்டுயிர், உயிர்மெய்க்குறில், உயிர்மெய்நெடில், வல்லினம், மெல்லினம், இடையினமென்பவாற்றானும் பிறவாற்றானும் பகுப்ப எனைத்தும் பலவாம். அவையும் வேண்டுமேல் அவ்வாறு விரித்துரைத்துக்கொள்க. அகரமெனத் தொகையானொன்றும், உயிர் அகரமும் உயிர்மெய் அகரமுமென வகையானிரண்டும், உயிர் அகரமொன்றும், உயிர்மெய் அகரம் பதினெட்டுமென விரியாற் பத்தொன்பதுமாம். அகரமொழிந்தனவும் இவ்வாறேகொள்க. இனி, தொகை வகைவிரியைத் தொகைவகைவிரியானுறழ்ந்து ஒன்பதாக்கி [4]உரைப்பாருமுளர். இவர் ஈண்டை வழக்கிற்குவேண்டுமாறே கொண்டாரென்க. தாமே தமித்து நிற்கையின் [5]முதலெழுத்தென்றாயின. அவையே தம்மொடு தாம் சார்ந்தும் இடஞ்சார்ந்தும்

இடமும் பற்றுக்கோடும் சார்ந்தும் விகாரத்தால்வருதலிற் [6]சார்பெழுத்தென்றாயினவெனக்கொள்க.

எண் முற்றும்.

(பி - ம்.) [1] சார்பெழுத்தினது. [2] சூத்திரங்களுள்ளே. [3] முதலெழுத்தும் சார்பெழுத்துமென. [4] உரைப்ப. [5] முதலாயின. [6] சார்பாயின. (சு)

## பெயர்களின் பொதுவிலக்கணம்.

## (61.) இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின.

எ - ன், நிறுத்தமுறையானே பெயராமாறு உணர்த்துவானெடுத்துக்[1]கொண்டார், அவற்றுள், இத்தலைச்சூத்திரம் பெயர்க்கெல்லாம் பொதுவாயதோரிலக்கணமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இடுகுறியானும் காரணத்தினானுமாகும்பெயர்கள், பொதுவைப்பற்றியும் சிறப்பைப்பற்றியும் வருவனவாம். எ - று.

இஃது என்னை [2]சொன்னவாறெனின், இடுகுறிப்பொதுப்பெயரும், இடுகுறிச்சிறப்புப்பெயரும், காரணப்பொதுப்பெயரும், காரணச்சிறப்புப்பெயருமென யாவகைப்பெயரும் நால்வகைப் படுவனவாம். எ - று. எனவே, உலகத்துப்பெயர்களெல்லாம் இவ்விரு திறத்தானுமன்றி வாராமை [3]வழக்கிடத்தும் செய்யுளிடத்தும் யாண்டும் ஆராய்ந்துகொள்க. ஆவி, உயிர், மெய், உடம்பு என்பன இடுகுறிப்பொதுப்பெயர். அவற்றுள், அ, ஆ ; க, ங என்றற்றொடக்கத்தன இடுகுறிச்சிறப்புப்பெயர். குறில், நெடில், வல்லினம், மெல்லினம், இடையினமென்றற்றொடக்கத்தன காரணப்பொதுப்பெயர். [4] குற்றிகரம், குற்றுகரம், மகரக்குறுக்கம், ஆய்தக்குறுக்கமென்றற்றொடக்கத்தன காரணச்சிறப்புப்பெயர். இவ்வாறே பிறவும் ஆராய்ந்தறிக.

(பி - ம்.) [1] கொண்டார்இச்சூத்திரம். [2] சொன்னவாறோ. [3] செய்யுளிடத்தன்றியும் வழக்கிடத்தும் யாண்டும். [4] குற்றுகரம், குற்றிகரம். (எ)

## உ. எழுத்தின்பெயர்.

## (62.) அம்முத லீரா றாவி கம்முதல்
## மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்.

எ - ன், ஒருசார் பொதுப்பெயராமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அகரமுதலாகநின்ற பன்னிரண்டினையும் உயிரென்றும், ககரமுதலாகநின்ற பதினெட்டினையும் உடம்பென்றும் பெயரிட்டுவழங்கினார்கள், [1]முற்காலத்துக் கற்றுவல்லோர். எ - று.

'விளம்பினர் புலவர்' என்ற விதப்பினானேயும், பாயிரத்திற் பெறுவதேயன்றி நூலுள்ளும் இஃது * எதிர்நூலல்லவென்பது பெற்றுமெனக்கொள்க.

(பி - ம்.) [1] மேற்காலத்து. (அ)

## குறில்.

(63.) அவற்றுள்,
அஇ உஎ ஒக்குறி லைந்தே.

இதுவுமது.

(இ - ள்.) ஆவியென்றும் மெய்யென்றும் மேற்கூறப்பட்டனவற்றுள், அ இ உ எ ஒ [1]என்னுமைந்தும் குற்றெழுத்தென்னும் குறியவாம். எ - று.

அஇஉஎஒ என இவற்றை உச்சரித்து அன்னவாதல் கண்டுகொள்க. 'அவற்றுள்' [2]என்பதனைப் பெயரதிகாரமுற்றுமளவும் வருவித்துக்கொள்க.

(பி - ம்.) [1] என்றுசொல்லப்படும் ஐந்தெழுத்தும். [2] என்பதனை இவ்வதிகாரமுற்றும். (க)

## நெடில்.

(64.) ஆஈ ஊஏ ஐஓ ஔநெடில்.

இதுவுமது.

(இ - ள்.) இச்சொல்லப்பட்ட ஏழும் நெட்டெழுத்தென்னும் பெயரவாம். எ - று.

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என உச்சரித்து அன்னவாதல் கண்டுகொள்க. (கo)

* "எதிர்நூலென்பதும் ஒன்றுண்டு. அது யாதோவெனின், முதனூலின்முடிந்தபொருளை ஓராசிரியன் யாதானும் ஒருகாரணத்தாற் பிறழவைத்தால் அதனைக் கருவியால் திரிவுகாட்டி ஒருவாமைவைத்தற்கு ஒள்ளியான் ஒருபுலவனால் உரைக்கப்படுவது; என்னை? 'தன்கோ ணிறீஇப் பிறன்கோண் மறுப்ப, தெதிர்நூ லென்ப ரொருசா ரோரே.' (இறை. க - சூ - உரை; யாப்பருங்கலவிருத்தி.)

## சுட்டெழுத்துக்கள்.

**(65.) அஇ உம்முதற் றனிவரிற் சுட்டே.**

எ-ன், அவ்வுயிர்க்கே இன்னும் ஒருவகையாற்பெயரிடுத னுதலிற்று.

(இ-ள்.) அ இ உ என்னும் இம்மூன்றும் மொழிமுதற்கண்ணே தனித்துநிற்பிற் சுட்டென்னும் குறியவாம். எ-று.

[1]வரலாறு. அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றனெனக் கண்டுகொள்க.

(பி-ம்.) [1] உதாரணம். (பின்னும் இப்படியே.) (கக)

## வினாவெழுத்துக்கள்.

**(66.) எயா முதலும் ஆஓ வீற்றும்**
**ஏயி ருவழியும் வினாவா கும்மே.**

[1]இதுவுமது.

(இ-ள்.) எகரமும் யாவும் மொழிமுதற்கண்ணே நின்று [2]வினாவாம்; ஆகாரமும் ஓகாரமும் ஈற்றின்கண்ணேநின்று [3]வினாவாம்; ஏகாரம் இவ்விரண்டிடத்தும்நின்று [4]வினாவாம். எ-று.

உயிர்வினாவுடனே யாவினாவுரைத்தமை மயங்கக்கூறலென்னுங் குற்றமாம் பிறவெனின், இது தொகைவகைவிரிபடச் செய்கின்ற நூலாதலானும் முதல்வினாவென்னும் பொருளொப்புமையானும் குற்றமாகாதெனக்கொள்க.

வ-று. எவன், எவள், எவர், எது, எவை; யாவன், யாவள், யாவர், யாது, யாவை என எ யா முதற்கண் வினாவாய் வந்தன. *உண்கா, †உண்கோ? கொற்றா! (சாத்தா, தேவா, பூதா) என ஆகாரமும் ஓகாரமும் ஈற்றின்கண் வினாவாய்வந்தன. ஏவன், ஏவள், ஏவர், ஏது, ஏவை; ‡உண்கே? கொற்றா! என ஏகாரம் முதலினும் ஈற்றினுநின்று வினாவாயிற்று.§

(பி-ம்.) [1] எ-ன், இதுவுமது. [2] முதல்வினாவென்னும் பெயரவாம். [3] ஈற்றுவினாவென்னும் பெயரவாம். [4] இருவழிவினாவென்னும் பெயர்த்தாம்.

* உண்பேனா? † உண்பேனோ? ‡ உண்பேனா? § இதன்பின், "ஐ ஔ இ உச்செறிய" என்னும் சூத்திரம் சில பிரதிகளில் வரையப்பெற்றுள்ளது.

வல்லினம்.

**(67.) வல்லினங் கசட தபறவென வாறே.**

எ - ன், மேல் மெய்யென்று குறியிடப்பட்டனவற்றுள், ஒரு சாரனவற்றிற்கு இன்னும் ஒருவகையாற் பெயரிடுதனுதலிற்று.

(இ - ள்.) கசடதபற வென்னும் ஆறெழுத்தும் வல்லினமென்னும் குறியவாம். எ - று. (கங)

மெல்லினம்.

**(68.) மெல்லினம் ஙஞண நமனவென வாறே.**

இதுவுமது.

(இ - ள்.) ங ஞ ண ந ம ன வென்னும் ஆறெழுத்தும் மெல்லினமென்னும் குறியவாம். எ - று. (கச)

இடையினம்.

**(69.) இடையினம் யரல வழளவென வாறே.**

இதுவுமது.

(இ - ள்.) ய ர ல வ ழ ள வென்னும் ஆறெழுத்தும் இடையினமென்னும் குறியவாம். எ - று.

இம்மூவினமும் அன்னவாமாறு உச்சரித்துச் செவிகருவியாக [1] ஓர்ந்துகொள்க.

பெயர் முற்றும்.

(பி - ம்.) [1] ஓர்ந்துணர்க. (கரு)

இனவெழுத்து.

**(70.) ஐஔ இஉச் செறிய முதலெழுத்<br>திவ்விரண் டோரின மாய்[1]வரு முறையே.**

எ - ன், நிறுத்தமுறையானே முறையாமாறு உணர்த்துவானெடுத்துக்கொண்டார்; அவற்றுள், இச்சூத்திரம் முதலெழுத்தை இனமடைத்தனுதலிற்று.

(இ - ள்.) ஐகாரத்தை இகரத்தோடும், ஔகாரத்தை உகரத்தோடுஞ்சேர்க்க, அகரமுதலான முதலெழுத்தெல்லாம் முறையே இவ்விரண்டெழுத்துத் தம்முளினமாம். எ - று.

வ - று. அஆ, [2]இஈஐ, உஊஔ; எஏ, ஒஓ. கங, சஞ, டண, தந, பம, யர, லவ, ழள, றன எனவரும்.

(பி - ம்.) [1] வரன்முறையே. [2] இஈ, உஊ, எஏ, இஐ, ஒஓ, உஔ. (கசு)

இனமென்றதற்குக்காரணம்.

(71.) தான முயற்சி யளவு பொருள்வடி
வானவொன் ருதியோர் புடையொப் பினமே.

எ - ன், மேல் இவ்வெழுத்து, 'இவ்விரண்டோரினமாய்வரும்' என்றார், அவை அப்படி வருவதற்குக் காரணமாமாறுணர்த்துத னுதலிற்று.

(இ - ள்.) எழுத்துக்கடம் பிறப்பிடமே முயற்சியே [1]மாத்திரையே பொருளே வடிவே யென்றிவற்றுள் ஒன்றானும் பலவானும் [2]ஒருபுடையொப்பனவாயின், இனமாம். எ - று.

அஆக்கள் இடத்தானும் முயற்சியானும், அருயிரம், ஆருயிரமென்னும் பொருளானும், வடிவானும் ஒருபுடையொத்து இனமாயின. இஈக்கள் இடத்தானும் முயற்சியானும், இராயிரம், ஈராயிரமென்னும் பொருளானும் ஒருபுடையொத்து இனமாயின; ஐகாரம் இவற்றுள் இடத்தானும் முயற்சியானும் ஒத்து இகரத்தோடு கூடி இனமாயிற்று. உஊக்கள் இடத்தானும் முயற்சியானும், உங்கு, ஊங்கு என்னும் பொருளானும் வடிவானும் ஒருபுடையொத்து இனமாயின. ஔகாரம் இவற்றுள் இடத்தானும் முயற்சியானும் உகரத்தோடுகூடி இனமாயிற்று. எஏக்கள் இடத்தானும் முயற்சியானும், எழாயிரம் ஏழாயிரமென்னும் பொருளானும், வடிவானும் ஒருபுடையொத்து இனமாயின. ஒஓக்கள், இடத்தானும் முயற்சியானும், ஒராயிரம், ஓராயிரமென்னும் பொருளானும், வடிவானும் ஒருபுடையொத்து இனமாயின. கஙக்கள், முயற்சியானும் மாத்திரையானும், குளக்கரை, குளங்கரையென்னும் பொருளானும் ஒருபுடையொத்து இனமாயின. சஞக்கள், முயற்சியானும் மாத்திரையானும், மச்சிகன், மஞ்சிகனென்னும் பொருளானும் ஒருபுடையொத்து இனமாயின. டணக்கள், முயற்சியானும் மாத்திரையானும், மட்குடம், மண்குடமென்னும் பொருளானும் ஒருபுடையொத்து இனமாயின. தநக்கள் முயற்சியானும் மாத்திரையானும், பாழ்த்தூறு, பாழ்ந்தூறு என்னும் பொருளானும் ஒருபுடையொத்து

இனமாயின. ப மக்கள், முயற்சியானும் மாத்திரையானும், வேய்ப் புறம், வேய்ம்புறமென்னும் பொருளானும் ஒருபுடையொத்து இன மாயின. ய ரக்கள் இடத்தானும் மாத்திரையானும், *வேயல், வேர லென்னும் பொருளானும் ஒருபுடையொத்து இனமாயின. ல வக் கள் இடத்தானும் மாத்திரையானும், எல்லாவகை, எவ்வகையென் னும் பொருளானும் ஒருபுடையொத்து இனமாயின. ழ ளக்கள் இடத்தானும் மாத்திரையானும், †காழகவுடையான், காளகவுடையா னென்னும் பொருளானும் ஒருபுடையொத்து இனமாயின. ற னக் கள், முயற்சியானும் மாத்திரையானும், ‡நற்கு நன்கு என்னும் பொருளானும் ஒருபுடையொத்து இனமாயின.

(பி - ம்.) 1 அளவே. 2 ஒருபுடையான். (கஎ)

ரு. எழுத்தின்முறை.

(72.) சிறப்பினு மினத்தினுஞ் செறிந்தீண் டம்முதல்
நடத்த றானே முறையா கும்மே.

எ - ன், நிறுத்தமுறையானே முறையாமாறுணர்த்துதனுத லிற்று.

(இ - ள்.) சிறப்பைப்பற்றியும் இனத்தைப்பற்றியும் ஒன்றன் பின் ஒன்றுசென்று தொன்றுதொட்டு அகரமுதலாக உலகத்து [1]நட க்கின்ற கிடக்கைமுறைதானே நூலுள்ளும் முறையாவது. எ - று.

அகரம் தானேநடந்தும் நடவா உடம்பை நண்ணியும் நடத்த லானும், அரன் அரி அயன் அருகனென்னும் பரமர் திருநாமத்திற்கு ஒருமுதலாயும், அறம் பொரு ளின்பமென்னும் முப்பொருளின் முதற்பொருட்கும், அருள் அன்பு அணி அழகு முதலாயின நற் பொருட்கும் முதலாயும் வருதலானும் அகரம் முன்வைக்கப்பட்டது. இடம் முயற்சி பொருள் வடிவுகள் ஒருபுடையொப்புமையின் அக ரத்தின்பின் ஆகாரம் வைக்கப்பட்டது. இடம் முயற்சி பொருள்கள் ஒருபுடையொப்புமையின் இகரத்தின்பின் ஈகாரம் வைக்கப்பட்டது. இவ்வாறே ஒழிந்த எழுத்துக்கள்தம் கிடக்கை முறைக்காரணம் அறிந்துகொள்க.

முறை முற்றும்.

(பி - ம்.) 1 நடக்கின்றமுறைதானே. (கஅ)

* சிறுமூங்கில். † கருமையையுடைய ஆடையினன். ‡ நன்மை.

## ௪. எழுத்தின் பிறப்பு.

(73.) நிறையுயிர் முயற்சியி னுள்வளி துரப்ப
எழுமணுத் திரளுரங் கண்ட முச்சி
மூக்குற் [1]றிதழ்நாப் பல்லணத் தொழிலின்
வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே.

எ - ன், நிறுத்தமுறையானே எழுத்துக்களது [2]பிறப்பு வேறுபாடு உணர்த்துவானெடுத்துக்கொண்டார், அவற்றுள், இச்சூத்திரம் அதன் பொதுவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) விகாரப்படாது தன்னியல்பினின்ற உயிர், மொழிவலென்னு முள்ளந்தோற்றி முயல உண்ணின்ற வளி கடாவ ஆண்டுநின்ற ஒலியணுவீட்டம் விசைத்தெழுந்து நெஞ்சே மிடறே உச்சியே மூக்கேயென்றிந்நான்கிடத்தையும் முதலடைந்து இதழே நாவே பல்லே அண்ணமே என்றிந்நாலிடத்தையும் பின்பு அடைய இவற்றது முயற்சி விகற்பத்தாற் பல்வேறுவகைப்பட்ட எழுத்தொலியாய்ப் புலப்படல் எழுத்துக்களது பிறப்பாம். எ - று.

என்னை? "ஆற்ற லுடையுயிர் [3]முயற்சியி னணுவியைந், தேற்றன வொலியாய்த் தோற்றுதல் பிறப்பே" என்றார் ஆசிரியர் அவிநயனாருமெனக் கொள்க.

(பி - ம்.) [1] இதண. [2] பிறவிவேறுபாடு. [3] முயற்சியான். (௭௧)

## முதலெழுத்துக்களின் இடப்பிறப்பு.

(74.) அவ்வழி,
ஆவி யிடைமை யிடமிட றாகும்
மேவு மென்மைமூக் குரம்பெறும் வன்மை.

எ - ன், முதலெழுத்துக்கட்கு இடமாமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறியநெறியாற் பிறக்குமிடத்துப் பன்னீருயிருக்கும் இடையினம் ஆறிற்கும் இடம் மிடறாகும்; மெல்லினமாறும் மூக்கை இடமாகப்பொருந்தும்; வல்லினமாறும் நெஞ்சை இடமாகப்பெறும். எ - று. (௭௨)

## முதலெழுத்துக்களின் முயற்சிப்பிறப்பு.

(75.) அவற்றுள்,
முயற்சியுள் அஆ வங்காப் புடைய.

எ - ன், அகர ஆகாரங்கட்கு முயற்சியாமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேல் இடம் வகுக்கப்பட்ட முதலெழுத்துக்களுள், அகரமும் ஆகாரமும் அங்காந்துசொல்லுதலே முயற்சியாகவுடையவாம். எ - று.

அ ஆ என உச்சரித்துக் கண்டுகொள்க. (உக)

(76.) இஈ எஏ ஐயங் காப்போ
டண்பன் முதலுறு விளிம்புற வருமே.

எ - ன், இவ்வைந்தெழுத்துக்கும் முயற்சியாமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இக்கூறப்பட்ட ஐந்தெழுத்தும் அங்காப்புடனே அண்பல்லே முதலுறுவிளிம்பு உறும் முயற்சியாற்பிறக்கும். எ - று.

இ ஈ எ ஏ ஐ என உச்சரித்துக் கண்டுகொள்க. (உஉ)

(77.) உஊ ஒஓ ஔவிதழ் குவிவே.

எ - ன், இவ்வைந்துயிருக்கும் முயற்சியாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) [1]இக்கூறப்பட்ட ஐந்தெழுத்தும் இதழைக்குவித்துச் சொல்லுமுயற்சியாற் பிறக்கும். எ - று.

உ ஊ ஒ ஓ ஔ வென உச்சரித்துக் கண்டுகொள்க.

(பி - ம்.) [1] இக்கூற்றைந்தெழுத்தும். (உ௩)

(78.) கஙவுஞ் சஞவும் டணவு முதலிடை
நுனிநா வண்ண முறமுறை வருமே.

எ - ன், இவ்வாறெழுத்துக்கும் முயற்சியாமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) [1]ககரமும் ஙகரமும் முதல்நா முதலண்ணத்தைஉரிஞ்சப் பிறக்கும்; சகரமும் ஞகரமும் இடைநா இடையண்ணத்தை உரிஞ்சப் பிறக்கும்; டகரமும் ணகரமும் நுனிநா நுனியண்ணத்தை உரிஞ்சப் பிறக்கும். எ - று.

கங சஞ டண என உச்சரித்துக் கண்டுகொள்க.

(பி - ம்.) [1] ககாரமும் ஙகாரமும். பின்னும் இப்படியே. (உச)

**(79.) அண்பல் லடிநா முடியுறத் தநவரும்.**

எ - ன், இவ்விரண்டிற்கும் முயற்சியாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அண்பல்லடியை நாநுனி ஒற்றத் தகரமும் நகரமும் பிறக்கும். எ - று.

த ந என உச்சரித்துக் கண்டுகொள்க. (உரு)

**(80.) மீகீ ழிதழுறப் பம்மப் பிறக்கும்.**

எ - ன், இவ்விரண்டெழுத்திற்கும் முயற்சியாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேலிதழும் கீழிதழுமேவப் பகரமும் மகரமும் பிறக்கும். எ - று.

ப ம என உச்சரித்துக் கண்டுகொள்க. (உசு)

**(81.) அடிநா வடியண முறயத் தோன்றும்.**

எ - ன், யகரத்திற்கு முயற்சியாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அடிநா அடியண்ணத்தைச்சார யகரம் பிறக்கும். எ - று.

ய என உச்சரித்துக் கண்டுகொள்க. (உஎ)

**(82.) அண்ண நுனிநா வருட ரழவரும்.**

எ - ன், இவ்விரண்டெழுத்திற்கும் முயற்சியாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அண்ணத்தை நுனிநாத் தடவ ரகரமும் ழகரமும் பிறக்கும். எ - று.

ர ழ என உச்சரித்துக் கண்டுகொள்க. (உஅ)

(83.) அண்பன் முதலு மண்ணமு முறையின்
நாவிளிம்பு வீங்கி யொற்றவும் வருடவும்
லகார ளகாரமா யிரண்டும் பிறக்கும்.

எ - ன், இவ்விரண்டெழுத்திற்கும் முயற்சியாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அண்பல்முதலை நாவிளிம்பு புடைத்துஒற்ற லகாரம் பிறக்கும்; அண்ணத்தை நாவிளிம்பு வீங்கி மெல்ல உற ளகாரம் பிறக்கும். எ - று.

ல ள என உச்சரித்துக் கண்டுகொள்க. (உகூ)

(84.) மேற்பல் லிதழுற மேவிடும் வவ்வே.

எ - ன், வகாத்திற்கு முயற்சியாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேற்பல்லானது கீழிதழை உற வகரம் பிறக்கும். எ - று.

வ என உச்சரித்துக் கண்டுகொள்க. (௩0)

(85.) அண்ண நுனிநா [1]நனியுற றனவரும்.

எ - ன், இவ்விரண்டெழுத்திற்கும் முயற்சியாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அண்ணத்தை நாநுனி [2]மிகவுற றகரமும் னகரமும் பிறக்கும். எ - று.

ற ன என உச்சரித்துக் கண்டுகொள்க.

(பா - ம்.) [1] நனியுறிற். [2] மிகவுறில். (௩௧)

சார்பெழுத்தின் இடமும் முயற்சியும்.

(86) ஆய்தக் கிடந்தலை யங்கா முயற்சி
சார்பெழுத் தேனவுந் தம்முத லனைய.

எ - ன், சார்பெழுத்திற்கு இடமும் முயற்சியும் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஆய்தவெழுத்திற்கு இடம் தலையாம்; அங்காந்து சொல்லுதல் முயற்சியாம். அல்லாத [1]சார்பெழுத்துக்களுக்கும் இடமுயற்சிகள் தத்தம் முதலெழுத்துக்களோடொப்பனவாம். எ - று.

வ - று. க கா, எஃகு, ஆஅ, மங்கலம், கேண்மியா, நாகு, மைப்புறம், மௌவல், வரும்வணிகன், கஃறீது என முறையே உச்சரித்துக் கண்டுகொள்க.

**(பி - ம்.)** [1] **சார்பெழுத்துக்களுக்கு இடங்காரணங்கள்; சார்பெழுத்துக்கள் இடமுயற்சிக் காரணங்களில்.** (௩௨)

பிறப்பின்புறநடை.

**(87.) எடுத்தல் படுத்த னலித லுழப்பில்**
**திரிபுந் தத்தமிற் சிறிதுள வாகும்.**

எ - ன், மேலுரைத்தவற்றிற்கு ஒரு புறநடை யுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பலவெழுத்துக்களுக்கும் தானமுயற்சிகள் ஒன்றாகச் சொல்லப்பட்டனவேனும், எடுத்தல் படுத்தல் நலிதல்முதலான [1]உழப்புவிகற்பங்களினானே ஒன்றுக்கொன்று சிறிதுவேறுபாடுடையவாம். எ - று.

உதாரணம், முன்னர்க்காட்டினவற்றுட் கண்டுகொள்க.

**(பி - ம்.)** [1] **அளவு விகற்பங்களினானே.** (௩௩)

உயிர்மெய்.

(88.) புள்ளிவிட் டவ்வொடு [1]முன்னுரு வாகியும்
ஏனை யுயிரோ [2]டுருபு [3]திரிந்தும்
மேவிய மேவிய வுயிரள பாயதன்
வடிவொழித் திருவயிற் பெயரொடும்
ஒற்று முன்னாய் வருமுயிர் மெய்யே.

எ - ன், சார்பெழுத்துக்களின்தோற்றம் இன்னும் ஒருவகையான் உணர்த்துவானெடுத்துக்கொண்டார், அவற்றுள் இச்சூத்திரம் உயிர்மெய்யாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இச்சொன்னபெற்றியிற் றிரியாதுவருவது உயிர்மெய். எ - று.

எனவே ஒருமெய் அகரத்தோடு முன்னுருவேயாகியும், ஒழிந்த உயிர்களோடு உருவுவேறுபட்டும் வருமென்பது போந்தது. போதவே பதினெட்டுமெய்யும் பன்னிரண்டுயிரோடுங்கூடிப் பன்னிருபதினெட்டு இருநூற்றிருபத்தாறாய் மேற்சொன்ன விரியான் வந்தவாறு கண்டுகொள்க.

வ - று. க கா கி கீ கு கூ கெ கே கை கொ கோ கௌ என வரும். ஒழிந்தனவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க. உயிர்மெய் யென்பது உம்மைத்தொகை.

(பி - ம்.) 1 முன்னுருவு. 2 உருவு. 3 திரிந்துமுயிரளவாய். (௩௪)

முற்றாய்தம்.

(89.) குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.

எ - ன், நிறுத்தமுறையானே ஒருமொழியிடத்துவரும் முற்றாய்தத்தோற்றமாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) குற்றெழுத்தின்முன்னர் உயிரோடுகூடிய வல்லெழுத்து ஆறன்மிசையே பெறப்படும், ஆய்தவொற்று. எ - று.

ஆய்தமானபுள்ளி ஆய்தப்புள்ளி. 'ஆய்தப்புள்ளி' என்றார், இதனையும் ஒற்றின்பாற் சார்த்துதற்கென்க. ஒற்றேல் உயிரேறப் பெறல்வேண்டுமெனின், சார்பெழுத்தாதலின் உயிரேறப்பெறாதெனக்கொள்க.

வ - று. எஃகு, கஃசு, கஃடு, கஃது, கஃபு, கஃறு எனவரும். *அஃகாமை, வெஃகாமை, அஃகி, வெஃகி, 1அஃகோ என்பன பிறவுயிர்களோடும் வந்தன. 2"விலஃஃகி வீங்கிரு ளோட்டுமே மாத, ரிலஃஃகுமுத்தி னினம்" என இவ்வாறு குறிலிணைக்கீழும் ஆய்தம் வருமாலோவெனின், அன்ன இயல்பாகவே ஆய்தமாய்நிற்பனவல்ல. ஓசைநிறைத்தற்பொருட்டு ஒற்றில்வழி ஒற்றாக்குதலின், ஈண்டு ஆய்தமும் ஒற்றாய்வருமெனக்கொள்க. இருபஃது, அஃகடிய எனப் புணர்ச்சியிடத்து வரும்ஆய்தங்களை அவ்விதியிற்காண்க.

(பி - ம்.) 1 அஃகா, அஃதோ. 2 விலஃஃகு. (௩௫)

உயிரளபெடை.

(90.) இசைகெடின் மொழிமுத லிடைகடை நிலைநெடில்
அளபெழு மவற்றவற் றினக்குறில் குறியே.

எ - ன், வைத்தமுறையானே உயிரளபெடைத்தோற்றமாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) செய்யுட்கள்ஓசைசிதையவந்தவிடத்து மொழிமுத லிடைகடையென்னும் மூன்றிடத்துநின்ற நெட்டெழுத்துக்கள்தாம்

* 'அஃகாமை' முதலிய ஐந்தும் சிலபிரதிகளில் இல்லை.

இரண்டுமாத்திரையின் நீண்டிசைக்கப்பெறும். ஆண்டு அவற்றிற்கு இனமாகிய குற்றெழுத்துக்கள் அவ்வளவிற்குக் குறியாய்வந்துநிற்கும். எ - று.

எனவே இரண்டுமாத்திரையானது மூன்றுமாத்திரையாய்நீடலல்லது இரண்டெழுத்துக்கூடி மூன்றுமாத்திரையா மென்பாரை விலக்கினருமாம்.

வ - று. வாஅகை, ஈஇகை, ஊஉகம், பேஎகன், தைஇயல், [1]தோஒகை, மௌஉவல் எனவும்; படாஅகை, [2]பரீஇகம், கழூஉமணி, பரேஎரம், வளைஇயம், புரோஒசை, [3]மனௌஉகம் எனவும்; [4]குராஅ, குரீஇ, [5]குழூஉ, [6]விலேஎ, விரைஇ, உலோஒ, [7]அனௌஉ எனவும் முறையே மூவிடத்தும் ஏழுநெட்டெழுத்தும் அளபெழுந்தன. தனிநிலையளபெடை வேண்டாராயினர், அது நெட்டெழுத்தோரெழுத்தொருமொழியாய் முதனிலையளபெடையாய்த்தான் இறுதிநிலையளபெடையாய்த்தான் அடங்குதலினென்க. அஃதேல், "தனிநிலை முதனிலை யிடைநிலை யீறென, நால்வகைப் படூஉமள பாய்வருமிடனே" என்னும் முன்னோர்மதத்தோடு முரணும்பிறவெனின், "இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித், திரிபுவே றுடையது புடைநூ லாகும்" என்பதனுலும் மாறுபாடாகாதென்க. 'ஐஔஇஉச் செறிய' என்பதனன், ஐகாரத்துக்கு இகரமும், ஔகாரத்துக்கு உகரமும் இனக்குறிலாமெனக்கொள்க. "எழுத்துக் குறியிட மாத்திரை நான்கும், வழுக்காது வைக்க வகுத்து" என்பவாகலின், ஈரெழுத்துக்கூடி அளபாமென்பார் குறி கூறிற்றிலருமாம்.

(பி - ம்.) 1 தோஒரை. 2 வரீஇகம். 3 மணிமௌஉலி. 4 கடாஅ கராஅ. 5 கழூஉ. 6 மிலேஎ. 7 அணௌஉ.　　　　(௩௬)

ஒற்றளபெடை.

(91.) ஙஞண நமன வயலள வாய்தம்
அளபாங் குறிலிணை குறிற்கீ ழிடைகடை
மிகலே யவற்றின் குறியாம் வேறே.

எ - ன், ஒற்றளபெடைத்தோற்றம் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இச்சொல்லப்பட்ட பத்தொற்றும் ஆய்தமும் குறிலிணைக்கீழும் குறிற்கீழும் மொழியிடையினும் ஈற்றினுநின்று அளபெடுக்கும்; அவை இரட்டித்துநிற்றல் அவற்றிற்கு அளவு குறியாம். எ - று.

ஆய்தம் இடையிலன்றித் தோன்றாமையின், இரண்டிடத்தும் ஈற்றில்வந்து அளபெழாதெனக்கொள்க. இஃது, 'உய்த்துணர வைப்பு' என்னும் தந்திரவுத்தி.

வ - று. அரங்ங்கம், முரஞ்ஞ்சு, முரண்ண்டு, பருந்ந்து, அரு ம்ம்பு, முரன்ன்று, குரவ்வ்வை, அரய்ய்யர், குரல்ல்கள், திரள்ள்கள், வரஃஃகு எ - ம்; மங்ங்கலம், மஞ்ஞ்சு, மண்ண்ணு, பந்ந்து, அம்ம்பு, மின்ன்னு, தெவ்வ்வர், வெய்ய்யர், செல்ல்க, கொள்ள்க, எஃஃகு எனவும் ஈரிடத்தும் இடைநிலையளபெழுந்தன. "அரண்ண்கொ ண்ட வடுதோளினர்", "வலம்ம்பட்ட [1]வாய்வாளர்", "கலன்ன் கொண்ட [2]கன்மார்பர்", "பகல்ல்லன்னபண்புரைஇ", "திரள்ள் சேனை செலநீக்கி" எனவும், *"கண்ண்டண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்", "தம்ம்படையைத் தாநோக்கி", "மின்ன்னன்ன வேல் விளக்கி", "இவ்வ்வுலகை யினிதாண்டு", [3]"செய்ய்தொழிலிற் செல நோக்கி", "கல்ல்லன்ன வன்னெஞ்சின்", "கொள்ள்ளென்று கொடு க்கலாாய்" எனவும் ஈரிடத்தும் இறுதிநிலை அளபெழுந்தன. ஈண்டுக் காட்டாதொழிந்தன அருகியன்றி வாராவெனக்கொள்க. "இசைகெடின்" என்று உயிரளபெடைக்கு உரைத்ததனை ஈண்டும் வருவித்துக்கொள்க. 'வேறு' என்றதனானே, குரவை, அரயர் என்புழி ஒற்றுக்களும், வரகு என்புழி ஆய்தமும், முன் இல்லையேயெனினும், இசைகெடின் அவற்றையுண்டாக்கியும், அவற்றா னும் நிரம்பாவிடின் அவற்றை அளபெடுப்பித்தும் ஓசை நிறைக்கப் படும்; என்னை? "செய்யுட்க ளோசை [4]சிதையுங்கா லீரளபு, மையப்பா டின்றி யணையுமா - மைதீரொற், றின்றியுஞ் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு, குன்றுமே லொற்றளபுங் கொள்" என [5]மாபுராணமுடையாரும் சொன்னாராகலின். †"அம்பொ னைந்து டைய்ய காம னைய னென்ன வந்தண, னம்பு நீர ரல்லர் நன்கு ரங்கு நீர ராயினுந், தங்கு ரவ்வர் தாங்கொ டுப்பி னெஞ்சு நேர்ந்து தாழ் வர்தாம், பொங்க ரவ்வ வல்கு லாரெ னப்பு கன்று சொல்லினான்." இதனுள் ஒற்றில்வழி ஒற்று வந்தவாறு கண்டுகொள்க. பிறவுமன்ன.

(பி - ம்.) [1] வாள்வயவர். [2] கவின். [3] செய்ய்யதொழிற் சேய்நோக்கி, [4] சிதையுமேல். [5] பூதபுராணமுடையாரும். (௩எ)

---

* மலைபடு. ௩௩௨.

† சீவக. 1997.

குற்றியலிகரம்.

(92.) யகரம் வரக்குற ளுத்திரி யிகரமும்
அசைச்சொன் மியாவி னிகரமுங் குறிய.

எ - ன், குற்றியலிகரத்தோற்றம் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) யகரம் மொழிக்குமுதலில்வந்தவிடத்துக் குற்றுகரம் திரிந்துவரும் இகரமும் மியாவென்னும் அசைநிலையிடைச்சொல் இகரமும் குற்றியலிகரமாம். எ - று.

வ - று. நாகியாது, எஃகியாது, வரகியாது, கொக்கியாது, குரங்கியாது, [1]தோள்கியாது எனவும்; கேண்மியா, சென்மியா எனவும் வரும். பிறவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க.

(பி - ம்.) [1] தெள்கியாது. (ரு௮)

குற்றியலுகரம்.

(93.) நெடிலோ டாய்த முயிர்வலி மெலியிடை
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகரம்
அஃகும் பிறமேற் றொடரவும் பெறுமே.

எ - ன், குற்றியலுகரத்தோற்றம் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) நெட்டெழுத்தின்பின்னும், ஆய்தமே உயிரே வல்லெழுத்தே மெல்லெழுத்தே இடையெழுத்தே என்றிவைதொடர்ந்த மொழியீற்றினுநின்ற கசடதபறக்களை [1]ஊர்ந்துவந்தஉகரம் தன்மாத்திரையிற் சுருங்கிவரும். நெடில்முதலான இவ்வாறன்மேலும் ஒன்றும்பலவும் பிறவெழுத்துத் தொடரவும்பெறும். எ - று.

ஈரொற்றுத்தொடர்ந்தமொழிகள் வன்றொடரும் மென்றொடருமாய் அடங்குமெனக்கொள்க.

வ - று. நாகு, எஃகு, வரகு, கொக்கு, குரங்கு, [2]தொள்கு, எ - ம்; ஆகாது, பிண்ணாக்கு, சுண்ணாம்பு, இருபஃது, ஆமணக்கு, [3] ஆர்க்கு, வாழ்த்து, மொய்ப்பு எனவும் வரும். பிறவுமன்ன. "நெடிலே குறிலிணை குறினெடி லென்றிவை, யொற்றொடு வருதலொடு குற்றொற் றிறுதியென், றேழ்குற் றுகரக் கிடனென மொழிப" என்னும் இவ்வேழிடத்துவருமென்பனவும் இவற்றுள்ளேயடங்குமென்ப. இவ்வாறு ஏழிடங்கொள்வார்க்குச் சுண்ணாம்பு, ஆமணக்கு, பிண்ணாக்குமுதலானவும் ஆய்தந்தொடர்ந்தனவும் அடங்காவென்

றறிக. 'நெடிலோடு' எனப்பிரித்தோதினர், மூவெழுத்துக்கூடிய தொடர்மொழி அன்மையின்.

(பி - ம்.) 1 ஊர்ந்த. 2 தெள்கு. 3 அரக்கு, ஈர்க்கு. (ாகூ)

ஐகாரக்குறுக்கமும் ஔகாரக்குறுக்கமும்.

(94.) தற்சுட் டளபொழி யைம்மூ வழியும்
நையு மௌவு முதலற் றாகும்.

எ - ன், ஐகார ஔகாரக்குறுக்கங்களாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) தன்னைச்சொல்லுதற்கண்ணும் அளபெடுத்தற்கண்ணுமல்லாதவழி வந்த ஐகாரம் மொழிமுதல் இடை கடையென்னு மூன்றிடத்தும் குறுகும். இவ்வாறுவரும் ஔகாரமும் மொழிமுதற்கண் அவ்வாறும். எ - று.

வ - று. ஐப்பசி, மைப்புறம்; மடையன், உடைவாள்; குவளை, தவளை, திணை, பனை எ - ம், மௌவல் எ - ம் வரும். "கல்லென் கௌவை", "ஒல்லென் பௌவம்" என்பன இடையே குறைந்தவை யென்பாருமுளர். அவை கௌவை, பௌவமென முதலிலேகுறைந்த மொழிகள் நிலைமொழிகளோடு புணர்ந்தன வென மறுக்க. அந்தௌ, அத்தௌ என்பன கடையிலேகுறைந்தனவெனின், அவை ஒரு பொருட்சிறப்புடையவாய் நடப்பனவல்லவெனமறுக்க. (சO)

மகரக்குறுக்கம்.

(95.) ணனமுன்னும் வஃகான் மிசையுமக் குறுகும்.

எ - ன், மகரக்குறுக்கமாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ளகர லகரந்திரிந்த ணகரனகரங்கண்முன்பும் வகர மிசையும் நின்ற மகரம் குறுகும். எ - று.

வ - று. "பசுப்போல்வார் முற்பட்டாற் பாற்பட்ட சான்றோர், முசுப்போல முள்காந் திருப்பார் - பசுத்தான், வெருளினு மெல்லாம் வெருளுமஃ தன்றி, மருளினு மெல்லா மருண்ம்", "எம்மொடு தம்மைப் பொரூஉங்காற் பொன்னொடு, 1கூவிளமொத்ததும் போன்ம்", வாழும்வளவன் எனவரும்.

(பி - ம்.) 1 கூவிளம்பூத்ததும், கூவிளம்போர்த்ததும். (சக)

ஆய்தக்குறுக்கம்.

(96.) லளவீற் றியைபினு மாய்த மஃகும்.

எ - ன், ஆய்தக்குறுக்கமாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) லகாரளகரவீறு புணர்வுழிவரும் ஆய்தம் குறுகும். எ - று.

பிறப்புமுற்றும்.

வ - று. கஃறீது, முஃடீது எனவரும். (சுஉ)

ரு. எழுத்தின் உருவம்.

(97.) தொல்லை வடிவின வெல்லா வெழுத்துமாண்
டெய்து மெகர மொகரமெய் புள்ளி.

எ - ன், நிறுத்தமுறையானே வடிவாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) எல்லாவெழுத்தும் பழையதாகவருகின்ற வரிவடிவினவேயாம்; அவ்விடத்து எகரமும் ஒகரமும் மெய்களும் புள்ளி பெற்று நிற்பனவாம். எ - று.

வ - று. எ்ரி, எரி; [1]ஒ்ளி, ஒளி; உல்கு, உலகு; மண்மகள், மணமகள்; கண்மணி, கணமணி எனக் கண்டுகொள்க. 'ஆண்டு' என்ற மிகையானே, தாது, எது என்றற்றொடக்கத்து ஆரியமொழிகளும், எட்டு, கொட்டு என்றற்றொடக்கத்துப் பொதுமொழிகளும், குன்றியாது, [2]நாடியாது, எட்டியாண்டுளது என்றற்றொடக்கத்துப் புணர்மொழிப்பொருள்வேறுபாடுகளும் அறிதற்பொருட்டுக் [3]குற்றுகரக் குற்றிகரங்களுக்கு மேற் புள்ளிகொடுப்பாரும் உளரெனக் கொள்க.

உருவமுற்றும்.

(பி - ம்.) [1] ஒ்தி, ஒதி. [2] மாடியாது. [3] குற்றிகாக்குற்றுகரங்கட்கு. (சங)

சு. எழுத்தின்மாத்திரை.

(98.) மூன்றுயி ரளபிரண் டாநெடி லொன்றே
குறிலோ டையௌக் குறுக்க மொற்றள
பரையொற் றிஉக் குறுக்க மாய்தம்
கால்குறண் மஃகா னய்த மாத்திரை.

எ - ன், நிறுத்தமுறையானே எல்லாவெழுத்திற்கும்அளவா மாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) உயிரளபெடை மூன்றும், நெட்டெழுத்து இரண்டும், குற்றெழுத்தும் ஐகாரக்குறுக்கமும் ஔகாரக்குறுக்கமும் [1] ஒற்றளபெடையுமென்னுநான்கும் ஒரொன்றுஒன்றும், மெய்களும் குற்றியலிகரக் குற்றியலுகரங்களும் ஆய்தமும் ஒரொன்றுஅரையும், மகரக்குறுக்கமும் ஆய்தக்குறுக்கமும் ஒரொன்று[2]காலும் மாத்திரைகளளவாகவுடையவாம். எ - று.

அன்னவாதல் அவற்றிற்கு மேற்காட்டிய உதாரணங்களுட் காண்க.

(பி - ம்.) [1] ஒற்றளபெடையும் இவைநான்கும். [2] காலும்அளபாக. (சச)

(99.) இயல்பெழு மாந்த ரிமைநொடி மாத்திரை.

எ - ன், மேல் எழுத்திற்குஅளவு மாத்திரையென்றார், ஈண்டு அம்மாத்திரையாவது இஃதென்பது உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) விகாரப்படாதே இயல்பாக எழாநின்ற மாந்தருடைய கண்ணிமையும் கைந்நொடியும் ஆண்டுச்சொன்னமாத்திரைக்கு அளவாம். எ - று.

கட்புலனாகிய இமைக்காலமும் செவிப்புலனாகிய நொடிக்காலமும் கருதிக்[1]கோடற்கு இரண்டும் ஓதினாரென்க.

(பி - ம்.) [1] கொண்டற்கு. (சரு)

(100.) ஆவியு மொற்று [1]மளவிறந் திசைத்தலும்
மேவு மிசைவிளி பண்டமாற் றாதியின்.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) உயிரும் ஒற்றுமென்னும் இருகூற்றெழுத்தும் தமக்குச்சொன்ன மாத்திரைகளின்மிக்கிசைக்கவும்பெறும், இசையும் விளியும் பண்டமாற்றும் முதலானவற்றின்கண். எ - று.

'ஆதி' என்றதனால், நாவலும் முறையீடும் புலம்பும் குறிப்பிசைமுதலாயினவுங்கொள்க. [2]"கஃறென்னுங் கல்லதரத்தம்" என்பது குறிப்பிசை. ஏனைய வந்துழிக்காண்க. உயிர் பன்னிரண்டுமாத்

திரையும் ஒற்றுப் பதினொருமாத்திரையும் நீளுமென்றார், கந்தருவ நூலுடையார். அவை வந்தவழிக்காண்க, நாவல்-போர்க்களைத்தல்.

மாத்திரைமுற்றும்.

(பி - ம்.) [1] அளபிறந்து. [2] கல்லென்னும். (சசு)

எ. முதல்நிலை.

(101.) பன்னீ ருயிருங் கசதந பமவய
ஞஙவீ ரைந்துயிர் மெய்யு மொழிமுதல்.

எ - ன், நிறுத்தமுறையானே மொழிக்குமுதலாமெழுத்தாவன உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இச்சொல்லப்பட்ட இருபத்திரண்டெழுத்தும் பொதுவகையால் மொழிக்குமுதலாம். எ - று.

வ - று. அடை, ஆடை, இடை, ஈடு, உடை, ஊடல், எடை, ஏடு, ஐயம், ஒடு, ஓடு, ஔவியம் எனவும்; களி, காளி, [1]கிரி, கீரி, குளி, கூளி, கெடல், கேடு, [2]கைதை, கொவ்வை, கோவை, கௌவை எனவும்; சளி, சாரல், சிலை, சீலை, [3]சுளை, சூளை, செறி, [4] சேறி, சையம், [5]சொரி, சோரி, சௌரி எனவும்; தரை, தாரை, திரை, தீரை, துரை, [6]தூரை, தெரி, தேரை, தையல், தொய்யில், [7] தோயல், தௌவை எனவும்; நரை, நாரை, நிரை, நீர்மை, நுரை, நூறு, நெரி, நேர்மை, நைவு, [8]நொவ்வு, நோவு, நௌவி எனவும்; படை, பாடி, பிடி, பீடு, புடை, பூடு, பெடை, பேடு, பைதல், [9] பொய்தல், போதல், பௌவம் எனவும்; மலை, மாலை, [10]மிசை, மீசை, முளை, மூளை, மெருள், மேடு, மையல், மொழி, மோழை, மௌவல் எனவும் வரும். இவை முழுதும்முதலாயின. ஒழிந்தவை தத்தம் சிறப்புவிதியிற் காட்டுதும். [11]வரிமுறையான்வையாது இதனுள் மயங்கவைத்தது வழக்குப்பன்மைபற்றியென்க. ஙகரம் மொழிக்கு முதலாமோவெனின், [12]"கசதப ஙவ்வே யாதியு மிடையும், டற விடை ணனரழ லளஇடை கடையே, ஞநமய வவ்வே மூன்றிட மென்ப" என ஙகரம் ஈரிடத்தும் நிற்கு மென்றார், ஆசிரியர் அவிநயனாரு மெனக்கொள்க.

(பி - ம்.) [1] கிளி. [2] கைவை. [3] சுளி. [4] சேரி. [5] சொறி. [6] தூறு. [7] தோரை. [8] நொய்து. [9] பொய்கை, போர்வை. [10]மிகை, மீகை. [11]வரிசை முறையான், வரன்முறையான். [12]; (க) கசதப வாதி யிடையிட விடையுள,

வயநம ஙஞமூன் றிடமென மொழிப. (௨) கசதப வாதி யிடையீ றவற்றுள, வயநம ஞஙமூன் றிடமென மொழிப. (௩) கசதப வாதி யிடையுள டறவுள, வயநம ஞஙக்களு மூன்றிட மென்ப. (௪) கசதப வாதி யிடையுண டவற்றுள, வயந மஙஞ மூன்றிட மென்ப. (௪௭)

(102.) உ ஊ ஒ ஓ வலவொடு வம்முதல்.

எ - ன், பொதுவிதிமாற்றிச் சிறப்புவிதி யுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இந்நான்குமொழிந்த உயிரோடுங்கூடி வகரம் மொழிக்குமுதலாம். எ - று.

வ - று. வளி, வாளை, [1]விளி, [2]வீளை, வெளி, வேளை, வைகல், வௌவுதல் எனவரும்.

(பி - ம்.) 1 விழி, வீளை. 2 வீழி, வீணை. (௪௮)

(103.) அ ஆ உ ஊ ஓ ஔ யம்முதல்.

இதுவுமது.

(இ - ள்.) இந்த ஆறுயிரோடுங்கூடி யகரம் மொழிக்குமுதலாம். எ - று.

வ - று. யவனர், யானை, யுகம், [1]யூகம், [2]யோகம், யௌவனம் எனவரும். மேலில் ஓடுவை வருவித்துக்கொள்க.

(பி - ம்.) 1 யூகி, 2 யோகி. (௪௯)

(104.) அ ஆ எ ஒவ்வோ டாகு ஞம்முதல்.

இதுவுமது.

(இ - ள்.) இந்நாலுயிரோடுங்கூடி ஞகரம் மொழிக்குமுதலாம். எ - று.

(வ - று.) [1]ஞமன், [2]ஞாலம், [3]ஞெகிழ்ந்தது, ஞொள்கிற்று எனவரும்.

(பி - ம்.) 1 ஞமலி, 2 ஞானம். 3 ஞெளிந்தது. (௫0)

(105.) [1]சுட்டியா வெகர வினாவழி யவ்வை
ஒட்டி ஙவ்வு முதலா கும்மே.

இதுவுமது.

(இ - ள்.) மூன்றுசுட்டிற்கும் யாவும் எகரமுமாய வினாக்களுக் கும்வழியே [2]அகரத்தோடுங்கூடி ஙகரம் மொழிக்குமுதலாம். எ - று.

(வ - று.) அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், யாங்ஙனம், எங்ஙனம் எனவரும். உம்மை இறந்ததுதழீஇயஎச்சவும்மை. *"சரிசமழ்ப்புச் சட்டி சருகு சவடி, சளிசகடு சட்டை சவளி - சவிசரடு, சந்து சதங்கை சழக்காதி யீரிடத்தும், வந்தனவாற் சம்முதலும் வை". †"குற்றிய லுகர முறைப்பெயர் மருங்கி, னொற்றிய நகரமிசை நகரமொடு முதலும்" என ஆசிரியர் தொல்காப்பியனார் இவ்வாறு குற்றியலுகரம் மொழிக்குமுதலாமென்றாராலோவெனின், "நுந்தை யுகரங் குறுகி மொழிமுதற்கண், வந்த தெனினுயிர்மெய் யாமனைத் துஞ் - சந்திக், குயிர்முதலா 3வந்தணையு மெய்ப்புணர்ச்சி யின்றி, மயலணையு மென்றதனை மாற்று." இவற்றை விரித்துரைத்து விதியும் விலக்கும் அறிந்துகொள்க.

மொழிமுதல் முற்றும்.

(பி - ம்.) 1 சுட்டியா. 2 அகரத்தோடு நகரம். 3 வந்தனைய. (ருக)

அ. ஈற்றுநிலை.

(106.) ஆவி ஞணநம னயரல வழளமெய்
சாயு முகர நாலா றீறே.

எ - ன், நிறுத்தமுறையானே மொழிக்கு ஈற்றெழுத்தாவன உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இச்சொல்லப்பட்ட உயிரும் மெய்யும் குற்றுகரமுமாகிய இருபத்துநாலெழுத்தும் மொழிக்கு ஈறுவனவாம். எ - று.

வ - று. ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ எனவும்; உரிஞ், மண், பொருந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், வீழ், வேள் எனவும், 1அஃகு எனவும் வரும். இவை பொதுவிதியாற் போந்தன. ஏனைய வருஞ்சூத்திரத்திற் பெறுதும். குற்றுகரமும் உயிராயடங்குமெனினும் புணர்ச்சிமுதலான வேறுபாடுண்மைநோக்கி வேறெடுத்தோதினரென்க.

(பி - ம்.) 1 எஃகு. (ருஉ)

(107.) குற்றுயி ரளபி னீறா மெகரம்
மெய்யோ டேலா தொந்நவ் வொடா1மௌ
ககர வகரமொ டாகு மென்ப.

---

* இது, "சகரக் கிளவியு மவற்றோ ரற்றே" என்னும் தொல்காப்பியச்சூத்திரத்தை மறுத்துரைப்பார்கூற்றுப்போலும்.

† தொல். மொழிமரபு, நசு.

எ - ன், குற்றுயிர்க்குப் பொதுவிதிமாற்றிச் சிறப்புவிதியும், எல்லாவுயிர்க்கும் பொதுவிதியின்மேற் சிறப்புவிதியும் உணர்த்து தனுதலிற்று.

(இ - ள்.) குற்றுயிர் அளபின் ஈறும் எ - து, குற்றுயிரைந்தும் தாமேநின்று ஈருகா, அளபெடுப்புழி ஈறும். எ - று.

வ - று. ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ என வரும்.

எகரம் மெய்யோடு ஏலாது எ - து, எகரம் மெய்களோடு கூடி நின்று ஈறுகாது. எ - று.

ஒ நவ்வொடு ஆம் எ - து, ஒகரம் நகரமொன்றுடனே கூடி நின்று ஈறும். எ - று.

வ - று. நொ எனவரும்.

ஔ ககர வகரமொடு ஆகும் எ - து, ஔகாரம் ககரத்தோடும் வகரத்தோடுங் கூடிநின்று ஈறும். எ - று.

வ - று. கௌ, வௌ எனவரும்.

என்ப எ - து, என்றுசொல்லுவர் புலவர். எ - று.

எனவே, உயிர்கள் தாமேநின்றும் அளபெடுப்புழி நின்றும் ஈறுதலேயன்றி, ஒகரம் நகரத்துடனும், ஔகாரம் ககர வகரங்களுடனும், எகரமொழிந்த ஏனைய ஒன்பதுயிரும் தமக்கேற்ற மெய்களுடனுங் கூடிநின்று ஈறும். எ - று.

எகர ஒகர ஔகாரங்களை விதந்தோதினமையான், ஏனை உயிர்கள் தமக்கேற்ற மெய்களோடு ஈறுமென்பது தாமேபோதரு மெனக்கொள்க.

வ - று. வாழ்க, [2]மூங்கா, [3]பெருங்கி, [4]பெருங்கீ, [5]பங்கு, [6] கூ, எங்கே, எங்கை, எங்கோ, எனவரும். இவ்வாறே ஏற்கும் பிறமெய்களோடும் ஒட்டிக்கொள்க. ஏற்குமென்பது எற்றுற்பெறுது மோவெனின், சூத்திரத்து எடுத்தோதாது ஞாபகவகையாற் சொற்றமையாற் பெறுதும்.

(பி - ம்.) [1] ஔக்ககர [2] பூங்கா, 3: (க) பருங்கி (உ) பிருங்கி, 4 பெருகீ, 5 பெருகு 6: (க) பெருகூ (உ) பங்கூ.  (ருங)

**(108.) நின்ற நெறியே யுயிர்மெய் முதலீறே.**

எ - ன், உயிர்மெய் முதலும் ஈறுமாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஒற்று முன்னும், உயிர் பின்னுமாய் நிற்றலின் உயிர்மெய்யானது மெய்முதல்மொழியென்றும் உயிரீற்றுமொழியென்றுமாவதன்றி உயிர்மெய்முதலென்றும் உயிர்மெய் ஈறென்றும் வழங்கப்படாது. எ - று.

ஈறு முற்றும். (ருச)

கூ. இடைநிலை.

**(109.) கசதப வொழித்தவீ ரேழன் கூட்டம்**
**மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்**
**டாகுமிவ் விருபான் மயக்கு மொழியிடை**
**மேவு முயிர்மெய் மயக்கள வின்றே.**

எ - ன், நிறுத்தமுறையானே இடைநிலையாமாறு உணர்த்துவானெடுத்துக்கொண்டார், அவற்றுள் இச்சூத்திரம், பொதுவகையால் [1] மெய்ம்மயக்கமும் உடனிலைமயக்கமும் ஆமாறும் [2] அவற்றதெண்ணும் அவைநிற்குமிடமும் ஆமாறும் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மெய் பதினெட்டுள்ளும் கசதபவென்னு நான்கும் ஒழித்துநின்ற பதினாலுமெய்யும் ஒன்றன்பின்னொன்று மாறிவந்து ஒன்றுவது மெய்ம்மயக்கமாம்; ரகர ழகரமொழித்துநின்ற பதினாறு மெய்யும் தம்முன்னர்த் தாம்வந்தொன்றுவது உடனிலைமயக்கமாம். இச்சொல்லப்பட்ட இருகூற்று முப்பதுமயக்கும் மொழியிடையிலேயாம். உயிர்மெய்மயக்கம் இன்னதன்பின்னர் இன்னதாமென்னும் வரையறையில்லை. எ - று.

**(பி - ம்.)** [1] மெய்ந்நிலைமயக்கமும். [2] அவற்றிற்கெண்ணும். (ருரு)

**(110.) ஙம்முன் கவ்வாம் வம்முன் யவ்வே.**

எ - ன், ஙகர வகர மெய்ம்மயக்கமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஙகரமுன்னர்க் ககரமும், வகரமுன்னர் யகரமும் வந்து மயங்கும். எ - று.

வ - று. கங்கன், தெவ்யாது எனவரும். (ருசு)

## (111.) ஞநமுன் றம்மினம் யகரமொ டாகும்.

எ - ன், ஞகர நகர மெய்ம்மயக்கமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இவ்விரண்டுமெய்ம்முன்னரும் தமக்கினமாகிய சகர தகரங்களும் யகரமும் வந்து மயங்கும். எ - று.

வ - று. கஞ்சன், உரிஞ்யாது, கந்தன், வெரிந்யாது என வரும். (ருஎ)

## (112.) டறமுன் கசப மெய்யுடன் மயங்கும்.

எ - ன், டகர றகர மெய்ம்மயக்கமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இவ்விரண்டுமெய்ம்முன்னரும் கசபவென்னுமூன்று மெய்யும் மயங்கும். எ - று.

வ - று. கட்கம், [1]கட்சி, கட்ப எனவும், கற்க, [2]கற்சிறை, கற்ப எனவும் வரும்.

(பி - ம்.) [1] கட்சிறுர். [2] கற்சிறுர். (ருஅ)

## (113.) ணனமுன் னினங்கச ஞபமய வவ்வரும்.

எ - ன், ணகர னகர மெய்ம்மயக்கமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இவ்விரண்டின்முன்னர்த் தமக்கினமாகிய டறக்களும் க ச ஞ ப ம ய வ என்னும் ஏழுமெய்யும் மயங்கும். எ - று.

வ - று. [1]வெண்டயிர், [2]வெண்கலம், வெண்சோறு, வெண்ஞாண், வெண்பல், வெண்மலர், மண்யாது, மண்வலிதுஎனவும், புன்றலை, புன்கண், புன்செய், புன்ஞாண், புன்பயிர், புன்மலர், பொன்யாது, பொன்வலிது எனவும்வரும்.

(பி - ம்.) [1] விண்டு, [2] வெண்கல். (ருகூ)

## (114.) மம்முன் பயவ மயங்கு மென்ப.

எ - ன், மகரமெய்ம்மயக்கமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மகரமெய்ம்முன்னர்ப் பகர யகர வகரங்கள் வந்து மயங்கும். எ - று.

வ - று. கம்பன், [1]கலம்யாது, [2]கலம்வலிது எனவரும்.

(பி - ம்.) [1] காலம் யாது. [2] காலம் வலிது. (சூ0)

(115.) யரழ முன்னர் மொழிமுதன் மெய்வரும்.

எ - ன், யகர ரகர ழகர மெய்ம்மயக்கமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்றன்முன்னரும் மொழிமுதலான பத்தி னுள்ளும் [1]ஙகரமொழித்து ஒழிந்த ஒன்பதுமெய்யும் மயங்கும். எ-று.

ஙகரம் ஈண்டு விலக்கிற்றில்லையாலோவெனின், அது, [2]தன் விதிச்சூத்திரத்தினுள்ளே இன்னவிடத்துவருமென்று இடங்குறித் துச்சொன்னமையாற் [3]பிறவழிவாராதெனக்கொள்க.

வ - று. (வேய், வேர், வீழ்)+(கடிது, சிறிது, தீது, பெரிது, ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது) எனவரும்.

(பி - ம்.) [1] ஙகாரமொழிந்த ஒன்பதுமெய்யும். [2] (க) அதன் தனி விதிச்சூத்திரத்தினுள்ளே. (உ) விதிச்சூத்திரத்தினுள்ளே. [3] பிறவுழி. (சுக)

(116.) லளமுன் கசப வயவொன் றும்மே.

எ - ன், லகர ளகர மெய்ம்மயக்கமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இவ்விரண்டுமெய்ம்முன்னரும் க ச ப வ ய வென் னும் ஐந்துமெய்யும் மயங்கும். எ - று.

வ - று. (வேல், வாள்)+(கடிது, சிறிது, பெரிது, வலிது, யாது), எனவரும்.

மெய்ம்மயக்கமுற்றும். (சுஉ)

(117.) ரழவல் லனதம்முற் றுமுட னிலையும்.

எ - ன், உடனிலைமயக்க முணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ரகரழகரமொழித்து ஒழிந்த பதினாறுமெய்யும் தம் முன்னர்த் தாம்வந்து [1]மயங்கும். எ - று.

வ - று. அருக்கன், அங்ஙனம், அச்சு, மஞ்ஞை, மட்டை, மண்ணை, வித்து, வெந்நெய், அப்பி, அம்மி, அய்யர், அல்லி, அவ்வை, கள்ளி, கற்றை, கன்னி எனவரும்.

(பி - ம்.) [1] மயங்குவது உடனிலைமயக்கமாம். (சுந)

(118.) யரழவொற் றின்முன் கசதப ஙஞநம
ஈரொற் றும்ரழத் தனிக்குறி லணையா.

எ

எ - ன், ஈரொற்றுடனிலையாமாறும் [1]தனிக்குறிற்கீழ் ஒற்றுகாதனவும் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) யாழவென்னும் மூன்றுமெய்ம்முன்னும் கசதபஙஞநமவென்னும் இவ்வெட்டொற்றும்வந்து ஈரொற்றுடனிலையாய் நிற்கும். எவ்விடத்தும் தனிக்குறின்முன்னர் ரகாரழகாரங்கள்வந்துஒற்றாய் நில்லா. எ - று.

(வ - று.) வேய்க்குறை, வேர்க்குறை, வீழ்க்குறை; சிறை, தலை, புறம் எனவும், வேய்ங்குறை, வேர்ங்குறை, வீழ்ங்குறை; சிறை, தலை, புறம் எனவும் கசதப ஙஞநமக்கள் ஈரொற்றாய் வந்தவாறு காண்க. ஆகாதனவற்றிற்கு யாண்டும் காட்டாவனஇல்லையெனக்கொள்க.

(பி - ம்.) [1] ரகார ழகாரங்கள் தனிக்குறிற்கீழ் ஒற்றுகாதெனவும். (சுச)

(119.) லளமெய் திரிந்த னணமுன் மகாரம்
நைந்தீ ரொற்றுஞ் செய்யு ளுள்ளே.

எ - ன், செய்யுட்குரிய ஈரொற்றுடனிலைமயக்க முணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) லகரளகரங்கள்திரிந்த னகரணகரங்கண்முன் மகரம் கால்மாத்திரையாய் ஈரொற்றாய் நிற்கும், செய்யுட்கண். எ - று.

வ - று. "சிதையுங் கலத்தைப் பயினற் [1]றிருத்தித், திசையறி [2]நீகானும் போன்ம்.", "வெயிலியல் வெஞ்சுர மையநீ யேகின், மயிலியன் மாதர் மருண்ம்." எனவரும்.

(பி - ம்.) [1] திருத்துங். [2] மீகானும். (சுரு)

(120.) தம்பெயர் மொழியின் முதலு மயக்கமும்
இம்முறை மாறியு மியலு மென்ப.

எ - ன், முதனிலை இடைநிலைகட்கு உரியதோர் வழுவமைப் புணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) எழுத்துக்கள் தம்பெயர்களை மொழியுமிடத்து ஈண்டுச்சொன்னமுறையன்றி முதலாகாதன முதலாகியும் மயங்காதன மயங்கியும் வரப்பெறும். எ - று.

வ - று. * "அவற்றுள், லளஃகான் முன்னர் யவவுந் தோன்றும்" என்பதனுள், ளகரமெய்ம்முன்னர் லகரம் மயங்கினவாறும், லகரம் மொழிக்கு முதலானவாறுங் காண்க. (சுசு)

---

* தோல். நூன்மரபு, உச

(121.) மகர விறுதி யஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன வுளவே.

எ - ன், இதுவும் ஓர்மயக்கவகையுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மகரவீறுன அஃறிணைப்பெயர்களுட்சில னகரத்தோடு உறழ்ந்துவருவன உள. எ - று.

வ - று. நிலம், நிலன்; புலம், புலன்; கலம், கலன்; வலம், வலன்; முகம், முகன்; அகம், அகன் என்றற்றொடக்கத்தன உறழ்ந்தன. 'உறழாநடப்பனவுள' எனவே, உறழாதன பெரும்பான்மையவாமெனக்கொள்க. அவை: வட்டம், பட்டம், குட்டம், மாடம், கூடம், கடாம், படாம், கடகம், [1]சடகம், நுகம், மகம், ஆரம், பூரம், உத்தரம், [2]வீக்கம், நோக்கம், [3]ஊக்கம் என்றற்றொடக்கத்தன. இனி, இவ்விதி இவ்வாறன்றி, *"மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த, னகரத் தொடர்மொழி யொன்பஃ தென்ப, புகரறக் கிளந்த வஃறிணைமேன." என்று, எகின், செகின், எயின், வயின், குயின், [4] அழன், புழன், [5]புலான், கடான் எனவரும் ஒன்பதும் மயங்காதன வெனக்கொள்ளின், [6]பலியன், [7]வலியன், வயான், [8]கயான், அலவன், [9]கலவன், கலுழன், மறையன், செகிலன் முதலாயின மயங்கப் பெறுவென மறுக்க.

(பி - ம்.) 1 சகடம் 2 விசாகம். 3 ஒக்கம். 4 அழான், புழான். 5 வயான். 6 பயின், 7 (க) வயின் (உ) வலியான். 8 கழான். 9இகலன். (கூஎ)

(122.) அஐ முதலிடை யொக்குஞ் சஞயமுன்.

இதுவுமது.

(இ - ள்) மொழிக்குமுதலினும் இடையினுநின்ற அகர ஐகாரங்கள் தம்மில் வேறுபாடின்றி ஒக்கும், சகர ஞகர யகரங்கள் முன்வரின். எ - று.

ஈண்டுமுன்னென்றது காலமுன் எனக்கொள்க.

வ - று. பசல், பைசல்; மஞ்சு, மைஞ்சு; [1]மயல், மையல்; எனவும், அரசு, அரைசு; முரஞ்சு, முரைஞ்சு; அரயர், அரையர் எனவும் வரும்.

(பி - ம்.) 1 அய்யர், ஐயர். (கூஅ)

* தோல். மொழிமரபு, சக.

(123.) ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகா னுறழு மென்மரு முளரே.

இதுவுமது.

(இ - ள்.) ஐகாரமே யகரமேயென்றிவற்றின் வழியேவரும் நகரத்துடன் ஞகரம் சிலவிடங்களில் உறழ்ந்துவரப்பெறுமென்பாரு முளர். எ - று.

உம்மையான் உறழாதென்பாரும் பெரும்பாலாரெனக்கொள்க.

வ - று. ஐஞ்ஞூறு, மைஞ்ஞீலம், பைஞ்ஞன்று, கைஞ்ஞீட்சி எனவும், செய்ஞ்ஞன்றி, மெய்ஞ்ஞன்று, பொய்ஞ்ஞின்றான், [1]செய்ஞ்ஞீண்டது, காய்ஞீண்டது எனவும்வரும். உறழ்ச்சியான், ஐந்நூறு, மைந்நீலம், செய்ந்நன்றி, மெய்ந்நன்று என்றற்றொடக்கத்தனவும் கொள்க.

இடைநிலைமுற்றும்.

(பி - ம்.) [1]செய்ஞ்ஞான்றது. (௬௯)

க0. போலி.

(124.)* அம்மு னிகரம் யகர மென்றிவை
எய்தி னையொத் திசைக்கு மவ்வோ
டுவ்வும் வவ்வு மௌவோ ரன்ன.

எ - ன், நிறுத்தமுறையானே போலியெழுத்தாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) அகரமுன் இகரமும் யகரமும்வரின் ஐகாரஓசை போல இசைக்கும்; அகரத்தின்முன் உகரமும் வகரமும்வரின் ஔகாரஓசைபோல இசைக்கும். எ - று.

போலவிசைக்குமெனவே அவை ஆகா; போலியாமெனக் கொள்க.

வ - று. அஇவனம், அய்வனம் - ஐவனம்; மஉவல், மவ்வல் - மௌவல் எனவரும். (எ0)

---

* 'அம்மு னிகர மாய்த மென்றிவை, எய்தின்' என மூலமும், 'அகரமுன் இகரமும் ஆய்தமும் வரின்' என உரையும், 'அ இ வனம் ஐவனம்; கஃசு கைசு' என உதாரணமும் மிதிலைப்பட்டி ஸ்ரீ அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் வீட்டுப் பிரதியிலும் வேறு மூன்று பழைய பிரதிகளிலும் காணப்பட்டன.

எழுத்தின்சாரியை.

(125.) மெய்க ளகரமு நெட்டுயிர் காரமும்
[1]ஐஔ கானு மிருமைக் குறிலிவ்
விரண்டொடு கரமுமாஞ் சாரியை பெறும்பிற.

எ - ன், அதிகரித்தமுறையானே எழுத்தின்பகுதியான எண் முதற்பத்துமுணர்த்தி அவ்வெழுத்துவழங்குதற்குவரும் சாரியை உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மெய்பதினெட்டும் அகரத்தையும், நெட்டுயிரேழும் காரத்தையும், ஐகாரஔகாரங்கள் காரத்துடனேகானையும், உயிரும் உயிர்மெய்யுமான குற்றெழுத்தைந்தும் காரம் கான்களுடனே கர மென்பதையும் சாரியையாகச் சார்ந்துநடக்கும். எ - று.

வ - று. க ங ச ஞ ற ன ; ஆகாரம் ஈகாரம் ஊகாரம் ஏகாரம் ஐகாரம் ஓகாரம் ஔகாரம் ; ஐகான் ஔகான் ; அகாரம் இகாரம் உகாரம் எகாரம் ஒகாரம் ககாரம் ஙகாரம் றகாரம் னகாரம், அஃகான் னஃகான், அகரம் இகரம் உகரம் எகரம் ஒகரம் ககரம் னகரம் எனவரும். 'பிற' என்றமிகையானே கான்வருங்காலை ஆய்தமும், [2]ஆன ஏன முதலானவுங்கொள்க.

(பி - ம்.) [1] ஐ ஔக்கானும் [2] (க) ஆனும் ஏனும் ஓனும் அம்முதலானவும் (உ)ஆனும் ஏனும் அம்முதலானவும் (ஙு)ஆனும் ஏனவும் ஆனமுதலானவும்.()

புறநடை.

(126.) மொழியாய்த் தொடரினு முன்னனைத் தெழுத்தே.

எ - ன், எனைவகையெழுத்திற்கும் இயைவதோரிலக்கணமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) எழுத்துக்கள் பலவற்றையுங்கூட்டி நெருக்கி ஒரு தொடர்படக்கூறுமிடத்தும் தத்தம்வடிவும் அளவும் முதலாயின இயல்பிற்றிரியா ; தனித்து நின்றாற்போலும், யாண்டும். எ - று.

வ - று. மறு [1]மற்று ; மறை [2]மற்றை எனவும், * "கற்க கசடறக் கற்பவை கற்றபி, னிற்க வதற்குத் தக." எனவும் வரும். இவற்றுள் அவ்வாறுதல் காண்க.

(பி - ம்.) [1] மன்று. [2] மாறை. (எஉ)

முதலாவது எழுத்தியல் முற்றிற்று.

* திருக்குறள், ஙுகக.

இரண்டாவது

# பதவியல்.

(127.) எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருடரிற்
பதமா மதுபகாப் பதம்பகு பதமென
இருபா லாகி யியலு மென்ப.

என்பதுசூத்திரம். இவ்வோத்து என்னுதலியதோவெனின், ஓத்துநுதலியதும், ஓத்தினதுபெயருரைப்பவே விளங்கும். ஆயின், இவ்வோத்து என்னபெயர்த்தோவெனின், பதங்களினது இயல்பு உணர்த்திற்றுதலாற் பதவியலென்னும் பெயர்த்து. மேலோத்தினோடு இதற்கு இயைபு என்னையோவெனின், மேல் எழுத்திலக்கணம் பன்னிருபகுதியான் உணர்த்தப்படுமென்றவற்றுள் எழுத்திற்கேயுரிய பத்திலக்கணமும் போனவோத்தினானுணர்த்தி, அவற்றின் பின்னின்றது அவ்வெழுத்தினானாகிய பதமாகலின், அதனை ஈண்டுணர்த்துதலின், இயைபுடைத்தென்க. இவ்வோத்தினுள் இத்தலைச் சூத்திரம் என்னுதலிற்றோவெனின், பொதுவகையாற் பதமாமாறும் அதன் பகுதியும் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேற்சொன்ன எழுத்துத்தானே தனியே நின்றும் தொடர்ந்துநின்றும் பொருளை விளக்குமேயெனின் அது பதமென்பதாம்; அது பகாப்பதமும் பகுபதமுமென இருபகுதியாய் நடக்குமென்று சொல்லுவர் புலவர். எ - று.

எனவே எல்லாமொழியும் ஓரெழுத்துப்பதம் தொடரெழுத்துப்பதமெனவும் பகாப்பதம் பகுபதமெனவும் இவ்விரண்டாய் அடங்குமென்பதாம். இறிஞி, மிறிஞி முதலாயின தொடர்ந்தனவேனும் பொருடாராவாகலிற் பதமாகாவென்பதாயிற்று. பதமெனினும் மொழியெனினும் சொல்லெனினும் ஒக்கும். "தன்னையுணர்த்தி னெழுத்தாம் பிறபொருளைச், சுட்டுதற் கண்ணேயாஞ் சொல்" என்பது அவிநயப்புறநடை. (க)

(128.) உயிர்மவி லாறுந் தபநவி லைந்தும்
கவசவி னாலும் யவ்வி லொன்றும்

ஆகு நெடினொது வாங்குறி லிரண்டோ
டோரெழுத் தியல்பத மாறேழ் சிறப்பின.

எ - ன், மேல்எழுத்துத்தனியேநின்றும் பதமாமென்றார், அவை இவையென்பதூஉம் இத்துணையவென்பதூஉமுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) உயிரிலும் மகரத்திலும் அவ்வாறும், தவ்விலும் பவ்விலும் நவ்விலும் ஐவைந்தும், கவ்விலும் வவ்விலும் சவ்விலும் நந்நான்கும், யவ்வில் ஒன்றும்ஆகு நெட்டெழுத்தும், நொவ்வும் துவ் வுமாம் குற்றெழுத்திரண்டுமாக ஓரெழுத்தொருமொழி நாற்பத்திர ண்டும் சிறப்புளவாம். எ - று.

வ - று. ஆ, ஈ, ஏ, ஐ, ஓ, ஔ; மா, மீ, மூ, மே, மை, மோ; தா, தீ, தூ, தே, தை; பா, பூ, பே, பை, போ; நா, நீ, நே, நை, நோ; கா, கூ, கை, கோ; வா, வீ, வே, வை; சா, சீ, சே, சோ; யா; நொ, து எனவரும். இவை சிறப்புளவெனவே, சிறப்பில்லன வும் சிலவுளவாயின. அவை, ஆறுமுயிரும், பகரவீகாரமும், சி, சூ, சை, கௌ, வௌ என்பன போல்வனவுமெனக்கொள்க. 'உயிர் மவிலாறும்' என்றதனை, அவ்வவ்வருக்கங்களி லெனக்கொள்க. (உ)

(129.) பகாப்பத மேழும் பகுபத மொன்பதும்
எழுத்தீ றுகத் தொடரு மென்ப.

எ - ன், மேல் நிறுத்தமுறையானே தொடரெழுத்துப்பதத் திற்கு வரையறையுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பகாப்பதம் இரண்டெழுத்துமுதல் ஏழெழுத்தீறு கவும் பகுபதம் இரண்டெழுத்துமுதல் ஒன்பதெழுத்தீறுகவும்தொட ருமென்பர் புலவர். எ - று.

வ - று. அணி, அறம், அகலம், அருப்பம், தருப்பணம், உத் தராட்டாதி எனப் பகாப்பதம் தொடர்ந்தவாறு. கூனி, கூனன், குழை யன், பொருப்பன், அம்பலவன், அரங்கத்தான், * அத்திகோசத்தான், உத்தராட்டாதியான் எனப் பகுபதந்தொடர்ந்தவாறு. கங்கைகொண்ட சோழபுரம், †இரதநூபுர சக்கரவாளம், பாண்டியன்பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்றற்றொடக்கத்து ஒட்டுப்பெயர்க்கு வரையறையில்லையெனக்கொள்க. (ங)

* யானைமேலேற்றுமளவான நிதிக்குவையையுடையோன்.

† ஒருநகரம். (சூளாமணி, இரதநூபுர. கஉ.)

(130.) பகுப்பாற் பயனற் றிடுகுறி யாகி
முன்னே யொன்றாய் முடிந்தியல் கின்ற
பெயர்வினை யிடையுரி நான்கும் பகாப்பதம்.

எ - ன், நிறுத்தமுறையானே பகாப்பதமாமாறு உணர்த்துத னுதலிற்று.

(இ - ள்.) ஒன்றாய்நின்று ஒருபொருடருமொழியைப் பலவாகப்பிரித்தால் அதனால் வருவதோர்பயனற்று இடுகுறியாய்த் தொன்றுதொட்டு ஒருபிண்டமாய்நடக்கின்ற பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லுமென்று வழங்குகின்றவை பகாப்பதமாம். எ - று.

வ - று. நம்பி, நங்கை, சாத்தன், சாத்தி, கொற்றன், கொற்றி, தந்தை, தாய், யானை, குதிரை, உயிர், உடம்பு, மலை, வெற்பு, தீ, நீர், ஒன்று, கழஞ்சு, கலம் எ - ம்; வான், நிலம், அகம், புறம் எ - ம்; யாண்டு, வேனில், பங்குனி, ஆதிரை, பகல், இரா, காலை, மாலை, ¹ நெருநல், இன்று எ - ம்; கண், செவி, மூக்கு, கை, கால், கோடு, சினை, தளிர், பூ, காய், கனி எ - ம்; செம்மை, வெண்மை, கருமை, நெடுமை, குறுமை, இன்மை, உண்மை எ - ம்; உணல், தினல், செலவு, வரவு, கூத்து, பாட்டு எ - ம் வரும் இத்தொடக்கத்துப் பொருளாதி யறுவகைப்பொருட் பெயர்களெல்லாம் பெயர்ப்பகாப்பதம். உண், தின், நட, கிட, போ, வா, உரை, இரு, செல் என்றற்றொடக்கத்தன வினைப்பகாப்பதம். மன், மற்று, தில், அம்ம, கொல், மியா, இக, மோ, மதி என்றற்றொடக்கத்தன இடைப்பகாப்பதம். சால, உறு, தவ, நனி, கழி, கலி, ஒலி, முழக்கு என்றற்றொடக்கத்தன உரிப்பகாப்பதம். பெயருள்ளும் சாத்தையுடையான் சாத்தன், கொற்றையுடையான் கொற்றன், கூத்தையுடையான் கூத்தனென்று இவ்வாறுபொருள்படின் அவை பகாப்பதமாகா; இடுகுறிமாத்திரையாய் நிற்கிலே பகாப்பதமாவதெனக்கொள்க. அவன், அவள், அவர் என்றற்றொடக்கத்தன ஈறு பகுக்க வேறுபால்காட்டலிற் பகுபதமாம் பிறவெனின், அவை ஒன்றாய்நின்று ஒருபொருளாவதல்லது ஈறுபிரித்தாற் பகுதி வேறுபொருள்படாமையின், அவற்றிற்குப் பகுதிவிகுதித் தன்மையின்மையின் ஆகாவென்க. இனி, சொல் நான்காகவேண்டியது என்னையோவெனின், பெயர்ச்சொல் பொருளை விளக்குதலானும், வினைச்சொல் பொருளதுதொழிலை

விளக்குதலானும், இடைச்சொற்கள், இவ்விரண்டிற்கும் [2]விகுதியுருபுகளாகியும், வேற்றுமை உவமை சாரியையுருபுகளாகியும், சில பெயராகியும், சில வினையாகியும், தெரிநிலை, தேற்றம், ஐயம், முற்று, எண், சிறப்பு, எதிர்மறை, எச்சம், வினா, விழைவு, ஒழியிசை, பிரிப்பு, கழிவு, ஆக்கம், இசைநிறை, அசைநிலை, குறிப்பு முதலான பொருண்மை விளக்குதலானும், உரிச்சொல், [3]பெயராமெனினும் பொருளை விளக்கலும் பெரும்பான்மையும் உருபேற்றலுமின்றிப் பொருட்குணத்தையே விளக்குதலானும், சில வினைபோல் வருதலானும் சொல்லிற்கு இந்நாற்பகுதியும் இவட்கிடப்பும் வேண்டுமென வேகொள்க. அன்றியும், "பெயரினும் வினையினு மொழிமுத லடங்கும்." என்ற மிகத்தெளிகேள்வி அகத்தியனாரும், *"சொல்லெனப் படுப [4]பெயரே வினையென், றாயிரண் டென்ப வறிந்திசி னோரே" என்ற ஒல்காப்பெருமைத் தோல்காப்பியனாரும், "அவைதாம், பெயர்ச்சொ லென்றா தொழிற்சொ லென்றா, [5]விரண்டன் பாலா யடங்குமன் பயின்றே" என்ற அளவறுபுலமை அவிநயனாரும் பின்பும் இப்பகுதியும் இம்முறையும் வேண்டினாரெனக்கொள்க.

(பி - ம்.) [1] நெருநை. [2] விகுதியுருபுதவலானும். [3] பெயரேயெனினும். [4] பேரே. [5] இரண்டின். (ச)

(131.) பொருளிடங் காலஞ் சினைகுணந் தொழிலின்
வருபெயர் பொழுதுகொள் வினைபகு பதமே.

எ - ன், பகுபதமாவன உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பொருளே இடனே காலமே உறுப்பே பண்பே தொழிலே என்றிவ்வாறும் காரணமாகவரும் பெயர்ச்சொற்களும், காலம்பற்றிவரும் வினைச்சொற்களும் பகுபதங்களாம். எ - று.

பொருண்முதன்மூன்றும் முதலும், சினைமுதன்மூன்றும் சினையுமாயடங்குமென்பதறிவித்தற்கு இம்முறை வைத்தாரென்க. 'பொருளிடங் காலஞ் சினைகுணந் தொழிலின், வருபெயர் பொழுதுகொள் வினை' எனவே, இவைதாமன்றி இவை காரணமாகப் பிறவற்றிற்காம் பெயர்வினைகளே பகுபதமாவனவெனக்கொள்க. பொருளாதி [1] ஏழினையுந்தொடர்ந்து ஒன்றாய்நின்றமொழியைப் பகுதி விகுதி இடைநிலையெனப் பிரித்துக் காரணங்காட்டி மீட்டுங்கூட்டி ஒருமொழியாகவே ஆக்கிக்கோடலிற் பகுபதமெனக் காரணப்பெயரா

* பெயரியல், ச.

மென்க; உதாரணம் மேற்காட்டுதும். பெயர்ப்பகுபதத்தோடும் ஆகுபெயர்ப்பதத்தோடும் தொகைப்பதத்தோடும் [2]வினைப்பெயரோடும் முற்றுவினைப்பதத்தோடும் வேற்றுமையாதோவெனின், பெயர்ப் பகுபதம், பிரித்தால், பகுதி பகாப்பதமும் விகுதி வேறுபொருளில் இடைச்சொல்லுமாய்த் தொடர்ந்துநின்று பொருளை விளக்கும்; அவை:—ஊரன், வெற்பன், வில்லி, வாளியென்றற்றொடக்கத்தன. ஆகுபெயர்ப்பதமும் காரணத்தினன் ஆமேயெனினும் விகுதியின் றிப் பகுதியான பகாப்பதந்தானே பிறிதும் ஒருபொருளை விளக்கும். அவை: தெங்கு, கடு, புளி, குழிப்பாடி, சீனம், ஏறு, குத்து, நாழி என்றற்றொடக்கத்தன. தொகைப்பதம் இரண்டும் பலவும் பகாப் பதமும் பகுபதமும் நிலைமொழி வருமொழியாய்த் தொடர்ந்து இரண்டுமுதலாய பொருள்தோன்றநிற்கும்; அவை: யானைக்கோடு, கொல்யானை, கருங்குதிரை என்றற்றொடக்கத்தன. ஒருதொழிற் சொல் எட்டுவேற்றுமையுருபுமேற்கின் [3]வினைப்பெயராம்; அன் றித் தன்னெச்சமான பெயர்கொண்டுமுடியின் முற்றுவினைச்சொல் லாம். உதாரணம், உண்டான் என்பது; உண்டானை உண்டானொடு எனவும், உண்டான்சாத்தன் உண்டான்தேவனெனவும் வரும். அன்றியும் எடுத்தலோசையாற்சொல்ல வினைப்பெயராம்; படுத்த லோசையாற்சொல்ல முற்றுவினைப்பதமாமெனக்கொள்க.

(பி - ம்.) [1] ஆறனையும். [2] பொழுதுகொள்வினைப் பெயர். 3 தொழிற் பெயர். (ரு)

(132.) பகுதி விகுதி யிடை நிலை சாரியை
சந்தி விகார மாறினு மேற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்.

எ - ன், பகுபதமுடித்தற்கு ஒருகருவியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) முதல்நிற்பதுவும் இறுதிநிற்பதுவும் இடைநிற்பது வும் பொதுச்சாரியையும் சந்திவகையும் விகாரக்கூறு மாகிய ஆறி னும் ஈண்டைக்கு ஏற்பன இவையெனக்கருதி வருவித்துமுடிக்கப் பொருளாதி எல்லாப்பெயர்ப்பகுபதமும் எல்லா வினைப்பகுபதமும் முடியும். எ - று.

இவற்றுள் இடைநிலையாவன:—பெரும்பாலும் இனைய இத் துணையவென்று அளத்தற்கரியவாய்ப் பதமுடிப்புழிக் காலமும் பொ ருண்மையுங்காட்டி ஆண்டே காணப்படுவன. சாரியையாவன:—

அன் ஆன்முதலாக [1]எடுத்தோதப்பட்டு எல்லாப்புணர்ச்சிக்கும் பொதுவாய்ப் பெரும்பாலும் இன்னொலியே பயனாகவருவன. சந்தி யாவன:—இன்னதுவந்தால் இன்னது இன்னதாமென வருவன. விகாரமாவன:—பதத்துள் அடிப்பாடும் செய்யுட்டொடையும் ஒலியும் காரணமாக வலித்தல் மெலித்தல் முதலாயினவாக வருவன. இவை இடைநிலைமுதலானவற்றால்முடியாதவழி வருவன வெனக் கொள்க. 'ஏற்பவை' எனவே ஒன்றற்கே இவையாறும் வரவேண்டு மென்னும் யாப்புறவு இல்லையெனக்கொள்க.

(பி - ம்.) [1] எடுத்தோதவும்பட்டு. (௬)

(133.) தத்தம், [1]பகாஅப் பதங்களே [2]பகுதி யாகும்.

எ - ன், பகுபதங்கட்குப் பகுதியாவன உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பொருளாதியாறனையும்பற்றிவரும் பெயர்ப்பகுபதங் கட்கு அப்பொருளாதியான பகாப்பதங்களே பகுதியாம். எ - று.

வ - று. குழையன், குழையள், குழையர், குழையது, குழையன, குழையேன், குழையேம், குழையாய், குழையீர் என இவ்வாறுவருவன இப்பொருளினையுடையாரென்னும் பொருண்மைப் பொருட்பெயர்ப்பகுபதம். வானன், வானள், வானர், வானது, வானன, வானேன், வானேம், வானாய், வானீர் என இவ்வாறு வருவன இவ்விடத்தினையுடையாரென்னும் பொருண்மை இடப்பெயர்ப்பகுபதம். காரான், காராள், காரார், காரது, காரன, காரேன், காரேம், காராய், காரீர் என இவ்வாறுவருவன இக்காலத்தையுடையாரென்னும் பொருண்மைக் காலப்பெயர்ப்பகுபதம். தாளான், தாளாள், தாளார், தாளது, தாளன, தாளேன், தாளேம், தாளாய், தாளீர் என இவ்வாறுவருவன இவ்வுறுப்பினையுடையாரென்னும் பொருண்மைச் சினைப்பெயர்ப்பகுபதம். செய்யான், செய்யாள், செய்யார், செய்யது, செய்யன, செய்யேன், செய்யேம், செய்யாய், செய்யீர் என இவ்வாறுவருவன இக்குணத்தையுடையாரென்னும்பொருண்மைக் குணப்பெயர்ப்பகுபதம். ஊணன், ஊணள், ஊணர், ஊணது, ஊணன, ஊணேன், ஊணேம், ஊணாய், ஊணீர் என இவ்வாறுவருவன இத்தொழிலையுடையாரென்னும்பொருண்மைத் தொழிற்பெயர்ப்பகுபதம். [3]பிறவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க. இவற்றுள், தத்தம்பகாப்பதங்களே பகுதியானவாறும் அன், ஆன், முத

லாயின விகுதியானவாறும் ஏற்ற சாரியை 4சந்திகளானவாறும் கண்டுகொள்க.

(பி - ம்.) 1 பகாப்பதங்களே. 2பகுதியாம். 3 பிறவுமன்ன. 4 சந்தி விகாரங்கள்.

(எ)

(134.) செம்மை சிறுமை சேய்மை தீமை
வெம்மை புதுமை மென்மை மேன்மை
திண்மை யுண்மை நுண்மை யிவற்றெதிர்
இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே.

எ - ன், 1மேல், பெயர்ப்பகாப்பதம் ஆறுவகைப்படுமென்றவற்றுட் பண்புப்பகாப்பதம் விளங்கித் தோன்றாமையான் அவற்றை எடுத்து விரித்துணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இச்சொன்னபதினொன்றும் இவற்றிற்குமாறான வெண்மை கருமை பொன்மை பசுமைகளும், பெருமையும் 2அணிமையும் நன்மையும் தண்மையும் பழமையும் வன்மையும் கீழ்மையும் நொய்ம்மையும் இன்மையும் பருமையும், இவைபோல்வனபிறவும் பண்புப்பகாப்பதம். எ - று.

வ - று. செய்யான், செய்யாள், செய்யார், செய்யது, செய்யன, செய்யேன், செய்யேம், செய்யாய், செய்யீர் என இவ்வாறு வருவன இக்குணத்தாரென்னும் பொருண்மைப் பண்புப்பகுபதம். சிறுமை, சேய்மை, தீமை முதலாகவுள்ளனவற்றோடும் பிறவற்றோடும் இவ்வாறேயொட்டிக்கொள்க.

(பி - ம்.) 1 மேற்பகாப்பதங்களே பகுதியாகுமென்றார், அவற்றுட் பெயர்ப்பகாப்பதம் ஆறுவகைப்படுமென்றவற்றுட்பண்பு. 2 (க) அண்மையும் (உ) அணுமையும்.

(அ)

(135.) ஈறு போத லிடையுகர மிய்யாதல்
ஆதி நீட லடியகர மையாதல்
தன்னொற் றிரட்டன் முன்னின்ற மெய்திரிதல்
இனமிக லினையவும் பண்பிற் கியல்பே.

எ - ன், அப்பண்புப்பதத்திற்குரிய சிலவிதி உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பண்புப்பதத்தின் இறுதிகெடுதலும், இடையினின்ற உகரம் இகரமாதலும், முதலினின்ற உயிர்கள் நீடலும், முதலினின்ற அகரம் ஐகாரமாதலும், இடையே தன்னொற்றுமிகுதலும், முன்பு

நின்றமெய் திரிதலும், வருமொழிமுதலுக்கு இனவெழுத்துமிகுத லும், இவை போல்வனபிறவும் முறைமை. எ - று.

ஈற்றுச்செய்கையை முதலிற் கூறியவதனன், இக்கேடு ஒருதலை யென்பதூஉம், கெடுவழி ஈற்றுயிர் கெடுதலும், ஈற்றுயிர்மெய் கெடுத லும், ஈற்றுயிர்மெய்யொடும் ஈற்றயலுயிர் கெடுதலும், இனவெழுத்து வருமொழிக்கண்ணதென்பதூஉம், இவ்விதியெல்லாம் ஒன்றற்கல்ல வென்பதூஉம் கொள்க.

வ - று. கரியன், பெரியன், நெடியன், சிறியனென்பன ஈற்று யிர்மெய்கெட்டும் இடைஉகரம் இகரமாகியும் வந்தன. கருங்குதிரை, செங்கோலென்பன ஈற்றுயிரும் ஈற்றுயிர்மெய்யும் முறையே கெட்டு ஒற்றுத் திரிந்தன. காரா, பேரா, பாசிலை, பாசடை என்பன ஈற் றுயிர்மெய்யும் ஈற்றயலுயிருங்கெட்டு ஆதிநீண்டன. பைங்கண், பைந்தார் என்பன ஈற்றுயிர்மெய்யும் ஈற்றயலுயிருங்கெட்டு ஆதி நின்ற அகரம் ஐகாரமாய் ஒற்றுத்திரிந்தன. வெற்றிலை, [1]சிற்றூனை, குற்றடி, குற்றுயிர், நெட்டிலை, நெட்டெழுத்து என்பன ஈற்றுயிர் மெய்யும் ஈற்றயலுயிருங்கெட்டு இடையே தன்னொற்றுமிக்கன. சேதாம்பல் என்பது ஈற்றுயிர்மெய்கெட்டு முன்புளதாய்நின்ற மெய் திரிந்து ஆதி நீண்டது; *சேங்கன்று என்பது வருமொழிக்கினமான மெல்லெழுத்து மிக்கது. கருங்குதிரை முதலாயின பகுபதமல்லவே னும் பண்பதிகாரப்பட்டமையாற் பதப்புணர்ச்சிக்கும் ஈண்டேசொன் னரெனக்கொள்க. 'இனையவும்' என்றதனுற் பண்பிற்குவருமுடிபு பிறவுமுளவேல் அவையும் ஈண்டேகொள்க.

(பி - ம்.) [1] சிற்றுடை. (கூ)

(136.) நடவா மடிசீ விடுகூ எவை
[1]நொப்போ வெளவுரி ஞண்பொருந் திரும்தின்
தேய்பார் செல்வவ் வாழ்கே [2]எஃகென்
இருபான் மூன்று மீற்ற வாய
டு செய்யெ னேவல் வினைப்பகாப் பதமே.

எ - ன், வினைப்பகாப்பதம் விளங்கித்தோன்றுமையின், அவற் றை எடுத்துணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இச்சொல்லப்பட்ட இருபத்து மூன்று ஈற்றவாய ஏவல்வாய்பாட்டான் வருவனவெல்லாம் செய்யென்னும் ஏவல்வினைப் பகாப்பதமாம். எ - று.

* செம்மை + கன்று.

வ - று. நடந்தான், வந்தான், மடிந்தான் [3]சீத்தான், விட்டான், கூவினன், ஏவினன், வைத்தான், நொந்தான், போயினன், வெளவினன், உரிஞினன், உண்டான், பொருநினன், திருமினன், தின்றான், தேய்த்தான், பார்த்தான், சென்றான், வவ்வினன், வாழ்ந்தான், கேட்டான், அஃகினன் எனவரும்.

குற்றுகரத்தை வேறுபிரித்தோதியவதனால், போக்கு, பாய்ச்சு, [4]உருட்டு, நடத்து, எழுப்பு, தீற்று என்றற்றொடக்கத்து வாய்பாட்டால் வருவனவும் அல்லா ஈறுகளான்வரும் வாய்பாடுகளுள்ளனவும் செய்யெனேவலில் அடங்குமெனக்கொள்க.

நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன, நடந்தேன், நடந்தேம், நடந்தாய், நடந்தீர் எனவும்; நடக்கின்றான், நடக்கின்றாள், நடக்கின்றார், நடக்கின்றது, நடக்கின்றன, நடக்கின்றேன், நடக்கின்றேம், நடக்கின்றாய், நடக்கின்றீர், எனவும், நடப்பான், நடப்பாள், நடப்பார், நடப்பது, நடப்பன, நடப்பேன், நடப்பேம், நடப்பாய், நடப்பீர் எனவும் இவ்வாறே எல்லாத்திணை பாலிடம்காலங்கடோறும் ஒட்டிக்கொள்க.

(பி - ம்.) [1] னொ போ. [2] (க) அஃகென் றெய்திய விருபான் மூன்று மீற்றவும் (உ) அஃகெ னிருபான் மூன்று மீற்றவும் பிறவும் (ங) அஃகெ னிருபான் மூன்று மீற்றவாய. [3] சீய்த்தான். [4] ஊட்டு. (கo)

## (137.) செய்யென் வினைவழி விப்பி தனிவரிற் செய்வியென் னேவ லிணையினீ ரேவல்.

எ - ன், [1]செய்வி செய்விப்பியென்னும் ஏவல்வினைப்பகாப்பதங்களுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) செய்யென்னும் ஏவல்வினையின்பின்பு வி பி என்னும் இரண்டினுள் ஒன்றுவரிற் செய்வியென்னும்பொருளைப் பெறும். [2] இவையிரண்டும் [3]ஒருங்குவரினும் ஒன்றே இணைந்துவரினும் ஏவன் மேலேவல்தோன்ற மூவராவாரொருகருத்தனைக் காட்டும். எ - று.

வ - று. நடப்பி, வருவி, மடிவி, [4]சீப்பி, விடுவி, கூவுவி, ஏவுவி, வைவி, நொவ்வுவி, போவுவி, வெளவுவி, உரிஞுவி, உண்பி, பொருநுவி, திருமுவி, தின்பி, தேய்வி, தேய்ப்பி, பார்ப்பி, செல்வி, வவ்வுவி, வாழ்வி, கேட்பி, [5]அஃகுவி எனச் செய்வி யென்னும் ஏவல் வினைப்பகாப்பதம் வந்தவாறு. நடத்துவிப்பி, வருவிப்பி, மடிவிப்பி

எனவும், நடப்பிப்பி, கற்பிப்பி எனவும் இரண்டும் இணைந்தும் ஒன்றேயிணைந்தும் செய்விப்பியென்னும் ஏவன்மேல் ஏவற்பகாப்பதம் வந்தவாறு. இவற்றூற் பகுபதம் வருமாறு:— நடத்துவித்தான், நடத்துவித்தாள், நடத்துவித்தார் எனவும், நடப்பித்தான், நடப்பித்தாள், நடப்பித்தார் எனவும் வரும். இவ்வாறே எல்லாத்திணைபால் இடம் காலங்கடோறுமொட்டிச் செய்வியென்னும் ஏவற்குப் பகுபதம் வந்தவாறு கண்டுகொள்க. நடத்துவிப்பித்தான், நடத்துவிப்பித்தாள், நடத்துவிப்பித்தாரெனவும், நடப்பிப்பித்தான், நடப்பிப்பித்தாள், நடப்பிப்பித்தார்; கற்பிப்பித்தான், கற்பிப்பித்தாள், கற்பிப்பித்தார் எனவும் எல்லாத்திணைபாலிடங் காலங்கடோறுமொட்டிச் செய்விப்பியென்னும் இருமடியேவற்குப் பகுபதம் வந்தவாறு காண்க. இவையெல்லாம் ஏற்றபெற்றி கொள்க.

(பி - ம்.) 1 செய்வி, செய்பி, செய்விப்பி. 2 இவ்விரண்டும். 3 ஒருங்குவரின் ஏவல்மேல் ஏவல்தோன்றி மூவராவார்க்கொருகருத்தனே. 4 சீய்ப்பி. 5 அஃகுபி.

(கக)

## (138.) விளம்பிய பகுதிவே றுதலும் விதியே.

எ - ன், பகுதிக்குரியதோர்[1]விதி யுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேற்சொன்ன வினைவகைப்பகுதிகளுள்ளும் சில பொருளான் வேறுபட்டும் சில மிக்கும் சில திரிந்தும் சில ஈறுகெட்டும் நிற்கையும் குற்றமாகா. எ - று.

நட வா மடி சீ என்றற்றொடக்கத்து வினைப்பகாப்பதங்கள் முன்னிலைப்பொருளவேனும் ஏனையிடங்களுக்கும் திரிந்தும் பொருளேற்கும்.

வ - று. வா என்பகுதி, வந்தான் வருகின்றான் என்புழி மகரம் மிக்கும் திரிந்தும் வரும். கொள்ளென்பகுதி, கொண்டான், கோடு, கோடும் என்புழி ளகாரம் ணகாரமாகியும் கெட்டும் ஆதி நீண்டும் வந்தது. கொல், செல், வெல் என்னும் பகுதிகள் கொன்றான், சென்றான், வென்றான்; கோறு கோறும், சேறு சேறும், வேறு வேறும் என்புழி லகாரம் னகாரமாகியும் கெட்டும் ஆதி நீண்டும் வந்தன. வலைச்சி, புலைச்சி, [2]குயத்தி, கணவாட்டி என்றற்றொடக்கத்துப் பெயர்ப்பகுபதங்களெல்லாம், வலைமை, புலைமை முதலான பெயர்ப்பகாப்பதத்து ஈறுகெட்டு இ ஏற்று வந்தன. ஆசுவி, சன்னுவி, ஏனுதி, சேமாறி, 3 கைவாரி, திருவிலி, பரிவிலி, அறி

விலி, பொறியிலி, நாளோதி, நூலோதி என்றற்றொடக்கத்தனவும் ஈறுகெட்டன. பிறவும் இதுவே நிலனாகப் பகுதிக்கு வருவனவெல்லாம் வருவித்துக்கொள்க.

(பி - ம்.) [1] இலக்கணம். [2] குசத்தி. [3] கைமாறி. (௧௨)

(139.) அன்ஆன் அள்ஆள் அர்ஆர் பம்மார்
அஆ குடுதுறு என்ஏன் அல்அன்
அம்ஆம் எம்ஏம் ஓமொ டும்மூர்
கடதற ஐஆய் இம்மின் இர்ஈர்
௫ ஈயர் கயவு மென்பவும் பிறவும்
வினையின் விகுதி பெயரினுஞ் சிலவே.

எ - ன், பகுபதங்கட்கு விகுதியாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இச்சொன்ன முப்பத்தேழும் இவைபோல்வனபிறவும் வினைப்பகுபதத்தின்கண் விகுதியாம்; பெயர்ப்பகுபதத்தின் கண்ணும் சில விகுதியாம். எ - று.

வ - று. நடந்தனன், நடந்தான், நடந்தனள், நடந்தாள், நடந்தனர், நடந்தார், நடப்ப, நடமார், நடந்தன, நடவா, நடக்கு, உண்டு, குண்டுகட்டு, நடந்து, நடந்தது, வேறு, கூயிற்று, நடந்தனென், நடந்தேன், நடப்பல், நடப்பன், நடப்பம், நடப்பாம், நடப்பெம், நடப்பேம், நடப்போம், நடக்கும், உண்டும், [1]நடந்தும், [2]சென்றும், நடந்தனை, நடந்தாய், நடத்தி, நடமின், நடந்தனிர், நடந்தீர், நிலீயர், நடக்க, வாழிய, நடவும்என வினைக்கண் முப்பத்தேழும் [3]வினைமுற்று விகுதியாயின. பிறவற்றொடும் இவ்வாறே ஏற்பிக்க. பிறவும் என்றதனால், பெயரெச்சவினையெச்ச [4]விகுதிகள் வாய்பாடுகளுமறிந்து பகுதி விகுதியாக்கி இடைநிலையும் வேண்டுழித்தந்து முடிக்க. நடந்தவன் நடந்தான் எனத்தொழிற்பெயர்க்கும் இவ்வாறே ஏற்பனவறிந்து ஒட்டிக்கொள்க. வில்லன், வில்லான், வளையள், வளையாள், ஊரர், ஊரார், வில்லி, வாளி, உருவிலி, திருவிலி, பொறியிலி, செவியிலி, அரசி, [5]பார்ப்பனி, செட்டிச்சி, உழத்தி, கிழத்தி, கணவாட்டி, வண்ணாத்தி, காதறை, செவியறை எனப் பெயர்க்கண் விகுதியாயின. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க. இவற்றுள் ஒன்றே [6]பலவினை பெயர்கட்குவருவனவும் கொள்க. ஈண்டுப் பதமுடித்தற்குப் பகுதி விகுதி மாத்திரையே காட்டியது; [7]திணைபாலிடம் காலங்கட்குரிய

வாமாறு சொல்லதிகாரத்துட் பெயர்வினையோத்துக்களுட் சொல்லுதும்.

(பி - ம்.) [1] நடத்தும். [2] சேறும். 3 மூன்றிடத்தும் வினைமுற்று. 4 விகுதிகளான வாய்பாடுகளும். 5 பார்ப்பினி. 6 வினைப்பெயர்கட்கும். 7 திணைபாலிடங்கட்கு. (கநு)

(140.) இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலிற்
பகுதி விகுதி பகுத்திடை நின்றதை
வினைப்பெய ரல்பெயர்க் கிடைநிலை யெனலே.

எ - ன், பெயர்ப்பகுபதங்கட்கு இடைநிலையாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) முற்காலத்திற்கண்ட இலக்கியங்கட்கே இலக்கணம் [1] இயம்பலின், ஈண்டு முடிக்கலுறும் பதத்தின் பகுதியையும் விகுதியையும் அறிந்து, வேறு பிரித்தால் இடையிலேநிற்பதுயாது, அதனை வினைப்பெயரல்லாத [2]பெயர்க்கு இடைநிலையெனக் கொள்ளவேண்டும். எ - று.

வ - று. வானவன், மீனவன், வில்லவன், எல்லவன், பகலவன், கதிரவன், கரியவன், செய்யவன், வெய்யவன், குறியவன், நெடியவன், புதியவன், பழையவன், சிறியவன், பெரியவன் என்றற்றொடக்கத்தன, 'அ' என்னும் இடைநிலைபெற்றன. சேரமான், கட்டிமான் என்றற்றொடக்கத்தன, மகர இடைநிலைபெற்றன. வலைச்சி, புலைச்சி என்றற்றொடக்கத்தன, சகர இடைநிலைபெற்றன. 3 புலைத்தி, வண்ணாத்தி என்றற்றொடக்கத்தன, தகரவிடைநிலைபெற்றன. வெள்ளாட்டி, மலையாட்டிமுதலாயின, டகரவிடைநிலைபெற்றன. கணக்கிச்சி, தச்சிச்சி முதலாயின, இச்சென்னும் இடைநிலைபெற்றன. பிறவும் இவ்வாறே 4அறிந்து கொள்க. சந்திவகையானும் பொதுச்சாரியைவகையானும் முடியாவழி இவ்வாறுவருவன இடைநிலையெனக் கொள்க. வினைப்பெயர்க்கு வினைப்பதத்திற்குச் 5 சொன்னவையே இடைநிலையெனக்கொள்க.

(பி - ம்.) [1] காட்டலின். [2] பெயர்கட்கு. 3 புலத்தி. 4 அறிந்துவருவிக்க. 5 சொன்னவையேகொள்க. (கச)

(141.) தடறவொற் றின்னே யைம்பான் மூவிடத்
திறந்த காலந் தருந்தொழி லிடைநிலை.

எ - ன், இறந்தகாலங்காட்டும் வினைப்பகுபதஇடைநிலையுணர்த் துதனுதலிற்று.

(இ - ள்.) தகர டகர றகரமெய்களும் இன்னும், ஐம்பால் மூவி டத்தும் இறந்தகாலங்காட்டும் வினைப்பகுபதஇடைநிலைகளாம். எ-று.

வ - று. நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந் தன, நடந்தேன், நடந்தேம், நடந்தாய், நடந்தீர் எனவும்; விட்டான், விட்டாள், விட்டார், விட்டது, விட்டன, விட்டேன், விட்டேம், விட் டாய், விட்டீர் எனவும்; உற்றான், உற்றாள், உற்றார், உற்றது, உற் றன, உற்றேன், உற்றேம், உற்றாய், உற்றீர் எனவும்; உறங்கினான், உறங்கினாள், உறங்கினார், உறங்கிற்று, உறங்கின, உறங்கினேன், உறங்கினேம், உறங்கினாய், உறங்கினீர் எனவும் வரும்.

இன்னை ஈண்டும் எடுத்தோதினமையாற் சாரியைஇன்னென் றது இடைநிலை இன்னெனவேகொள்க. நடந்தனென்புழி அகரம் சாரியை அகரம். (௧௫)

## (142.) ஆநின்று கின்று கிறுமூ விடத்தின் ஐம்பா னிகழ்பொழு தறைவினை யிடைநிலை.

எ - ன், நிகழ்காலங்காட்டும் வினைப்பகுபத இடைநிலையுணர்த் துதனுதலிற்று.

(இ - ள்.) ஆகாரத்தோடு கூடிய நின்றென்பதுவும் கின்றென் பதுவும் கிறு என்பதுவும் மூவிடத்துவரும் ஐம்பாற்கண்ணும் நிகழ் காலங்காட்டும் வினையிடைநிலைகளாம். எ - று.

வ - று. உண்ணாநின்றான், உண்ணாநின்றாள், உண்ணாநின் றார், உண்ணாநின்றது, உண்ணாநின்றன, உண்ணாநின்றேன், உண்ணா நின்றேம், உண்ணாநின்றாய், உண்ணாநின்றீர் எனவும்; உண்கின்றான், உண்கின்றாள், உண்கின்றார், உண்கின்றது, உண்கின்றன, உண்கின் றேன், உண்கின்றேம், உண்கின்றாய், உண்கின்றீர் எனவும்; உண்கி றான், உண்கிறாள், உண்கிறார், உண்கிறது, [1]உண்கிறன, உண்கிறேன், உண்கிறேம், உண்கிறாய், உண்கிறீர் எனவும் வரும். 'கிறு' என் பதுமுற்றுகரம்; அதனை, 'முற்றுமற்றொரோவழி' என்பதனாற் கெடுக்க.

(பி - ம்.) [1] உண்கிறவை. (௧௬)

(143.) பவ்வ மூவிடத் தைம்பா லெதிர்பொழு
திசைவினை யிடைநிலை யாமிவை சிலவில.

எ - ன், எதிர்காலமிசைக்கும் வினைப்பகுபதவிடைநிலையும் சில இடைநிலைகளேலாதனவுமாமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பகரவகாரங்களான இரண்டொற்றும், மூவிடத்து வரும் ஐம்பால்களிலும் எதிர்காலங்காட்டும் வினைப்பகுபதஇடைநிலைகளாம். இம்முக்காலமுங்காட்டும்இடைநிலைகளைச் சில வினைமொழிகள் ஏலாவாம். எ - று.

வ - று. உண்பான், உண்பாள், உண்பார், உண்பது, உண்பன, உண்பேன், உண்பேம், உண்பாய், உண்பீர் எனவும்; உறங்குவான், உறங்குவாள், உறங்குவார், உறங்குவது, உறங்குவன, உறங்குவேன், உறங்குவேம், உறங்குவாய், உறங்குவீர் எனவும்வரும். (௪௭)

(144) றவ்வொ டுகர வும்மை நிகழ் பல்லவும்
தவ்வொ டிறப்பு மெதிர்வும் டவ்வொடு
கழிவுங் கவ்வோ டெதிர்வுமின் னேவல்
வியங்கோ ளிம்மா ரெதிர்வும் பாந்தம்
செல்வொடு வரவுஞ் செய்யு நிகழ் வெதிர்வும்
எதிர்மறை மும்மையு மேற்கு மீங்கே.

எ - ன், மேல் வினைக்கட் காலங்காட்டுவன இடைநிலைகளென்றும் சிலவினைமொழிகள் அவ்விடைநிலைகளை ஏலாவென்றும் போதந்தார், அவ்வேலாதன இவையென்பதூஉம் அவற்றுறுப்பெறுங்காலமும் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) றகரத்தொடுகூடிவந்த உகரவீறும் உம்மீறுமான வினைச்சொற்கள் கழிந்தகாலமும் வருங்காலமும், தகரத்தொடுகூடி நின்ற அவ்விரண்டீற்றுவினையும் இறந்தகாலமும் எதிர்காலமும், டகரத்தொடுகூடிநின்ற அவ்விரண்டீற்றுவினையும் இறந்தகால்மும், ககரத்தொடுகூடிய அவ்விரண்டீற்றுவினையும் எதிர்காலமும், மின்னீறும் ஏவற்பொருண்மையின்வரும் அனைத்தீறுகளும் வியங்கோட்பொருளவும் இகரவீறும் மாரீறுமானவினைகள் எதிர்காலமும், பகரவீற்றுவினை இறந்தகாலமும் எதிர்காலமும், செய்யுமென்னும்வாய்பாட்டுவினைகள் நிகழ்காலமும் எதிர்காலமும், எதிர்மறைவினை முக்காலமும் காட்டுவனவாம். எ - று.

வ - று. சென்று சென்றும், சேறு சேறும், வந்து வந்தும், வருது வருதும், உண்டு உண்டும், உண்கு உண்கும், உண்மின், உண், உண்க, வாழிய, வாழியர், சேறி, உண்மார், உண்ப, உண்ணும், உண்ணு என முறையே காண்க.

'ஈங்கு' என்றமிகையான், ஈண்டோதியகாலத்திற் பிறழ்ந்து வருவனவுளவாயின், அவையும், இடைநிலையேலாப் பெயரெச்ச வினையெச்சங்களும் அறிந்து முடியுமாற்றாற் பகுதிவிகுதிபண்ணிமுடிக்க.

இனி, இவ்வாற்றாற் பகுபதமுடிப்புழி,

மலையனென்னும்பகுபதமுடியுமாறுவது :—மலையையுடையனென்னும் [1]பொருண்மைதோன்ற, "தத்தம்...........பகுதியாகும்" என்பதனானே மலையென்னும் பொருட்பகுதியை முதலில்வைத்து அதன்மீதே, "அன் ஆன் அள் ஆள்" என்பதனானே அன்னென்னும் விகுதியைநிறுவி, "இ ஈ ஐவழி யவ்வும்" என்பதனானே இடையே யகரவுடம்படுமெய்யைவருவித்து, "உடன்மே லுயிர்வந் தொன்றுவதியல்பே" என்பதனானே யகரத்தின்மேலே விகுதிஅகரத்தையேற்றி முடிக்க. மலையதென்பதற்குத் துவ்வென்னும்விகுதியை நிறுவி, "அன்னு னின்ன லற்றிற்று" என்பதனானே அகரச்சாரியையை இடையேதந்து, முன்போல் உடம்படுமெய்யைவருவித்து [2]உயிரையேற்றி முடிக்க. ஏனைப்பாலிடங்களுக்கு இதன்மேலே விகுதிவேறுபாடல்லது விசேடமில்லை யென்க. மலையான், மலையள், மலையாள், மலையர், மலையார், மலையேன், மலையேம், மலையாய், மலையீர் என ஏனையிடங்களிலும் ஒட்டிக்கண்டுகொள்க.

நிலத்தனென்னும்பகுபதமுடியுமாறுவது :—இவ்விடத்தனென்னும் பொருண்மைதோன்ற, 'தத்தம்........பகுதியாகும்' என்பதனானே நிலமென்னும் இடப்பகுதியை முதலில்வைத்து, அதன்மீதே, 'அன் ஆன் அள் ஆள்' என்பதனானே அன்னென்னும்விகுதியை நிறுவி, "இலக்கியங் கண்டதற் கிலக்கணம்" என்பதனானே இடையே தகர இடை நிலையைவருவித்து, "மவ்வீ றொற்றழிந்து" என்பதனானே மகரவீற்றைக்கெடுத்து, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன், கசதப மிகும்" என்பதனானே தகரத்தைமிகுத்து, "உடன்மேலுயிர் வந்து" என்பதனானே உயிரையேற்றி நிலத்தனெனமுடிக்க. நிலத்ததென்பதற்குத் துவ்விகுதியைநிறுவி, அகரச்சாரியையை [3]வருவித்துத் தகரத்தைமிகுத்து முன்போல முடிக்க. ஒழிந்தன முடிபு ஒக்கும்; விகுதி வேறென்க: நிலத்தள், நிலத்தர், நிலத்த, நிலத்

தேன், நிலத்தேம், நிலத்தாய், நிலத்திரென எல்லாப்பாலிடங்களினும் ஒட்டுக.

பரணியானென்னும் பகுபதமுடியுமாறுவது :—பரணிநாளிற் பிறந்தானென்னும் பொருண்மைதோன்ற 4முன்போலப் பகுதிவிகுதிதந்து, 'இஈ ஐவழி யவ்வும்' என்பதனுன் யகரவுடம்படுமெய்யைவருவித்து உயிரேற்றிமுடிக்க. பரணியது என்பதற்கு, முன்போலத் துவ்வென்னும்விகுதியும் அகரச்சாரியையும் உடம்படுமெய்யுங்கொடுத்து உயிரேற்றிமுடிக்க. பரணியாள், பரணியார் என ஏனைப்பாலிடங்களினும் ஒட்டிக்கொள்க.

மார்பானென்னும்பகுபதமுடியுமாறுவது:—இவ்வுறுப்பையுடையானென்னும்பொருண்மைதோன்ற, "தத்தம் ........... பகுதியாகும்" என்பதனுனே மார்பென்னும்சினைப்பகுதியை முதலில்வைத்து, "அன் ஆன்" என்பதனுல் ஆன்விகுதியைநிறுவி, "உயிர்வரி னுக்குறண் மெய்விட் டோடும்" என்பதனுனே குற்றுகரத்தைக்கெடுத்து, "உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே" என்பதனுனே உயிரேற்றி மார்பானென் முடிக்க. மார்பது என்பதற்குத் துவ்வென்னும்விகுதியையும் அகரச்சாரியையும்தந்து உகரங்கெடுத்து உயிரேற்றிமுடிக்க. மார்பாள், மார்பாரென ஏனைப்பாலிடங்களினும் ஒட்டிக்கொள்க.

கரியனென்னும்பகுபதமுடியுமாறுவது:—இந்நிறத்தையுடையானென்னும்பொருண்மைதோன்ற, "செம்மை சிறுமை" என்னும் சூத்திரத்தாற் கருமையென்னும்பண்புப்பகுதியை முதலில்வைத்து, "அன்ஆன்" என்பதனுனே அன்னென்னும்விகுதியைநிறுவி, "ஈறு போத லிடையுகர மிய்யாதல்" என்பதனுற் பகுதியது ஈற்றுயிர்மெய்யைக்கெடுத்து உகரத்தை இகரமாக்கி உடம்படுமெய்யைவருவித்து உடன்மேலுயிரேற்றி முடிக்க. கரியதுஎன்பதற்கு, துவ்விகுதியும் அகரச்சாரியையும் யகரவுடம்படுமெய்யும்கொடுத்து முடிக்க. கரியள், கரியர், கரியன, கரியேன், கரியேம், கரியாய், கரியீர் என ஏனைப்பாலிடங்களினும் ஒட்டிக்கொள்க.

ஊணன்என்னும் பகுபதம் முடியுமாறுவது:—இத்தொழிலையுடையானென்னும் பொருண்மைதோன்ற, "தத்தம்........பகுதியாகும்" என்பதனுனே, ஊணென்னும்தொழிற்பகுதியைமுன்வைத்து, அதன்மீதே "அன்ஆன்" என்பதனுனே அன்னென்னும் விகுதியைநிறுவி, "உடன்மேல்..........இயல்பே" என்பதனுல்,

உடன்மேலுயிரேற்றிமுடிக்க. ஊணது என்பதற்கு, துவ்விகுதியையும் அகரச்சாரியையும் தந்துமுடிக்க. ஊணள், ஊணர், ஊண என ஏனைப்பாலிடங்களிலும் ஒட்டிக்கொள்க.

நடந்தானென்னும் பொழுதுகொள் வினைப்பகுபதமுடியுமாறுவது, "நடவா மடிசீ விடுகூ" என்பதனானே நடவென்னும்பகுதியைமுன்வைத்து, அதன்மீதே, "அன்ஆனள்ளாள்" என்பதனானே ஆனென்னும்விகுதியைநிறுவி, "தடறவொற்றின்னே" என்பதனானே இடையே தகரஇடைநிலையைவருவித்து, "இயல்பினும் விதியினும்" என்பதனானே தகரத்தைமிகுத்து, "வலித்தல் மெலித்த னீட்டல் குறுக்கல்" என்பதனானே தகரத்தை நகரமாக்கி உடன்மேலுயிரேற்றி நடந்தானெனமுடிக்க. நடந்ததுஎன்பதற்குத் துவ்விகுதியையும் அகரச்சாரியையுங் கொடுத்துத் தகரவொற்றைவருவித்துத் தகரத்தைமிகுத்துத் தகரவொற்றை நகரமாகமெலித்துமுடிக்க. நடந்தாள், நடந்தார் என ஏனைப்பாலிடங்களிலும் ஒட்டிக்கொள்க.

நடத்தினானென்பதற்கு, "விளம்பிய பகுதிவே றாதலும் விதியே" என்பதனானே, நடத்துஎன்னும்பகுதியையாக்கி ஆன் விகுதியைநிறுவி இன்என்னும் இடைநிலைகொடுத்து உகரங்கெடுத்து உயிரேற்றிமுடிக்க. நடத்துவித்தானென்பதற்கு, "செய்யென் வினைவழி விப்பி தனிவரின்" என்பதனானே நடத்துவிஎன்னும்பகுதியை ஆக்கி, ஆன்விகுதியைநிறுவித் தகரவிடைநிலையைவருவித்து, "இயல்பினும் விதியினும்" என்பதனானே தகரத்தைஇரட்டித்து உயிரேற்றிமுடிக்க. வந்தானென்பதற்கு, "நடவாமடி" என்பதனான், வாஎன்பகுதியைமுதலில்வைத்து அதனை, "விளம்பிய.........விதியே" என்பதனான் வம்என்றாக்கி ஆன்விகுதியைநிறுவி, "தடறவொற்றின்னே" என்பதனானே தகரவிடைநிலையைவருவித்து, "மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்" என்பதனானே மகரத்தைநகரமாக்கி வந்தானெனமுடிக்க. 5வருவித்தானென்பதற்கு, "விளம்பியபகுதி" என்பதனான், வாவென்பதை வருஎன்றாக்கி, "செய்யென்வினைவழி" என்பதனானே வருவிஎன்பதுபகுதியாக்கி, ஆன்விகுதியும் தகரவிடைநிலையும் தந்து, "இயல்பினும்விதியினும்.........மிகும்" என்பதனானே தகரத்தை இரட்டித்து உயிரேற்றிமுடிக்க.

இவ்வினைப்பதமே வினைப்பெயராம். அவை எடுத்தல் படுத்தலோசைகளால் அறிந்துகொள்க. பிறவும் இங்ஙனமுடிக்க.

இனி, அரசுத்தொழிலையுடையான் அரசன், வாணிகமுடையான் வாணிகன், [6]உழவையுடையான் உழவன், [7]வேளாண்மைசெய்வான் வேளாளன், கணக்கால்முயன்றுண்பான் கணக்கன், குந்தத்தொழிலாலுண்பான் [8]குந்தவன், வலையால்முயன்றுண்பான் வலையன், உவச்சத்தொழிலால்முயன்றுண்பான் உவச்சன், தச்சத்தொழிலால்முயன்றுண்பான் தச்சன், வண்ணாரத்தொழிலால்முயன்றுண்பான் வண்ணான், கணவாளத்தொழிலால்முயன்றுண்பான் கணவாளனென்று இவ்வாறே ஆண்பாற்பெயர்ப்பகுபதங்களெல்லாமுடிக்க.

பெண்பாற்பெயர்ப்பகுபதமுடிப்புழி, இன்னகுலத்தாளென்னும் பொருண்மைதோன்ற முடிக்க. அரசியென்னும்பகுபதமுடியுமாறுவது:—" தத்தம், ........... பகுதியாகும்" என்பதனானே அரசு என்னும்பகுதியைத்தந்து, "அன்னான்" என்பதனானே இகரவிகுதியைநிறுவி, "உயிர்வரினுக்குறள்" என்பதனானே உகரத்தைக் கெடுத்துச் சகரவொற்றின்மேல் "உடன்மேலுயிர்வந்து" என்பதனானே இகரவுயிரையேற்றிமுடிக்க.

பார்ப்பனியென்னும்பகுபதமுடியுமாறுவது: — 'தத்தம்பகாப்பதம்' என்பதனானே பார்ப்பானென்னும் பகுதியைமுதல்வைத்து, அதனை "விளம்பியபகுதி" என்பதனானே [9]பார்ப்பனென அன்னீறாக்கி, "அன்னான்" என்பதனானே இகரவிகுதியைக்கொணர்ந்து உயிரேற்றிமுடிக்க.

வாணிச்சியென்னும்பகுபதமுடியுமாறுவது: — வாணிகன்என்னும்பகுதியை, "விளம்பியபகுதி" என்பதனானே கன்கெடுத்து நிறுவி இகரவிகுதியைக்கொணர்ந்து, ச் என்னும்இடைநிலையைவருவித்து அதனைமிகுவித்து உயிரேற்றிமுடிக்க.

உழத்தியென்னும்பகுபதமுடியுமாறுவது : — உழவன்என்னும் பகுதியை, "விளம்பிய பகுதி" என்பதனானே வன்கெடுத்துநிறுவி இகரவிகுதிகொணர்ந்து, "இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலின்" என்பதனானே தகரவிடைநிலையைவருவித்து அதனைமிகுத்து உயிரேற்றிமுடிக்க.

தச்சிச்சியென்னும்பகுபதமுடியுமாறுவது : — தச்சன்என்னும் பகுதியை அன்கெடுத்துநிறுவி இகரவிகுதியைக்கொணர்ந்து, "இலக்கியங்கண்டதற்கு" என்பதனான் இச்சென்னுமிடைநிலையைவருவித்து உயிரேற்றிமுடிக்க.

இவ்வாறே எல்லாப்பகுபதங்களையும் பகுதிமுதலான கருவிகள் தந்து ஏற்றவாறுமுடிக்க.

(பி - ம்.) 1 பொருள். 2 உயிரேற்றி 3 வருவித்துமுன்போல. 4 முற்போற். 5 வருவித்தானென்பதனை. 6 உழவைமுயல்வான். 7 வெள்ளாண்மை. 8 குந்தன். 9 ஆன்கெடுத்து அன்றிறுவிப் பார்ப்பனெனஆக்கி. (கஅ)

(145.) இடையி னான்கு மீற்றி லிரண்டும்
அல்லா வச்சை வருக்க முதலீறு
யவ்வாதி நான்மை ளவ்வாகு மையைம்
பொதுவெழுத் தொழிந்த நாலேழுந் திரியும்.

எ - ன், 1வடமொழிப்பதம் 2தமிழொடுவருங்கால் திரிவனவுந் திரியாதனவும் பொதுவகையான் உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) வடமொழியுள் அச்சென்றுவழங்கும் உயிர்பதினாறனுள்ளும் இடையினின்ற ஏழாமுயிர்முதனான்கும் ஈற்றினின்ற இரண்டுமானஆறும் ஒழிந்துநின்ற அ ஆ இ ஈ உ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும்பத்தும், அல்லென்றுவழங்குமெய் முப்பத்தேழனுள்ளும் கசடதப வென்னும் ஐந்தன்வருக்கத்துள் இடையில் உரப்பியும் எடுத்தும் கனைத்தும் சொல்லப்பட்டுநிற்கும் மூன்றுமொழிந்த கங, சஞ, டண, தந, பம என்னும் பத்தும், யரலவ என்னும் நான்கும் ளவ்வுமான இருபத்தைந்தும் தமிழ்மொழிக்கும் வடமொழிக்கும் பொதுவாம்; இவையன்றி, மேல்உயிரிலொழிந்த ஆறும், ஐந்துவருக்கங்களிலும் இடைகளிலொழிந்தபதினைந்தும், முப்பதாமெய்முதலான எட்டனுள் ளகரமொழிந்தஏழுமான இருபத்தெட்டும் வடமொழிக்கே உரியவாய்த் தமிழ்மொழிக்குவருங்கால் தமக்கேற்ற பொதுவெழுத்துக்களாகத் திரிந்துவரும். எ - று.

இருபத்தைந்தும் பொதுவெனவே மற்றுள்ளவை சிறப்பெழுத்தாமென்பது தானேபோதருமெனக்கொள்க. இவ்வாறு பகுத்துரைத்தற்குப்பயன்:—பொதுவெழுத்துப்பதம்வருதலே 3சிறப்புடைத்து, அல்லனவருதல் சிறப்பன்றெனக்கொள்க. 4வடமொழிமுடிபிலக்கணங்கூறாது திரிபுகூறியது என்னையோவெனின், தமிழுள்விரவிவருமாத்திரைக்குத் திரிபுகூறியதன்றி 5அவைதம் இலக்கணங்கூறின் அஃதொழிந்ததிசைச்சொற்களுக்கும் இலக்கணங்கூறல்வேண்டும்; வேண்டவே, 6தமிழ்கூறுவான் புகுந்துவைத்து ஈண்டு அவற்றின் இலக்கணங்கூறின் மற்றொன்றுவிரித்தலென்னும்நூற்குற்

றமேயாம். ஆதலால், அவை வழங்குமாறறிதற்குவேண்டும் திரிபே சொன்னு ரென்க.

(பி - ம்.) 1 ஆரியமொழிப்பதம். 2 தமிழில். 3 சிறப்புடைய. 4 வட விலக்கணங்கூறு து. 5 அதன். 6 ஆதிக்கண்ணே தமிழ்கூறுவான். (கக)

(146.) அவற்றுள்,
ஏழாமுயி ரிய்யு மிருவுமை வருக்கத்
திடையின் மூன்று மவ்வம் முதலும்
எட்டே யவ்வு முப்பது சயவும்
ரு மேலொன்று சடவு மிரண்டு சதவும்
மூன்றே யகவு மைந்திரு கவ்வும்
ஆவீ றையு மீயீ [1] றிகரமும்.

எ - ன், மேற்பொதுவகையாற்சொன்ன திரிபுவிகாரத்தைப் பகுத்துணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேற்சொன்ன சிறப்பெழுத்துக்களுள் ஏழாமுயிர் இகரமும் இருவுமாம்; ஐந்துவருக்கங்களுள்ளும் இடையில்நின்ற மூன்றும் அவ்வவ் வருக்கங்களின் முதலெழுத்தாம்; எட்டாமெய் யான சவ்வருக்கத்துள் எடுத்துச்சொல்லுமெய் ஒரோவிடத்து யகர முமாம்; முப்பதாமெய் மொழிமுதற்கட் சகரமும் இடைக்கண் யக ரமுமாம்; முப்பத்தொன்றுமெய் மொழிமுதற்கட் சவ்வும் இடைக் கண் டவ்வுமாம்; முப்பத்திரண்டாமெய் மொழிமுதற்கட் சகரமும் இடைக்கண் தகரமுமாம்; முப்பத்துமூன்றுமெய் மொழிமுதற்கண் அகரமும் இடைக்கட் ககரமுமாம்; முப்பத்தைந்தாமெய்யான கூட் டெழுத்து இறுதிகெட்டு இரண்டு ககரமுமாம்; ஆகாரவீற்றுமொழி யுட் சிலவற்றின் ஈற்றுஆகாரம் ஐகாரமாம்; ஈகாரவீற்றுமொழி யுட் சிலவற்றின் ஈற்று ஈகாரம் இகரமாம். எ - று.

மேலென்றது, முப்பதின்மேலான ஒன்று இரண்டு மூன்று ஐந்துகோடற்கென்க.

வ - று. இடபம், விடபம், திட்டி எனவும்; இருடி, மிருகம், விருத்தி எனவும் ஏழாமுயிர் இகரமும் இருவுமாயிற்று. நகம், நாகம், மேகம்; *சலவாதி, விசயம், சருச்சரை; பீடம், பீடை, திடம்; தலம், தினம், தரை; பலம், பந்தம், பாரமென ஐந்துவருக்கத்

* ஒரு கருத்துப்பற்றி ஒருவன் கூறியமொழிக்கு வேறுபொருள் கற் பித்துக்கொண்டு பழித்துக் கூறுபவன்.

திலும் உரப்பியும் எடுத்தும் கனைத்தும் சொல்லுமூன்றும் அவ்வம் முதலாயின. ²அயம், பங்கயமென எட்டாமெய் யகாரமுமாயிற்று. சாலை, சூலை எனவும், மயானமெனவும் முப்பதாமெய் சகாரமும் யகரமுமாயிற்று. 3சட்டி, இடபம் என முப்பத்தொன்றாமெய் சகரமும் டகாரமு மாயிற்று. சித்தி, சூத்திரம், சேனை எனவும், சாதனம், *வத்தராயனெனவும் முப்பத்திரண்டாமெய் சகாரமும் தகரமுமாயிற்று. அரன், அரி, ஆரம் எனவும், அருகன், சிங்கம், மோகம் எனவும் முப்பத்துமூன்றுமெய் அகரமும் ககரமு மாயிற்று. பக்கம், †தக்கணம் என முப்பத்தைந்தாம்கூட்டெழுத்து ஈறு கெட்டு இரண்டு ககரமாயிற்று.

வேலை, சாலை, மாலை, உவமை, வனிதை என ஆகாரவீறு ஐகாரமாயிற்று. புரி, மேதினி, குமாரி, நீதினி என ஈகாரவீறு இகரமாயிற்று. இவை பொதுவெழுத்தாதல் தோற்றற்குச் சூத்திரத்தாற் பிரித்தோதினாரென்க.

(பி - ம்.) ¹இய்யுமாம். ²அயன், பங்கயன். 3சாட்டுவலம், விடம். (உ0)

(147.) ரவ்விற் கம்முத லாமுக் குறிலும்
லவ்விற் கிம்முத லிரண்டும் யவ்விற்
கிய்யு மொழிமுத லாகிமுன் வருமே.

இதுவுமது.

(இ - ள்.) ரகார லகார யகாரங்களை முதலாகவுடையமொழிகளின்மேல் இம்மூன்றுகுற்றுயிரும் சொன்னவாறுவரும். எ - று.

வ - று. ¹அரங்கம், இராமன், இராவணன், உரோமம் எனவும்; இலங்கை, இலாபம், உலோபம் எனவும்; இயக்கன், இயாத்திரை எனவும் முறையே காண்க.

(பி - ம்.) ¹ அரங்கன். (உக)

(148.) இணைந்தியல் காலை யரலக் கிகரமும்
மவ்வக் குகரமு நகரக் ககரமும்
மிசைவரும் ரவ்வழி யுவ்வு மாம்பிற.

இதுவுமது.

(இ - ள்.) இஃது இரண்டெழுத்துஒன்றாய்வருமிடத்து யரலக்களின்மீதே இகரமும், மகரவகாரங்கண்மீதே உகரமும், நகரமீதே அகரமும், ரகரத்தின்பின்னே உகரமும் வரும். எ - று.

* வத்தராயன் = வத்ஸராஜன் - உதயணன். † தெற்கு; பாகதச்சிதைவு.

வ் - று. வாக்கியம், வாச்சியம், நாட்டியம் எனவும்; வக்கிரம், வச்சிரம், சத்திரம், அப்பிரம் எனவும்; சுக்கிலம், ஆமிலம் எனவும்; பதுமமெனவும்; பக்குவம், தத்துவமெனவும்; அரதநமெனவும்; அருக்கன், அருத்தம், தருப்பணம், [1]சருப்பம், சருக்கம், தருமமென வும் முறையே காண்க. பிறவென்றமிகையானே சத்தி, கட்சி, காப் பியம், பருப்பதமென்றற்றொடக்கத்துத் திரிபும், தூலம், அத்தம், ஆதித்தன், அநத்தம் என்றற்றொடக்கத்துக் கேடும், [2]மற்றும் விகா ரத்தால் வருவனவும் கொள்க.

(பி - ம்.) [1] கருப்பம், கருத்தன். [2] மற்று. (உஉ)

(149.) றனழள ஒவ்வு முயிர்மெய்யு முயிரள
பல்லாச் சார்புந் தமிழ்பிற பொதுவே.

எ - ன், தமிழிற் சிறப்பெழுத்தும் பொதுவெழுத்துமுணர்த் துதனுதலிற்று.

(இ - ள்.) முதலும்சார்புமான நாற்பதெழுத்துள்ளும், றகார னகார ழகார எகார ஒகாரமான முதலெழுத்தைந்தும், உயிர்மெய் யும் உயிரளபெடையுமொழித்த சார்பெழுத்தெட்டும் ஆகப் பதின் மூன்றும் தமிழிற்கே உரியவாம்; ஒழிந்தஇருபத்தேழும் தமிழிற் கும் ஆரியத்திற்கும் பொதுவாம். எ - று.

வ - று. [1]கறி, கனி, கழி, எண், ஒன்று, [2]எஃகு, மங்ங் கலம், நாகியாது, நாகு, மைப்புறம், மௌவல், வாழும்வளவன், கஃறீது எனச் சிறப்பெழுத்து வந்தவாறு. ஒழிந்த பொதுவெழுத்து வழக்கிடத்தும் செய்யுளிடத்தும் இருமொழிக்கண்ணும் கண்டுகொ ள்க. மெய்யைமுற்கூறியவதனால், எகார ஒகாரம் பிராகிருதத்துக்கும் உரியவெனக் கொள்க. பதவியலில் எழுத்துவிதிகூறின், மயங்கக் கூறலாம்பிறவெனின், மேல் வடமொழிப்பதம் எழுத்துத்திரிந்தும் திரியாதும் வருவன உணர்த்துதற்கு வடவெழுத்துப் [3]பொதுவும் சிறப்பும் வகுத்தவழித் தமிழிற்கு இவ்வேறுபாடில்லைகொல்லோ வென்று ஐயுறுவார்க்கு ஐயமற ஈண்டுச் சொன்னமையாற் குற்ற மாகாதென்க. [4]"றனழள ஒவ்வுந் தனியு மகாரமுந், தன்மைத் தமிழ்பொது மற்று" என்றார் [5]ஆசிரியரவிநயனர்.

(பி - ம்.) [1] கற்றி, கன்னி. [2] கஃறு. [3] சிறப்பும்பொதுவும். [4] றனஎ ஒவ்வுந் தனியும் ழகாரமும். [5] ஆசிரியர் அவிநயனர், அவினயனர். (உங)

இரண்டாவது பதவியல் முற்றிற்று.

---

மூன்றுவது

# உயிரீற்றுப்புணரியல்.

(150.) மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களும்
தன்னொடும் பிறிதொடு மல்வழி வேற்றுமைப்
பொருளிற் பொருந்துழி நிலைவரு மொழிகள்
இயல்பொடு விகாரத் திையைவது புணர்ப்பே.

என்பதுசூத்திரம். இவ்வோத்து என்னுதலிற்றோவெனின், ஓத்துநுதலியதூஉம் ஒத்தினதுபெயருரைப்பவே விளங்கும். ஆயின் இவ்வோத்து என்னபெயர்த்தோ வெனின், உயிரீற்றுப்பதம் புணருமாறுணர்த்திற்றாகலான், உயிரீற்றுப்புணரியலென்னும் பெயர்த்து. மேலோத்திேனாடு இதற்கு இயைபு என்னையோவெனின், மேலோத்தினுட் பதங்களாமாறுணர்த்தி இதனுட் பதங்கள் தம்மிற்புணருமாறுணர்த்தினமையின் அதனோடு இயைபுடைத்தென்க. இவ்வோத்தினுள் இத்தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், புணர்ச்சியிலக்கண முணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மெய்யுயிர்மூதலீறும் - மெய் முதலாயும் உயிர்முதலாயும் மெய்யீறாயும் உயிரீறாயுமுள்ள, இருபதங்களும் - பகாப்பதங்களும் பகுபதங்களும், தன்னொடும் பிறிதொடும் - மெய்யீற்றின்முன் மெய்ம்முதல்வந்தும் மெய்யீற்றின்முன் உயிர்முதல்வந்தும் உயிரீற்றின்முன் உயிர்முதல்வந்தும் உயிரீற்றின்முன் மெய்ம்முதல்வந்தும் பகாப்பதமுன் பகாப்பதம்வந்தும் பகாப்பதமுன் பகுபதம்வந்தும் பகுபதமுன் பகுபதம்வந்தும் பகுபதமுன் பகாப்பதம்வந்தும், அல்வழி வேற்றுமைப் பொருளில் - அல்வழிப்பொருளினாதல் வேற்றுமைப் பொருளினாதல், பொருந்துழி - புணருமிடத்து, நிலை வருமொழிகள் - நிலைமொழியும் வருமொழியும், இயல்பொடு விகாரத்து - இயல்பாகியும் விகாரமாகியும், இயைவது - பொருந்துவது, புணர்ப்பு - புணர்ச்சியாவது. எ - று.

ஏகாரம் ஈற்றசை.

ஈண்டு மெய்யை முற்கூறினர், முதலினும் ஈற்றினும் விகாரப் படப் புணர்தற்சிறப்புநோக்கி யென்க.

வ - று. பொன்கழஞ்சு, பொன்னிருகழஞ்சு, மணியொன்று, மணிமூன்று என மெய்யும் உயிரும் தன்னொடும் பிறிதொடும் வந்தன. பொன்முடி, பொன் கொள் எனவும்; வா போ, உண்சாத்தா எனவும்; "அது மற்றம்மதானே," *"அதுகொ ளூழி காம நோயே" எனவும்; "கொம்மைக்குழகாடுங் கோலவரைமார்பா," "மல்லற் செல்வமொடு" எனவும் பகாப்பதநான்கும் தன்னொடும் பிறிதொடும் வந்தன. மலையன் மன்னவன், மலையன் மன் எனவும்; [1] வானவன் வாளவன், வானவன் வாள் எனவும் [2]பாணியான்பாரவன், பாணியான்பாரெனவும்; இளையள்மடவாள், இளையள்பெண்; எனவும்; கரியான்மலையன், கரியான்கால் எனவும்; ஊணன்தீனன், ஊணன்உரம் எனவும் பெயர்ப்பகுபதம் தன்னொடும் பிறிதொடும் வந்தது; உண்டான்தின்றான், உண்டான்சாத்தன் என வினைப்பகுபதம் தன்னொடும் பிறிதொடும் வந்தது. பிறவுமன்ன. சாத்தன்கடியன் எனவும், சாத்தன்கடுமை எனவும் அல்வழியும் வேற்றுமையும் வந்தன. பொற்பூண், மணிப்பூண், இருபஃது என நிலைமொழியும் வருமொழியும் இருமொழியும் முறையேவிகாரப்பட்டன. திருமகள், மணிப்பூண், பொற்குடம், மணமுரசு என இயல்பும், மூன்றுவிகாரமும் வந்தன.

(பி - ம்.) [1] வானவன்வளவன். [2] பாணியான் அரணியான். (க)

(151.) வேற்றுமை [1]யைம்முத லாறு மல்வழி
தொழில்பண் புவமை யும்மை யன்மொழி
எழுவாய் விளியீ ரெச்சமுற் றிடையுரி
தழுவு தொடரடுக் கெனவீ ரேழே.

எ - ன், மேல் அல்வழிவேற்றுமையென்றார், அவை இவையென்ப துணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இரண்டாம்வேற்றுமைமுதல்ஆறும் விரியவும் தொகவும்வருந் தொடர்ச்சி வேற்றுமைப்புணர்ச்சியெனப்படும்; வினைத்தொகையும், பண்புமுதல்நான்கும் விரியவும் தொகவும் வருந்தொடர்ச்சியும், எழுவாய்முதல் ஈண்டுரைத்த எட்டும் தமக்கேற்கும் பெயர்வினைகளோடுதொடருந்தொடர்ச்சியும், விரைவாதியின்வரும் அடுக்குமான இப்பதினான்கும் அல்வழிப்புணர்ச்சியெனப்படும். எ - று.

வேற்றுமையல்லாதவழி அல்வழி யென்பது அறிவித்தற்கு, வேற்றுமையை ஈண்டு முன்வைத்தாரென்க. ஈரெச்சம், இருமுற்

* குறுந்தொகை, ரு.

றென்று ஓதினமையின், தொழிலென்றது அத்தொகையை யெனக் கொள்க.

வ - று. பொன்னையுடையான் பொன்னுடையான், பொன்னாலாயகுடம் பொற்குடம், பொன்னற்குமகன் பொன்னன்மகன், மலையின்வீழருவி மலைவீழருவி, மலையினதுஉச்சி மலையுச்சி, மலைக்கண்முழை மலைமுழை என விரிந்தும் தொக்கும் வேற்றுமைப்புணர்ச்சியாறும் வந்தவாறுகாண்க. [2]பொன்னனை, பொன்னனால், பொன்னற்கு, பொன்னனின், பொன்னனது, பொன்னன்கண் என்னும் உருபுபுணர்ச்சியும் அதுவேயெனக்கொள்க. கொல்யானை என வினைத்தொகையும், [3]ஆயனாயசாத்தன் ஆயன்சாத்தன், வேயனைய தோள் வேய்த்தோள், தீயுநீரும் தீநீர், பொற்றாலிபூண்டாள் பொற்றாலி என விரிந்தும் தொக்கும் பண்புமுதல்நான்கும் வந்தன. கொற்றன்கொடுத்தான், கொற்றாகொள், உண்டசாத்தன், உண்டுவந்தான், உண்டானவன், குண்டுகட்டெருமை, *"அணங்குகொலாய்மயில் கொல்லோகனங்குழை", †"கொன்னூர்துஞ்சினும்", ‡"நனிபேதையே", "படைபடையென்றஞ்சி" என எழுவாய்முதலொன்பதும்விரிந்து அல்வழிப் [4]புணர்ச்சிவந்தவாறு காண்க.

(பி - ம்.) [1] ஐமுதல். [2] பொன்னை ...... பொற்கு ...... பொற்கண். [3] ஆதனாகியசாத்தன் ஆதன்சாத்தன். [4] புணர்ச்சியானவாறுகாண்க. (உ)

(152.) விகார மனைத்து மேவல தியல்பே.

எ - ன், மேல் இயல்பொடுவிகாரத்திரையவதென்றார், அவற்றுள் இயல்பாவது இஃதென்பதுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மேல்வரும் விகாரவகைமூன்றும் மேவாததுயாது, அஃது இயல்புப்புணர்ச்சி. எ - று.

வ - று. பொன்மலை, புகழழகிது, ஒளிமணி என வரும். (௩)

(153) தோன்ற றிரிதல் கெடுதல் விகாரம்
மூன்று மொழிமூ விடத்து மாகும்.

எ - ன், [1]விகாரவகையுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) சாரியைபெறுதலும், உயிரே ஒற்றே உயிர்மெய்யே [2] என்றிவை மிகுதலும் தோன்றலென்பதாம். இச்சொன்னபெற்றியே முன்னின்றவெழுத்து வேறுபடநிற்பிற் றிரிபென்பதாம். இவற்

* திருக்குறள், ௧௦௮௧. † குறுந்தொகை, ௧௩௮. ‡ புறநானூறு, ௨௨௭.

றுள் ஒன்றும்பலவும் தொகுதல் கேடென்பதாம். இம்மூன்றுவிகார மும் இருமொழிமூவிடத்துமாம். எ - று.

இனமிகுதலை ஏற்புழிக்கோடலென்பதனான் 3ஏற்குமிடனறிந்து கொள்க.

வ - று. புளியங்காய் எனச் சாரியைமிக்கது. 4வானவில், மலைத்தலை, உரியநெய் எனவும்; அறுபது, மட்குடம், *"திருத்தார் நன்றென்றேன்றியேன்" எனவும்; பல்சாத்து, மரவேர், அங்கை எனவும் முறையே உயிர், ஒற்று, உயிர்மெய்கள் மூன்றும் தோன்றியும் திரிந்தும் கெட்டும் விகாரம் ஏற்றவாறு காண்க. உயிர்மெய்க்கு இவ்வாறன்றித் திரிபுண்டாயினும் காண்க.

**(பி - ம்.)** 1 **விகாரமூன்றையும்.** 2 என்றிவை **வருமெழுத்துத்தானு** **தல் அதற்கினமாதல் பிறிதொன்றுதல் மிகுதலும்.** 3 ஒற்றிற்கேகொள்க. 4 **வெளஉவினான்.**

(௪)

## (154.) வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்கல் விரித்த றொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி.

எ - ன், இதுவும்ஒருசார் விகாரவகை உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மெல்லெழுத்தை வல்லெழுத்தாக்குதல் முதலான இவ்வாறுவிகாரமும் செய்யுளிடத்து வேண்டுழி 1வரும். எ - று.

வ - று. "குறுத்தாட்பூதஞ் சுமந்த, வறக்கதி ராழியெம் மண்ணலைத் தொழினே." இது, குறுந்தா 2ளெனற்பாலதனைக் குறுத்தாளென வலித்தவாறு. "தண்டையி னினக்கிளி கடிவோள், பண்டைய ளல்லண் மாணோக் கினளே." இது, தட்டையெனற்பாலதனைத் தண்டையென்று மெலித்தவாறு. †"தீத்தொழிலே கன்றித் திரிதந் தெருவைபோற், போத்தரூஉர் புல்லறிவினார்." இது, பொத்தரூஉர்எனற் பாலதனைப் போத்தரூஉரென நீட்டியவாறு. *"யானே, எருத்தத் திருந்த விலங்கிலைவேற் றென்னன், றிருத்தார்நன் றென்றேன் றியேன்." இது, தீயேனெனற்பாலதனைத் தியேனெனக் குறுக்கியவாறு. "தண்ணந் துறைவர் தகவிலரே தற்சேர்ந்தார், வண்ணங் கடைப்பிடியாதார்." இது, தண்டுறைவ ரெனற்பாலதனைத் தண்ணந்துறைவரென விரித்தவாறு. "வேண்டார் வணக்கி விறன்மதி ளுன்கோடல், வேண்டுமாம் 3வேண்டார் மகன்" இது, 4வேண்டாதாரெனற்பாலதனை 5 வேண்டாரெனத் தொகுத்தவாறு. பிறவுமன்ன.

---

* "பன்மாடக்கூடல்" என்னும்செய்யுள். † **நாலடியார், கயமை, க.**

(பி - ம்.) 1 வரப்பெறும். 2 எனற்பாலது; பின்னுமிப்படியே. 3 வேண்டான்மகன். 4 வேண்டாதான். 5 வேண்டானென. (ரு)

(155.) ஒருமொழி மூவழிக் குறைதலு [1]மனைத்தே.

இதுவுமது.

(இ - ள்.) புணர்மொழியல்லா ஒருமொழியின் முதலும் இடையும் கடையும் குறைதலும் செய்யுள்வேண்டுமிடத்தேயாம். எ- று.

வ - று. "மரையிதழ்புரையுமஞ்செஞ்சீறடி" எனவும், *"வேதின வெரிநி னோதிமுது போத்து" எனவும், "நீலுண் டுகிலிகை கடுப்ப" எனவும், முறையே தாமரை [2]ஒந்தி நீலம் எனற்பால [3]குறைந்தவாறுகாண்க. இம்மூன்றும் தனிமொழிக்கண்ணுமெனவே, ஏனைய எல்லாமொழிக்கண்ணும் வருமெனக்கொள்க.

புணர்ச்சிவிகாரமன்றி யாப்பிற்கேயுரிய இவற்றை ஈண்டுவைத்தது என்னையோவெனின், விகாரம் அதிகாரப்பட்டமையானும், மேலிற் பகுபதமுடிபிற்கும் சிறுபான்மை வேண்டுதலானும், யாப்பிற்கேயுரியபிறவும் இவ்வதிகாரத்துள்ளே சொல்லப்படுதலானும், விரித்தல் தோன்றலாகவும், வலித்தலும் மெலித்தலும் நீட்டலும் குறுக்கலும் திரிபாகவும், தொகுத்தலும் மூவிடத்துங்குறைதலும் கெடுதலாகவும் அடக்கிச் செய்யுள்விகாரம் இம்மூன்றுமெனவும் அமையுமென்பது போதருதற்கும் ஈண்டேவைத்தாரெனக்கொள்க.

(பி - ம்.) 1 உரித்தே. 2 ஓத்தி. 3 குறைத்தவாறு. (சா)

(156.) ஒருபுணர்க் கிரண்டு மூன்று முறப்பெறும்.

எ - ன், எய்தாததெய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருபுணர்ச்சியிடத்து ஒன்றேயன்றி இரண்டுமூன்று விகாரம் ஒருங்கேவரவும்பெறும். எ - று.

வ - று. நிலப்பனை, பனங்காய் என முறையே காண்க. (எ)

(157.) எண்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கும்
முன்வரு ஞநமய வக்க ளியல்பும்
குறில்வழி யத்தனி யைந்நொது முன்மெலி
மிகலுமாம் ணளனல வழிநத் திரியும்.

எ - ன், எல்லாஈற்றின்முன்னும், மெல்லினமும் இடையினமும் வந்து புணருமாறு தொகுத்துணர்த்துதனுதலிற்று.

---

* குறுந்தொகை, கசூ0.

(இ - ள்.) இருபத்துநாலெழுத்தையும் ஈறுகவுடைய இயற்சொல் திரிசொலென்னும் இருவகையவான பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல், திசைச்சொல், வடசொல், உருபுகளாம் மொழிகளின்முன்வரும் ஞகர நகர மகர யகர வகரங்கள் அல்வழிவேற்றுமையாம் இருவழியும் இயல்பாம்; குற்றெழுத்தோடு கூடிய யகாரமே ஓரெழுத்தொருமொழியான ஐகாரமே நொவ்வே துவ்வே என்னும் இவற்றின்முன்னர் ஞகர நகர மகரங்கள் மிகுவனவாம்; ணகர ளகர னகர லகரங்களின்பின்வரும் நகரம் திரியப்பெறும். எ - று.

வ - று. (*விள, பலா, புளி, தீ, கடு, தூ, ஏஎ, சே, பனை, ஓஒ, [1]கோ, [2]வெள, உரிஞ், மண், பொருந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், யாழ், தாள், எஃகு) + (ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது) எனவும்; (ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வலிமை) எனவும் இருவழியும் ஞநமயவக்கள் இயல்பாயின. (வேதா, விதி) + (ஞான்றான், நீண்டான், மாண்டான், யாவன், வலியன்) எனவும்; (ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வலிமை) எனவும் வடமொழிப்பெயர்கள்முன் இருவழியும் அவை இயல்பாயின. சாத்தற்குநல்கினான், சாத்தனதுமாட்சி என உருபுகளின்முன் அவை இயல்பாயின. (†மெய், பொய், கை) + (ஞான்றது, நீண்டது, மாண்டது) எனவும், (ஞாற்சி, நீட்சி, மாட்சி) எனவும் இருவழியும் மெலிமிக்கன. ஒழிந்த சொற்களின்முன்னும் இவ்வாறே ஒட்டுக. (‡நொ, து) + (ஞெள்ளா, நாகா, மாடா) என இவை ஏவல்வினையாகலின், [3]அல்வழியாய் மிக்கன; [4](§மண், முள், பொன், கல்) + (நன்று, நன்மை) என நகாரம், நிலைமொழியீற்றில்நின்ற ணளனலக்களின்முன் இருவழியும் ணகாரமும் னகாரமுமாகத் திரிந்தவாறுகாண்க.

புணரியலிடத்து எங்கும் இன்னதென்று விதந்துரையாவிடத்து அல்வழிவேற்றுமையாம் ஈரிடமும் கொள்க.

(பி - ம்.) [1] (க) ஓ, (உ) சோ. [2] ஔ. [3] அல்வழியான். [4] நகரத்திரிபு அவ்வீறுகளுட்கண்டுகொள்க. (அ)

---

* விளஞான்றது, விளஞாற்சி............என இயைக்க. ஏனையவற்றையும் இப்படியே இயைத்து இயல்புமுதலியவற்றை அறிந்துகொள்க.

† மெய்ஞ்ஞான்றது......மெய்ஞ்ஞாற்சி......என்க.

‡ நொஞ்ஞெள்ளா............என இயைக்க.

§ மண்ணன்று, முண்ணன்று, பொன்னன்று, கன்னன்று......என்க.

(158.) பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்
வலிவரி னியல்பா மாவி யரமுன்
வன்மை மிகாசில விகாரமா முயர்திணை.

எ - ன், இவ்விருபெயரும் வல்லினத்தொடு புணருமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இருதிணைக்கும்பொதுவானபெயர்க்கும் உயர்திணைப் பெயர்க்கும் ஈறுனமெய்கள் வல்லினமுதன்மொழிவந்தால் இயல்பேயாம்; உயிரே யகரமே ரகரமே என்ற ஈற்று அவ்விருபெயர் முன்னரும் கசதபக்கள் மிகாவாம்; இவ்வாறன்றி, உயர்திணைப் பெயர்களுட்சில விகாரப்பட்டுவருவனவுளவாம். எ - று.

வ - று. (*சாத்தன், கொற்றன், மகன், ஆண்) + (குறிது, சிறிது, தீது, பெரிது) எ - ம்; (குறியன், சிறியன், தீயன், பெரியன்) எ - ம்; (கை, செவி, தலை, புறம்) எ - ம்; (பெண், மகள்) + (குறிது, சிறிது, தீது, பெரிது) எ - ம்; (குறியள், சிறியள், தீயள், பெரியள்) எ - ம்; (கை, செவி, தலை, புறம்) எ - ம் பொதுப்பெயரீற்று மெய்கள் வன்மைவர இருவழியும் இயல்பாயின. (ஊரன், அவன், தோன்றல், மால்) + (குறியன், சிறியன், தீயன், பெரியன்) எ - ம்; (கை, செவி, தலை, புறம்) எ - ம் உயர்திணைப்பெயரீற்றுமெய்கள் வன்மைவர இருவழியும் இயல்பாயின.

இவை வலிவரின் இயல்பாமெனவே, ஏனையிரண்டினமும்வந்தால் தமக்கேற்றவண்ணம் விகாரப்படுவனவாமென்றவாறு. அவை, மருத்துவமாணி, இறைவனெடுவேட்டுவன் எ - ம்; மகணீண்டாள், தோன்றனீண்டான், தோன்றன்மாண்டான், மகனீண்டான் எ - ம் வரும். பிறவுமன்ன.

(சாத்தி, கொற்றி, தாய்) + (குறிது, சிறிது, தீது, பெரிது) எ - ம்; (குறியள், சிறியள், தீயள், பெரியள்) எ - ம்; (கை, செவி, தலை, புறம் எ - ம் பொதுப்பெயர்கள்முன் கசதபக்கள் இருவழியும் இயல்பாயின. ரவ்வீறு பொதுப்பெயர்கள் ஏலாவென்க. (நம்பி, விடலை, சேய்) + (குறியன், சிறியன், தீயன், பெரியன்) எ - ம்; (கை, செவி, தலை, புறம்) எ - ம்; (தோழி, நங்கை, ஆய்) + (குறியள், சிறியள், தீயள், பெரியள்) எ - ம்; (கை, செவி, தலை, புறம்) எ - ம்; (அவர், யாவர், ஒருவர்) + (குறியர், சிறியர், தீயர், பெரியர்) எ - ம்;

* சாத்தன்குறிது, சாத்தன்குறியன், சாத்தன்கை, ...... எனக்கூட்டுக.

(கை, செவி, தலை, புறம்) எ-ம் [1]உயிரே யகரமே ரகரமே என இவ்வீற்றுயர்திணைப்பெயர்முன்வந்த கசதபக்கள் இயல்பாயின.

'ஆவியரமுன் வன்மைமிகா' எனவே, பிறவீறுகள் முன்வரின், வல்லினம் சிலவிகாரமாமெனக்கொள்க. அவை, கொற்றன்றீயன், அவன் [2]றண்ணியன் என்றறற்றொடக்கத்தன. பிறவுமன்ன.*

ஆடூஉக்குறியன், மகடூஉக்குறியள் எ-ம்; ஆடூஉக்கை, மகடூஉக்கை (ஆடூஉ, மகடூஉ) + (செவி, தலை, புறம்) எ-ம்; எட்டிப்பூ, எட்டிப்புரவு, காவிதிப்பூ, காவிதிப்புரவு, நம்பிப்பூ, நம்பிப்பேறு எனவும் உயர்திணைப்பெயர்முன் சில மிக்கன. மக்கட்குணம்; (மக்கள்)+(சுட்டு, தலை, புறம்) எனத் திரிந்தன. கபிலபரணர், பலசான்றோர் என ஈறுகெட்டு இயல்பாயின. ஆசீவகப்பள்ளி, கணக்காயப்பள்ளி, ஈழவக்கத்தி, கோலிகப்புடைவை, [3]வண்ணாப்பெண்டிரென நிலைமொழியீறுகெட்டு வருமொழிமிக்கன. வாசுதேவகோட்டம் வாசுதேவக்கோட்டம், பிரமகோட்டம் பிரமக்கோட்டம் என நிலைமொழியீறுகெட்டு வருமொழி விகற்பமாயிற்று. பார்ப்பனக்கன்னி, (பார்ப்பான்)+(சேரி, தோட்டம், பிள்ளை, மரபு, வாழ்க்கை) என ஈற்றயல்குறுகி அகரம் மிக்கது. பிறவும் இவ்வாறுவருவனவெல்லாம் கண்டுகொள்க.

உயர்திணைப்பெயரைப்பின்வைத்தார், பின்பும் எடுத்துவிதத்தற் கென்க.

'ஈற்றுமெய்' என்றும் 'ஆவியரமுன்' என்றும் பகுத்தோதியது, யாண்டும் நிலைமொழிவருமொழிவிகாரங்கள் தெரிந்து கோடற்கென்க.

மகன், மகள், மக்கள் என்பன, மக்கட்கதியினுள்ளாரையுணர்த்திநிற்பின் உயர்திணைப்பெயர்களாம்; முறைமையையுணர்த்திநிற்பின் பொதுப் பெயர்களாம். ஈண்டு உயர்திணையானகாலைக்குத் திரிபு காட்டினுமென்க.

ஈண்டு இயற்பெயர்மாத்திரையே தொகுத்துணர்த்தியது; இவற்றின் விளிவிளியுருபுமுதலாயினவெல்லாம் மேல் ஏற்றவிடங்களிற் காண்க.

---

* இதன்பின், 'சிலவிகாரமாமுயர்திணை' எனவே பிறவீறுகள்முன் உயர்திணையிடத்துச் சிலவிகாரமாமெனக்கொள்க. அவை—என்பது சிலபிரதிகளிற் காணப்பெறுகின்றது.

(பி - ம்.) [1] உயிரும் யகரமும் ரகரமும். [2] (க) தண்ணளியன், (உ) திண்ணியன். [3] (க) வண்ணாரப்பண்டி, (உ) வண்ணாரப்பட்டி, (ங) வண்ணாப்பட்டி. (கூ)

(159.) ஈற்றியா வினாவிளிப் பெயர்முன்வலி யியல்பே.

எ - ன், வினா விளிப்பெயர்கள் வல்லினத்தொடு புணருமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஈற்றுவினாமுன்னும் யாவினாமுன்னும் விளிப்பெயர்கள்முன்னும் வரும்வல்லினம் இயல்பாய்ப்புணரும். எ - று.

வ - று. (*உண்கா, உண்கே, உண்கோ) + (கொற்றா, சாத்தா, தேவா, பூதா) எ - ம்; யாகுறிய, யாசிறிய, யாதீய, யாபெரிய எ - ம் வினாமுன் வல்லினம் இயல்பாயின. (†கொற்றா, சாத்தா, கொற்றீ, சாத்தீ; நாகா, நம்பீ, தோழீ, செவிலீ; நாயே, நரியே, நீரே, நிலனே) + (கொள், செல், [1]தா, போ) என முப்பெயர்விளிகள்முன்னும் வல்லினம் இயல்பாயின.

பொதுப்பெயருயர்திணைப்பெயர்களை முன்னே முடித்துவைத்தும் வினாவிளியுருபேற்றுநிற்றலின், ஈண்டும் விதந்தோதினா ரென்க.

(பி - ம்.) [1] து. (கo)

(160.) ஆவி யரழ விறுதிமுன் னிலைவினை
ஏவன்முன் வல்லின மியல்பொடு விகற்பே.

எ - ன், முன்னிலைவினையும் முன்னிலையேவலும் வல்லினத்தொடு புணருமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) உயிரும் யரழவென்னும் மூன்றுமெய்யும் ஈறாக வரும் முன்னிலைவினையே முன்னிலையேவலேயென்றிவற்றின்முன் வல்லினம் இயல்பாயும் விகற்பாயும் புணரும். எ - று.

வ - று. (உண்டி, தின்றி, உண்டனை, தின்றனை, உண்டாய், தின்றாய்) + (கொற்றா, சாத்தா, தேவா, பூதா) எ - ம்; ([1] உண்டனிர், தின்றனிர்) + (கொற்றரே, சாத்தரே, தேவரே, பூதரே) எ - ம் முன்னிலைவினைமுன் வல்லினம் இயல்பாயின. விகற்பம் வந்தவழிக் கண்டுகொள்க. (கொணா, எறி, விடு, ஆய், சேர், தாழ்) + (கொற்றா, சாத்தா, தேவா, பூதா) என ஏவல்முன் வல்லினம் இயல்பாயின. நடகொற்றா நடக்கொற்றா, கிடகொற்றா கிடக்கொற்றா, [2]பெய்கொ

---

* உண்காகொற்றா, உண்காசாத்தா.........எனக் கூட்டுக.

† கொற்றாகொள்........ என இயைக்க.

ற்று பெய்க்கொற்று, எய்கொற்று எய்க்கொற்று, ஈர்கொற்று ஈர்க்கொற்று, தாழ்கொற்று தாழ்க்கொற்று, (நட, கிட, பெய், எய், ஈர், தாழ்)+(சாத்தா, தேவா, பூதா) என ஏவல்முன் வல்லினம் விகற்பமாயின. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

ழகாரவீறு முன்னிலைவினைஏலாமையிற் காட்டிற்றிலம். ஏவல் பிரித்தோதியது, விளங்குதற்கெனக்கொள்க.

(பி - ம்.) 1 உண்டீர், தின்றீர். 2 போகொற்று, போக்கொற்று.(கக)

(161.) இஈ ஐவழி யவ்வு மேனை
உயிர்வழி வவ்வு மேமுனிவ் விருமையும்
உயிர்வரி னுடம்படு மெய்யென் றாகும்.

எ - ன், உயிரீற்றுமொழிமுன் உயிர்முதன்மொழிவந்து புணருமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இகர ஈகார ஐகாரங்களின்வழியே யகரமும், அ ஆ உ ஊ ஒ ஓ ஔ என்னும் இவ்வேழுயிர்களின்வழியே வகரமும், ஏகாரத்தின்வழியே யகரமும் வகரமும் உயிர்முதலாகியசொற்கள் வந்தால் உடம்படுமெய்யென்னும்பெயரவாய் வரும். எ - று.

வ - று. மணியழகிது, தீயழகிது, மலையழகிது எ - ம்; (*விள, பலா, கடு, பூ, நொ, சோ, வெள)+(அடைந்தது, 1 ஆறிற்று, 2 இடைந்தது, ஈறிற்று, உடைந்தது, 3 ஊறிற்று, எழுந்தது, 4 ஏறிற்று, ஐது, ஒழிந்தது, ஓங்கிற்று) எ - ம்; †"ஏயே யிவளொருத்தி பேடியோ வென்றார்", சேவழகிது எ - ம் வந்தவாறுகாண்க. மணியழகு, விளவழகு என வேற்றுமைப்பொருட்குமொக்கும்.

ஔகாரம் தானே மொழிக்குமுதலாதல் வழக்குப்பயிற்சியின்மையின், இன்னோரன்ன இடங்களில் வாராது. எகரமும் அளபெடையினல்லது தானாகநின்றும் மெய்யோடுகூடிநின்றும் ஈறாகாமையால், ஈற்றுக்குவரும்விதிகளைப் பெரும்பாலும் ஏலாதென்க.

இதனை, இயல்புபுணர்ச்சியென்பாருமுளர்.

(பி - ம்.) 1 ஆடிற்று. 2 இழைந்தது. 3 ஊற்றிற்று. 4 எற்றிற்று.(கஉ)

(162.) எகர வினாமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமு மெய்தின் வவ்வும்
பிறவரி னவையுந் தூக்கிற் சுட்டு
நீளின் யகரமுந் தோன்றுத னெறியே.

---

* விளவடைந்தது.........என இயைக்க. † சீவக. கூருஉ.

எ - ன், வினாவும் சுட்டும் நாற்கணத்தோடு புணருமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) எகரவினாமுன்னும் சுட்டுக்கண்முன்னும் உயிரும் யகரமும்வந்தால் வகரமும், ஏனை ஒன்பதுமெய்யும்வந்தால் வந்தவையும், செய்யுட்கட் சுட்டுநீண்டிசைத்தவழி யகரமும் மிகுதல் முறைமை. எ - று.

வ - று. எவ்வணி, [1]எவ்யானை; அவ்வணி, [2]அவ்யானை; இவ்வணி, [3]இவ்யானை; உவ்வணி, [4]உவ்யானை எ - ம்; எக்குதிரை, எச்சேனை, எத்தண்டு, எந்நாடு, எப்படை, எம்மனை, எவ்வளை, எஞ்ஞாலம், எங்ஙனம் எ - ம்; அக்குதிரை, இக்குதிரை, உக்குதிரை எ - ம் வரும். ஒழிந்த எட்டுமெய்களோடும் இவ்வாறே ஒட்டிக்கொள்க. * [5]"ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து" எனவரும். [6]

'தூக்கிற்சுட்டுநீளின்' எனவே, நீடற்கும், நீடல் ஒருதலையல்லவென்றற்கும் இதுவேவிதிபாகக்கொள்க. 'நெறி' என்றமிகையானே, யாவினாமுன்வரும் [7]ஙகரம் மிகுமெனவும், இவ்வணி, ஆயிடை எனவருமன்றி முன்னின்ற உடம்படுமெய் இவற்றிற்கு எய்தாதெனவும் கொள்க.

(பி - ம்.) 1 எவ்வியானை. 2 அவ்வியானை. 3 இவ்வியானை. 4 உவ்வியானை. †5 "ஆயிருதிணையினிசைக்குமனசொல்லே". 6 'யகரமும்' என்ற உம்மையால் வகரமெய்யும் கொள்க; ‡ "ஆவறு மூன்று முளப்படத் தொகைஇ" எனவருதல்காண்க. 7 யாவினாமுன்வரும் ஙகரம் மிகாதெனவும் முன்னின்ற உடம்படுமெய் இவற்றிற்கு எய்தாதெனவுங்கொள்க. (கஙு)

**(163.) உயிர்வரி னுக்குறண் மெய்விட் டோடும்
யவ்வரி னிய்யா முற்றுமற் றொரோவழி.**

எ - ன், குற்றுகர முற்றுகரவீறு உயிரும் யகரமும்வந்தாற் புணருமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) குற்றியலுகரம் உயிர்முதன்மொழிவந்தால் தனக்கு ஆதாரமான மெய் நிற்கத் தான்கெடும்; யகரமுதன்மொழிவந்தால் இகரமாகத்திரியும்; ஒரோவிடத்து முற்றுகரமும் இவ்விருவிதியையும் எய்தும். எ - று.

வ - று. நாகழகிது, நாகியாது எ - ம்; நாகின்வளர்ச்சி, நாகி

* தொல். பாயிரம். † தொல். கிளவி. க. ‡ தொல். கிளவி. ருஎ.

யமன்கொள்ளான் எ - ம்; இதனை, இதனால் எ - ம், (*தரவு, தெருவு, கதவு, புதவு, இழவு, விழவு, வரவு, செலவு, புணர்வு, உணர்வு, நோவ்வு, நுகர்வு)+(அழகிது, யாது) எனவும் வரும். (கச)

(164.) இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்
கசதப மிகும்வித வாதன மன்னே.

எ - ன், உயிரீற்றின்முன் வல்லினம்புணருமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இயல்பினானும் ஆக்கப்பாட்டினானும்நின்ற உயிரின் முன் கசதபக்களை முதலாகவுடைய மொழிகள் வந்தால் அவை மிக்கு முடியும்; பெரும்பாலும் விதந்துசொல்லாதன. எ - று.

விதியினுமென்பது - அகரமுதலாக இடையே விதிக்கப்படுவனவும், ஒற்றீறுகெடுழிந்து உயிரீறாய்நிற்பனவுமாம். விதத்தலாவது, இன்னது இன்னவிடத்து இன்னதாமென எடுத்து [1]விதித்தல். உயிரொருமைபாற் குற்றுகரமும் உருபுயிரும் ஈண்டே அடங்குமெனக் கொள்க. ஈண்டும் பொதுப்படவைத்தமையான் இருவழியும்கொள்க.

வ - று. மகக்குறிது, விளக்குறிது, (மக, விள)+(சிறிது, தீது, பெரிது) எ - ம்; (மக, விள)+(குறுமை, சிறுமை, தீமை, பெருமை) எ - ம் இயல்பகரவீற்றுப்பெயர்ப்பதமுன் இருவழியும் கசதபக்கள் மிக்கன. உணக்கொண்டான், தரக்கொண்டான், சாவக்கொண்டான், (உண, தர, சாவ)+(சென்றான், தந்தான், போயினான்) என இயல்பகரவீற்று வினைப்பதமுன் அல்வழியில்மிக்கன. கொள்ளெனக்கொண்டான், ஆங்கக்கொண்டான், புலிபோலக்கொண்டான், (கொள்ளென, ஆங்க, புலிபோல)+(சென்றான், தந்தான், போயினான்) என இயல்பகரவீற்று இடைப்பதமுன் மிக்கன. தடக்கை, வயக்களிறு, குழக்கன்று என இயல்பகரவீற்று உரிப்பதமுன் மிக்கன. தாழக்கோல், தமிழப்பல்லவதரையரென அகரச்சாரியை பெற்ற விதிஅகரவீற்றுப்பெயராயவற்றின்முன் இருவழியும் மிக்கன. வட்டக்கடல், (வட்டம்)+(சுனை, தாழி, பாறை) என ஈற்று மகரங்கெட்டு விதிஅகரவீற்றுப்பெயராயதன்முன் மிக்கன.

இயல்புயிரும் விதியுயிருமாகிய ஏனைய ஈற்றையும் இவ்வாறே அறிந்துமுடிக்க.

---

* தாவழகிது, தாவியாதென்க.

(*தாரா, மூங்கா, யா, கா) + (கடிது, சிறிது, தீது, பெரிது) எ-ம்; (கடுமை, சிறுமை, தீமை, பெருமை) எ-ம் இயல்புஆகாரவீற்றுப் பெயர்ப்பதமுன் இருவழியும்மிக்கன. (†உண்ணு, தின்னு) + (கொண்டான், சென்றான், தந்தான், போயினான்) எ-ம்; உண்ணுக்கொற்றன், (உண்ணு) + (சாத்தன், தேவன், பூதன்) எ-ம் ஆகாரவீற்று வினைப்பதமுன் மிக்கன. ‡"உயிருறுப் புயிர்மெய் தனிநிலை யெனுஅக், குறினெடி லளபெடை மூவின மெனுஅ" என ஆகாரவீற்றிடைப்பத முன் ககரம் மிக்கது. (உசா, உயா, வயா) + (கடிது, சிறிது, தீது, பெரிது) எ-ம்; (கடுமை, சிறுமை, தீமை, பெருமை) எ-ம் ஆகார வீற்று உரிப்பதமுன் இருவழியுமிக்கன.

கிளிக்கால், (கிளி) + (சிறகு, தலை, புறம்) என இகரவீற்றுப் பெயர்ப்பதமுன் வேற்றுமைக்கண்மிக்கன. (ஓடி, ஆடி, பாடி) + (கொண்டான், சென்றான், தந்தான், போயினான்) என இகரவீற்று வினைப்பதமுன் மிக்கன. (இனி, அணி) + (கொண்டான், சென்றான், தந்தான், போயினான்) எனக் காலமும் இடமுங்காட்டும் இகரவீற்று இடைப்பதமுன் மிக்கன. கடிக்கமலம், (கடி) + (சரோருகம், தாமரை, பங்கயம்) என இகரவீற்று உரிப்பதமுன்மிக்கன. ஊர்வழிக் கொண்டான், (ஊர்வழி) + (சென்றான், தந்தான், போயினான்) என இகரவீற்று உருபுப்பதமுன் மிக்கன.

ஈக்குறிது, (ஈ) + (சிறிது, தீது, பெரிது) எ-ம்; (கால், சிறை, தலை, புறம்) எ-ம் ஈகாரவீற்று ஓரெழுத்துப்பெயர்ப்பதமுன் இருவழியுமிக்கன. (தழீஇ, நிறீஇ) + (கொண்டான், சென்றான், தந்தான், போயினான்) என ஈகாரவீற்றுவினைப்பதமுன் மிக்கன. மீக்கொள், மீச்செல், மீத்தா, மீப்போ என ஈகாரவீற்று இடைப்பத முன்மிக்கன. தீக்கதி, (தீ) + (சிறை, தொழில், புலன்) என ஈகார ஈற்று உரிப்பதமுன் மிக்கன.

கடுக்குறிது, (கடு) + (சிறிது, தீது, பெரிது) எ-ம்; (காய், செதிள், தோல், பூ) எ-ம், உகரவீற்றுப்பெயர்ப்பதமுன் இருவழியுமிக்கன. (அடித்து, பிடித்து) + (கொண்டான், சென்றான், தந்தான், போயினான்) என உகரவீற்று வினைப்பதமுன் மிக்கன. (மற்று) + (கொள், செல், தா, போ) என உகரவீற்று இடைப்பதமுன்மிக்கன. (அதிர்ப்பு) + (கடிது, சிறிது, தீது, பெரிது) என உகரவீற்று உரிப்பதமுன்

---

* தாராக்கடிதென ஒட்டுக.

† உண்ணுக்கொண்டான்.........என இயைக்க.

‡ இலக்கணவிளக்கம், அஉ-சூ. உரை.

மிக்கன. (*ஊர்க்கு) + (கொண்டான், சென்றான், தந்தான், போயினான்) என உகரவீற்று உருபுப்பதமுன் மிக்கன.

கொண்மூக்கடிது; (கொண்மூ) + (சிறிது, தீது, பெரிது) எ - ம், (கடுமை, சிறுமை, தீமை, பெருமை) எ - ம் ஊகாரவீற்றுப்பெயர்ப் பதமுன் இருவழியும் மிக்கன. உண்ணூக்கொண்டான்; சென்றான், தந்தான், போயினான் என ஊகாரவீற்று வினைப்பதமுன் மிக்கன.

சேக்கடிது; (சே) + (சிறிது, தீது, பெரிது) எ - ம், (கடுமை, சிறுமை, தீமை, பெருமை) எ - ம் ஏகாரவீற்றுப்பெயர்ப்பதமுன் இருவழியும் மிக்கன.

யானைக்கோடு; (யானை) + (செவி, தலை, புறம்) என ஐகாரவீற்றுப்பெயர்முன் வேற்றுமைக்கண் மிக்கன. ஒல்லைக்கொண்டான், வல்லைக்கொண்டான்; (ஒல்லை, வல்லை) + (சென்றான், தந்தான், போயினான்) என வினையெச்சவினைச்சொன்முன் மிக்கன. †"தில்லைச் சொல்", ‡"கொன்னைச்சொல்" என இடைச்சொன்முன் மிக்கது. பணைத்தோளென உரிப்பதமுன் மிக்கது. யானையைக்காத்தான்; சேர்த்தான், தடுத்தான், பிடித்தான் என உருபுப்பதமுன் மிக்கன.

நொக்கொற்றா; சாத்தா, தேவா, பூதா என ஒகரவீற்றுவினைப் பதமுன் மிக்கன.

கோக்கடிது; (கோ) + (சிறிது, தீது, பெரிது) எ - ம், (கடுமை, சிறுமை, தீமை, பெருமை) எ - ம் ஓகாரவீற்றுப்பெயர்முன் இருவழியும் மிக்கன.

ஔக்கடிது; (ஔ) + (சிறிது, தீது, பெரிது) எ - ம், (கடுமை, சிறுமை, தீமை, பெருமை) எ - ம் ஔகாரவீற்றுப்பெயர்ப்பதமுன் இருவழியும் மிக்கன.

கொக்குக்கடிது; (கொக்கு) + (சிறிது, தீது, பெரிது) எ - ம், (கடுமை, சிறுமை, தீமை, பெருமை) எ - ம் குற்றுகரவீற்றுப்பெயர்ப் பதமுன் இருவழியும் மிக்கன. ஈண்டுக் காட்டாதொழிந்தனவும் வந்தவழிக் கண்டு இதுவே நிலனாக முடித்துக்கொள்க.

இதனுள், 'மன்னே' என்றமிகையானே, விதவாதவற்றுள்ளும் சிறுபான்மை மிகாதனவும் உளவெனக்கொள்க. அவை: குணகடல்,

* ஊர்க்குக்கொண்டான்...போயினானென இயைக்க.

† தொல். இடை. ௫. ‡ தொல். இடை. ௬.

குடகடல், வடகடல், வடகலை, மழகளிறு, குழவிகை, ஏரிகரை, மீகண், *" மலைகிழவோனே ", குழங்கைதை, ' என்னைகாணுமாறு ' என்றற்றொடக்கத்தன. பிறவும் வருவனவெல்லாம் இதுவேவிதியாக முடிக்க.

(பி - ம்.) [1]விரித்தல். (கரு)

(165.) மரப்பெயர் முன்ன ரினமெல் லெழுத்து
வரப்பெறு நவுமுள வேற்றுமை வழியே.

எ - ன், உயிரீற்றுமரப்பெயர்கட்கு எய்தியதன்மேற் சிறப்பு விதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) உயிரீற்றுமரப்பெயர்களின்முன் மேலைப்பொதுவிதியால் இருவழியும் வல்லெழுத்துமிகுதலேயன்றி வரும் வல்லெழுத்துக்கு இனமான மெல்லெழுத்து [1]மிகப்பெறுவனவும் சிலவுள, வேற்றுமைக்கண். எ - று.

வ - று. விளங்கோடு, களங்கனி, [2]†யாங்கோடு, [3]†உதிங்கோடு, †சேங்கோடு; (விள, கள, யா, உதி, சே) + (செதிள், தோல், பூ) எனவரும். விளக்கோடு, யாக்கோடு; விளக்குறிது, யாக்குறிது என இருவழியும் வல்லெழுத்துப்பேறும் கொள்க.

' பெறுநவும் ' என்ற உம்மையால், அத்திக்காய், அகத்திக்காய், [4]ஆத்திக்காய், ‡இறலிக்காய், இலந்தைக்காய் முதலாயின மெல்லெழுத்துப் [5]பெறாவெனக்கொள்க.

(பி - ம்.) [1] மிகவும்பெறுவன. [2]மாங்கோடு. [3]ஒதிங்கோடு. [4]ஆத்திக்காய். 5 (க) பெறுவனவாமென்க (உ) பெறுவுமாமென்க. (கசு)

(166.) செய்யிய வென்னும் வினையெச்சம் பல்வகைப்
பெயரி னெச்சமுற் றுற னுருபே
அஃறிணைப் பன்மை யம்மமுன் னியல்பே.

எ - ன், எய்தியது விலக்குதனுதலிற்று.

(இ - ள்.) இச்சொன்னஆறிடத்தும் அகரமுன் வல்லினம்வந்தால் இயல்பாய்முடியும். எ - று.

இதன்முதலீறுகளில் அகரவீற்றுமொழிகளை வைத்தமையால் இடையனவும் அகரவீறேயாமெனக்கொள்க. ' பல்வகைப்பெயரி

* திருமுருகு. ௩௧௭.

† யா, உதி, சே என்பன மாவிசேடங்கள்; (தொல். எழுத்.)

‡ இறலி - இரத்திமரம்; (பிங்.) இறளி, இரலியெனவும் வழங்கும்.

னெச்சம்' என்றது, தொழிலும் ஒப்பும் பண்புமுதலானவும் எதிர் மறையில்வருவனவும் எல்லாம் தழுவுதற்கெனக்கொள்க.

வ - று. உண்ணியகொண்டான்; (உண்ணிய) + (சென்றான், தந்தான், போயினான்) என வினையெச்சமுன் இயல்பாயின. (உண்ட, உண்ணாநின்ற) + (குதிரை, செந்நாய், தகர், பன்றி) எனத் தொழில் கொள்பெயரெச்சமுன் இயல்பாயின. (பொன்னன்ன, பொன்போன்ற, பொன்னனைய, பொன்னிகர்த்த, பொன்னொத்த [1]) + (குதிரை, செந்நாய், தகர், பன்றி) என [2]உவமப்பண்புகொள் பெயரெச்சமுன் இயல்பாயின. (பெரிய, சிறிய, செய்ய, இனிய, தண்ணிய) + (கமலம், சரோருகம், தாமரை, பங்கயம்) எனப் பல்வகைப் பண்புகொள் பெயரெச்சமுன் இயல்பாயின. (உண்ணாத, தின்னாத) + (குதிரை, செந்நாய், தகர், பன்றி) எனப் பெயரெச்ச எதிர்மறைமுன் இயல்பாயின. (உண்டன, தின்றன, வாழ்க, செல்க) + (குதிரை, செந்நாய், தகர், பன்றி) என முற்றுவினைமுன் இயல்பாயின. சாத்தன குதிரைகள்; செந்நாய்கள், தகர்கள், பன்றிகள் என ஆறனுருபின்முன் இயல் பாயின. சிலகுதிரை, பலகுதிரை; செந்நாய், தகர், பன்றி என அஃறிணைப்பன்மைமுன் இயல்பாயின. அம்ம கொற்றா; சாத்தா, தேவா, பூதா என உரையசையிடைச்சொல் முன் இயல்பாயின.

உண்ணாக்குதிரை, *ஓடாப்பூட்கை எனவரும் பெயரெச்ச எதிர்மறை ஆகாரவீறாகலின் விலக்கினவெனக்கொள்க.

**(பி - ம்) [1] (அன்ன, இன்ன, என்ன) + குதிரை. [2] என உவமத்தொழில் கொள் பெயரெச்சம் இயல்பாயிற்று.** (எ)

167.) வாழிய வென்பத னீற்றி னுயிர்மெய்
ஏகலு முரித்தஃ தேகினு மியல்பே.

எ - ன், எய்தாததெய்துவித்தலும், எய்தியது [1]இகந்துபடாமற் காத்தலும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வாழியவென்னும் வியங்கோளின் ஈற்றுயிர்மெய் கெடலுமுரித்து; அதுகெட்டு இகரவீறாய் [2]நின்றாலும் ஆண்டும் இயல்பேயாம். எ - று.

[3]உம்மைகள் எதிர்மறைக்கண்ணவாகலான், கெடாமையுமுரித்தாகலும் இயல்பிகந்துபடாமையும் கொள்க. வருமொழி உரையாமையின் நாற்கணமும் வரின் யகரம்கெடுதலும் [4]கெடாமையும் கொள்க.

* திருமுருகு. உசஎ; சிறுபாண். அங.

வ - று. வாழிய, வாழி. வாழிகொற்ற; சாத்தா, தேவா, பூதா, ஞெள்ளா, நாகா, மன்னு, யவனு, வளவா, அபயா எனவரும்.

(பி - ம்.) [1]இறந்து [2] நின்றுலும் இயல்பேயாம். 3 உம்மை. 4 கெடாமலும்

(168.) சாவவென் மொழியீற் றுயிர்மெய்சா தலும்விதி.

எ - ன், எய்தியதன்மேற்சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) சாவவென்னும் மொழியிறுதியில்நின்ற உயிர்மெய் கெடுதலும் முறைமை. எ - று.

வ - று. சாவ + குத்தினுன் = சாக்குத்தினுன் எனவரும்.

உம்மையால், [1]கெடாமையே வலியுடைத்தெனக. (கக)

(பி - ம்.) கெடாமலே.

(169.) பலசில வெனுமிவை தம்முன் றும்வரின்
இயல்பு மிகலு மகர மேக
லகரம் றகர மாகலும் பிறவரின்
அகரம் விகற்ப மாகலு முளபிற.

எ - ன், எய்தாதது எய்துவித்தலும் எய்தியது இகந்துபடா மற்காத்தலும் உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) பலசிலவென்னும் இவ்விருசொல்லும் தம்முன்னர்த் தாம்வரின் இயல்பாதலும், மிகுதலும், அகரங்கெட லகரம் றகர மாதலும், இவற்றின்முன்னே பிறமொழியனைத்தும்வரின் அகரம் நிற்றலும் நீங்கலும் உளவாம். எ - று.

வ - று. (பலபல) + (கொண்டார், செய்தார், தந்தார், பற்றி னுர்) என இயல்பாயின. பலப்பலகொண்டார் என மிக்கது. பற்பல கொண்டார் என அகரம் கெட லகரம்றகரமாகத்திரிந்தது. *பலசான் றீரே† [1]பல்சான்றீரே, பலகலை பல்கலை, பலசாலை பல்சாலை, பலதா ழிசை பஃறுழிசை, பலபடை பல்படை, பலஞாட்பு பன்ஞாட்பு, பல நாள் பன்னுள், பலமணி பன்மணி, பலயானை பல்யானை, பலவளை பல் வளை, பலஅணி பல்லணி, பலஆயம் பல்லாயம், பலஇழை பல்லிழை என அகரம் விகற்பித்தது. சிலவுக்கும் இவ்வாறே ஒட்டிக்கொள்க.

'பிற' என்றமிகையானே, பல்லபல, சில்லசில என்றமிகையும், ‡"பலாஞ்சிலாம்" எனஅகரம் ஆகாரமாய் ஒற்றுமிகலும் பிறவல்லி னம் வந்தவழி லகரம் திரியாமையும் கொள்க.

---

* புறநா. சகூ௰. † புறநா உசகூ ‡ தொல். உயிர். சூ. கக, ந. உரை.

(பி - ம்.) ¹ (க) பல்சான்றீரேயென அகரம் ஏகிற்று; (உ) பல்சான் றீரேயென அகரம் கெட்டது. (உ0)

(170.) அல்வழி யாமா மியாமுற்று முன்மிகா.

எ - ன், எய்தியது விலக்குதனுதலிற்று.

(இ - ள்.) அல்வழிக்கண் ஆவும் ¹மாவுமாகிய இருபெயரும், மியாவென்னும் உரையசையும், முற்றுவினையுமான இவ்வாகாரவீற் றின்முன் வல்லினம் இயல்பாய்முடியும். எ - று.

வ - று. ஆகுறிய, மாகுறிய; சிறிய, தீய, பெரிய எனவும்; கேண்மியாகொற்று; சாத்தா, தேவா, பூதா எனவும்; உண்ணு குதிரை, தின்னுகுதிரை; செந்நாய், தகர், பன்றி எனவும் முறை யேகாண்க.

(பி - ம்.) ¹ மாவுமென்னுமிவ்விரு. (உக)

(171.) குறியதன் கீழாக் குறுகலு மதனோ
டுகர மேற்றலு மியல்புமாந் தூக்கின்.

எ - ன், செய்யுட்கு ஆவதோர்முடிபு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) குற்றெழுத்தின்கீழ்நின்றஆகாரம் குறுகலும் அக் குறுகலுடனே இறுதி உகரம்வருதலும் அவ்விரண்டுமின்றி இயல் பாதலும் என்னும் இம்மூன்றுவிதியும் செய்யுளுள்ஆம். எ - று.

வ - று. *"சுறமறிவனதுறையெல்லாம்", "நிலவிரி கானல் வாய்" எ - ம், †"இறவுப்புறத்தன்ன" † "சுறவுக்கோட்டன்ன" எ - ம், ¹‡ "நீலநீர்ச்சுறாவினம்போல்", § "நிலாவணங்கு நேர் மணன்மே னின்று" எ - ம் முறையே காண்க.

ஈண்டு இயல்பு ஐயமறுத்தற்குரைத்தாரென்க.

(பி - ம்.) ¹ நிலாசசுறாவினமபொனபொனறன (உஉ)

(172.) அன்றி யின்றியென் வினையெஞ் சிகரம்
தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே.

இதுவுமது.

(இ - ள்.) இவ்விருமொழியீற்று இகரமும் செய்யுளுள் உகர மாயும் வரப்பெறும்; அவ்வழி இயல்பாய்நிற்கும், மேல்வரும் வல் லினம். எ - று.

---

* யா-வி. உரை. † நற்றிணை. கக. ‡ சீவக. உஉ௩௬. § "குலாவணங்கு" என்னும் செய்யுளிலுள்ளது. (யா-வி. உரை.)

'வரின்' எனவே உகரமாதல் ஒருதலையன்றெனவும் உகரம் ஆகாதவழி மிகுமெனவும்கொள்க.

வ - று. "வாளன்று பிடியா வன்க ணாடவர்", *"நாளன்று போகிப் புள்ளிடை தட்ப", "உப்பின்று புற்கை யுண்கமா கொற் கை யோனே" எனவரும். (உங)

(173.) உரிவரி னாழியி னீற்றுயிர் மெய்கெட
மருவும் டகர முரியின் வழியே
யகர வுயிர்மெய்யா மேற்பன வரினே.

எ - ன், முதலதற்குஎய்தியதன்மேற் சிறப்புவிதியும் ஏனைய தற்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதியும் வகுத்தல்நுதலிற்று.

(இ - ள்.) உரியென்னும்அளவுச்சொல்வரின் நாழியென்னும் அளவுப்பெயரீற்று உயிர்மெய் கெட [1]ஆங்கே டகரவொற்றுவரும்; உரியென்னும் அளவுப்பெயரின்பின் ஏற்றமொழிகள் வரின் யகர வுயிர்மெய் மிகும் எ - று.

வ - று. நாழி + உரி = நாடுரி எ - ம்; உரி + உப்பு = உரியவுப்பு; கொள்ளு, சாமை, தினை, பயறு, மிளகு, வரகு எ - ம் வரும்.

'ஏற்பனவரின்' என்றதனான் உரியரிசி, உரியாழாக்கு, உரியெ ண்ணெய் முதலானவற்று மிகாதெனக்கொள்க.

வருமொழியை முற்கூறியவதனால் நாடுரியென்புழி டகாரம் மிகாமையும் நாழியுரியென்னுமுடிபும் கொள்க.

(பி - ம்.) [1] ஆங்கட்டகர. (உச)

(174.) சுவைப்புளி முன்னின மென்மையுந் தோன்றும்.

எ - ன், எய்தியதன்மேற்சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) மரமல்லாத சுவைப்புளிமுன் வல்லெழுத்துக்கள் வந் தால் அவற்றிற்கு இனமான மெல்லெழுத்துக்களும் மிகப்பெறும். எ - று.

வ - று. † புளிங்கறி, புளிஞ்சோறு, புளிந்தயிர், புளிம்பாளி தம் எனவரும்.

உம்மையாற் பொதுவான வல்லெழுத்துப்பேறுங்கொள்க. (உரு)

* புறநா கஉச. † சீவக. கூஉஅ, உரை.

(175.) அல்வழி இஐ முன்ன ராயின்
இயல்பு மிகலும் விகற்பமு மாகும்.

எ - ன், எய்தாதது எய்துவித்தலும் எய்தியது இகந்துபடா மைக்காத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) அல்வழிக்கண் இகரமே ஐகாரமேயென்றிவற்றின் முன் வல்லினம் வருமாயின் இயல்பாயும் மிக்கும் ஒன்றற்கே ஒருகால் மிகாதும் ஒருகால்மிக்கும் வரும். எ - று.

வ - று. பருத்திகுறிது, ஓதிகுறிது; சிறிது, தீது, பெரிது எ - ம்; யானைகுறிது, குதிரைகுறிது; சிறிது, தீது, பெரிது எ - ம் இயல்பாயின. *"ஆடித்திங்கள்", அலிக்கொற்றன் எ - ம்; † "சித்திரைத்திங்கள்", புலைக்கொற்றன் எ - ம் மிக்கன. கிளிகுறிது கிளிக்குறிது எ - ம், தினைகுறிது தினைக்குறிது எ - ம் விகற்பித்தன. பிற வுமன்ன.

[1]மிகுதி இறந்துபடாமற்கு [2]ஈண்டுங்கூறினாரென்க.

(பி - ம்.) [1] மிகுதியும்விகற்பமும். [2] ஈண்டுக். (உசு)

(176.) ஆமுன் பகரவீ யனைத்தும்வரக் குறுகும்
மேலன வல்வழி யியல்பா கும்மே.

எ - ன், எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தனுதலிற்று.

(இ - ள்.) ஆவென்னும்பெயரீற்றினின்ற பகரவீகாரம் நாற்கணத்தோடும் புணருமிடத்து இருவழியும் குறுகும்; குறுகிநின்ற அதன்மீதேவரும்வல்லினம் அல்வழிக்கண் இயல்பாம். எ - று.

வ - று. ‡ஆப்பியரிது; குளிரும், நன்று, வலிது எ - ம், ஆப்பியருமை; குளிர்ச்சி, நன்மை, வன்மை எ - ம் இருவழியும் குறுகிற்று. ஆப்பிகுறிது; சிறிது, தீது, பெரிது என அல்வழிக்கண் வல்லெழுத்துக்கள் இயல்பாயின. ஆப்பிப்புழு என வேற்றுமைக்கண் வல்லெழுத்து மிக்கதெனக்கொள்க. (உஎ)

(177.) பவ்வீ நீமீ முன்ன ரல்வழி
இயல்பாம் வலிமெலி மிகலுமா மீக்கே.

எ-ன், எய்தியதுவிலக்கலும் பிறிதுவிதிவகுத்தலும்நுதலிற்று.

---

* சிலப்பதி. கட்டுரை, கஙங. † சிலப்பதி. இந்திர. கூச.

‡ ஆப்பி - கோமயம்; (புறநா. உசக.)

(இ - ள்.) பகரத்தோடுகூடிநின்ற ஈகாரவீற்றுப்பெயரே நீயென்னுமுன்னிலைப்பெயரே மீயென்னும் இடப்பெயரே என்றிவற்றின்முன் வல்லினம் அல்வழிக்கண் இயல்பாம்; மீயென்பதன்முன் ஓரோவழி வல்லெழுத்து மெல்லெழுத்து மிகவும்பெறும். எ - று.

வ - று. பீகுறிது; சிறிது, தீது, பெரிது எ - ம், நீகுறியை; சிறியை, தீயை, பெரியை எ - ம், மீகண் எ - ம் இயல்பாயின. *மீக்கோள், †மீப்பாய் எ - ம், மீங்குழி, ‡மீந்தோல் எ - ம் வலிமெலி மிக்கன. (உஅ)

(178.) மூன்றா றுருபெண் வினைத்தொகை சுட்டீ
றாகு முகர முன்ன ரியல்பாம்.

(179) அதுமுன் வருமன் றான்றுந் தூக்கின்.

எ - ன், முற்றுகரத்துக்கு எய்தியதுவிலக்கலும் பிறிதுவிதி வகுத்தலும் நுதலிற்று.

(இ - ள்.) மூன்றும்ஆறுமான உருபே எண்ணே வினைத்தொகையே சுட்டேயென்றிவற்றின் ஈற்றுகரமுன் வல்லினம் இயல்பாம்; அதுவென்னுஞ்சுட்டின்முன்வந்த அன்றென்னும் மறைமொழி செய்யுளுள்வந்தால் முதல்நீளும். எ - று.

வ - று. சாத்தனொடுகொண்டான்; சென்றான், தந்தான், போயினான் எ - ம்; சாத்தனதுகை; செவி, தலை, புறம் எ - ம்; ஒருகாசு; சின்னம், தலை, பகல்; இருகண், அறுசுவை, எழுகண், எழுகடல், எ - ம்; அடுகளிறு; சேனை, தானை, படை எ - ம்; (அது, இது, உது) +(குறிது, சிறிது, தீது, பெரிது) எ - ம் முறையே இயல்பாயின. $"அதான்று" என வருமொழிமுதல்நீண்டது.

மூன்றும் ஆறுமான உருபென விரித்துரைக்க. (உகூ-௩0)

(180) வன்றொட ரல்லன முன்மிகா வல்வழி.

எ - ன், குற்றுகரவீற்றுள், வன்றொடரல்லாத ஐந்தற்கும் எய்தியது ஒருவழி விலக்குதனுதலிற்று.

(இ - ள்.) வன்றொடரொழிந்த ஐந்துகுற்றுகரவீற்றுமுன்னும் வல்லினம் மிகா, வேற்றுமையல்லாவழி. எ - று.

---

* மீக்கோள் - மேற்போர்வை; (ஆசார. ௩க.)

† மீப்பாய் - கப்பலின் மேற்பாய். (புறநா. ௩0; பி - ம்.)

‡ மீந்தோல் - மேலுள்ளதோல். (அகநா. ௩; பி - ம்.)

$ திருமுருகு. எஎ; அகநா. கூஅ.

வ - று. (நாகு, எஃகு, வரகு, கோங்கு, [1]தெள்கு) + (கடிது, சிறிது, தீது, பெரிது) என இயல்பாயின. உறங்குகின்றான், அஞ்சுகின்றான், உண்டுபோயினன், [2]எறிந்துபோயினன் என்பனமுதலாயினவும் கொள்க. சுக்குக்கடிது, பதக்குப்பெரிது என [3]வன்றொடர் முன் மிக்கவாறுகாண்க.

(பி - ம்.) [1]தொள்கு. [2]இறந்து. [3]வன்றொடரின் மிக்கனவுங்கொள்க.

(181.) இடைத்தொட ராய்தத் தொடரொற் றிடையின்
மிகாநெடி லுயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை.

எ - ன், எய்தியது ஒருமருங்கு மறுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) [1]இடைத்தொடர் ஆய்தத்தொடர்க் குற்றுகரங்கள் முன்னும் இடையில் ஒற்றுமிகாத நெடிலுயிர்த்தொடர்க்குற்றுகரங்கள்முன்னும் வரும்வல்லெழுத்துக்கள் வேற்றுமைக்கண் இயல்பாம். எ - று.

வ - று. [2]தெள்குகடுமை, எஃகுகடுமை; சிறுமை, தீமை, பெருமை என இடைத்தொடர்முன்னும் ஆய்தத்தொடர்முன்னும் வல்லெழுத்துக்கள் இயல்பாயின. நாகுகால்; செவி, தலை, புறம் எ - ம், வரகு கதிர்; சோறு, தாள், பதர் எ - ம் ஒற்றிடையின்மிகாத நெடிலுயிர்த்தொடர்முன் இயல்பாயின.

இவற்றின்முன் இயல்பாமெனவே ஒழிந்துநின்றவன்றொடரும் மென்றொடரும் ஒற்றிடையேமிகும் நெடிற்றொடரும் உயிர்த்தொடரும் உயிரீற்றுப்பொதுவிதியானே மிக்குமுடியுமென்க. அவை: கொக்குக்கால், குரங்குக்கால், ஆட்டுக்கால், பாற்றுக்கால், முருட்டுக்கால், முயிற்றுக்கால்; செவி, தலை, புறம் எனவரும். பிறவுமன்ன.

(பி - ம்.) இடையொற்றுத்தொடர். [2]தொள்கு. (௩௧)

(182.) நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுள்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) நெட்டெழுத்தீற்றினும் உயிர்த்தொடரீற்றினும் [1]உகரப்பற்றுக்கோடாய்வரும் வல்லெழுத்து ஆறனுள் [2]டகார றகாரமான இரண்டொற்றும் பெரும்பாலும் வேற்றுமைக்கண்மிகும். எ - று.

எனவே வேற்றுமைக்கட் சில மிகாமையும் அல்வழிக்கட் சில மிகுதலும் ஏனைமெய்களுள்ளும் சில மிகுதலும் உளவாமெனக் கொள்க.

வ - று. ஆட்டுக்கால், பாற்றுக்கால், முருட்டுக்கால், முயிற்றுக்கால்; (ஆடு.........முயிறு) + செவி, தலை, 3புறம், நிறம், மயிர், யாப்பு, 4வலிமை, அடி, ஆய்வு என வேற்றுமைக்கண் நாற்கணத்துடனும் மிக்கன. *"நாடுகிழவோனே", †"காடகமிறந்தார்க்கே, ஓடுமென் மனனேகாண்", ‡"கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை" என வேற்றுமைக்கண் மிகாவாயின. காட்டாண், குருட்டுக்கோழி, முருட்டுப்புலையன், களிற்றியானை, § 5"வெளிற்றுப்பனை" 6 "எயிற்றுப்பல்" என அல்வழிக்கண்மிக்கன. ||"வெருக்குக்கண்", எருத்துக்கால்; செவி, தலை, புறம் எனப் பிறமெய்கள்மிக்கன.

(பி - ம்.) 1 உகரம்பற்றுக்கோடாய். 2 டறவொற்றிரண்டும். 3 புறம் எனவரும். 4 வலுமை. 5 வெளிற்றுப்பன்றி. 6 களிற்றேனம். (கஉ)

**(183.) மென்றொடர் மொழியுட் சிலவேற் றுமையில்**
**தம்மின வன்றொட ராகா மன்னே.**

எ - ன், எய்தாததெய்துவித்தனுதலிற்று.

(இ - ள்.) மெல்லொற்றுத்தொடர்மொழிக் குற்றுகரங்களுட் சில மொழிகளின் இடையில்நின்றமெல்லெழுத்துத் தமக்கினமான வல்லெழுத்தாகத் 1திரிவனவுமுள; பல திரியாதனவாம்; வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கண். எ - று.

வ - று. குரக்குக்கால், கழச்சுக்கோல், எட்குக்குட்டி, மருத்துப்பை, பாப்புக்கால், 2எற்ச்சட்டகம் எனத்திரிந்தன; நாற்கணத்தோடுமொட்டுக. ஞெண்டுக்கால், வண்டுக்கால், பந்துத்திரட்சி, கோங்கிலை, 3இசங்கிலை, புன்கங்காய், அடும்பம்பூ, பொதும்பிற்பூவை, குறும்பிற்கொற்றன் என்றற்றொடக்கத்தன திரியாவாயின.

இதனுள், 'மன்னே' என்றமிகையானே, ஒன்றுதானே ஓரிடத்துத்திரிந்தும் ஓரிடத்துத்திரியாதும் வருவதுமுண்டெனக்கொள்க.

வ - று. 4குரக்குக்கடி, குரங்கின்கடி; வேப்பங்காய், வேம்பின்காய்; பாப்புத்தோல், பாம்பின்றோல் என்றற்றொடக்கத்தன வேற்றுமைக்கண் திரிந்தும் திரியாதும்வந்தன.

---

* பொருந. உசஅ. † யா - வி. உரை. ‡ புறநா. கடவுள்.
§ புறநா. நடு. || நாலடி. உசO.

(பி - ம்.) [1] (க) திரியாதனவாம் வேற்றுமை. (உ) திரிவனசில; திரியாதனபல. [2] எற்புடம்பு. [3] சேங்கிலை, சேம்பிலை. புன்குக்காய். [4] குரக்கடி, குரங்கடி; குரக்குக்கால் குரங்கின்கால். (௩௩)

(184.) ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஐகாரத்தைத் தம்மீற்றிலே [1]பெற்றுவரும் குற்றுகரமுமுள. எ - று.

வ - று. ஓராட்டையான், ஈராட்டையான், ஐயாட்டையான், [2] அற்றைக்கூத்தன், [3]பண்டைச்சான்றோர் எனவரும்.

(பி - ம்.) [1] பெறவரும். [2] அன்றைக் கூத்தன். [3] பண்டைச்சாத்தன். (௩௪)

(185.) திசையொடு திசையும் பிறவுஞ் சேரின்
நிலையீற் றுயிர்மெய் கவ்வொற்று நீங்கலும்
றகரம் னலவாத் திரிதலு மாம்பிற.

எ - ன், எய்தாததெய்துவித்தனுதலிற்று.

(இ - ள்.) குற்றுகரவீற்று நாற்பெருந்திசைகளும் தம்முள் தாம் மாறியும் பிறவற்றோடும் புணருமிடத்து [1]நிலைமொழியீற்றுயிர்மெய்யும் அதன்மேனின்றகவ்வொற்றும் நீங்குதலும், றகரம் னகர [2] லகரங்களாகத்திரிதலுமாம். எ - று.

வ - று. வடகிழக்கு, வடமேற்கு, * "வடவேங்கடம்", †"வடகடல்", வடபால், வடமலை; தென்கிழக்கு, தென்மேற்கு, ‡"தென்குமரி", தென்கடல், தென்பால், [3]தென்மலை; மேல்கடல், [4] மேல்சார், மேல்பால்; குணகடல், குணபால்; குடகடல், குடபால் எனவரும்.

பிறவென்ற [5]விதப்பினானே கிழவென்பதனைக் [6]கீழெனதிரிவி, கீழ்பால், கீழ்சார், கீழ்கரை என வருவனவும், மேற்றிசையென்றற் [7] றொடக்கங்களுள் திரியாமையும் வருமொழித்[8]திரிபுகளும் கொள்க.

(பி - ம்.) [1] நிலைமொழியீற்றினின்ற. [2] லகாரமாய். [3] தென்றலை. [4] மேற்றலை. [5] மிகையானே. [6] கீழென்றாக்கி. [7] தொடக்கத்தனவுட்டிரியாமல். [8] திரிபும். (௩௫)

---

* தொல். பா. † பெருங்கதை. ‡ புறநா. கஎ.

**(186.) தெங்கு நீண் டீற்றுயிர் மெய்கெடுங் காய்வரின்.**

இதுவுமது.

(இ - ள்.) காயென்னுமொழிவரின், தெங்கென்னு [1]மொழி முதல் நீண்டு ஈற்றுயிர்மெய்கெடும். எ - று.

வ - று. தேங்காய் எனவரும்.

இவ்வாறு வழக்குண்மையின் இதுவும் எடுத்தோதினாரென்க.

(பி - ம்.) [1] மொழியின். (௩௬)

**(187.) எண்ணிறை யளவும் பிறவு மெய்தின்**
**ஒன்று முதலெட் டீறு மெண்ணுள்**
**முதலீ ரெண்முத னீளு மூன்று**
**றேழ்குறு கும்மா றேழல் லவற்றின்**
**௫ ஈற்றுயிர் மெய்யு மேழ னுயிரும்**
**ஏகு மேற்புழி யென்மனார் புலவர்.**

எ - ன், எண்பெயருடனே எண்ணுதிப்பெயர்புணருமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) எண் நிறை அளவும் பிறவும் எய்தின் - இந்நால் வகைப்பெயரும் வருமொழியாய்வரின், ஒன்றுமுதல் எட்டீறுமெண்ணுள் - ஒன்றுமுதலாகநின்ற எண்வகையெண்களுள்வைத்துக்கொண்டு, முதலீரெண் முதனீளும் - முதற்கணின்ற [1]ஒன்றிரண்டென்னும் இவ்விரண்டின்முதலுயிரும் நீளும். எ - று.

வ - று. ஓரொன்று, [2]ஓரெடை, ஓருழக்கு, [3]ஓராண்டு; ஈரொன்று, [4]ஈரெடை, ஈருழக்கு, [5]ஈரிலைப்போந்து என வரும்.

மூன்று ஆறு ஏழ்குறுகும் எ - து இம்மூன்றெண்ணும் முதலுயிர்குறுகும். எ - று.

வ - று. முப்பது, முக்கழஞ்சு, [6]முக்கலம், முப்பழம்; அறுபது, அறுகழஞ்சு, அறுகலம், அறுமீன்; எழுபது, எழுகழஞ்சு, எழுகலம், எழுபிறப்பு எனவரும்.

ஆறேழல்லவற்றின்ஈற்றுயிர்மெய்யும் ஏழனுயிரும் ஏகும் எ - து ஆறும்ஏழும்ஒழிந்தஎண்களின் ஈற்றில்நின்றஉயிர்மெய்யும் ஏழன்ஈற்றுஉயிரும்கெடும்: எ - று.

வ - று. ஒன், இரண், மூன், நான், ஐந், ஏழ், எட் என வரும்.

ஏற்புழி எ - து இவ்விதிகள் யாண்டும் ஆகா; தமக்குப்பொருந் தியவழியேவருவனவாம். எ - று.

என்மனார்புலவர் எ - து என்றுசொல்லுவர் அறிவுடையோர். எ - று.

இதனுள் 'எண்ணிறையளவும்பிறவுமெய்தின்' என்பதனை மேல் வரும் ஐந்துசூத்திரத்தோடுகூட்டியும், 'ஏற்புழி' என்பதனை இப் பொருண்மைஅதிகாரம்முற்றுமளவுஉய்த்தும் உரைக்க.

(பி - ம்.) [1] ஒன்றும் இரண்டும் முதனீளும். [2] ஓரடை. 3 ஓரியாண்டு. 4 ஈரடை. 5 ஈரிலைபோந்தன. [6] முக்காலி. (௩எ)

## (188.) ஒன்றன் புள்ளி ரகர மாக
## இரண்ட னொற்றுயி ரேகவுவ் வருமே.

இதுவுமது.

(இ - ள்.) எண்முதல் நாற்பெயரும்வருமிடத்து ஒன்றென் னும் எண்ணிடைநின்ற [1]னகரம் ரகரமாக இரண்டென்னும் எண் ணிடைநின்ற ணகரவொற்றும் [2]ரகரமிசைநின்றஅகரமும்போக அவ் விரண்டெண்ணின் ரகரத்தின்மேலும் உகரம்வரும். எ - று.

வ - று. [3] ஒருபது, இருபது; கழஞ்சு, கலம், கல் எனவரும்.

(பி - ம்.) [1] னகரவொற்று. [2] அதனயல் ரகாரமிசை. 3 ஒருபணம், இருபணம்; ஒரு, இரு எனவரும். (௩அ)

## (189.) மூன்றனுறுப் பழிவும் வந்தது மாகும்.

இதுவுமது.

(இ - ள்.) எண்ணுதிப்பெயர்வருமிடத்து மூன்றென்னும்எண் ணிடைநின்றஒற்று, கெடுதலும் வந்தஒற்றாகத்திரிதலுமாம். எ - று.

வ - று. மூவொன்று, மூவெடை, மூவுழக்கு, மூவுலகு, எனவும்; முப்பது, முக்கழஞ்சு, முந்நாழி, மும்மொழி எனவும்வரும். (௩கூ)

## (190.) நான்கன் மெய்யே லறவா கும்மே.

இதுவுமது.

(இ - ள்.) எண்ணுநிப்பெயர்வருமிடத்து நான்கென்னும்எண்ணிடைநின்ற னகரம் லகரமும் றகரமுமாகத்திரியும். எ - று.

வ - று. நாலொன்று, நாலெட்டை, நாலுழக்கு, [1]நால்யானை எனவும்; நாற்பது, நாற்கழஞ்சு, நாற்கலம், நாற்கவி எனவும் வரும்.

(பி - ம்.) [1] நாலியானை. (சஂ௦)

(191.) ஐந்தனொற் றடைவது மினமுங் கேடும்.

இதுவுமது.

(இ - ள்.) எண்ணுநிப்பெயர்வருமிடத்து ஐந்தென்னுமெண்ணிடைநின்ற ஒற்று வருமொற்றாகியும் அதற்கினமாகியும் [1]கெட்டும் முடியும். எ - று.

வ - று. ஐம்மூன்று, ஐம்மஞ்சாடி, [2]ஐவ்வட்டி, ஐவ்வண்ணம் எ - ம், ஐம்பது, ஐங்கழஞ்சு, ஐங்கலம், ஐஞ்சந்தி எனவும், ஐயொன்று, ஐயெட்டை, ஐயாழாக்கு, [3]ஐயோட்டை எனவும் வரும்.

(பி - ம்.) [1] கெட்டும் இம்மூன்றினாலு முடியும். [2] ஐவ்வட்டம். [3] ஐவிரல் எ - ம் அடைவதும் இனமும் கேடடைவதும் அடைவேகாண்க. (சக)

(192.) எட்ட னுடம்பு ணவ்வாகு மென்ப.

இதுவுமது.

(இ - ள்.) எண்ணுநிநாற்பெயரும்வருமிடத்து எட்டென்னும் எண்ணிடைநின்றஒற்று ணகாரமாகத்திரியுமென்று சொல்லுவர், புலவர். எ - று.

வ - று. எண்பது, எண்கழஞ்சு, எண்கலம், எண்குணம் எனவரும்.

இவற்றுட் சில குற்றுகரங்கள் முற்றுகரமாகத்திரிந்து புணர்ச்சிக்கண் இயல்புச்சந்தியாக முடிவனவெல்லாம், "மூன்றுறுப்பு" என்னும் சூத்திரவிதியுட் கண்டுகொள்க. (சஉ)

(193.) ஒன்பானொடு பத்து நூறு மொன்றின்
முன்னதி னேனைய முரணி யொவ்வொடு
தகர நிறீஇப் பஃதகற்றி னவ்வை
நிரலே ணளவாத் திரிப்பது நெறியே.

எ - ன், தொண்ணூறும் தொள்ளாயிரமும் முடிக்குமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஒன்பதென்னும் [1]எண்முன்னர்ப் பத்தும்நூறுமான எண்கள்வரின், நிலைமொழியான [2]ஒன்றானபப்பத்தானே வருமொழிகளிரண்டையுமாறி அதன்பின்அதன்ஒகாரத்துடனே ஒரு தகரவொற்றைச் சேர்த்துப் பஃதென்பதனையொழித்து முறையே [3]ணகரமும் ளகரமுமாக னகரவொற்றைத்திரிப்பது முறைமை. எ - று.

ஒன்றானமானபத்து - ஒன்பது; அஃது அக்காலச்சொல்.

வ - று. தொண்ணூறு, தொள்ளாயிரம் எனவரும்.

எட்டாற்பெருக்கினபத்து எண்பதானாற்போலவே ஒன்றானப் பத்தாற்பெருக்கின பத்தும்நூறும் தொண்ணூறும் தொள்ளாயிரமுமாமென்க. 'நெறி' என்றதனான் ஒற்று [4]இரட்டாது தொளாயிரமென்பதும்கொள்க.

(பி - ம்.) [1] எண்ணின். [2] ஒன்றானமானபத்தானே பத்தும்நூறுமானமொழிகள். [3] ணகாரளகாரமாக. [4] இரட்டியாது. (சரு)

(194.) முதலிரு நான்கா மெண்முனர்ப் பத்தின்
இடையொற் றேக லாய்த மாகல்
எனவிரு விதியு மேற்கு மென்ப.

எ - ன், எண்ணோடு எண்புணருமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஒன்றுமுதலாகிய எட்டுஎண்முன்னும் வரும் பத்தென்னும் எண்ணிடைநின்ற தகரவொற்று ஒருகாற்கெடுதலும் ஒருகால் ஆய்தமாகலுமென்னும் இவ்விருவிதியுமாமென்று [1]சொல்லுவர் புலவர். எ - று.

வ - று. ஒருபது, இருபது, எண்பது எ - ம்; ஒருபஃது, இருபஃது, எண்பஃது எ - ம் வரும்.

(பி - ம்.) [1] சொல்லுவர். எ - று. (சச)

(195.) ஒருபஃ தாதிமுன் னொன்றுமுத லொன்பான்
எண்ணு மவையூர் பிறவு மெய்தின்
ஆய்த மழியவாண் டாகுந் தவ்வே.

இதுவுமது.

(இ - ள்.) [1]ஒருபஃதுமுதலாம் எட்டெண்ணின்முன்னும் ஒன்றுதி ஒன்பதெண்ணும் அவையூர்ந்த பிறவும்வந்தால், [2]ஆய்தமழிய அந்தநிலையிலே தகரவொற்றுவரும். எ - று.

வ - று. ஒருபத்தொன்று, இருபத்தொன்று, எண்பத்தொன்று, ஒருபத்தொன்பது, இருபத்தொன்பது, எண்பத்தொன்பது எ - ம், ஒருபத்தொருகழஞ்சு, இருபத்தொருகழஞ்சு, முப்பத்துமுக்கலனேதூணி, எண்பத்துமுக்கலனேதூணி, எண்பத்தொன்பதின்கலனேதூணி, எண்பத்தெண்காதம், எண்பத்தொன்பதின்காதம், எண்பத்தெட்டியாண்டு, எண்பத்தொன்பதாண்டு எ - ம் வரும்.

(பி - ம்.) [1] ஒருபது முதலாகிய [2] ஆய்தமழிந்து அவ்விடத்து வரும் தகரவொற்று.

(௬௫)

(196.) ஒன்றுமுத லீரைந் தாயிரங் கோடி
எண்ணிறை யளவும் பிறவரிற் பத்தின்
ஈற்றுயிர் மெய்கெடுத் தின்னு மிற்றும்
ஏற்ப தேற்கு மொன்பது மினைத்தே.

எ - ன், எண்பெயரோடு எண்ணுநிறைப்பெயரும் புணருமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஒன்றுதி பத்தே ஆயிரமே கோடியே என்றிவ்வெண்களே நிறையே அளவே இவையல்லாப்பொருளேயென்றிவை வரின், பத்தென்பதின் ஈற்றுநின்ற உயிர்மெய்யைக்கெடுத்து இன்னுதல் இற்றுதல் ஆண்டைக்கு [1]ஏற்பதொன்றுவரும். ஒன்பதென்பதன்பின்பும் இவைவந்தால் இவ்விரண்டனுள் ஒன்றுகும். எ - று.

இரண்டும்ஒன்பதும் மேலேவருமாயின், அவற்றிற்கு இன்னெழியக்கொள்க.

வ - று. பதினொன்று, பதின்மூன்று, பதினான்கு, பதினெட்டு, பதினாயிரம், பதின்கோடி ; பதின்கழஞ்சு, பதின்றுலாம் ; பதினாழி, பதின்கலம் ; பதின்மர், பதின்மடங்கு என இன்பெற்றன. பதிற்றொன்று, பதிற்றிரண்டு, பதிற்றொன்பது, பதிற்றுப்பத்து, பதிற்றுக்கோடி ; பதிற்றுக்கழஞ்சு ; பதிற்றுழக்கு, பதிற்றுத்தூணி ; பதிற்றடுக்கு, எண்பதிற்றொன்று, எண்பதிற்றுக்கழஞ்சு, எண்பதிற்றுத்தூணி; எண்பதிற்றடுக்கு, எண்பதிற்றுமடங்கு என எண்ணுதி இற்

றுப்பெற்றன. ஒன்பதினுயிரம் ஒன்பதின்கோடி, ஒன்பதின்கழஞ்சு, ஒன்பதின்கலம், ஒன்பதின்மா; ஒன்பதிற்றொன்று ஒன்பதிற்றுக்கோடி, ஒன்பதிற்றுக்கழஞ்சு, ஒன்பதிற்றுத்தூணி, ஒன்பதிற்றடுக்கு என ஒன்பது இன்னும் இற்றும்பெற்றன.

'ஏற்பதேற்கும்' என்பதனுற் பத்தின்முன் இரண்டும் ஒன்பதும் பத்தும் வருவழி இன்னும், ஆயிரம்வருவழி இற்றும், ஒன்பதன்முன் ஒன்றுமுதற் பத்தெண்ணும்வருவழி இன்னும் வாராவெனக்கொள்க.

(பீ - ம்.) [1] அடுப்பதொன்று. (சுசு)

**(197.) இரண்டு முன்வரிற் பத்தினீற் றுயிர்மெய்**
**கரந்திட வொற்று னவ்வாகு மென்ப.**

எ - ன், எண்பெயரோடு எண்பெயர் புணருமாறுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இரண்டென்பதுவரிற் பத்தென்னுநிலைமொழியெண்ணீற்று உயிர்மெய்கெடத் தகரவொற்று னகரமாகத்திரியும். எ - று.

வ - று. பன்னிரண்டு எனவரும். (சுஎ)

**(198.) ஒன்ப தொழித்தவெண் ணொன்பது மிரட்டின்**
**முன்னதின் முன்னல வோட வுயிர்வரின்**
**வவ்வு மெய்வரின் வந்தது [1]மிகனெறி.**

இதுவுமது.

(இ - ள்.) ஒன்பதென்னும் எண் ஒன்றனையும்ஒழித்துநின்ற ஒன்றுதிபத்தீறுனஒன்பதெண்ணும் [2]தம்முன்தாம்வரின் முதல்நின்ற எண்ணின்முதலெழுத்துஒன்றும்நிற்க அல்லனவெல்லாம் கெட உயிர்முதலானஎண்ணிற்கு வவ்வும் மெய்முதலானவெண்ணிற்கு [3]வந்த அவ்வம்மெய்களும் [4]இடையேமிகுகை வரலாற்றுமுறைமை. எ - று.

வ - று. ஒவ்வொன்று, இவ்விரண்டு, மும்மூன்று, நந்நான்கு, ஐவ்வைந்து, அவ்வாறு, எவ்வேழு, எவ்வெட்டு, பப்பத்து என வரும்.

'நெறி' என்ற மிகையானே, [5]மூன்றும் நான்கும் ஆறும் ஏழும் என்பவற்றிற்குக் குறுக்கமும், பத்துப்பத்து பதிற்றுப்பத்

தென்னும் விகற்பமும், ஐவைந்து என்புழி வகரம் இரட்டாமையும், ஒரோவொன்றென்பதும், கழக்கழஞ்சு, கலக்கலம் என்றற்றொடக்கத்தனவும், ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது, பத்து என்பன, ஒன்று, கழஞ்சு, கலம், தலையெனும் எண்ணுதிநான்கொடும் இயையுங்கால் இயல்பாதலுங்கொள்க.

(பி - ம்.) 1 மிகைநெறி. 2 தன்முன்தான்வரின். 3 அவ்வந்தவையும். 4 உடனேமிகுகை. 5 மூன்றுநான்குஆறேழென்பவற்றிற்கு. (சஅ)

## (199.) பூப்பெயர் முன்னின [1]மென்மையுந் தோன்றும்.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) பூவென்பதன்முன் வல்லெழுத்துமிகலேயன்றி வருவதன்இனமான மெல்லெழுத்துவரவும்பெறும். எ - று.

வ - று. பூங்கொடி; [2]சோலை, தாமம், பந்து எனவரும். உம்மையாற் பூக்கொடிமுதலானவும் கொள்க.

(பி - ம்.) 1 மென்மையும்புணரும். 2 சாலை. (சகூ)

## (200.) இடைச்சொ லேயோ முன்வரி னியல்பே.

எ - ன், எய்தியதுவிலக்குதனுதலிற்று.

(இ - ள்.) இடைச் [1]சொல்லாய்வரும் ஆறு ஏகாரமும் எட்டு ஓகாரமுமான இவற்றின்முன்வரும் வல்லினம் இயல்பாம். எ - று.

வ - று. அவனேகொண்டானென்பது பிரிநிலை; நீயேகொண்டாயென்பது வினா; காலே கையே செவியே தலையே என்பது எண்; "கழியே, [2]சிறுகருநெய்தல் ............ [3]பாடோவாதே" என்பது ஈற்றசை; அவனேகொண்டானென்பது தேற்றம்; "ஏஎதனையென்றோரிருடிவினவ" என்பது இசைநிறை. கொளலோகொண்டானென்பது ஒழியிசை; அவனோ அல்லனோ சொன்னானென்பது வினா; ஓஒ பெரியனென்பது சிறப்பு; யானோ கொண்டேனென்பது எதிர்மறை; நன்றோ தீதோவன்றென்பது தெரிநிலை; அவனோபோனானென்பது கழிவு; "காணிய வம்மினோ கங்குலது நிலையே" என்பது அசைநிலை; அவனோகொண்டானென்பது பிரிநிலை; இயல்பாயினவாறு காண்க.

(பி - ம்.) 1 சொல்லெண. 2 (க) சிறுநெய்தல். (உ) கருநெய்தல். 3 பாடொவ்வாதே. (ருO)

**(201.) வேற்றுமை யாயி னைகா னிறுமொழி**
**ஈற்றழி வோடுமம் மேற்பவு முளவே.**

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமையிடத்து ஐகாரவீற்றுச்சொற்களுள், பொதுவிதியான்வரும் வல்லெழுத்துப்பேறேயன்றி ஐகாரங்கெட்டு அம்முப்பெற்றுமுடிவனவும் சிலஉளவாம். எ - று.

வ - று. ஆவிரங்கோடு, வழுதுணங்காய், [1]தூதுளங்காய், தில்லங்காய், பாவட்டங்காய், (ஆவிரை, வழுதுணை, தூதுளை, தில்லை, பாவட்டை)+(செதிள், தோல், பூ) எ - ம், ஓலம்போழ் எ - ம் வரும்.

'ஈற்றழி வோடுமம் மேற்பவு முளவே' [2]என்றதனான் ஈற்றழிவின்றியே அம்மேற்பவும் உளவெனக்கொள்க: அவை, அரையங்காய், [3]பனையங்கோல் எனவரும். 'ஏற்பவும்' என்றது, பொதுவிதி வல்லெழுத்துவிலக்காமற் கோடற்கெனக்கொள்க.

(பி - ம்.) [1]தூதுணங்காய். [2]என்பதனால். [3]மனையங்கோல். (௫௧)

**(202.) பனைமுன் கொடிவரின் மிகலும் வலிவரின்**
**ஐபோ யம்முந் திரள்வரி னுறழ்வும்**
**அட்டுறி னைகெட்டந் நீள்வுமாம் வேற்றுமை.**

எ - ன், எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தனுதலிற்று.

(இ - ள்.) பனையென்னும்பெயர்முன் கொடியென்பதுவரின் வந்ததுமிகலும், வல்லெழுத்துவரின் ஐகாரங்கெட்டு [1]அம்முப் பெறுதலும், திரளென்னுமொழிவரின் அம்முடன் உறழ்தலும், அட்டென்பதுவரின் ஐகாரங்கெட்டு [2]வருமொழிமுதல்நீளுதலுமாம், வேற்றுமைக்கண். எ - று.

வ - று. பனைக்கொடி எனவும், பனங்காய், [3]பனஞ்செறும்பு, பனந்தூண், பனம்பழம் எனவும், பனைத்திரள் பனந்திரளெனவும், பனாட்டு எனவும் முறையே காண்க.

இதற்குவரும் அகலம் உரைத்துக்கொள்க; "அகலமென்பதாசறக் கிளப்பின், விகல மின்றி விரித்துரைப் பதுவே".(காரி-உரை)

(பி - ம்.) [1]அம்முறுதலும். [2]வருமொழிக்கு. [3]பனஞ்சோறு, பனந்துண்டம். (௫௨)

மூன்றாவது உயிரீற்றுப்புணரியல் முற்றிற்று.

நான்காவது

# மெய்யீற்றுப்புணரியல்.

(203.) உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே.

இவ்வோத்து என்னுதலியதோவெனின், ஒத்துநுதலியதூஉம் ஒத்தினதுபெயருரைப்பவே விளங்கும். ஆயின், இவ்வோத்து என்னபெயர்த்தோவெனின், மெய்யீற்றுப்பதம்புணருமாறுஉணர்த்திற்றாகலான், மெய்யீற்றுப்புணரியலென்னும்பெயர்த்து. மேலோத்திறேடு இதற்கு இயைபு என்னையோவெனின், மேல் உயிரீற்றுப்பதம்புணருமாறு உணர்த்தினர்; இதனுள், மெய்யீற்றுப்பதம் புணருமாறுஉணர்த்தினமையின், இயைபுடைத்தென்க.

இவ்வோத்தினுள் இத்தலைச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், ஒற்றின்முன் உயிர்வந்துபுணருமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) நிலைமொழியீற்றினின்ற ஒற்றின்மேலே வருமொழிமுதல்நின்ற உயிர்வந்துஒன்றுவது இயல்புபுணர்ச்சியாம். எ - று.

உடல்மேல் உயிர்வந்து ஒன்றுதல் உலகத்துமுறைமை என்றுமாம்.

வ - று. (*உரிஞ், நாண், வெரிந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், புகழ், நாள்) + (அழகிது, ஆன்றது, இயன்றது, ஈண்டிற்று, உயர்ந்தது, ஊன்றிற்று, எழுந்தது, ஏறிற்று, ஐது, ஒழிந்தது, ஓங்கிற்று) என முறையே ஒட்டிக்கொள்க. ஔவொடுவரும் வழியும் ஆராய்ந்துகொள்க. (உரிஞ்.........நாள்)+(அழகு, ஆட்டம், இயைபு) என வேற்றுமைக்கண்ணும் கொள்க. (க)

(204.) தனிக்குறின் முன்னொற் றுயிர்வரி னிரட்டும்.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) ஒருகுற்றெழுத்தின்முன்னேநின்றஒற்று உயிர்வரின் இரட்டித்துநிற்கும். எ - று.

---

* உரிஞழகிது, ........ ... நாளோங்கிற்று என ஒட்டிக்கொள்க.

வ - று. மண்ணழகிது, கம்மழகிது, பொன்னழகிது, நெய்யழகிது, கல்லழகிது, தெவ்வழகிது, புள்ளழகிது எனவரும்; ஆன்றது, இயைந்ததென ஏனை உயிர்களோடும் ஒட்டிக்கொள்க; அமைவு, ஆக்கம், இன்மை, ஈகையென வேற்றுமைக்கண்ணும் ஒட்டுக. (௨)

(205.) தன்னொழி மெய்ம்முன் யவ்வரி னிகரம்
துன்னு மென்று துணிநரு முளரே.

எ - ன், யகரமொழிந்தபத்துமெய்கண்முன்னும் யகரம்வந்து புணருமாறு உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) தன்னையொழிந்தபத்துஒற்றின்முன்னும் யகரம்வரின் இடையே இகரம்வந்துபொருந்துமென்று தெளிந்துசொல்லுவாரும் சிலருளர். எ - று.

வ - று. உரிஞியானை, மண்ணியானை, வெரிநியானை, நம்மியானை, பொன்னியானை, காரியானை, கல்லியானை, தெவ்வியானை, தாழியானை, வெள்ளியானை எனவரும்.

உம்மையால் துணியாதார் பெரும்பாலரெனக்கொள்க; உரிஞ்யாது, மண்யாது எனவரும். (௩)

(206.) ஞணநம லவளன வொற்றிறு தொழிற்பெயர்
ஏவல் வினைநனி யவ்வன் மெய்வரின்
உவ்வுறு [1]மேவற் குறுசில சில்வழி.

எ - ன், தொழிற்பெயர்க்கும் ஏவல்வினைக்கும் ஆவதோர்விதி உணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) இவ்வெட்டொற்றும்ஈறாகவருந் தொழிற்பெயரும் ஏவல்வினைச்சொல்லும் யகரமொழிந்தமெய்கள்வரின் இடையே உகரம்பெறும்; ஏவலிடத்துச் சில சிலவிடங்களிற் பெறுதனவுமாம். எ - று.

பொதுப்படவைத்தமையால், தொழிற்பெயர்க்கண் இருவழியும் கொள்க.

வ - று. (*உரிஞ், மண், பொருந், செம், புல், தெவ், துள், துன்)+(கடிது, சிறிது, தீது, பெரிது, ஞான்றது, நீண்டது, மாண்

---

* உரிஞுக்கடிது.......... .உரிஞுவலிமையென இயைக்க.

டது, வலிது) எ - ம், (கடுமை, சிறுமை, தீமை, பெருமை, ஞாற்சி, நீட்சி, மாட்சி, வலிமை) எ - ம் இருவழியும் தொழிற்பெயர்க்கண் உகரம்வந்தது.

இவற்றை எடுத்துச்சரித்துப் பெயரைவருவித்து ஏவல்வினையாக்கி உகரம்பெறுமாறு காண்க.

அவை: உரிஞுகொற்று; சாத்தா, தேவா, பூதா, ஞெள்ளா, நாகா, மாடா, வளவா எனவரும். பிறவுமன்ன.

(*உண், தின், கொள்)+(கொற்று, சாத்தா, தேவா, பூதா) என இவை ஏவற்கண் உகரம்பெறுவாயின.

'நனி' என்றதனால், [2]மணலைவாரு, சருகைவாரு என ரகரம் ஏவற்கண் [3]உகரம் அரிதிற்பெறுமென்க.

இன்னும் இதனானே இவ்விருமொழிக்கும் வருவனவெல்லாம் அறிந்துமுடிக்க.

(பி - ம்.) 1 ஏவலுடு. 2 வாரு, சாரு, தேரு என. 3 உகரம்பெறும். (௪)

## (207.) நவ்விறு தொழிற்பெயர்க் கவ்வுமாம் வேற்றுமை.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) நகாரவீற்றுத் தொழிற்பெயர்க்கு உகரமேயன்றி வேற்றுமைக்கண் அகரமும் மிகப்பெறும். எ - று.

வ - று. பொருநக்கடுமை; சிறுமை, தீமை, பெருமை என வரும். (ரு)

## (208.) ணனவல் லினம்[1]வரட் டறவும் பிறவரின்
இயல்பு மாகும் வேற்றுமைக் கல்வழிக்
கனைத்துமெய் வரினு மியல்பா கும்மே.

எ - ன், ணகாரனகாரவீறுபுணருமாறுணர்த்துதனுதனுற்று

(இ - ள்.) ணகாரனகாரங்கள் வேற்றுமைக்கண் வல்லினம் வந்தால் முறையே டகாரமும் றகாரமுமாகும்; மெல்லினமும் இடையினமும்வந்தால் இயல்பாம்; அல்வழிக்கண் மூவினமும்வந்தாலும் [2]இயல்பேயாம். எ - று.

* உண்கொற்று ........கொள்பூதாவென இயைக்க.

வ - று. மட்குடம், பொற்குடம்; சாடி, தாழி, பானை என வேற்றுமைக்கண் வல்லினம்வரத் திரிந்தன. மண்ஞாற்சி, பொன் ஞாற்சி; நீட்சி, மாட்சி, யாப்பு, வலிமை என வேற்றுமைக்கண் மெல்லினமும் இடையினமும்வர இயல்பாயின. (மண், பொன்)+ (கடிது, சிறிது, தீது, பெரிது, ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது) என அல்வழிக்கண் மூவினமும்வர இயல்பாயின. பிறவுமன்ன.

(பி - ம்.) [1] வர டறவும். [2] இயல்பாம். (சு)

(209.) குறிலணை வில்லா ணனக்கள் வந்த
நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே.

எ - ன், எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) தனியானகுறிலொன்றனையுமொழிந்த ஒருமொழி தொடர்மொழிகளைச்சார்ந்த ணகாரனகாரங்கள் [1]வந்த நகரம்திரிந்த பின் கெடுவனவாம். எ - று.

வ - று. (*பாண், பரண், பசுமண், [2]மணிப்பூண், பைங் கண்)+(நன்று) எ - ம், (நன்மை) எ - ம், (வான், வலன், வயான், வலியான், வாலன், [3]பல்லன், அருமணவன்) + (நன்று) எ - ம், (நன்மை) எ - ம் இருவழியும் கெட்டன.

(பி - ம்.) [1] வருமொழிமுதலாகிய நகரம்திரிந்தபின். [2] பன்மணிப் பூண். [3] வல்லன். (எ)

(210.) சாதி குழூஉப்பரண் கவண்பெய ரிறுதி
இயல்பாம் வேற்றுமைக் குணவெண் சாண்பிற
டவ்வா கலுமா மல்வழி யும்மே.

எ - ன், ணகாரவீற்றிற்கு இருவழியும் எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தல்நுதலிற்று.

(இ - ள்.) சாதிபற்றியும் [1]திரள்பற்றியும்வரும் பெயர்களும், பரண், கவணென்னும்பெயர்களு[2]மான இவற்றின்ஈற்றுக்கண் ணகா ரம் வல்லினம்[3]வந்தால் வேற்றுமைக்கண்ணும் இயல்பாம். எண் ணென்னும் உணவுப்பெயரும் சாணென்னும் நீட்டலளவுப்பெயரும் வல்லெழுத்துவரின் [4]திரிந்து டகாரமாகவும்பெறும், அல்வழிக்கண் ணும். எ - று.

* பாணன்று, ............... அருமணவனன்மையென இயைக்க.

வ - று. பாண்குடி, உமண்குடி; சேரி, தோட்டம், பாடி எனச் சாதிப்பெயரும், அமண்குடி; சேரி, தோட்டம், பாடி எனக் குழூஉப்பெயரும், பரண்கால், கவண்கால் எனவரும்தனிப்பெயரும் வேற்றுமைக்கண் இயல்பாயின. எட்கடிது; சிறிது, தீது, பெரிது எனவும், 5சாட்கோலெனவும் அல்வழிக்கண் திரிந்தன.

உம்மையால் திரியாமையே வலியுடைத்தென்க.

'பிற' என்றமிகையானே, கண்கடுமை, அட்டூண்டுழனி என்பனவும், ணகாரவீற்றுப் 6பிறவருவனஉளவேல் அவையும்அறிந்து முடிக்க.

(பி - ம்.) 1 குழூஉப்பற்றியும். 2 ஆனஈற்றுக்கண். 3 வந்தாலும்வேற்றுமைக்கண். 4 ணகாரம்டகாரமாகவும். 5 (க) எட்குப்பை; சுருணை, திரள், பொரி எனவும் இவை இருவழியும்திரிந்தன; 'அல்வழியும்' என்பதனுல் வேற்றுமைக்கண்ணும் பெற்றன. (உ) சாட்கோலெனவும் காண்க. 6 பிறவும் வருவனவேற்றுமையறிந்து. (அ)

## (211.) னஃகான் கிளைப்பெய ரியல்பு மஃகான் அடைவு மாகும் வேற்றுமைப் பொருட்கே.

எ - ன், னகாரவீற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கலும் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

(இ - ள்.) னகாரவீற்றுச்சாதிப்பெயர்கள் மூவினமும்வந்தால் இயல்பாவனவும் இறுதி அகரம்பெறுவனவுமாம், வேற்றுமைக்கண். எ - று.

வ - று. எயின்குடி; சேரி, தோட்டம், பாடி, ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வலிமை என இயல்பாயிற்று. எயினக்கன்னி; சிறுவன், தலைவன், பிள்ளை, மரபு, வரை என அகரம்பெற்றது.

சாதியும் குழூஉவும் அஃறிணையாகலின் வேறு எடுத்தோதினுரென்க. (கூ)

## (212.) மீன்றவ் வொடுபொரூஉம் வேற்றுமை வழியே.

இதுவுமது.

(இ - ள்.) மீனென்னுமொழியீறு வேற்றுமைக்கண் வல்லெழுத்துவரின் றகாரத்தோடு உறழ்ந்துவரும். எ - று.

வ - று. மீன்கண், மீற்கண்; செவி, தலை, புறம் எனவரும்.()

(213.) தேன்மொழி மெய்வரி னியல்பு மென்மை
மேவி னிறுதி யழிவும் வலிவரின்
ஈறுபோய் வலிமெலி மிகலுமா மிருவழி.

இதுவுமது.

(இ - ள்.) தேன்மொழிமுன் மூவினமெய்களும்வர இயல்பாதலும் மெல்லினம்வரின் ஈற்றுமெய்கெடுதலும் வல்லினம்வரின் ஈற்றெழுத்துக்[1]கெட வல்லெழுத்துமிகுதலும் மெல்லெழுத்துமிகுதலுமாகும், இருவழியும். எ - று.

வ - று. தேன்கடிது; சிறிது, தீது, பெரிது, ஞான்றது, மாண்டது, யாது, வலிது எ - ம், கடுமை, சிறுமை, தீமை, பெருமை, ஞாற்சி, மாட்சி யாப்பு வலிமை எ - ம் இருவழியும் மூவினமெய்யும்வர இயல்பாயிற்று. தேஞான்றது, தேநீண்டது, தேமாண்டது எ - ம், தேஞெரி, தேநெரி, தேமுரி எ - ம் மென்மைவர இருவழியும் ஈறுகெட்டது. தேக்குடம்; சாடி, தாழி, பானை எ - ம், தேக்கடிது; சிறிது, தீது, பெரிது எ - ம், தேங்குடம்; சாடி, தாழி, பானை எ - ம், தேங்கடிது; சிறிது, தீது, பெரிது எ - ம் இருவழியும் வன்மைஈறுகெட்டு வன்மைமென்மை மிக்கன. இதனை ஞாபகமாகச் [2] சூத்திரித்தவதனானே, தேன்குடம், தேற்குடம் என உறழ்வாமென்பாரும் உள[3]ரெனக்கொள்க.

(பி - ம்.) [1] கெட்டு. [2] சூத்திரத்தோதியவதனானே. 3 என்க. (௧௧)

(214.) மரமல் லெகின்மொழி யியல்பு மகர
மருவ வலிமெலி மிகலு மாகும்.

இதுவுமது.

(இ - ள்.) மரமல்லாத எகினென்பது, இருவழியும் இயல்பாதலும் அகரம்பொருந்த வல்லெழுத்துமெல்லெழுத்து [1]மிகுதலும் ஆகும். எ - று.

வ - று. எகின்கடிது; சிறிது, தீது, பெரிது எ - ம், எகின்கால்; சிறகு, தலை, புறம் எ - ம் இருவழியும் இயல்பாயிற்று. எகினக்கடிது, எகினங்கடிது; சிறிது, தீது, பெரிது எ - ம், எகினக்கால், எகினங்கால்; சிறகு, தலை, புறம் எ - ம் இருவழியும் அகரம்பெற்று வல்லெழுத்துமெல்லெழுத்து மிக்கன.

வருமொழிவரையாமையின், எகினவழகு, எகினமாட்சி, எகினவலிமை என ஏனை முக்கணமும்வர அகரம்பெறுமெனவுங்கொள்க.

எகின் - அன்னம்.

(பி - ம்.) [1] மிகலுமாகும். (கஉ)

215.) குயினூன் வேற்றுமைக் கண்ணு மியல்பே.

எ - ன், குயின் ஊனென்பவற்றிற்கு எய்தியது ஒருமருங்கு மறுத்தல்நுதலிற்று.

(இ - ள்.) குயினென்பதுவும் ஊனென்பதுவும் வேற்றுமைக் கண்ணும் இயல்பாம். எ - று.

வ - று. குயின்குழாம்; செறிவு, திரள், பெருமை, ஞாற்சி, மாட்சி, யாப்பு, வலிமை எ - ம், ஊன்கடுமை; சிறுமை, தீமை, பெருமை, ஞாற்சி, மாட்சி, யாப்பு, வலிமை எ - ம் வரும்.

உம்மையால், அல்வழிக்கண்ணும் இயல்பாமென்றவாறு.

வ - று. குயின்கடிது, ஊன்கடிது; சிறிது, தீது, பெரிது, ஞான்றது, மாண்டது, யாது, வலிது எனவரும்.

குயின் - கொண்மூ. (கங)

(216.) மின்பின் பன்கன் றொழிற்பெய ரனைய
கன்னவ் வேற்று மென்மையோ டுறழும்.

எ - ன், மின்முதலியவற்றிற்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வருத்தல்நுதலிற்று.

(இ - ள்.) இந்நான்குசொல்லும் தொழிற்பெயரேபோல இருவழியும் உகரம்பெற்று வல்லெழுத்துமிகவும் பெறும்; இயல்புகணம் வரின் இயல்புமாம். இவற்றுள் கன்னென்பது அகரச்சாரியைபெற்று வல்லெழுத்துமெல்லெழுத்து மிக்குமுடியும். எ - று.

வ - று. (*மின், பின், பன், கன்)+(கடிது, சிறிது, தீது, பெரிது, ஞான்றது, நீண்டது, மாண்டது, வலிது) எ - ம், (கடுமை, சிறுமை, தீமை, பெருமை, ஞாற்சி, நீட்சி, மாட்சி, வலிமை) எ - ம் இருவழியும் உகரத்தோடு வன்மை [1] மிக்கன; ஏனைய இயல்பாயின. கன்னக்கடிது, கன்னங்கடிது; கன்னக்கடுமை, கன்னங்கடுமை எனக் கன் அகரம்பெற்று வன்மைமென்மை உறழ்ந்துவந்தது.

(பி - ம்.) [1] மிக்கும் இயல்புகணத்தோடு இயல்புமாயின. (க௪)

---

* மின்னுக்கடிது............கன்னுவலிமையெனக்கூட்டுக.

(217.) தன்னென் னென்பவற் [1]றீற்றுனவ் வன்மையோ
டுறழு நின்னீ றியல்பா முறவே.

எ - ன், தன்முதலியவற்றிற்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தல்நுதலிற்று.

(இ - ள்.) தான் யானென்பன உருபுபுணர்ச்சிக்கண் தன் என் எனநிற்கும். அவை அதன்பொருட்புணர்ச்சிக்கண் [2]அவற்[3]றிறுதி னகாரம் றகாரத்துடன் உறழ்ந்துமுடியும். ஆண்டு நீயென்பது நின்னென [4]நிற்கும். அதுவும் அதன்பொருட்புணர்ச்சிக்கண் இயல்பாம். எ - று.

வ - று. [5]தன்கை தற்கை, என்கை எற்கை; செவி, தலை, புறம் எ - ம், நின்கை; செவி, தலை, புறம் எ - ம் வரும்.

'உறவே' என்றமிகையானே னகாரவீற்றுப்பெயர்கள் வேற்றுமைக்கண் இயல்பாவனவும் வினையெச்சத்தில் திரிவனவும் உளவெனக் கொள்க.

[6]வ - று. (அலவன், கலுழன், வலியான், [7]வயான், மான்) + (கண், செவி, தலை, புறம்) கான்கரை, கான்கோழியென வேற்றுமைக்கண் இயல்பாயின. வரிற்கொள்ளும்; செல்லும், தரும், போம் என [8]வினையெச்சத்தில் திரிந்தது.

பிறவும் னகாரவீற்றுள் [9]முடியாதனவெல்லாம் இதனுன் முடித்துக்கொள்க.

(பி - ம்.) 1 ஈற்றினவன்மையொடு. 2 அவ்வீற்றுனகரம். 3 இறுதி றகாரத்துடன் உறழ்ந்துமுடியும். 4 நிற்கும் அதன்பொருட். 5 தன்பகை. 6 அவை. 7 வயான், மயான், மான். 8 வினையெச்சந்திரிந்தது. 9 முடிந்தன முடியாதனவெல்லாம்.                    (கரு)

(218.) மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் [1]கினமாத் திரிபவு மாகும்.

எ - ன், மகரவீறுபுணருமாறுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) மகரவீற்றுப்பதம் மொழிமுதலனைத்தும்வர இறுதியொற்று அழிந்து உயிரீறுபோல உயிர்வந்தால் உடம்படுமெய்பெற்றும், வன்மைவந்தால் அவைமிக்கும், மென்மை இடைமை [2]வந்தால்

அவை இயல்பாயுமுடிவனவும், வன்மைவந்தால் ஈறுகெடாது, அவற்றிற்கு இனமான மென்மைகளாகத்திரிவனவும் உள, இருவழியும். எ - று.

பொதுப்படவைத்தமையான் நாற்கணமுங்கொள்க.

வ - று. வட்டவடி; ஆடி, இலை எ - ம், வட்டக்கல்; சுனை, தாழி, பாறை எ - ம், வட்டஞான்றது; நீண்டது, மாண்டது எ - ம், வட்டவாரி எ - ம் இவை ஈறழிந்து விதியுயிரீறாய் உயிர்வரும்வழி உடம்படுமெய்பெற்றும் வன்மைவரும்வழிமிக்கும் ஏனைய வரும்வழி இயல்பாயும் அல்வழிக்கண்வந்தவாறு. மரங்குறிது; சிறிது, தீது எ - ம், கொல்லுங்கொற்றன், உண்ணுஞ்சாத்தன், துள்ளுந்[3]துடியன் எ - ம் அல்வழிக்கண் வன்மைவர இனமாய்த்திரிந்தது. மரவடி, மரவாட்டம், மரவிலை எ - ம், மரக்கோடு; செதிள், தோல், பூ எ - ம், மரஞாண், மரநூல், எ - ம், மரயாழ், மரவட்டு எ - ம் இவை [4]மகரங்கெட்டு விதிஅகரவீறாய் வேற்றுமைக்கண் உடம்படுமெய் பெற்றும் [5]மிக்கும் இயல்புமாயின. தங்கை, எங்கை, உங்கை; செவி, தலை எ - ம், மரவங்கோடு, இலவங்கோடு, புளியங்கோடு, கோங்கங்கோடு; செதிள், தோல் எ - ம் வேற்றுமைக்கண் வல்லினம்வர இனமாய்த்திரிந்தது.

'திரிபவும்' என்ற உம்மையாற் பகரம்வரும்வழித்திரியாதெனக்கொள்க.

(பி - ம்.) [1] இனமாய்த்திரிபவும். [2] வந்தால் இயல்பாயும். [3] தொடியன். [4] மகரங்கெடுத்து. [5] வன்மைவரமிக்கு ஏனையவரஇயல்பாயின. (கரு)

## (219.) வேற்றுமை மப்போய் வலிமெலி யுறழ்வும் அல்வழி யுயிரிடை வரினியல் பும்முள.

எ - ன், எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தல்நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமைக்கண் ஈறுகெட்டு வல்லெழுத்தும் மெல்லெழுத்தும் உறழ்வனவும், அல்வழிக்கண் உயிரும் இடையினமும் வரக் கொடாதே [1]நிற்பனவுமாம் மகரவீற்றுமொழிகள் சில உளவாம். எ - று.

வ - று. குளக்கரை குளங்கரை என வேற்றுமைக்கண் உறழ்ந்தது. மரமழகிது, வடமற்றது, வடமேறிற்று எ - ம், மரம்வலிது,

மரம் யாது, வெல்லும்வில்லி, ஓடும்யானை, அருளும்யோகி எனவும் அல்வழியில் இயல்பாயிற்று.

(பி - ம்.) ¹ நிற்கும் மகர. (க௭)

(220.) நுந்தம், எம்நம் மீறு மவ்வரு ஞநவே.

இதுவுமது.

(இ - ள்.) இந்நான்குமொழிகளின் ஈற்றுமகரம் மேல்வரும் ஞ நக்களாகத் திரியும். எ - று.

வ - று. (நும், தம், எம், நம்) + (ஞாண், நூல்) எனவரும். (க௮)

(221.) அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) அகமென்னுஞ்சொல்முன்னர்ச் செவி கை என்பன வரின் நிலைமொழியின்இடையில்நின்ற உயிரும் மெய்யும் கெடும். எ - று.

வ - று. "அஞ்செவி நிறைய மந்திர மோதி", (இ - வி. உரை) எனவும் *"அங்கையு ணெல்லி யதன்பயன்" எனவும் வரும்.

'செவிகை' என்ற ¹முறையல்கூற்றினன் இயல்பும் கொள்க.

(பி - ம்.) ¹ (க) முறையின்றிக்கூறியவதனன். (உ) சினையல கூறிற்றுமதனல். (க௯)

(222.) ஈமுங், கம்மு முருமுந் தொழிற்பெயர் மானும் முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே.

எ - ன், எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தல்நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்றுசொல்லும் இருவழியும் தொழிற்பெயரேபோல உகரம்பெற்று வன்மைவரமிக்கும் மென்மையும்வகாமும் வர இயல்பாயும் முடியும். இதுவேயன்றி ஈமும் கம்மும் வேற்றுமைக்கண் அகரச்சாரியையும்பெற்றுவரும். எ - று.

வ - று. (†ஈம், கம், உரும்) + (கடிது, சிறிது, தீது, பெரிது, ஞான்றது, நீண்டது, மாண்டது, வலிது) எ - ம், (கடுமை, சிறுமை, தீமை, பெருமை, ஞாற்சி, நீட்சி, மாட்சி, வலிமை) எ - ம் இருவழி

* பு - வெ. கரந்தை. கந.

† ஈமுக்கடிது............உருமுவலிமையெனக்கூட்டுக.

யும் தொழிற்[1]பெயரேபோல உகரம்பெற்று வன்மைவரமிக்கு மென்மையும் வகரமும்வர இயல்பாயினவாறு. ஈமக்குடம், கம்மக்குடம்; சாடி, தாழி, பாணை, ஞாற்சி, நீட்சி, மாட்சி, வலிமை என வேற்றுமைக்கு ஈமும் கம்மும் அகரம்பெற்றவாறு.

(பி - ம்.) 1 பெயர்போன்றவாறு. (உ0)

(223.) யரழ முன்னர்க் கசதப வல்வழி
இயல்பு மிகலு மாகும் வேற்றுமை
மிகலு மினத்தோ டுறழ்தலும் விதிமேல்.

எ - ன், யரழவீறு வல்லினத்தோடு புணருமாறுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்றீற்று மொழிமுன்னும் கசதபவென்னும் நான்கும்வந்தால் அல்வழிக்கண் இயல்பாவனவும் மிகுவனவும் ஆம். வேற்றுமைக்கண் மிகுவனவும் தம்மினமான மெல்லெழுத்துக்களுடன் உறழ்வனவும்ஆம். எ - று.

வ - று. (நாய், தேர், பூழ்) + (கடிது, சிறிது, தீது, பெரிது) என இயல்பாயின. [1]மெய்க்கீர்த்தி, பொய்ச்சொல், மெய்த்தெய்வம், நோய்ப்பகை, வேய்த்தோள், போய்க்கொண்டான், தாய்ச்சென்றான் எ - ம், கார்ப்பருவம், நீர்ப்பொருள் எ - ம், பாழ்க்கொல்லை; சாலை, தலை, பயிர், எ - ம் அல்வழிக்கண் மிக்கன. (நாய், தேர், பூழ்) + ( [2]கால், செவி, தலை, புறம்) என வேற்றுமைக்கண் மிக்கன. வேய்க்குறை வேய்ங்குறை, வேர்க்குறை வேர்ங்குறை, வீழ்க்குறை வீழ்ங்குறை, (வேய், வேர், வீழ்) + (சிறை, தலை, புறம்) எ - ம், ஆர், வெதிர், பீர், துவர், குதிர், அவிர், சார் என்பன ஆர்க்கோடு ஆர்ங்கோடு...........சார்க்கோடு சார்ங்கோடு [3]எ - ம் வேற்றுமைக்கண் உறழ்ந்தன.

'மேல்' என்றதனால், வேற்றுமைக்கண், *"வாய்புகுவதனினுங் கால்பெரிது கெடுக்கும்" †"தூங்குதோற்றுதிய [4]வள்ளுகிர்கதுவலின்" என்றற்றொடக்கத்து இயல்பும், பாழானகிணறு பாழ்க்கிணறு பாழ்ங்கிணறு என்றற்றொடக்கத்து அல்வழியுறழ்வும் பிறவும் கொள்க.

(பி - ம்.) 1 மெய்க்கதி, மெய்ச்சொல். 2 கடி, செய்கை. 3 என முறையே உறழ்ந்தன. 4 (க) வள்ளுகிர் தூவின, (உ) வள்ளுகிர்தாவின. (உக)

* புறநா. கஅச. † அகநா. அ.

(224.) **தமிழவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே**
**தாழுங் கோல்வந் துறுமே லற்றே.**

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) தமிழென்னுமொழி வேற்றுமைக்கண் அகரம் [1] பெறும். தாழென்னுமொழியும் கோலென்பதுவரின் அகரம் [2] பெறும். எ - று.

வ - று. தமிழப்பல்லவதரையர், தமிழக்கூத்து; சேரி, தோட்டம், பிள்ளை எ - ம், தாழக்கோல் எ - ம் வரும்.

உம்மையால், தமிழ்க்கூத்து, தாழ்க்கோலெனவும் வருமென்க.

(பி - ம்.) [1] பெறவும். [2] பெறவும்உரிய. (உஉ)

(225.) **கீழின்முன் வன்மை விகற்பமு மாகும்.**

எ - ன், எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தல்நுதலிற்று.

(இ - ள்.) கீழென்னுமொழியின்முன் வன்மை ஒருகால்மிக்கும் ஒருகால்மிகாதும் வரும். எ - று.

வ - று. கீழ்க்குளம், கீழ்குளம்; சேரி, துறை, பாடி எனவரும்.

அல்வழியினும் ஏற்புழிக் கொள்க. (உங)

(226.) **லளவேற் றுமையிற் றடவு மல்வழி**
**அவற்றோ டுறழ்வும் வலிவரி னாமெலி**
**மேவி னணவு மிடைவரி னியல்பும்**
**ஆகு மிருவழி யானு மென்ப.**

எ - ன், லளவீறுபுணருமாறுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) லகாரளகாரமான [1]இரண்டீறும் வல்லினம்வரின் வேற்றுமைக்கண் முறையே றகார டகாரங்களாம்; அல்வழியில் றகாரடகாரங்களுடனே உறழ்வனவாம்; இருவழியும் மெல்லினம் வரின் னகாரணகாரங்களாம்; இடையினம்வரின் இயல்புகளாமென்றுசொல்லுவர்புலவர். எ - று.

வ - று. (*கல், நூல், விரல், வரால், ஆரல்) + (குறை, சிறை, தலை, புறம்) எ - ம் (முள், வாள், புரள்) + (குறை, சிறை, தலை, புறம்)

---

* கற்குறை.........புரட்புறமென இயைக்க.

எ - ம் வேற்றுமைக்கண் திரிந்தன. கல்குறிது கற்குறிது, நூல் குறிது நூற்குறிது, விரல்குறிது விரற்குறிது; சிறிது, பெரிது எ - ம், முள்குறிது முட்குறிது, வாள்குறிது வாட்குறிது, புரள் குறிது புரட்குறிது; சிறிது, பெரிது எ - ம் அல்வழிக்கண் [2]உறழ்ந்தன. (கல், நூல், விரல், வரால், ஆரல்) + (ஞெரிந்தது, மாண்டது) எ - ம், (ஞெரி, முரி) எ - ம், (முள், வாள், புரள்) + (ஞெரிந்தது, மாண்டது) எ - ம், (ஞெரி, முரி) எ - ம் [3]இருவழியும் லகாரளகாரங்கள் [4]னகாரணகாரங்களாயின. (கல், விரல், நூல், வரால், ஆரல்) + (யாது, வலிது) எ - ம், (யாப்பு, வலிமை) எ - ம், (முள், வாள், புரள்) + (யாது, வலிது) எ - ம், (யாப்பு, வலிமை) எ - ம் இருவழியும்இயல்பாயின.

(பி - ம்.) [1] இரண்டீற்றினும். [2] (க) உறழ்வுமாம் (உ) உறழ்வாம். [3] னகாரணகாரங்களாயின. [4] திரிந்தன. (உச)

(227.) குறில்வழி லளத்தவ் வணையி னாய்தம்
ஆகவும் பெறூஉ மல்வழி யானே.

எ - ன், எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) தனிக்குறில்முன்னின்ற லகாரளகாரங்கள் தகரம் வரின் ஆய்தமாகவும்பெறும், அல்வழிக்கண், எ - று.

வ - று. கஃறீது, முஃடீது எனவரும்.

"திரிந்ததன் றிரிபு மதுவா மொரோவழி" என்பவாகலின், ஆய்தமானாலும் லகார [1]ளகாரமுன்னென்றே வருமொழித் தகாரந் திரிக்க. உம்மையான் ஆய்தமாகாது [2]முன்னர்த்திரிபாதலே வலியுடைத்தெனக்கொள்க.

(பி - ம்.) [1] ளகாரத்தின்முன்வருமொழித். [2] முன்னகுறழ்ச்சியே. (உரு)

(228.) குறில்செறி யாலள வல்வழி வந்த
தகரந் திரிந்தபிற் கேடுமீ ரிடத்தும்
வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரின்
இயல்புந் திரிபு மாவன வுளபிற.

எ - ன், எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தல்நுதலிற்று.

(இ - ள்.) தனிக்குறிலொன்றனையும் ஒழித்து ஒருமொழி தொடர்மொழிகளைச் சார்ந்த லகாரளகாரங்கள், அல்வழிக்கண் வருமொழிமுதற்கணின்ற தகாரம்திரிந்தபின் கெடுவனவும், [1]அல்வழி வேற்றுமைகளில் வருமொழி நகாரம்திரிந்தபின் கெடுவனவும், வல்லினம்வந்தால் அல்வழிக்கண் உறழாது இயல்பாயும் திரிபாயும் வருவனவும் வேற்றுமைக்கண் திரியாதுவருவனவும் உளவாம். எ - று.

வ - று. (வேல், விரல், வரால், ஆரல், கருங்கோல், [2]என்கொல்,)+(தீது) எ - ம், (தோள், சுருள், நெஞ்சுள்)+(தீது) எ - ம் அல்வழிக்கண் கெட்டன. (சூல், சூழல், கேழல், [3]செங்கல், பைம்புல்)+(நன்று, நன்மை) எ - ம், (நாள், இருள், [4]உருள்)+(நன்று, நன்மை) எ - ம் இருவழியும் கெட்டன. (மரல், பரல், கால், மயல், எழால்)+(கடிது, சிறிது, பெரிது) எ - ம், உருள் கடிது; சிறிது, பெரிது எ - ம் அல்வழியில் உறழாது இயல்பாயின. புழுங்கற்கறி; சோறு துவரை பயறு; அழுங்கற்காய்; [5]சோறு தோரை பாக்கு எ - ம், [6]சழுங்கற்கூரை, ஆரற்சுவர், *"புழற்காலாம்பல்", புலிவிற் [7]கெண்டை எ - ம் அல்வழியில் திரிந்தே நின்றன. "ஏனல்காவ லிவளுமல்லள்" (தொ. பொரு. சூ. ககச - உரை.) †"[8]ஏனல்காவ லிவ ளாயினளெனவே" ‡"அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட", §"நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென, வாள்போழ்ந் தடக்கலுமுய்ந்தனர் மாதோ" எனவும்வேற்றுமைக்கண் இயல்பாயின.

'பிற' என்றமிகையானே நூற்கடல், நூல்சில, நூல்பல என ஒன்றே அல்வழிக்கண் உறழாது ஓரிடத்துத் திரிந்தும் ஓரிடத்துத் திரியாதும்வந்தது. கொல்களிறு, செல்சாத்து, கொள்பொருள் என வினைத்தொகை உறழாது இயல்பாயின. "வெஞ்சொற் [9]றீதென்றே விடு", "பெயர்ச்சொற் றெருகுமாறு பேசு" என இவை கெடாது திரிந்து வந்தன. பிறவும் இவ்விரண்டீற்றினும் இருவழியும் முடியாதன உளவேல் அவையும் இதனான் முடிக்க.

(பி - ம்.) 1 இருவழியும். 2 எண்கோல். 3 செங்கோல். 4 சுருள். 5 சாறு. 6 சழுங்கற்கூறை. 7 கெண்டைநாண் எ - ம், 8 (க) "ஏனல்காவலாயினளிவளே. (உ) ஏனல்காவலாயினளெனவே" எ - ம். 9 (க) தீதன்றேவிடும்; (உ) தீதன்றேவிடு. (உசு)

(229.) லளவிறு தொழிற்பெய ரீரிடத்து முவ்வுரு
வலிவரி னல்வழி யியல்புமா வனவுள.

* புறநா. உசுசு † நற். கoஉ. ‡ புறநா. உசசு. § புறநா. கஈ.

இதுவுமது.

(இ - ள்.) [1]லகார ளகாரவீற்றுத் தொழிற்பெயர்களுள்ளும் சில இருவழியும் மேல்விதித்த உகரம் ஏலா; வல்லினம்வந்தால் அல்வழிக்கண் மேற்சொன்ன உறழ்வு உறழாது இயல்பாவனவுமுள. எ - று.

எனவே அல்வழிக்கண் ஏனைமெய்கள் வந்தாலும் வேற்றுமைக்கண் அனைத்துமெய்களும்வந்தாலும் இவற்றிற்கு மேற்சொன்ன பொதுவிதிகளே ஆமென்பதுவும் கொள்க.

வ - று. (முன்னல், பின்னல், உள்ளல், துள்ளல், [2]அலவல், ஆடல், பாடல், ஓதல், ஈதல்) + (கடிது, சிறிது, பெரிது) என லவ்வீறு, அல்வழிக்கண் உகரம்பெறாது இயல்பாயிற்று; முன்னற்கடுமை என வேற்றுமைக்கண் உகரம்பெறாதுதிரிந்தது. கோள்கடிது; சிறிது, பெரிது எ - ம், கோட்கடுமை; சிறுமை, பெருமை எ - ம் ளகார வீறு, இருவழியும் உகரம்பெறாது அல்வழிக்கண் இயல்பாயும் வேற்றுமைக்கண்திரிந்தும் வந்தது. பிறவுமன்ன.

இவற்றை முன்னர்த்தொழிற்பெயரைச்சாரவையாது ஈண்டுப் போதந்துவைத்தது இவற்றின் வாய்பாட்டு வேற்றுமைதோன்றற்கெனக்கொள்க.

(பி - ம்.) [1] இவ்விரண்டீற்று. [2] அல்லல். (உஎ)

**(230) வல்லே தொழிற்பெய ரற்றிரு வழியும்**
**பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம்.**

இதுவுமது.

(இ - ள்.) வல்லென்னும்பெயர் தொழிற்பெயரேபோல இருவழியும் உகரம்பெறும். பலகையும் நாயும் வருமொழியாயின் வேற்றுமைக்கண் உகரமேயன்றி அகரமும்பெறும். எ - று.

வ - று. வல்லுக்கடிது; ஞான்றது, வலிது எ - ம், வல்லுக்கடுமை; ஞாற்சி, [1]வலிமை எ - ம், இருவழியும் மூவினமும்வர உகரம் பெற்றது. வல்லப்பலகை, வல்லநாய் என வேற்றுமைக்கண் அகரம் பெற்றது.

'வரினும்' என்றஉம்மையான், வல்லக்கடுமை [2]யெனவுங்கொள்க. 'அவ்வும்' என்றஉம்மையான், உகரப்பேறே வலியுடைத்தென்க.

(பி - ம்.) [1] நீட்சி, மாட்சி, வலுமை. [2] எனவும், வன்றோல், வன்மரமென உரிச்சொல் ஈறுதிரிவனவும் கொள்க. (உஅ)

(231.) நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்
அல்வழி யானும் றகர மாகும்.

இதுவுமது.

(இ - ள்.) இந்நான்குசொல்லும் அல்வழிக்கண்ணும் றகரமாகும். எ - று.

வ - று. நெற்கடிது, செற்கடிது, கொற்கடிது, சொற்கடிது; சிறிது, தீது, பெரிது எனவரும். (உகூ)

(232.) இல்லெ னின்மைச் சொற்கை யடைய
வன்மை விகற்பமு மாகா ரத்தொடு
வன்மை யாகலு மியல்பு மாகும்.

எ - ன், எய்தாததெய்துவித்தல்நுதலிற்று.

(இ - ள்.) [1]இல்லென்னும் இன்மைச்சொல்லிற்கு ஐகாரம் இறுதிவர வல்லொற்று ஒருகால்மிக்கும் ஒருகால்மிகாதும்வருதலும், ஆகாரம் இறுதிவர வல்லொற்றுமிகுதலும் இயல்பேயாதலுமென்னும் [2]இம்மூன்றுமாம். எ - று.

வ - று. இல்லைப்பொருள், இல்லைபொருள்; இல்லாப்பொருள்; இல்பொருள் எனவரும்.

(பி - ம்.) 1 இல்லென்னுஞ்சொல்லினன் ஒருபொருளின்மையென்னுஞ்சொற்கு அவ்விறுதி ஐகாரம்வர. 2 இந்நான்குமாம். (ஙo)

(233.) புள்ளும் வள்ளுந் தொழிற்[1]பெயரு மானும்.

எ - ன், எய்தியதன்மேற்சிறப்புவிதியுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இவ்விருசொற்களும் இருவழியும் மூவினமும்வரத் தொழிற்சொல்லேபோல் உகரம்பெறும். எ - று.

வ - று. புள்ளுக்கடிது, வள்ளுக்கடிது; ஞான்றது, வலிது எ - ம், கடுமை, ஞாற்சி, வலிமை எ - ம் இருவழியும் [2]மூவினமும் வர உகரம்பெற்றன.

உம்மையால், புள்கடிது புட்கடிது எ - ம், புட்கடுமை எ - ம், வள்கடிது வட்கடிது எ - ம், வட்கடுமை எ - ம் உகரம்பெறாது பொதுவிதிபெறுதலும்கொள்க.

(பி - ம்.) 1 பெயர்மானும். 2 மூவினத்தோடும் உகரம். (ஙக)

(234.) சுட்டு வகர¹மூ வினமுற முறையே
ஆய்தமு மென்மையு மியல்பு மாகும்.

எ - ன், வகரவீறுபுணருமாறு உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) சுட்டைமுதலாகவுடையவகரம் வல்லினமும் மெல்லினமும் இடையினமும்வந்தால் முறையே ஆய்தமும் வந்தமெல்லெழுத்தும் இயல்பும் ஆகும். எ - று.

வ - று. ² அஃகடிய, அஃசிறிய, அஃதீய, அஃபெரிய, அஞ்ஞான்றன, அவ்வலிய என முறையேகாண்க.

(பி - ம்.) ¹ மூவினம்வர. ² அஃகடிய, அஞ்ஞானம், அவ்யானை. (௩௨)

(235.) தெவ்வென் மொழியே தொழிற்பெய ரற்றே.
மவ்வரின் வஃகான் மவ்வு மாகும்.

இதுவுமது.

(இ - ள்.) தெவ்வென்னுமொழி இருவழியும் தொழிற்பெயரேபோல உகரம்பெற்றுப்புணரும்; மகரமுதன்மொழிவரின் ஈற்று வகரம் மகரமுமாம். எ - று.

வ - று. தெவ்வுக்கடிது; ஞான்றது, வலிது எ - ம், தெவ்வுக்கடுமை; ஞாற்சி, வலிமை எ - ம், தெம்மன்னர், *தெம்முனை எ - ம் வரும். (௩௩)

(236.) †னலமுன் றனவும் ணளமுன் டணவும்
ஆகுந் தநக்க ளாயுங் காலே.

எ - ன், வருமொழித்திரிபுஉணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) னகாரலகாரங்களின்முன்னர்த் தகாரநகாரங்கள்வந்தால் றகாரனகாரங்களாம். ணகாரளகாரங்கள்முன்னர்த் தகாரநகாரங்கள்வந்தால் டகாரணகாரங்களாம். எ - று.

வ - று. பொன்றீது, பொன்னன்று; கற்றீது, கன்னன்று எ - ம், மண்டீது, மண்ணன்று; முட்டீது, முண்ணன்று எ - ம் அல்வழிக்கண்வந்தன. பொன்றீமை, பொன்னன்மை; கற்றீமை,

---

* பு - வே. காஞ்சி. அ.

† "லனமுன் றனவும் ளணமுன் டணவும்" எனப் பாடமும் அதற்கேற்ப உரையும் உதாரணங்களும் பழம்பிரதிகள் பலவற்றிற் காணப்படுகின்றன.

க்னன்மை எ - ம், மண்டீமை, மண்ணன்மை; முட்டீமை, முண்ணன்மை எ - ம் வேற்றுமைக்கண் வந்தன.

[1] 'ஆயுங்கால்' என்றதனுன், நிரனிறைகொள்ளாது நிலைமொழி ஒன்றுடனே வருமொழியிரண்டும் வருமெனக்கொள்க.

(பி - ம்.) [1] ஆயுங்காலை. (௩௪)

(237.) உருபின் [1]முடிப்பவை யொக்கு[2]மப் பொருளினும்.

எ - ன், பதப்புணர்ச்சிக்கு ஒரு [3]கருவியுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்) மேல் உருபுபுணர்ச்சிக்கட்சொல்லுமவை, [4]அவ்வுருபின்பொருளான ஈண்டைவேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கண்ணும் ஒக்கும். எ - று.

வ - று. மேல் உருபுபுணர்ச்சிக்கண் எல்லாமென்பது அஃறிணையானகாலை அற்றுச்சாரியையும் உருபின்மேல் உம்மும், உயர்திணையானகாலை நம்மும் உருபின்மேல் [5]உம்முமாமென்பார்; ஈண்டும் அவ்வாறே வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கும், எல்லாவற்றுக்கோடும், எல்லாநங்கையும் எனவும், தான், தாம், நாம் என்பன குறுகுமெனவும், யான், யாம் என்பன, என், எம் எனவும், நீயென்பது நின் எனவும் நீரென்பது நும்மெனவும் ஆமென்பார்; ஈண்டும் அவ்வாறே தன்கை, தங்கை, நங்கை எனவும், என்கை, எங்கை எனவும், நின்கை நுங்கை எனவும், ஆ மா கோ என்பன னகாரம் பெறுமென்பார்; ஈண்டும் அவ்வாறே ஆன்கோடு, மான்கோடு, கோன்குணம் எனவும், சுட்டுமுதல் வகரம் அற்றுச்சாரியைபெறுமென்பார்; ஈண்டும் அவ்வாறேஅற்றுப்பெற்று அவற்றுக்கோடெனவும் வருமென்றாரெனவுணர்க.

பிறவும் இவ்வாறே வருவனவெல்லாம் அறிந்து கொணர்ந்து முடிக்க.

(பி - ம்.) [1] முடிபவை. [2] இப்பொருளினும். [3] விதி. [4] அவ்வுருபுப் பொருளான ஈண்டை. [5] உம்முமென்ரூர். (௩௫)

(238.) இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்
போலியு[1] மருவும் பொருந்திய வாற்றிற்
கியையப் புணர்த்தல் யாவர்க்கு நெறியே.

எ - ன், [2]இவ் வைவகை மொழிகட்கும்ஆவதோர்விதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இடைச்சொல்லினும் உரிச்சொல்லினும் வடசொல்லினும் மேலை உயிரீறும் ஒற்றீறுமான புணரியலோத்துக்களில் தோன்றல் திரிதல் கெடுதல் இயல்பென ஓதிய புணர்ச்சியிலக்கணங்களில் மாறுபட்டுவருவனவும் இலக்கணப்போலிமொழிகளும் மரூஉமொழிகளும் இருவகைவழக்கின்கண்ணும் நடக்குமுறைமையையறிந்து அதற்குப்பொருந்துமாறுபுணர்க்கை 3கற்றுவல்லோரெல்லார்க்குங் கடன். எ - று.

வ - று. ஆன்கன்று 4மான்றலை, கோன்குணம், வண்டின்கால், நாயின்கால், தேரின்செலவு, யாழின்புறம் என வேற்றுமைக்கண் சாரியையிடைச்சொற்கள்இயல்பாயின. தடந்தோள் என அகரவீற்று உரிச்சொல் மெல்லெழுத்துமிக்கது. மழகளிறு, உறுகாலொற்ற என உரிச்சொல் இயல்பாயின. * அளிகுலம், வயிரகடகம், தூமகண்ணன், கனகசாதி, கமலபாதம், தனதடம் என வடசொல் இயல்பாயின. இல்முன் முன்றில், படைமுன் முன்படை, கண்மீ மீகண், பொதுவில் பொதியில், வேட்கைநீர் † வேணீர், வேட்கைஅவா ‡ வேணவா, பின் பின்றை என்றற்றொடக்கத்துப் போலிமொழிகளும், அருமருந்தன்ன அருமந்தான், கிழங்கன்ன பழஞ்சோறு கிழங்கம் பழஞ்சோறு, குணக்குள்ளது குணாது, தெற்குள்ளது தெனாது, குடபாலது குடாது, வடக்கண்ணது வடாது, சோழனாடு சோணாடு, பாண்டியனாடு பாண்டிநாடு, மலையமானாடு மலாடு, தஞ்சாவூர் தஞ்சை, பனையூர் பனைசை, 5சேந்தமங்கலம் சேந்தை, ஆற்றூர் ஆறை, ஆதன்றந்தை ஆந்தை, பூதன்றந்தை பூந்தை, வடுகன்றந்தை வடுகந்தை என்றற்றொடக்கத்து மரூஉமொழிகளும், 6நிலைமொழி வருமொழிகளில் ஏற்குஞ்செய்கையறிந்து முடிக்க.

இவற்றுள், அருமந்தான் முதலானவற்றை வலித்தல் முதலான விகாரங்களான் அமைக்கவென்பாரும், ஆந்தைமுதலானவற்றை இலக்கணமொழிகளாக 7வேறெடுத்துமுடிப்பாரும் உளர்.

(பி - ம்.) 1 மரூஉவும். 2 எவ்வகை. 3 கற்றோர். 4 மான்கன்று. 5 (க) சேந்தைமங்கலம் சேந்தை; (உ) செந்தமிழ்மங்கலம் செந்தை. 6 வருமொழிநிலைமொழிகளில். 7 என்றெடுத்து முடிப்பாரும். (ந௲)

நான்காவதுமெய்யீற்றுப்புணரியல்முற்றிற்று.

---

* திருச்சிற். கஉங. † கலி. உங. ‡ மணி. பதி. கஅ.

ஐந்தாவது

# உருபுபுணரியல்.

(239.) ஒருவ னொருத்திபல ரொன்று பலவென
வருபெய ரைந்தொடு பெயர்முத லிருநான்
குருபு முறழ்தர நாற்பதா முருபே.

இவ்வோத்து என்னுதலியதோவெனின் ஒத்துநுதலியதூஉம் ஒத்தினது பெயருரைப்பவே விளங்கும். ஆயின், இவ்வோத்து என்னபெயர்த்தோவெனின், உருபுகள் பதத்தொடுபுணருமாறு உணர்த்திற்றாகலான் [1]உருபுபுணரியலென்னும் பெயர்த்து. மேலோத்தினோடு [2]இதற்கு இயைபென்னையோவெனின், மேல் பதத்தொடுபதம் புணருமாறு உணர்த்தினார்; ஈண்டு அப்பதத்தொடு உருபுபுணருமாறு உணர்த்தலின் மேலோத்தினோடு இயைபுடைத்தென்க. [3]இவ்வோத்தினுள் இத்தலைச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், வேற்றுமையுருபுகள் ஆமிடமும் அவற்றதுதொகையும் உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இவ்வைந்துபெயருடனும் எழுவாய்வேற்றுமையான பெயர்முதலாக விளியீறாகநின்ற எட்டினையும் உறழ வேற்றுமையுருபுகள் நாற்பதாம். எ - று.

வ - று. நம்பி, சாத்தி, மக்கள், [4]மரம், மாடுகள். இவற்றுள், நம்பி, நம்பியை, நம்பியால், நம்பிக்கு, நம்பியின், நம்பியது, நம்பிகண், நம்பீ என உயர்திணை ஆண்பாலொருமைப்பெயரோடு எட்டுருபும் வந்தவாறு.

ஏனை நான்குபெயரோடும் இவ்வாறே ஒட்டிக்கொள்க.

(பி - ம்.) 1 (க) உருபியலோத்தென்னும்; (உ) உருபியலென்னும். 2 இயைபுஇதற்கு. 3 ஆயின், இத்தலைச். 4 மரம், மரங்கள். (௧)

(240.) பெயர்வழித் [1]தன்பொரு டரவரு முருபே.

எ - ன், வேற்றுமையுருபு [2]வருமிடம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயர்க்குப் பின்னாகத் தன்பொருளைத் தோற்றுவித்தற்குவரும், 3வேற்றுமையுருபு. எ - று.

வ - று. மரம், மரத்தை, மரத்தால், மரமே எனவரும்.

(பி - ம்.) 1 தம்பொருள். 2 புணருமிடம். 3 வேற்றுமையுருபுகள்.

(241.) ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின்
1ஒக்கும னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே.

எ - ன், உருபுகள் பதத்தொடு புணருமுறைமை மாட்டெறிந்துணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) மெய்யையும் உயிரையும் முதலும் ஈறுமாகவுடைய உருபுகள் நிலைமொழியாயும் 2வருமொழியாயும் பதத்தோடுபுணருமிடத்து ஒற்றும் உயிரும் முதலும் ஈறுமாகவரும் பெயர்ப்பதங்கள் வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கண் தம்முட் புணரும் புணர்ச்சியோடு ஒப்பனவாம், பெரும்பாலும். எ - று.

வ - று. நம்பியையென்புழி, நம்பியென உயிரீற்று ஒருமைப்பெயரைநிறுவி, அதன்வழியே, 'பெயர்வழித் தன்பொருள் தரவருமுருபே' என்றதனால் ஐயுருபுதந்து, 'இஈ ஐவழி யவ்வும்' என்றதனால் யகரவுடம்படுமெய்யைவருவித்து, 'உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பு' என்றதனால் உடன்மேலுயிரேற்றி நம்பியை என முடிக்க. இவ்வாறே உயிரீற்றுப்பெயர்மேல் உயிர்முதலுருபுகள்வந்தன முடிக்க. நம்பிக்கு என்புழி, நம்பியெனநிறுவி, 'பெயர்வழித் தன்பொரு டரவரு முருபே' என்றதனாற் குவ்வுருபுதந்து, 'பொதுப்பெய ருயர்திணைப் பெயர்கள்' என்றதனால் இயல்பாகவர, அதனை இதனுள் 'மன்' என்ற விதப்பானே மாற்றி, 'இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்' என்பதனாற் ககரவொற்றைமிகுத்து நம்பிக்கு எனமுடிக்க. நம்பிகண் என்புழி நம்பியெனநிறுவி, 'பெயர்வழி' என்றதனாற் கண்ணுருபுதந்து, 'இயல்பினும் விதியினும்' என்றதனானே, ககரவொற்று 3மிகுவான்வர இதனுட் பெரும்பாலுமொக்குமெனச்சொல்லியவதனானே சிறுபான்மை யொவ்வாதாகலின் ஈண்டுக் ககரத்தை 4மிகுக்காது நம்பிகண் எனமுடிக்க. இவ்வாறே உயிரீற்றுப்பெயர்மேல்வரும் ஒற்றுமுதலுருபுகளெல்லாமுடிக்க. நம்பீயென்னும் 5விளியுருபு சொல்லதிகாரத்து விளிவேற்றுமைப்படியே கொள்க. பொன்னையென்புழி பொன் என ஒற்றீற்றுஅஃறிணையொருமைப்பெயரைநிறுவி முன்போல ஐயுருபுதந்து, 'தனிக்குறின் முன்

ஞெற் றுயிர்வரி னிரட்டும்' என்றதனால் னகரத்தையிரட்டித்து, 'உடன்மே லுயிர்வந் தொன்றுவது' என்றதனால் ஈற்று னகரத்தின் மேலே உருபுயிரையேற்றிப் பொன்னையெனமுடிக்க. இவ்வாறே மெய்யீற்றுப்பெயர்மேல்வரும் உயிர்முதலுருபுகளெல்லாம் முடிக்க. பொற்கு [6]என்புழிப் பொன் எனநிறுவிக் குவ்வுருபுதந்து, 'ணனவல் லினம்வரட் டறவும்' என்றதனால் னகரத்தை றகரமாக்கிப் பொற்கு எனமுடிக்க. இவ்வாறே மகவை மகவான், மகக்கு மகக்கண்; காவை காவான், காக்கு காக்கண்; கிளியை கிளியான், கிளிக்கு கிளிக்கண் எ - ம், மண்ணை மண்ணான், மட்கு மட்கண்; வேயை வேயான், வேய்க்கு வேய்க்கண்; ஊரை ஊரான், ஊர்க்கு ஊர்க் கண்; பாழை பாழான், பாழ்க்கு பாழ்க்கண் எ - ம் பெரும்பா லொப்பனவும், அவர்க்கு அவர்கண், அரசர்க்கு அரசர்கண், பார்ப் பார்க்கு பார்ப்பார்கண், சாத்தற்கு சாத்தன்கண் எ - ம், விளவிற்கு விளவின்கண், ஆவிற்கு ஆவின்கண், ஊரிற்கு ஊரின்கண் எ - ம் சிறுபான்மை புணர்ச்சியொவ்வாதனவும் கண்டுமுடிக்க.

இனி இவ்வாறுமுடிந்துநின்ற உருபுப்பதங்களை நிலைமொழியாக நிறுவி, உயிர்முதலாயும் மெய்ம்முதலாயும்வரும் மொழிகளோடு மேலைப் புணரியல்களிற் புணர்த்தவாறே புணர்க்க.

(பி - ம்.) [1] ஒக்குமன்னப்பெயர். [2] மேல்வருமொழியாயும். [3] மிக்குவர. [4] மிகாது. [5] விளிவேற்றுமை. [6] என்பதற்கு. (ந)

(242.) பதமுன் விகுதியும் பதமு முருபும்
புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை
வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்.

எ - ன், சாரியைவருமிடமும் வருமியல்பும் உணர்த்துதல்நுத லிற்று.

(இ - ள்.) [1]நிலைப்பதத்தின்முன்னர் விகுதியும் பதமும் உருபும் வந்துதொடருமிடத்து அவ்விரண்டிற்கும் இடையே ஒன்றும்இரண் டும்சாரியை [2]வந்துநிற்றலும் வாராதொழிதலும் ஒன்றற்கே ஓரிடத் துவந்து ஓரிடத்துவாராது வழங்குதலுமாம். எ - று.

எனவே [3]சாரியை எல்லாவற்றிற்கும் ஒருதலையன்றி ஒன்றற் கே வரவேண்டியும் வரவேண்டாதும் ஒன்றற்கே ஓரிடத்துவேண்

டியும் ஓரிடத்துவேண்டாதும் வரப்பெறும்; அவ்விடங்களறிந்து வருவித்துப் புணர்க்கவேண்டுமென்றவாறு.

வ - று. விகுதிப்புணர்ச்சிக்கண் [4]ஊாது, உண்டது என்றற்றொடக்கத்தன சாரியைவேண்டியேநின்றன. வெற்பன், பொருப்பன், ஊரன், வீரன் என்றற்றொடக்கத்தன சாரியைவேண்டாவாயின. உண்டனன் உண்டான், உண்டனள் உண்டாள், உண்டனர் உண்டார் எ - ம், மொழிகுவன் மொழிவன், மொழிகுவள் மொழிவள், மொழிகுவர் மொழிவர் எ - ம் [5]ஒன்றற்கே ஓரிடத்துவேண்டியும் ஓரிடத்துவேண்டாதும் வந்தன.

இனிப் பதப்புணர்ச்சிக்கண் அரையேமுந்திரிகை, கலனே யிருநாழி என இவை தம்மிற் கீழான எண் அளவுகளில் வாவேண்டியே நின்றன. உருபுப்பொருட்புணர்ச்சிக்கண், அத்திக்காய்; ஞாற்சி, விறகு, [6]அடி எ - ம், அல்வழிக்கண், அத்திகடிது; ஞான்றது, வலிந்தது, அசைந்தது எ - ம் நாற்கணத்தோடும் சாரியைவேண்டாது வந்தன. புளியங்காய்; ஞாற்சி, விறகு, அடி எ - ம், புளிகுறிது; ஞான்றது, வீழ்ந்தது, அழகிது எ - ம் நாற்கணத்தோடும் வேற்றுமையில்வேண்டியும் அல்வழியில்வேண்டாதும் வந்தன.[7]

[8]இனி உருபுபுணர்ச்சிக்கண் [9]அவற்றை, அவற்றால், அவற்றுக்கண், அவையிற்றை, அவையிற்றால், அவையிற்றுக்கண் எ - ம், மரத்தை, மரத்தால், மரத்துக்கண் எ - ம் இவை வேண்டியேநின்றன; மரக்கு, மரக்கண் என வேண்டாது வரவும்பெறும். வேயை, வேயால், வேய்க்கு, வேய்க்கண் என இவை வேண்டாதுவந்தன. செருவை செருவிற்கு, விளவை விளவிற்கு என இவை ஒன்றற்கே ஓரிடத்துவேண்டியும் ஓரிடத்துவேண்டாதும் வந்தன. மரத்தினை, மரத்தினால், மரத்திற்கு, மரத்தின்கண்; அவற்றினை, அவற்றினால், அவற்றிற்கு, அவற்றின்கண் எனப் பலவும் வந்தன. உருபுபுணர்ச்சியல்லாதவிடத்து ஒருதலையாக வேண்டியே [10]நிற்பனவல்ல சாரியையெனக் கொள்க.

(பி - ம்.) 1 நிலைமொழிப்பதத்தின். 2 (க) வருதலும் வாராதலும், (உ) வந்து நிற்றலும் நில்லாவாதலும் வந்தும் வாராதுநிற்றலுமாம். எ - று. 3 சாரியையேற்றல். 4 உள்ளது உண்டது. 5 ஒன்றற்குவேண்டியும்வேண்டாதும். 6 அடவி. 7 'நினைகுமி னீவிரெல்லாம்'' (நினையுமின்), "நினைமினீர் நீணிலவேந்தீர்'' என ஒன்றற்கே ஓரிடத்துவேண்டியும் வேண்டாதும்வந்தது. 8 இன்னும். 9 ஆரணினை அவற்றை. 10 நிற்பனவுரியவல்ல.

(243.) அன்ஆன் இன்அல் அற்றிற் றத்தம்
தம்நம் நும்ஏ அஉ ஐகுன
[1]இன்ன பிறவும் பொதுச்சா ரியையே.

எ - ன், மேற் சாரியையென்றார், அவைஇவையென்பது உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) அன்னும் ஆனும் இன்னும் அல்லும் அற்றும் இற்றும் அத்தும் அம்மும் தம்மும் நம்மும் நும்மும் ஏயும் அவ்வும் உவ்வும் ஐயும் குவ்வும் னவ்வும் இவைபோல்வனபிறவும் விகுதி பதம் உருபு ஆனமூன்றுபுணர்ச்சிக்கும் பொதுவான சாரியைகளாம். எ-று.

வ - று. ஒன்றன்கூட்டம், ஒருபாற்கு, வண்டின்கால், "பூநறுந் தொடையல்சூடி," பலவற்றை, பதிற்றுப்பத்து, மரத்திலை, புளியங்காய், எல்லார்தம்மையும், எல்லாநம்மையும், எல்லீர்நும்மையும், கலனேதூணி, [2]குன்றக்கூகை, சாத்தனுக்கு, *"கேழலட்ட [3]பேழ்வாயேற்றை", †"துறுகன் [4]மறையினு முய்குவை போலாய்", ஆன்கன்று என முறையேகாண்க.

'பிற' என்றதனானே மற்று வருவனவும்கொள்க.

(பி - ம்.) [1] அன்னபிறவும். [2] வானமதி. [3] பேழைவாய். [4] முழையினும். (ரு)

(244.) எல்லா மென்ப திழிதிணை யாயின்
அற்றோ டுருபின் மேலும் முறுமே
அன்றே னம்மிடை யடைந்தற் றாகும்.

எ - ன், ஒருசார் [1]சாரியைபெறுமாறுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) எல்லாமென்னும்பெயர்அஃறிணையானகாலைஅற்றுச்சாரியையும் உருபின்மேலே உம்மும்பெறும்; [2]உயர்திணையானகாலை இடையே நம்முச்சாரியையும் உருபின்மேலே முன்போல் உம்மும் பெற்றுமுடியும். எ - று.

வ - று. எல்லாவற்றையும், எல்லாவற்றொடும் எ - ம், எல்லாவற்றுக்கோடும்; செவியும், தலையும், புறமும் எ - ம் அஃறிணைக்கண் உருபினும் பொருளினும் அற்றும் உம்மும் வந்தன. எல்லாநம்மை

---

* அகநா. அ. † புறநா. ௬௦௦.

யும், எல்லாநம்மொடும் எ - ம், எல்லாநங்கையும்; செவியும், தலையும், புறமும் எ - ம் உயர்திணைக்கண் உருபினும் பொருளினும் நம்மும் உம்மும் வந்தன.

(பி - ம்.) [1] சாரியையாமாறு. [2] உயர்திணை விரவுத்திணைகளான காலை. (சு)

(245.) எல்லாரு மெல்லீரு மென்பவற் றும்மை
தள்ளி நிரலே தம்நும் சாரப்
புல்லு முருபின் பின்ன ரும்மே.

இதுவுமது.

(இ - ள்.) இவ்விருவகைச்சொல்லினும் ஈற்றில்நின்ற உம்மையையழித்து முறையே தம்மும் நும்மும்சார உருபின்பின்னே உம்மைபுணரும். எ - று.

வ - று. எல்லார்தம்மையும், எல்லீர்நும்மையும் [1]எ - ம், எல்லார்தங்கையும், எல்லீர்நுங்கையும் [2]எ - ம் உருபினும் பொருளினும் சாரியையும் உம்மும் வந்தன.

எல்லாரையும் எல்லீரையும், எல்லார்கையும் எல்லீர்கையும், [3] எனச் சாரியையை இடையில் ஏலாதும்வரும்.

(பி - ம்.) [1] என உயர்திணைக்கண்ணே தம்மும் நும்மும் உருபின் மேல் உம்மும்பெற்றன. [2] எனப் பொருளினும் பெற்றன. [3] என ஏலாது வந்தன. (எ)

(246.) தான்தாம் நாம்முதல் குறுகும் யான்யாம்
நீநீர் என்எம் நின்நு மாம்பிற
குவ்வி னவ்வரு நான்கா றிரட்டல.

எ - ன், இவ்வேழு [1]பெயரின்பின் ஆறு உருபும் இன்னவாறு முடிக்கவென்பதுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) தானென்றும் தாமென்றும் நாமென்றும் வருஞ் [2] சொற்களின் முதலுயிர்குறுகும்; யானென்றும் யாமென்றும் நீயென்றும் நீரென்றும் வருஞ்சொற்கள் முறையே என்னென்றும் எம்மென்றும் நின்னென்றும் நும்மென்றும்ஆம்; இங்ஙனந்திரிந்து நின்றவழி நான்காமுருபு [3]புணருமிடத்து இடையே அகரச்சாரியைவரும்; இவற்றுள் நான்காமுருபும் ஆறாமுருபும் புணருமிடத்து [4] குற்றொற்றுக்கள் இரட்டாவாம். எ - று.

வ - று. தன்னை தன்னால் தனக்கு தன்னின் தனது தன்கண் எ - ம், தம்மை தம்மால் தமக்கு தம்மின் தமது தங்கண் எ - ம், நம்மை நம்மால் நமக்கு நம்மின் நமது நங்கண் எனவும்வரும். என்னை எம்மை நின்னை நும்மை என இவையும் அவ்வாறேவரும்.

நான்காவதற்கு 5விதி யகரவீறுநின்று ககரவொற்றுமிக்கது.

'பிற' என்றதனானே வழக்கினுள் 6நீயென்பது உன்னென்றும் 7நீரென்பது உம்மென்றும் வரவும்பெறுமெனக் கொள்க.

(பி - ம்.) 1 பெயர்ப்பின் ஆறுருபும் முடிக்க. 2 சொற்கள். 3 புணர் விடத்து இவ்விடையே. 4 முற்கூறியகுற்றொற்று. 5 அகரம்வர ஈற்றுக் ககரவொற்றுமிக்கது. 6 நீயென்பதற்கு. 7 நீரென்பதற்கு. (அ)

## (247.) ஆமா கோனவ் வணையவும் பெறுமே.

எ - ன், ஒருசாரன சாரியைபெறுமாறுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்றுபெயரும் னகரச்சாரியைபெறவுங்கூடும். எ - று.

ஆவுடனேஓதினமையான் 1ஓரினம்பற்றி மாவென்றது விலங்குமாவையெனக்கொள்க.

வ - று. ஆனை, மானை, கோனை எனவரும்.

உம்மையால், ஆவை, மாவை, கோவை எ - ம் இன்சாரியை பெற்று, ஆவினை மாவினை கோவினை எ - ம் வருமெனக்கொள்க.

(பி - ம்.) 1 ஓரிடம்பற்றி. (கூ)

## (248.) ஒன்று முத1லெட் டீரு மெண்ணூர்
## பத்தின்முன் ஆன்வரிற் பவ்வொற் றொழியமேல்
## எல்லா மோடு மொன்பது மிற்றே.

எ - ன், ஒருசார் எண்பெயர் சாரியைபெற்றுமுடியுமாறுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) ஒன்றுமுதல் எட்டீறும் எண்களோடுவரும் பத்தென்னுமெண்முன்னர் ஆனென்னுஞ்சாரியைவரிற் பத்தென்னுமொழியிற் பகரவொற்றொழிய மேல்நின்ற எல்லாம்கெடும்; 2ஒன்பதென்பதன்முன்னும் ஆன்வரின் பகரவொற்றொழிய மேல்நின்ற எல்லாம் கெடும். எ - று.

வ - று. ஒருபானை, இருபானை, ஒன்பானை எனவரும்.

(பி - ம்.) 1 எட்டளவாம். 2 ஒன்பதன்முன்னும். (க0)

## (249.) வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே.

எ - ன், ஒருசாரன சாரியை பெறுமாறுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) வகரவீறுயுள்ள மூவகைச் [1]சுட்டிற்கும் அற்றுச் சாரியைவருதல் முறைமை. எ - று.

வ - று. அவற்றை, இவற்றை, உவற்றை, அவற்றுக்கண் என[2] வரும்.

'வழி' என்றமிகையான், இவற்றிற்கு இச்சாரியை வந்தாலும், *முதன்முச்சுட்டின்முன்னும் எகரவினாமுன்னும் 3இச்சாரியைவந்து வகரமெய்பெற்றாலும்தனிக்குறின்முன்ஒற்று இரட்டாவாறுகொள்க.

(பி - ம்.) 1 சுட்டிற்குமுன்னும். 2 'பதமுன்விகுதியும்.. ஆகும்' என்பதனான்வரும். 3 இச்சாரியைவந்தால் இடையில் வகரவுடம்படுமெய்பெறுமென் பார்க்கும் அவை தனிக்குறின்முன்ஒற்று உயிர்வரஇரட்டாமற்கொள்க. (கக)

## (250.) சுட்டின்முன் னாய்த மன்வரிற் கெடுமே.

எ - ன், எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) மூவகைச்சுட்டின்முன்னுமுள்ள ஆய்தம் அன்சாரியைவரிற் கெடும். எ - று.

வ - று. அதனை, இதனை, உதனை எனவரும். (கஉ)

## (251.) அத்தி னகர மகரமுனை யில்லை.

எ - ன், அத்துச்சாரியைக்கு ஆவதோர் விதியுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இயல்பானும் விதியானும்நின்ற அகரத்தின்முன் வந்த அத்துச்சாரியையின்அகரம் கெடும். எ - று.

வ - று. மகத்துக்கை, மரத்துக்குறை என இரண்டகரக் கண்ணும் [1]கெட்டது.

(பி - ம்.) 1 முன்வந்த அத்துச்சாரியையின் அகரம். (கங)

---

* தொல்காப்பியம், உருபியல், ஐந்தாஞ்சூத்திரம், இளம்பூரணருரையைப்பார்க்க.

(252.) இதற்கிது சாரியை யெனி[1]னள வின்மையின்
விகுதியும் பதமு முருபும் பகுத்திடை
நின்ற வெழுத்தும் பதமு மியற்கையும்
ஒன்ற [2]வுணர்த்த லுரவோர் நெறியே.

எ - ன், சாரியைக்கு ஆவதோர் புறநடை யுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இச்சொற்குச் [3]சாரியையிதுவென்று சொற்றொறும் சாரியை [4]சொல்லுதலுறின், அளவின்றிப் [5]பெருகலின், நிலைப்பதத்தையும் அதன்வழி[6]வருமுறையவான விகுதியே பதமே உருபே யென்றிவற்றையும் பிரித்து இரண்டற்கும் இடையிற் பொருத்தமுடைத்தாய்நின்ற எழுத்துச்சாரியையே, மொழிச்சாரியையே, இயல்பேயென்றவற்றுள் இன்னதுநின்றதென்று பொருந்தும்படியறிந்து உணர்த்துதல் புலவரதுமுறைமை. எ - று.

வ - று. உண்டதென்பதனை, உண் ட் அ து எனப்பிரித்து அகரஎழுத்துச்சாரியைவந்ததெனவும், உண்கின்றனனென்பதனை உண்கின்று அன் அன் எனப்பிரித்து மொழிச்சாரியைவந்ததெனவும், உண்டானென்பதனை உண் ட் ஆன் எனப்பிரித்துச் சாரியைவாராது இயல்பாய்வந்ததெனவும் பகுதிவிகுதிகட்கு இடையே இருசாரியையும் இயல்புமானவாறுகாண்க. "ஆனமணி யியம்புங் கானத் தான" என்பதனை, ஆ ன் அ மணி... .....தான எ - ம், "ஆனநெய் [7]தெளித்து" என்பதனை, ஆ ன் அ நெய் [8]தெளித்து எ - ம், ஒன்றேகால் என்பதனை ஒன்று ஏ கால் எ - ம், கலனேகுறுணி என்பதனை கலன் ஏ குறுணி எ - ம், கலனேதூணி என்பதனை கலன் ஏ தூணி எனவும் பிரித்து எழுத்துச்சாரியைவந்ததெனவும், புளியங்காயென்பதனை, புளி அம் காய் எ - ம், வண்டின்காலென்பதனை, வண்டு இன் கால் எ - ம் பிரித்து மொழிச்சாரியை வந்ததெனவும், ஆமணிஎன்பதனை, ஆ மணி எனப்பிரித்துச் சாரியைவாராது இயல்பாய்வந்ததெனவும் இருபதங்கட்குமிடையே இருசாரியைகளும் இயல்பும் ஆனவாறுகாண்க. ஆனையென்பதனை, ஆ ன் ஐ எ - ம், அவற்றையென்பதனை அவ் அற்று ஐ எ - ம், [9]மாலை என்பதனை மால் ஐ எ - ம் பிரித்துப் பதவுருபுகட்கிடையே இருசாரியையும் இயல்புமானவாறு காண்க. இவ்வாறே எடுத்தோதாத சாரியைகளெல்லாம் எடுத்து முடிக்க.

(பி - ம்.) [1] அளபின்மையின். [2] உணர்த்துதல். 3 சாரியையாமிது. 4 சொல்லலுறின். 5 பெருத்தலின். 6 வருவனவான. 7 தெளிந்தது. [8] தெளிந்தது. 9 மாவை என்பதனை மா ஐ எனவும். (௧௪)

(253.) விகுதி பதஞ்சா ரியையுரு பனைத்தினும்
உரைத்த [1]விதியினோர்ந் தொப்பன கொளலே.

எ - ன், [2]எனைவகைப்புணர்ச்சிக்கும் 3ஏற்பதோர் கருவியுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) விகுதியே பதமே சாரியையே உருபே யென்4றிவ்வெல்லாவற்றின்கண்ணும் ஓரிடத்துச்சொன்ன விதியையோர்ந்து அவற்றிற்குப் பொருத்தமுடையன விசாரித்தறிந்து புணர்க்க. எ - று.

இஃது 5என்னைசொல்லியவாறோவெனின், விகுதிபுணர்ப்புழிச்சொன்ன பகுதியீற்றழிவுமுதலானவை பதப்புணர்ச்சிமுதலானவற்றிற்கு வரவும், பதப்புணர்ச்சிக்கட்சொன்ன இயல்பே விகாரமே யென்றவை ஒழிந்தமூவிடத்துவரவும், உருபுபுணர்ச்சிக்கட்சொன்ன சாரியைமுதலானவை ஏனைமூன்றிடத்துவரவும்பெறும். அவை ஆங்காங்கு எடுத்துச்சொல்லுவான்புகிற் 6பெருகுதலிற் சுருங்குதற்பொருட்டுப் பொதுப்படக் கூறினாரெனக்கருதி அவ்விடங்கட்கு வேண்டுவனஅறிந்து வருவித்துப்புணர்க்கவென்க.

வ - று. கரியானென்னும் பகுபதமுடிப்புழிப் பண்புப்பகுதி ஈறுகெடுமெனக்கூறினார்; அதனானே கருநீலமெனப் 7பதமுடிப்புழியும் கெடுக்க. புளியங்காயெனப் பதமுடிப்புழி, உருபுபுணர்ச்சிக்கட்சொன்ன சாரியைவருதலும், சாரியையீற்றுமகரம் மகரவீற்றுப்புணர்ச்சிபோலத்திரிதலும்கொள்க. உருபுபுணர்ச்சிக்கண் நீயென்பது நின்னெனநிற்குமென்றார்; அவ்வாறே பொருட்புணர்ச்சிக்கண்ணும் நின்கையெனப் புணர்க்க. இவ்வாறே பிறவும் வருவித்துக்கொள்க.

'ஓர்ந்து' என்பது ஏற்புழிக் கோடற்கென்க.

(பி - ம்.) [1] விதியுளோர்ந்து. [2] எவ்வகை. 3 (க) ஒப்பதோர் (உ) இயைவதோர். 4 இவ்வெல்லா. 5 என்ன; என். 6 பெருத்தலிற். 7 பதம்புணர்ப்புழியும். (௧௫)

(254.) இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்
உயர்திணை யிடத்து விரிந்துந் தொக்கும்
விரவுப் பெயரின் விரிந்து நின்றும்
அன்ன பிறவு மாகுமை யுருபே.

எ - ன், ஐகாரவேற்றுமைத்திரிபு தொகுத்துணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இவ்வாறு வரப்பெறும், ஐகாரவேற்றுமை; உருபினும் பொருளினும். எ - று.

வ - று. இயல்பின்விகாரமாவது, *"வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப" என்பது. விகாரத்தியல்பாவன, மண்கொணர்ந்தான் பொன்கொணர்ந்தானென்பன. உயர்திணையிடத்துவிரிந்துநின்றன, நம்பியைக்கொணர்ந்தான் நங்கையைக்கொணர்ந்தானென்பன. உயர்திணையிடத்துத் தொக்குவந்தன, மகற்பெற்றான் மகட்பெற்றானென்பன. விரவுப்பெயரின்விரிந்துநின்றன, கொற்றனைக்கொணர்ந்தான் கொற்றியைக்கொணர்ந்தானென்பன.

'அன்னபிறவும்' என்றதனால், [1]வில்லைக்கொள் வில்கொள் விற்கொள் என்பனபோல்வனவுங்கொள்க.

(பி - ம்.) † [1] ஆடூஉவறிசொல், மகடூஉவறிசொல், வில்லைக்கோள். (கசூ)

(255) புள்ளியு முயிரு மாயிறு சொன்முன்
தம்மி னாகிய தொழின்மொழி வரினே
வல்லினம் விகற்பமு மியல்பு மாகும்.

எ - ன், மூன்றும்[1]வேற்றுமைத்தொகைக்கு ஆவதோர்விதியுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) ஒற்றும்உயிரும் ஈறாகியசொன்முன் தம்மினாகிய தொழிற்சொல்வந்தால், வல்லெழுத்து விகற்பமாயும் இயல்பாயும்வரும். எ - று.

வ - று. நாய்கோட்பட்டான் நாய்க்கோட்பட்டான், புலிகோட்பட்டான் புலிக்கோட்பட்டான், வளிகோட்பட்டான் வளிக்கோட்பட்டான் எ - ம், நாய்கௌவப்பட்டான், புலிகௌவப்பட்

* தொல். செய். ககூ. † தொல். கிளவி. உ.

டான்; சாரப்பட்டான், தீண்டப்பட்டான், பாயப்பட்டான் எ-ம் வரும்.

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

(பி-ம்.) 1 (க) வேற்றுமைதொகுத்துணர்த்துதல்; (உ) வேற்றுமைத் தொகையுணர்த்துதல். (கள)

(256.) இதற்கிது [1]முடிபென் றெஞ்சா தியாவும்
விதிப்பள வின்மையின் விதித்தவற் றியலான்
வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே.

எ-ன், இவ்வதிகாரத்துட் சொன்னபொருட்கெல்லாம் ஏற்பதோர் புறநடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இவ்வதிகாரத்துட் சொல்லாத எழுத்திலக்கணமாய் வருவனவெல்லாம் இதுவே விதியாக ஈண்டே சொல்லிக்கொள்க. எ-று.

வ-று. [2]"உருவே யுணர்வே யொலியே [3]தன்மை, யெனவீ ரெழுத்து மீரிரு பகுதிய." (க); "காணப் பட்ட வுருவ மெல்லா, மாணக் காட்டும் வகைமை நாடி, வழுவி லோவியன் கைவினை போல, வெழுதப் படுவ துருவெழுத் [4]தாகும்" (உ); "கொண்டவோர் குறியாற் கொண்ட வதனை, யுண்டென் றுணர்வதுணர்வெழுத்தாகும்." (ங); "இசைப்படு புள்ளி னெழாஅல் போலச், செவிப்புல னாவதொலியெழுத் தாகும்" (ச); "முதற்கா ரணமுந் துணைக்கா ரணமுந், துணைக்கா ரணத்தொடு தொடரிய வுணர்வு, மவற்றொடு புணர்ந்த வகத்தெழு வளியின், மிடற்றுப்[5]பிறந் திசைப்பது தன்மை யெழுத்தே" (ரு) (யா-வி. உரை) என்னும்இப்பகுதியுள் ஒலியெழுத்தே செவிப்புலனாய்ப் பொருள்தருஞ்சிறப்புநோக்கி, அதனை எடுத்தோதினர்; ஒழிந்தனமூன்றும் ஈண்டே உரைத்துக்கொள்க. இவ்வாறன்றி "வடிவுபெயர் தன்மை யுண்முடிவு நான்காய், நடைபெறு நாவலர் நாடிய வெழுத்தே"; "கட் [6]புல னல்லாக் கடவுளைக் காட்டுஞ், சட்டகம் போலச் செவிப்புல வொலியை, யுட்கொளற் கிடுமுரு பாம்வடி வெழுத்தே,"; "வடிவுமுதன் மும்மையின் வழங்கு மெழுத்திற், படுபல பகுதிக் கிடுபெயர் பெயரே·"; "தான முயற்சி [7]தரக்கொளச் செவிப்புல, னுயவொலி தன்மை யெழுத்தா கும்மே"; "உருவு முதன் மும்மையோ டொன்றிய வியல்பை, மரு[8]வுளந் துணிவுற வருமுடி பெழுத்தே." இவ்வாறு பகுத்துரைக்கப்படும் எழுத்துக்

கூறுபாடும், போயினான் சொல்லினானென வருஞ்சொற்கள், இறந்த காலந்தரும் இன்னிடைநிலைபெறாது, போனான் சொன்னான் எனவருவனவும், புக்கான் நக்கான்முதலானவும், வாரியோள் வாருங்கோள் வந்தியோள் 9வாருங்கிடீர் என்றற்றொடக்கத்துக் காலவழக்காய் வருவனவுமான பதத்தின்கூறும், இந்தவனந்தல், குளாம்பல், மராடி, 10செங்கழுநீர் என்றற்றொடக்கத்துப் புணர்ச்சிக்கூறும் இவைபோல்வனபிறவும் இதுவே நிலனாகத் தந்துமுடிக்க.

(பி - ம்.) 1 முடிவென்று. 2 உருபே. 3 தன்மையென, விருவகையெழுத்து மீரிரண் டாகும். 4 ஆமே. 5 பிறப்பது. 6 புலனில்லாக் 7 (க) தாக்கொளல், (உ) தாக்கோள். 8 உளத்துணிவருமுண்முடிபு. 9 (க) வருங்கெடீர்; (உ) வாருங்கடீர். 10(க) செங்கழநீர்; (உ) செங்கழனி. (கரு)

ஐந்தாவது உருபுபுணரியல் முற்றிற்று.

---

கட்டளைக் கலித்துறை.

"அடையெண் பெயர்முறை தோற்றம் வடிவள வாதியந்த
மிடைநிலை போலியென் றீரைந் தெழுத்து மிருபதமும்
படுபுணர் 1மூன்றி னியல்பும் விகாரமுஞ் சாரியையு
முடனு 2ணர் வாரை யெழுத்தறி வாரென்ப ருத்தமரே."

பி - ம். 1 மூன்று மியல்பும். 2 அறிவாரை.

வெண்பா.

"எழுபா னிரண்டெழுத்தி னேற்றபதத் தைஞ்ஞான்
கொடுமூன் றுயிரீறைம் பான்மூன் - றருமெய்யீ
ருரு றுருபியன்மூ வாறு மெழுத்துரைநூற்
பாவிருநூற் றோரிரண்டாப் பார்."

முதலாவது,

எழுத்ததிகாரம் முற்றிற்று.

---

இரண்டாவது,

# சொல்லதிகாரம்.

முதலாவது,

## பெயரியல்.

(257.) முச்[1]சக நிழற்று முழுமதி முக்குடை
அச்சுத னடிதொழு தறைகுவன் சொல்லே.

என்பது சூத்திரம்.

இவ்வதிகாரம் என்னுதலி எடுத்துக்கொள்ளப்பட்டதோவெனின், அதிகாரநுதலியதூஉம் அதிகாரத்தினது பெயருரைப்பவே விளங்கும். ஆயின், இவ்வதிகாரம் என்னபெயர்த்தோவெனின், சொல்லிலக்கணமுணர்த்திற்றுதலாற் சொல்லதிகாரமென்னும்பெயர்த்து. சொல்லப்படுதலாற் சொல்லெனக்கொள்க. மேலதிகாரத்தோடு இதற்கு இயைபு என்னையோவெனின், அது வருஞ்சூத்திரத்தானே விளங்கும்.

இவ்வதிகாரத்துள், எனைவகையோத்தினாற் சொல்லிலக்கணம் உணர்த்தினானோவெனின், ஐவகை[2]யோத்தினான் உணர்த்தினானென்க.

அவற்றுள், இம்முதலோத்து என்னுதலியதோவெனின், ஓத்து நுதலியதூஉம் ஓத்தினதுபெயருரைப்பவேவிளங்கும். ஆயின், இவ்வோத்து என்னபெயர்த்தோவெனின், பெயர்ச்சொற்களது இயல்பு உணர்த்திற்றுதலாற்பெயரியலென்னும்பெயர்த்து.

இவ்வோத்தினுள், இத்தலைச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், ஒருசாரார்வேண்டும் சிறப்புப்பாயிரமுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்றுலகத்திலுள்ள உயிர்கட்கெல்லாம் நிழலைப் பண்ணுநின்ற நிறைந்த மதியைப்போன்ற மூன்றுகுடையையுடையானை கேடில்லாதானுடைய அடிகளைவணங்கிச் சொல்லிலக்கணத்தை யான் சொல்லுவேன். எ - று.

அகலம் உரையிற்கொள்க.

அஃதேல், ஒருநூலுக்கு எடுத்துக்கோடற்கண்ணே வணக்கஞ் சொல்லுதலன்றி அதிகாரந்தோறும் சொல்லவேண்டியது 3 யாதோவெனின், நூலொன்றேயெனினும் அதிகாரங்கள் பொருளான்வேறுபடுதலானும் முன்னை ஒருசாரார் ஓரோவதிகாரத்தை ஒருநூலாக்கிப் பாயிரமுழுதும் பகர்தலானும், " ஆதியு மந்தமு நடுவு மங்கல, மோதிய முறைமையி னுரைப்ப ராயிடி, னேதமி விருநிலக் கிழத்தி யின்புற, நீதியம் பனுவல்க ணிலவு மென்பவே" என்பவாகலானும், ' கற்றதனாற்பயன், குற்றமற்று முற்றவுணர்ந்த ஒற்றைநற்றவன் பொற்றாளிணைமலர்போற்றல் ' 4என்பவாகலானும் சொன்னாரெனக்கொள்க.

(பி - ம்.) 1 செகம். 2 ஓத்தினுனென்க. 3 என்னையோவெனின். என்பதனானும் சொன்னாரென்க. (க)

**(258.) ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி யென்று
இருதிணை யைம்பாற் பொருளையுந் தன்னையும்
மூவகை யிடத்தும் வழக்கொடு செய்யுளின்
வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே.**

எ - ன், சொல்லின்கூறுபாடும் அதனியல்பும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருமொழியும் தொடர்மொழியும் பொதுமொழியுமென்னும் இக்கூற்றினதாகி இருதிணையையும் அவற்றினதுகூறுபாட்டான்வரும் 1ஐம்பாற்பொருளையும் தன்னையும் மூன்றிடத்தினும் வழக்கின்கண்ணும் செய்யுளின்கண்ணும் வெளிப்படையானும் குறிப்பானும் விளக்குவது, சொல்லாவது. எ - று.

எனவே உலகத்து, உயிர்ப்பொருள், உயிரில்பொருள், இயங்கியற்பொருள், நிலையியற்பொருள், காட்சிப்பொருள், கருத்துப்பொருள், முதற்பொருள், சினைப்பொருள், இயற்கைப்பொருள், செயற்கைப்பொருள், வழக்குப்பொருள், 2செய்யுட்பொருளென்று இவ்வாறுபகுத்துரைக்கப்படும் பொருள்களெல்லாம் இருதிணை ஐம்பாலாய் அடங்குமென்பதூஉம், இவற்றைச் சொல்லுஞ்சொல்லும், ஒருமொழி தொடர்மொழி பொதுமொழியெனவும் உயர்திணைச்சொல் அஃறிணைச்சொல் ஆண்பாற்சொல் பெண்பாற்சொல் பலர்பாற்சொல் ஒன்றறிசொல் பலவறிசொல் தன்மைச்சொல் முன்னிலைச்சொல் படர்க்கைச்சொல் வழ

க்குச்சொல் செய்யுட்சொல் வெளிப்படைச்சொல் குறிப்புச்சொலெனவும் வருங்கூறுபாட்டதாமென்பதூஉமாயிற்று. இன்னும் இதனானே, மேல் எழுத்ததிகாரத்துள் அணுத்திரள் முதற்காரணமாகப்பிறந்து மொழிக்கு முதற்காரணமாகிவந்த பலவொலி எழுத்தாமென்றும், அது தனியேநின்றும் தொடர்ந்துநின்றும் பொருளைத் 3தோற்றுவித்தலிற் பதமாமென்றும் போதந்தார்; ஈண்டும் அப்பதம்படு பகுதியும், அவை தோற்றுவிக்கும்பொருள் இவையென்பதூஉம் 4சொன்னவாறுமாயிற்று. ஆகவே எழுத்தோடு சொற்றொடர்ச்சியும் அதிகாரத்தொடர்ச்சியும் தாமேவிளங்கினவெனக்கொள்க. அவ்வகையால்நோக்க ஆரியத்திற்போல வேறு எழுத்ததிகாரமென்று பிரிக்க வேண்டாமையும்போதரும். இது தொகைச்சூத்திரமாகலின், இதன் பொருள்வகைமையெல்லாம் தத்தம் வகைச்சூத்திரத்தான் அறிந்துகொள்க. * "கடியென்கிளவி", † "5கழுமென்கிளவி", ‡ "புனிறென்கிளவி" எனச் சொல் தன்னைத்தான் விளக்கினவாறு. உயிருணர்வுகள் தம்மையும் பொருளையும் உணர்த்துமாறுபோலச் சொல்லும் தன்னையும் பொருளையும் உணர்த்துமெனக்கொள்க; "வயிரவூசியு மயன்வினை யிரும்புஞ், செயிரறு பொன்னைச் செம்மைசெய் யாணியுந், தமக்கமை கருவியுந் தாமா மவைபோ, லுரைத்திற முணர்த்தலு முரையது தொழிலே" என்றார், ஆசிரியர் அகத்தியனாருமெனக்கொள்க. சொல் பொருளையுணர்வார்க்குக் கருவியாவதன்றித் தானாக நின்று பொருளுணர்த்தாதென்க.

(பி - ம்.) 1 ஐம்பாலுமாகியபொருளையும். 2 மெய்ம்மைப்பொருள். 3 தோற்றலின். 4 சொன்னவாறும் அற்றாகவே. 5 துனியென்கிளவி (உ)

(259.) ஒருமொழி யொருபொரு ளனவாந் தொடர்மொழி
பலபொரு ளனபொது விருமையு மேற்பன.

எ - ன், மேற்சூத்திரத்தில் நிறுத்தமுறையானே சொற்கூறுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருமொழிகளாவன, பகுப்பிலவாய்நின்று ஒருபொருளையுணர்த்துவனவாம்; தொடர்மொழிகளாவன, இரண்டும் பலவுமானமொழிகள் தொகைநிலைவகையானும் தொகாநிலைவகையானும் தொடர்ந்துநின்று பலபொருளையுணர்த்துவனவாம்; பொதுமொழிகளாவன, ஒன்றாய்நின்று ஒருபொருளையுணர்த்தியும் அதுவே தொ

---

* தொல். உரி. அசு. † தொல். உரி. ருஈ. ‡ தொல். உரி. எஎ.

டர்மொழியுமாய்ப் பலபொருளையுணர்த்தியும் இவ்வாறு இருமைக்கும் பொதுவாய்நிற்பனவாம். எ - று.

வ - று. நம்பி நங்கை சாத்தன் சாத்தி நிலம் நீர் மணி பொன்; வந்தான் வந்தாள் வந்தார், போனன் போனள் போனர், வந்தது வந்தன; தில் மன்; தஞ்சம் தவ என்றற்றொடக்கத்தன ஒருமொழிகள்.

இனி, தொடர்மொழியாவது தொடர்ந்தமொழி. தொடரலாவது, மொழிகள் தம்முட் பொருள்நோக்குடையவாதல்; நோக்குடைமையாவது, தொகைநிலைவகையானும் தொகாநிலைவகையானும் தம்முட் பொருள்கொண்டுமுற்றல். அவை யாங்ஙனம் பொருள்கொண்டுமுற்றுமோவெனின், அடை, பொருள்கொண்டு முற்றும்; பொது, சிறப்புக்கொண்டுமுற்றும்; பெயர், வினையும்பெயரும் வினாவுங்கொண்டுமுற்றும்; தெரிநிலைமுற்றும் குறிப்புமுற்றும் பெயரெச்சமும், [1] பெயர்கொண்டுமுற்றும்; வினையெச்சம், முற்றுவினையும் பெயரெச்சவினையும் தொழிற்பெயரும் சிறுபான்மை வினையெச்சமுங்கொண்டு முற்றும்; இடைச்சொல்லும் உரிச்சொல்லும் உருபுகளும், பெயரும் வினையுங்கொண்டுமுற்றும். அவற்றுள், அடை பொருள்கொண்டுமுற்றுமாறு, கருங்குவளையென்பது. பொதுச் சிறப்புக்கொண்டுமுற்றுமாறு, பார்ப்பான் பாராயணனென்பது; இவ்வாறே ஒழிந்தனவும்தத்தம் விதிச்சூத்திரங்களுட்காண்க. இனி, குறிஞ்சிமலர் *குன்றக்கூகை; கொல்யானை, குளிர்மதி; கருங்குதிரை, பெருங்குளிர்; குயின்மொழி, மயிலியல்; கபிலபரணர், கைகால்; பொற்றொடி, புனைகோதை என்றற்றொடக்கத்தன தொகைநிலைத்தொடர்மொழிகள். கொற்றனை, கொற்றனால், கொற்றற்கு, கொற்றனில், கொற்றனது, கொற்றன்கண்; ஓணனுண்டான், கொற்றாகொள், உண்டசாத்தன், உண்டுவந்தான், உண்டானூரன், பூணன்பொன்னன். †"அதுமகொ ரோழி காமநோயே", ‡"நனிபே தையே நயனில் கூற்றம்", வந்தேன்வந்தேனென்றற்றொடக்கத்தன, தொகாநிலைத்தொடர்மொழிகள்.

ஒருசொல்முன் ஒருசொல் [2]வருங்கால் தொகைநிலை தொகாநிலையாகிய இவ்விரண்டன் பகுதிகளுள் [3]ஒன்றுபற்றியன்றி வாராதெனக்கொள்க.

எட்டு, கொட்டு, கொண்மூ, தாமரை, வேங்கை, குறுஞ்சூலி, ஆனைவணக்கி, முயன்மோவாய், முதியாள்கூந்தல், சிறியாணங்கை,

* குறு. கருரு. † குறு. ரு. ‡ புறநா. உஉஎ.

எழுந்திருந்தான், வாராநின்றான், உரைத்திட்டானென்றற்றொடக்கத்தன, 4பகாதுநின்று ஒருபெயரும்வினையுமாய் ஒருபொருளையுணர்த்தினவெனனுமாய், அவ்வாறன்றி, எள்ளைத்து, கொள்ளைத்து, கொள்ளைமூ, தாவுகின்றமரை, வேகின்றகை, 5குறிதாகிய சூலினையுடையவள், ஆனையை வணக்குவான், முயலினதுமோவாய், முதியாளது கூந்தல், சிறியாளாகியநங்கை, எழுந்து பின்இருந்தான், வந்துபின் நின்றான், உரைத்துப் பின் இட்டானென இவ்வாறுபகுப்பப் பலபொருளையுணர்த்தினவெனனுமாய் நிற்றலாற் பொதுமொழிகள். வெற்பன், பொருப்பன், குழையன், கரியனென்றற்றொடக்கத்தன பலபொருளுணர்த்தினவெனினும், அவை தொடர்மொழிகளாகா; பகுபதமாமென்க. பகுபதத்திற்கும் தொடர்மொழிக்கும் தம்முள்வேற்றுமை மேலையதிகாரத்துட் *பதவியலுட்காண்க. சேனை, குழாம், தொறு, பல, பலர், சில சிலர், வந்தார், வந்தனவென்பனவும் 6பொருள்பலவேனும் பொருளியைபாகிய 7ஒருபொருளை உணர்த்தலான் ஒருமொழியேயாமென்க; "பலவி னியைந்தவு மொன்றெனப் படுமே, அடிசில் 8பொத்தகஞ் சேனை யமைந்த, கதவ மாலை கம்பல மனைய" என்றார் ஆசிரியர் அகத்தியனாரு9மெனக்கொள்க.

இதற்கு இவ்வாறன்றி, ஒருமொழியாக, தொடர்மொழியாக ஒருபொருளைத் தருவன ஒருமொழி; பலபொருளைத் தருவன 10தொடர்மொழி; ஒருபொருளதாகக்கொள்ளவும் பலபொருளதாகக்கொள்ளவும்வருவன பொதுமொழியென்றுமாம். அவன், சாத்தன், கொற்றன், நிலம், நீர்; வந்தான், சென்றான், வந்தது, நின்றது; தில், மன்; தஞ்சம், தவ என்றற்றொடக்கத்தன, தனியேநின்று ஒருபொருள்தந்த ஒருமொழிகள். அவர்கள், பலர், சிலர், அவை, பல, சில, சேனை, குழாம், தொறு, வந்தன, போயினவென்றற்றொடக்கத்தன, தனியேநின்று பலபொருள்தந்த 11தொடர்மொழிகள். அவர், அரசர், வந்தார் என்றற்றொடக்கத்தன, ஒருவரை உயர்த்துச்சொல்லியவழி ஒருமொழியெனனுமாய்ப் பலரை நுதலியவழித் தொடர்மொழியெனனுமாய்நிற்றலின், தனியேநின்ற பொதுமொழிகள். சேரன்திருமணக்குட்டுவன், சோழன்கரிகாற்பெருவளத்தான், பாண்டியன்நெடுஞ்செழியன் என்றற்றொடக்கத்தன தொடர்மொழியாய் நின்று ஒருபொருள் தந்த ஒருமொழி. கொற்றிமகன், †குன்றக்கூகை, உவாப்பதினான்கு, பதினொன்று என்றற்றொடக்கத்தன, தொடர்

---

* பதவியல், சூ - ௩, உரை. † சூறு. கஙுஙு.

மொழியாய்நின்று பலபொருள்தந்த தொடர்மொழித்தொடர்மொழிகள். எட்டு, கொட்டு, கொண்மூ, வேங்கை என்றற்றொடக்கத்தன, தொடர்மொழியாய்நின்று பல பொருள்தந்த எனலுமாய், ஒருமொழியாய்நின்று ஒருபொருள்தந்த எனலுமாய் நின்ற தொடர்மொழிப்பொதுமொழிகள். இவ்விருதிறமும் அறிந்துகொள்க.

இவ்வாறுநோக்கப் பொருளானே சொற்குக் குறியிட்டவாறும் ஆயிற்றென்க.

(பி - ம்.) 1 பெயரைக்கொண்டு. 2 வருங்காலத்து. 3 ஒன்றன்றிவாரா. 4 பகாதுபொதுநின்று. 5 குறிதாகச்சூலுவது. 6 பலபொருளினவேனும். 7 ஒரு பொருண்மையுணர்த்தலான். 8 புத்தகம். 9 என்க; இவ்வாறன்றி. 10 பலமொழி. ஒருபொருட்டாகக்கொள்ளவும் பலபொருட்டாகக்கொள்ளவும். 11 ஒருமொழித்தொடர்மொழிகள். (ந)

## (260.) மக்க டேவர் நரக ருயர்திணை
## மற்றுயி ருள்ளவு மில்லவு மஃறிணை.

எ - ன், மேல் 'இருதிணை' என்றார், அவை இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மக்களும் தேவரும் நரகரும் [1]உயர்திணையாம்; அவரை ஒழித்துநின்ற ஊர்வன தவழ்வன தத்துவன நடப்பன பறப்பன நிற்பனவான விலங்காதி உயிருள்ளனவும் [2]நீர் வளி தீ என்றற்றொடக்கத்து உயிரில்லனவுமான காட்சிமுதற்பொருளும், அணு உயிர் ஆகாயமென்றற் றொடக்கத்துக் கருத்துமுதற்பொருளும், கோடு சினை தோல் பூ மெய் வாய் கண் மூக்குச் செவி 3ஓசை நாற்றம் ஒளி சுவை ஊற்றுத்தொடக்கத்துக் காட்சிச்சினைப்பொருளும், உணர்தல் காண்டல் செய்தல் துய்த்தற் றொடக்கத்துக் கருத்துச் சினைப்பொருளுமாகிய எல்லாப்பொருளும் அஃறிணையாம். எ - று.

4உயரென்பது மிகுதி; திணையென்பது பொருள்; உயர்ந்த திணை உயர்திணையென வினைத்தொகை. உயர்திணையல்லாததிணை அஃறிணை; இழிதிணையென்றவாறு. இது பண்புத்தொகை. ஆண்பாலும் பெண்பாலுமடங்குதற்கு மக்கள் தேவர் நரகரெனக் கதிமேல்வைத்தோதினாரென்க. தேவரை முன்வையாது இவ்வாறு வைத்தகாரணம் என்னையோவெனின், மக்களுட்பிறந்தே தானமும் தவமுமியற்றி வானமும் வீடும் எய்தற்சிறப்பினான், முன்னே மக்களை

யும், அவ்வாறல்லது எய்தற்கு அருமைச்சிறப்பினான் அவர்பின்னே தேவரையும், தீவினையால்வருதலிழிபினான் அவர்பின்னே நரகரையும் வைத்தாரென்க. இன்னும் மானிடமென்பதும், ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி சனி கதிர் மதி திரு என்றற்றொடக்கத்து 5வாய்பாட்டான்வரும்பெயர்களும் அஃறிணைமுடிபினவாமென்றற்கும் அவ்வாறு வைத்தாரெனக்கொள்க.

வ - று. மகன்வந்தான், மகள்வந்தாள், மக்கள்வந்தார்; தேவன்வந்தான், தேவிவந்தாள், தேவர்வந்தார்; நரகன்வந்தான், நரகிவந்தாள், நரகர்வந்தாரென்பன உயர்திணை. யானைவந்தது, யானைகள்வந்தன; மரம்வளர்ந்தது, மரங்கள்வளர்ந்தன; நீர்வந்தது, நெருப்பெழுந்தது என்றற்றொடக்கத்தன அஃறிணை.

(பி - ம்.) 1 உயர்திணை; உவரையொழிந்துநின்றன. 2 நிலம் நீர்தீ. 3 முதலாகியஓசை. 4 உயர்வு. 5 வாய்பாட்டாற்கொண்டுமுடிபேற்றலின். (ச)

(261.) ஆண்பெண் பலரென முப்பாற் றுயர்திணை.

எ - ன், மேல் 'ஐம்பால்' என்றுபோதந்தார், அவற்றுள் உயர்திணை இனைத்துப்பாலுடைத்தென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) 1ஆணே பெண்ணே பலரேயென்னும் இம்மூன்று கூற்றையுமுடைத்து, உயர்திணை. எ - று.

எனவே இருதிணையுமொழிய ஐம்பாலென்று வேறுபொருள் இல்லையென்பதூஉம் இவை உயர்திணைப்பாலென்பதூஉமாயிற்று. அஃதேல், ஆணொருமையும் பெண்ணொருமையும் ஆண்பன்மையும் பெண்பன்மையும் இவ்விருவரதுபன்மையுமெனப் பால் ஐந்தாகற்பாற்றெனின், அம்மூவர்பன்மையும், வந்தார் சென்றாரென்னும் ஓரீற்று வாய்பாடே கொண்டுமுடிதலிற் பன்மையென ஒன்றாய் அடங்குமென்க. ஆண்பெண்ணென்பன அஃறிணைக்கும் ஒக்குமேயெனினும் அவ்விரண்டிற்கும் அஃறிணைக்கண், 2வந்ததென்பதல்லது வழக்கினுள் வேறு வாய்பாடின்மையின், ஆண்பால் பெண்பாலென்னும் வழக்கு உயர்திணைக்கேயாமென்க.

வ - று. அவன் வந்தான், அவள் வந்தாள், அவர் வந்தார் எனவரும்.

(பி - ம்.) 1 ஆண் பெண் பலரென இம்மூன்று. 2 வந்ததல்லது. (ரு)

(262.) ஒன்றே பலவென் றிருபாற் றஃறிணை.

எ - ன், ஐம்பாலுள் அஃறிணை [1]இனைத்துப்பாலுடைத்தென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒன்றும் பலவுமென்னும் இருபகுதியையுடையது, அஃறிணை. எ - று.

இவையே அஃறிணைப்பாலென்பதூஉமாயிற்று.

வ - று. அதுவந்தது, அவைவந்தன எனவரும்.

(பி - ம்.) [1] இத்துணைப்பால். (௬)

(263.) பெண்மைவிட் [1]டாணவா வுவபே டாண்பால்
ஆண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பால்
இருமையு மஃறிணை யன்னவு மாகும்.

எ - ன், ஐயமறுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) பெண்ணியல்பினைநீங்கி ஆண்மையினைஆசைப்படும் பொருள் ஆண்பாலனையவாம்; [2]ஆணியல்பினைநீங்கிப் பெண்மையினை ஆசைப்படும்பொருள் பெண்பாலனையவாம். இருவாதுதன்மையும் அஃறிணையைப்போலவுமாம், முடிபின்கண். எ - று.

இவையும் மக்கட்கதியினவேனும் அத்தன்மைநிரம்பாமையின், இவ்வாறு [3]முடியுமென்க. ஆசைப்படுவனவெனவே அத்தன்மையிலே [4]சிறிதுசார்த்தப்படுவனவாய் நிற்பனவென்பதாயிற்று.

வ - று. பேடன்வந்தான், பேடிவந்தாள், பேடர்வந்தார், பேடியர்வந்தார், பேடுவந்தது, பேடுகள்வந்தன எனவரும்.

"அழிதூஉ வகையு மவற்றின் பாலே" என்றார், ஆசிரியர் அவினயனாருமெனக்கொள்க.

(பி - ம்.) [1] ஆணவாவுறுபேடு. [2] ஆண்மையினை. [3] முடித்தாரென்க. [4] (க) சிறிதுஞ்சாரப்படலாய். (உ) சார்த்தப்படலாய். (எ)

(264.) படர்க்கை வினைமுற்று நாமங் குறிப்பிற்
பெறப்படுந் திணைபா லனைத்து மேனை
இடத்தவற் றொருமை பன்மைப் பாலே.

எ - ன், [1]திணையும் பாலும் தெரிதற்கு ஒருகருவி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) படர்க்கை [2]முற்றுவினையானும் படர்க்கைப்பெயரானும் சொல்லுவான்குறிப்பானும் இருதிணையும் ஐம்பாலும்அறியப்படும்; தன்மைமுன்னிலைவினைமுற்றுக்களாலும் பெயர்களாலும் ஒருமைப்பாலும் பன்மைப்பாலுமே அறியப்படுவன. எ - று.

வ - று. உண்டான், உறங்கினன்; ஓடினள், பாடினள்; அயின்றார், துயின்றார் எ - ம், உண்டது, உறங்கிற்று; ஓடின, ஆடின எ-ம் படர்க்கை முற்றுவினையாற் பாலும் திணையும் விளங்கின. அவன், ஒருவன், நமன், மகன், சேர்ப்பன், பார்ப்பான், அம்பர்கிழான் எ-ம், அவள், ஒருத்தி, நமள், மகள், தோழி, நங்கை எ - ம், அவர், மாந்தர், [3]மக்கள், பலர், சிலர் எ - ம், அது, யானை, குதிரை எ - ம், அவை, யானைகள், குதிரைகள் எ - ம் படர்க்கைப்பெயர்களால் திணை பால் விளங்கின. இனி, நீவந்தாய், நீவிர்வந்தீர்; யான்வந்தேன், யாம் வந்தேம் என்றக்கால் இருதிணைக்கும் ஆண்பால் பெண்பால்களுக்கும் பொதுவாய்நிற்கும். நீவருதலால் அறிவுபெற்றேன்; நீவருதலான் ஆசாரம்பெற்றேன் என்றக்கால்,உயர்திணையென்பதும் ஆண்பாலென்பதும் குறிப்பால் விளங்கும். நீவருதலான் முல்லை அரும்பின; நீயிர்தொக்குநிற்றலான் உடம்பாயிற்று என்றக்கால், மழையும் ஐம்பூதமுமென்பன குறிப்பான் விளங்கும். ஒருவரென்பது இருபாற்கும்பொது. ஒருவரான் அரியதவம்பெற்றேனென்றக்கால், ஆண்பாலென்பதும், ஒருவரால் அரிய மடல்பெற்றேனென்றக்காற் பெண்பாலென்பதும் குறிப்பான் விளங்கும். அறிவும் தவமும் பெண்பாலாற் [4] பெறலரியவோவெனின், “நுண்ணறிவுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறி வென்பது பெரும்பேதைமைத்தே” எனச் சான்றோர் [5]சொல்லுபவாகலான் அரியவென்க. உண்டேன், உண்டேம்; உண்டனை, உண்டனிர் எ-ம், யான், யாம், நீ, நீர், நீயிர் எனவும் வரும் தன்மை முன்னிலைவினையும் பெயரும் ஒருமைபன்மை மாத்திரையே விளக்கினவாறுகாண்க.

வினையை முற்கூறினார், பெயரால் திணைபாலறிதல் சிறுபான்மைத்தென்பதூஉம், சாந்தரைக்கும், பூத்தொடுக்குமென்றற்றொடக்கத்து ஒருசார்வினைகள் ஆண்பால் பெண்பால் விளக்காவென்பதூஉம் அறிவித்தற்கெனக்கொள்க. மேற் பெயர்வினையோத்துக்களிலே திணைபால்விளங்குமேனும் தொகைவகையான் அறிதற்கு ஈண்டு இவ்வாறு சொன்னாரெனக்கொள்க.

(பி - ம்.) 1 (௧) திணைபாலிரண்டும்தெரிவதற்கு. (௨) திணைபாலையந் தெரிதற்கு. 2 வினைமுற்றுமாம். 3 மைந்தர்மக்கள். 4 பெறலாகாவோவெனின். 5 சொல்லுவராதலானறிக. (அ)

(265.) தன்மை முன்னிலை படர்க்கைமூ விடனே.

எ - ன், முன்னர் மூவிடமென்றார், அவை இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தன்மையும் முன்னிலையும் படர்க்கையுமென்னும் இவை மூன்றிடமாவனவாம். எ - று.

வ - று. யான், யாம், நான், நாமெனவும், நீ, நீர், நீயிர், நீவிர், எல்லீரெனவும், அவன், அவள், அவர், அது, அவையெனவும் மூவிடப்பெயர்வந்தவாறு. உண்டேன், உண்டேமெனவும், உண்டனை, உண்டனிரெனவும், உண்டனன், உண்டனள், உண்டனர், உண்டது, உண்டனவெனவும் மூவிடவினை வந்தவாறு. (௯)

(266.) இலக்கண முடைய திலக்கணப் போலி
மரூஉவென் றாகு மூவகை யியல்பும்
இடக்க ரடக்கன் மங்கலங் குழூஉக்குறி
எனுமுத் தகுதியோ டாறும் [1]வழக்கியல்.

எ - ன், மேல் வழக்கின்கண்ணு மென்றார், அஃது இஃதென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இலக்கணநெறியால் வருவதும் [2]இலக்கண மன்றெனினும் இலக்கணமுடையதுபோல [3]அடிப்பட்டசான்றோரால் வழங்கப்பட்டுவருவதும் இலக்கணத்திற் சிதைந்துவருவதுமென இம்மூன்றுவகையானும்வரும் இயல்புவழக்கு, இடக்கரடக்கிச் சொல்லுவதும் மங்கலமரபினாற்சொல்லுவதும் ஒவ்வொரு குழுவினுள்ளார் தத்தம் குறியாக இட்டுச்சொல்லுவதுமென்னும் இம்மூவகைத் தகுதி [4] வழக்கினோடுங்கூட ஆறுவகைப்படும், வழக்குநெறி. எ - று.

வ - று. நிலம், நீர், தீ, வளி, ஆகாயம், சோறு, கூழ், பால், பாளிதம், தெங்கு, கமுகு, மா, பலா, [5]மாந்தர், மக்கள், மகன், மகள் என்றற்றொடக்கத்தன இலக்கணமுடையன. இல் முனென்பதனை முன்றிலென்றும், கோவிலென்பதனைக் கோயிலென்றும், பொதுவிலென்பதனைப் பொதியிலென்றும், கண்மீயென்பதனை மீகணென்றும்,

யாவரென்பதனை யாரென்றும், [6]எவனென்பதனை என்னென்றும் இப்பெற்றியான்வருவன இலக்கணப்போலி. அருமருந்தன்னனென்பதனை அருமந்தானென்றும், [7]நாட்டுவியத்தானென்பதனை நாட்டியத்தானென்றும், மலையமானடென்பதனை [8]மலாடென்றும், சோழனடென்பதனைச் சோணடென்றும், பாண்டியனடென்பதனைப் பாண்டிநாடென்றும், கிழங்கன்னபழஞ்சோறென்பதனைக் கிழங்கம்பழஞ்சோறென்றும், மட்கட்டியென்பதனை மண்ணங்கட்டியென்றும், பொற்கட்டியென்பதனைப் பொன்னங்கட்டியென்றும் வருவனவும் இவ்வாற்றான் வருவனபிறவும் மரூஉமொழி.

இவற்றுள் இலக்கணப்போலி அடிப்பாட்டிற்றிரிக்கப்[9]படா; தாமேயாய்நிற்கும்; முன்றிலெனவும், கோயிலெனவும்வரும். மரூஉமொழி இலக்கணத்தானும் சிதைவானுஞ் சொல்லப்படுவன; அருமருந்தன்னன் அருமந்தானென வரும். இவையே இரண்டற்குந் தம்முள்வேற்றுமையென்றறிக.

கண்கழீஇவருதும், கான்மேல்நீர்பெய்துவருதும், வாய்பூசிவருதும், அந்திதொழுதுவருதும், கைகுறியராயிருந்தார், பொறையுயிர்த்தாரென்றற்றொடக்கத்தன இடக்கரடக்கல். இவை செய்யுளகத்தும், "புலிநின்றிறந்தநீரல்லீரத்து" எ - ம், "கருமுகமந்திசெம்பினேற்றை" எ - ம் வரும். செத்தாரைத் துஞ்சினரென்றும், ஓலையைத் திருமுகமென்றும், காராட்டை வெள்ளாடென்றும், இடுகாட்டை நன்காடென்றும், பிறவும் இவ்வாற்றான்வருவன மங்கலமரபினான்வருவன. பொற்கொல்லர் பொன்னைப்பறியென்றும், வண்ணக்கர் [10]சாணத்தை நீலமென்றும், யானைப்பாகர் ஆடையைக் காரையென்றும், [11]வேடியர் கள்ளைச் சொல்விளம்பியென்றும், [12]இழிசினர் சோற்றைச் சொன்றியென்றும், பிறவும் இவ்வாறு வருவனவெல்லாம் குழூஉக்குறி.

இவற்றுள், முதன்மூன்றும், ஒருகாரணமின்றியே இயல்பாய் வருதலின் இயல்புவழக்கென்றாயின. ஏனைமூன்றும், அவ்வாறன்றி உயர்ந்தோரும் இழிந்தோரும் இவ்வாறுமொழிவது தக்கதென்று கொண்டு வழங்குதலின், தகுதிவழக்கென்றாயின.

(பி - ம்.) 1 வழக்கே. 2 இலக்கணமின்றேனும். 3 உட்பட்டசான்றோரால். 4 வழக்கொடுகூட்ட. 5 மரம் தாய் மக்கள். 6 யானென்பதனை என்னென்றும். 7 நாட்டுவித்தானென்பதனை நாட்டிவித்தானென்றும். 8 மலை

நாடென்றும். 9 படாதமையாய். 10 (க) காணத்தை; (உ) காரத்தை. 11 வேடர். 12 இழிசீனர்.

(கO)

(267.) பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல
சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்
வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்.

எ - ன், மேற்செய்யுளென்றார், அஃது இஃதென்பதுணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) பல்வகைப்பட்ட தாதுக்களினான் உயிர்க்கிடனாக இயற்றப்பட்ட உடம்புபோலப் பல்வகைச்சொற்களானும் பொருளுக் கிடனாகத் தங்களறிவினாற் கற்றுவல்லோர் அலங்காரந்தோன்றச் செய்வன, செய்யுளாம். எ - று.

பலசொல்லாவன: பொருளாதிஅறுவகைப்பெயர்களுள், ஒரு பொருள்குறித்தபலசொல்லாகியும் பலபொருள்குறித்த ஒருசொல்லா கியும்வரும் பெயர்த்திரிசொற்களும், பவ்வீறும் மாரீறுமான படர்க் கைமுற்றும், அல் அன் என் ஏன் கு டு து று அம் ஆம் எம் ஏம் கும் டும் தும் றும் என்னுமீற்றுத் தன்மைமுற்றும், ஐயும் இய்யும் மின் னுமாமீற்றுமுன்னிலைமுற்றும், ககார யகார ரகாரவீற்று வியங்கோ ண்முற்றும், செய்து, செய்பு, செய்யா, செய்யூ, செய்தென, செய, செயின், செய்யிய, செய்யியர், வான், பான், பாக்கு என்னும்வினை யெச்சமும், ஒழிந்த ஈறுகளான்வரும் [1]வினைத்திரிசொற்களும், இடைத்திரிசொற்களும், உரித்திரிசொற்களும், ஆனும் ஒடுவும் இன்னும் ஆதுவும் அவ்வும் பின் மூன் இல்லென்னும் மூன்றுமொழித்தொ ழிந்த கண்முதலான எல்லா ஏழனுருபுமான இவ்வுருபீற்றுமொழிக ளும், வலித்தன்முதலான விகாரமொழிகளும், [2]தொகைநிலைமொழி களும் *"ஆடாவடகு" †"தீத்தீண்டுகையார்" என்பனமுதலான குறிப்புமொழிகளும், ‡"பறவாக்குளவி" §"பாயாவேங்கை" முத லான வெளிப்படைமொழிகளும், மூன்றிறந்தஅடுக்குமொழிகளும், எழுத்ததிகாரத்துட் செய்யுட்கென்று விதந்தோதினவுமுதலானசெ ய்யுட்சொற்களும், இவையல்லாவழக்குச்சொற்களும், திசைச்சொற் களும், வடசொற்களுமெனக்கொள்க.

எனவே, சொல் எழுத்தாற் பெறப்படுதலின், எழுத்துச்

* தீணமா. ௬. † தீணமா. ரு. ‡ பறவாக்குளவியென்றது, காட்டு மல்லிகையை. § பாயாவேங்கையென்றது, வேங்கைமரத்தை.

சொற் பொருள் அணியென்னும் நான்கினும்நடப்பது யாப்பென்ப தாயிற்று. ஆகவே, ஐந்ததிகாரங்களும் தம்முள் ஒன்றையொன்று இன்றியமையாவெனக்கொள்க.

வ - று. "கங்க னகன்மார்பன் கற்றோர்க் கினிதளிக்குஞ், 3 செங்கனக வெள்ளைச் செழுமணிக - ளெங்கும், தெறித்தனவே போல்விளங்கு 4மீன்சூழ்ந்த திங்க, ளெறிக்குநிலா வன்றோ வினி" எனவரும்.

(பி - ம்.) 1 ஏனைவினைச்சொற்களும். 2 தொகைநிலைத்தொடர்மொழிகளும். 3 செங்கனகம். 4 மீன்சூழத். (கக)

(268.) ஒன்றொழி பொதுச்சொல் விகாரந் தகுதி
ஆகு பெயரன் மொழிவினைக் குறிப்பே
முதறொகை குறிப்போ டின்ன பிறவும்
குறிப்பிற் றருமொழி யல்லன வெளிப்படை.

எ - ன், மேல் 'வெளிப்படைகுறிப்பு' என்றார், அவை இவை யென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இருதிணையிடத்தும் ஆண்பால் பெண்பால்களுள் ஒன்றனையொழித்துநிற்கும் பொதுச்சொல்லும், தலைக்குறைத்தல் முதலான ஒன்பதுவிகாரச்சொற்களும், மூவகைத் தகுதிவழக்கு மொழிகளும், ஆகுபெயர்ச்சொற்களும், அன்மொழித்தொகைச் சொற்களும், வினைக்குறிப்புமொழிகளும் முதல்நிற்கும் 'எழுத்து மாத்திரமும் மொழிமாத்திரமுங்காட்டிநிற்குமொழிகளும், பொருட்டொகையைத் தோற்றிநிற்குமொழிகளும், குறிப்பாய்வருமொழிகளுடன் இவைபோல்வனபிறவும் குறிப்பினாற்பொருளைக்காட்டுமொழிகளாம். இவ்வாறன்றி வருவனவெல்லாம் விளங்கிநின்று பொருளைக்காட்டுமொழிகளாம். எ - று.

வ - று. வடுகரசர்ஆயிரமக்களையுடையார்; ஆயிரம்யானைகளையுடையார் எ - ம், 2பெருந்தேவிபொறையுயிர்த்தகட்டிற்கீழ் நால்வர் மக்களுளர், நம்பி3நூறெருமையையுடையன் எ - ம் பெயர்கள் குறிப்பினன் இருதிணைப்பெண்ணையும் ஆணையும் ஒழித்தன. கருவூரார் நிரைகொண்டார், இன்று இவ்வூர்ப்பெற்றமெல்லாம் உழவொழிந்தன எ - ம், மருவூரார், 4தைந்நீராடினார், இன்று இவ்வூர்ப்பெற்றமெல்லாம் 5அறத்திற்குக்கறக்கும் எ - ம் வினைச்சொற்கள் இருதிணைப்பெண்ணையும்ஆணையுமொழித்தன. பிறவுமன்ன.

"மரைமலர் குலிகமொ டிகலிய வங்கை", *"ஆடிப்பாவை போல, [6]மேவின செய்யுந்தன் புதல்வன் றாய்க்கே" †"வறிதுநிலைஇய காயமும்" எனஇவை முதற்குறைந்தும் தாமரைமலர், இங்குலிகம், கண்ணாடி, ஆகாயமெனக் குறிப்பினான் அறியவந்தன. ‡"வேனி [7] லோதிப்பாடுநடை" §"எல்லாவிஃதொத்தன்" என இவை இடைக்குறைந்தும் [8]ஒத்தி ஒருத்தனென்று குறிப்பினான் அறியவந்தன. ¶"நீனிறப் பெருங்கடல்," $"தாமரை, முளை [9]நிவந்தவைபோலு முத்துக்கோ லவிர்தொடி" என இவை கடைக்குறைந்தும் நீலம், கோலமெனக் குறிப்பினான் அறியவந்தன. பிறவுமன்ன.

மூவகைத் [10]தகுதிவழக்கிற்கு மேற்காட்டினவே கொள்க.

கடுத்தின்றார், புளித்தின்றார், தெங்குதின்றார் என இவ்வாறு பெயர்கள் குறிப்பினான் இவற்றின் காய்தின்றாரென அறியவந்தன.

"பொற்றொடி தந்தபுனைமடல்" (இ - வி. சூ. ருச, கஎ0 - உரை.), "அறற்கூந்தற் கில்லை யருள்" (இ - வி. சூ. கஎ0 - உரை.) என இவ்வன்மொழித்தொகை, பொற்றொடிமேலும் அறற்கூந்தன்மேலும் செல்லாது குறிப்பினான் இவற்றையுடையாரை அறியவந்தன.

குழையன், பொன்னன், நிலத்தன், மூவாட்டையான், [11]மார்பன், கரியன், ஊணன், அல்லன், இல்லன், வல்லன், நல்லன், தீயன், அணியன், வடாதுவேங்கடம், **"தெனாது.........குமரி" என்னும் குறிப்புவினைச்சொற்கள் குறிப்பினானன்றி வினையறியலாகாமையின் வினைக்குறிப்புமொழிகள்.

"குன்று விளையு ளுயர்நிலந் துன்புற்றுத், தாவென் றிரப்பாடன் கை." என்னுமிதனுள், 'குன்று'என்புழிக் குரல் நரம்பும், 'விளையுள்' என்புழி விளரிநரம்பும், 'உயர்நிலம்' என்புழி உழைநரம்பும், 'துன்புற்று' என்புழித் துத்தநரம்பும், 'தாவென்று' என்புழித் தாரநரம்பும், 'இரப்பாள்' என்புழி இளிநரம்பும், 'கை' என்புழிக் கைக்கிளைநரம்புமென்பன குறிப்பான் முதனின்ற எழுத்தான் அறியவந்தன. "இல்லென்பான் கையிற் ††[12]குடாஅ விரகிலிக், குள்ளமெதன் றுய்ப்பதென் றான்." இதுவுமது. "ஓங்கெழின் முதலாக், குன்று

* குறு. அ. † புறநா. ௩0. ‡ நற். கஉ. § கலி. சுக. ¶ அகநா. சுO. $ கலி. ருக. ** புறநா. சு. †† 'குடா' என்பதற்கு இங்கே கொடாவென்று பொருள்கொள்க; உகர ஒகரங்கள் சிலவிடத்து ஒத்துவருவதுண்டு.

கூதிர் பண்பு தோழி, விளியிசை முத்துற மென்றிவை யெல்லாந், தெளிய வந்த செந்துறைச் செந்துறை" என்னுமிதனுள், 'ஓங்கெழில்' என்புழி, "ஓங்கெழி லகல்கதிர் பிதிர்துணி மணிவிழ முந்நீர் விசும்பொடு [13]பொருதலற" என்னும் பாட்டும், 'குன்று' என்புழி, "குன்று குடையாக் குளிர்மழை தாங்கினன்" என்னும் பாட்டும், 'கூதிர்' என்புழி, "கூதிர்கொண்டிருநீங்கும்" என்னும் பாட்டும், 'பண்பு' என்புழி, "பண்புகொள் செயன்மாலை" என்னும் பாட்டும், 'தோழி' என்புழி, "தோழி வாழி தோழி வாழி, வேழ மேறி வென்ற தன்றியும்" என்னும் பாட்டும், 'விளியிசை' என்புழி, "விளியிசைப்ப விண்ணகநடுங்க" என்னும் பாட்டும், 'முத்துறழ்' என்புழி, "முத்துற ழகலந்தேங்கி" என்னும் பாட்டும் குறிப்பினன் [14]முதனின்றமொழியான் அறியவந்தன. பிறவுமன்ன.

"* ஒன்றி லிரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினல், வென்று களங்கொண்ட வேல்வேந்தே-சென்றுலா, மாழ்கடல்சூழ் வையகத்து ளைந்துவென் றுறகற்றி, யேழ்கடிந் தின்புற்[15]றிரு." (ஒன்று-ஞானம்; இரண்டு - தானும் தலைவனும்; மூன்று - காம வெகுளி மயக்கம்; நான்கு - சதுரங்கசேனை; ஐந்து - பஞ்சேந்திரியம்; ஆறு - காமக் குரோத லோப மோக மத மாற்சரியம்; ஏழ் - பிறப்பேழு,) "†அலங் குளைப் புரவி யைவரொடு சினைஇ, நிலந்தலைக் கொண்ட" (ஐவர் - பாண்டவர்) என்னும் இவை குறிப்பினல் தொகைப்பொருள் அறிய வந்தன.

"உவர்க்கட லன்ன செல்வரு முளரே." (இவர் உலோபர்) "கிணற்றூற் றன்ன நீயுமா ருளையே", "[16]செல்வர்தாம் பெருந்திரு வுறுக பல்பக, [17]னீவா ழியரோ நெடிதே [18]யீயாச்,சிறுவிலைக் [19]காலத் தானு, முறுபொரு டந்தெஞ் சொற்கொள் வோயே" (இவர் உதாரர்) "‡பலசான் றீரே பலசான் றீரே, கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட், பயனின் மூப்பிற் பலசான் றீரே," §"அறனே மற்றிது விறன்மாண் குடுமி, யின்னு வாகப் பிறர்மண்கொண், டினிய செய்தி நின் [20]னுர்வலர் முகத்தே," ¶"நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப், போதர விட்ட நுமருந் தவறிலர், நிறையழி கொல்யானை நீர்க் குவிட் டாங்குப், பறையறைந் தல்லது செல்லற்க வென்னு, விறையே தவறுடை யான்" [21]எனவும், 'நீயிர் பெரிதுமறிதிர்' எனவும்,

---

* பு - வெ. பாடாண். ௩௭.  † புறநா. ௨.  ‡ புறநா. ௧௯௫.
§ புறநா. ௧௨.  ¶ கலி. ௫௬.

[22]'கற்கறித்து நன்கட்டாய்' எனவும் வருமிவை சொல்லுவான் குறிப்பினாற் பொருளறியவந்தன.

இனி, இன்னபிறவும், என்றதனால், *"கோடாப் புகழ்மாறன் கூட லணையானை, †யாடா வடகினுளுங் காணேன்போர் - வாடாக், கருங்கொல்வேன் ‡மன்னர் [23]கலம்புக்க கொல்லோ, மருங்குல்கொம் பன்னாண் மயிர்", §"மையார் தடங்கண் மயிலன்னாய் ¶தீத்தீண்டு, கையார் பிரிவித்தல் காண்", $"அற்ற மின்றி நின்றசீ **ரழற் பெயர்ப் புணர்ச்சியான், முற்றுமுன் சடிப்பெயர் மூன்றுலகு மான் றெழ",††"அன்ன மனையா ‡‡ரயகண்டன் றேவிமார்" என இவ்வாறு வருவனவும், "சோலையை யோரெழுத்தா லென்சொல்லுந் தொக்க தன்மே, னீலப்பே ரெவ்வெழுத்தி னுனிரம்பு - மாலைக், குடைவேந் தன் சென்னி குலநதியின்பேரைக், கடைசேர்ந்த வோரெழுத்தாற் காண்" (கா, காவி, காவிரி.) என இவ்வாறு எழுத்துப்பெருக்கமாய் வருவனவும், "ஆற்றின்பே ரீற்றி னெழுத்தொழிய வின்பஞ்சேர், நாற்கால தாமீற் றுயிர்நடப்ப - வேற்புடைய, உண்பயனு மாங்கதனி னீறெழிந்தா லோதுநூற், கின்பஞ்சேர் செய்யுளா மின்று"(பாலாறு, பாலா, பால், பா) இவ்வாறு எழுத்துச்சுருக்கமாய் வருவனவும், "வாம மணிமே கலையார் மயிர்குறுகி, னுமவர் பெய்யு மணிகுழை - ஏம, மயிர்நிறுவி மற்றதற்கோர் புள்ளி கொடுப்பிற், செயிர்தீர் மரமாகுஞ் சென்று." (கூழை, குழை; ஓதி, ஓ்தி) இவ்வாறு மாத் திரைச்சுருக்கமாய் வருவனவும், "பூமேலா ளாரென்பார் பூம்போர் வை யென்செய்யுந், தீமேற் படிற்கொடுத்தாற் கொள்வதெவ - னுமே, நலந்திகழுஞ் செங்கோ னயதீர னெங்கோன், சிலம்பன் றிருவேங் [24]கடன்" இவ்வாறு வினாவுத்தரமாய்வருவனவும், "நீத்தொழிந்த வாறைந் தடக்கிபின் னிச்சயமே, வாய்த்தமைந்த வாயில்பெண் ணுனையுங் - கூத்தற்கு, வாளேறு டோசை விளைநில மிவ்வல்லாற், கேளா யுடன் வருவதில்." (நிலையாமைகடைப்பிடி; புண்ணியஞ்செய்) "எழுதுவரிக் கோலத்தா ரீவாற்.குரியார், [25]தொழுதிமையார் கண் ணமைந்த தோட்டார் - [26]பழுதகல, நாணிற் செறிந்தார் நலங்கிள்ளி நாடோறும், பேணற் கமைந்தார் பெரிது." (பொத்தகம்) (தொல்.

* திணைமா. ௬. † அடகு - பண்ணை; ஆடாவடகு - மகளிர்விளையாட்டு. ‡ மன்னர்கலம் - முடி(தலைமயிர்.) § திணைமா. ௫ ¶ தீத்தீண்டுகையார் - வேங் கை (ஒருமரம்.) $ சூளா. இரத. கக. †† அழற்பெயர்ப் புணர்ச்சியான் முற்றுமுன்செடிப்பெயர் - ஜ்வலனஜடியென்பது ** சூளா. அரசியற். ௩௩. ‡‡ அயகண்டன் - அச்சுவக்கிரீவன்.

சொல். சூ. சசக. சே. உரை) இவ்வாறு பிரேளிகையாய் வருவனவும் [27]யூகிப்பயிற்சொல்லாய்வருவனவும் இன்னபிறவும் குறிப்பாற் பொருளுணர்த்துவனவாமெனக்கொள்க.

இவ்வாறன்றி, உயிர் உணர்வு உடம்பு தலை கண் செவி வாய் மூக்கு கை கால் சோறு கூழ் பால் பாகு பாளிதம் [28]பொன் மணி முத்து நிலம் நீர் மரம் கமுகு தெங்கு யானை குதிரை ஒன்று இரண்டு கழஞ்சு துலாம் நாழி குறுணி கலமெனவும், * "நல்லா றெனப் படுவ தியாதெனின் யாதொன்றுங், கொல்லாமை சூழு நெறி." † "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற், கெழுமையு மேமாப் புடைத்து." எனவும் இப்பெற்றிச்செப்பத்தாற் பொருள்தருவன வெல்லாம் வெளிப்படையெனக்கொள்க.

(பி - ம்.) 1 எழுத்துமாத்திரங்காட்டிநிற்கு மொழிகளும், மொழிமாத் திரங்காட்டிநிற்கு மொழிகளும். 2 அரசன் பெருங். 3 றூற்றெருமை. 4 (க) சித்திரைநீர்; (உ) ஆதிரைநீர். 5 அறத்திற்கே. 6 (க) மேவனசெய் யுங்; (உ) ஏவினசெய்யுங். 7 ஒத்தி. 8 ஒருத்தி. 9 (க) நிமிர்ந்தவை; (உ) நிவந் தன. 10 தருதிக்கு. 11 கண்ணன். 12 கொடாஅ. 13 பொருதெழ. 14 முன் னின்ற. 15 இயல். 16 செல்வர்தம். 17 நீவாழியவே. 18 அயாஅச். 19 காலத் தாயினும். 20 நாவலர். 21 இதற்குத்துறை பாங்கி களிற்றிடை யுதவிக்கறத் தொடுநிற்றலெனவும். 22 (க) கற்கறித்துங்கறிநன்கு. (உ) கற்கறித்துக் கறி. 23 களம். 24 கடம். 25 தொழுதிமைக்கண்ணணைந்த. 26 முழுதகலா. 27 யூகிப்பயிர்ச்சொல். 28 பொன் கமுகு. (கஉ)

(269.) அதுவே,

இயற்சொற் றிரிசொ லியல்பிற் பெயர்வினை
எனவிரண் டாகு மிடையுரி யடுத்து
நான்குமாந் திசைவட சொல்லணு காவழி.

எ - ன், மேல் அவ்வாற்றாற்பகுத்தசொல் இவ்வாற்றான் இத் துணையாமென்பதுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்கூறப்பட்ட சொல்லே, இயற்சொல் திரிசொல் லென்னும் கூறுபாட்டான் வருவனவான பெயர்ச்சொல்லும், வினைச் சொல்லுமென [1]இரண்டாம்; இடைச்சொல்லும் உரிச்சொல்லுமென் னும் இவ்விரண்டுங்கூட நான்கு கூறுபாட்டதாம்; திசைச்சொல்லும் வடசொல்லும் கூடாதவிடத்து. எ - று.

* திருக். கஉச. † திருக். கநஅ.

இதனாற்போந்தபொருள், [2]பெயரியற்சொல், பெயர்த்திரிசொல், வினையியற்சொல், வினைத்திரிசொல், இடையியற்சொல், இடைத்திரிசொல், உரியியற்சொல், உரித்திரிசொல்லென எண்வகைத்தாம், தமிழ்நாட்டிற்குரியசொல்லென்றவாறு.

'நான்குமாம்' என்ற உம்மையான், அவையும் இயற்சொற் றிரிசொல்லாகியும் அவற்றுட் சிலஇடைச்சொல் பெயர்வினைகளாகியும் உரிச்சொல்லுட்சில வினையாகியும் பெயராகியும் வருவன உளவெனக் கொள்க. அஃதேல், பெயர்வினையிடையுரிநான்காகுமென்று ஒன்றாகவோதலமையும்பிறவெனின், அவை பெயர்வினைபோல இலக்கண முற்றும் ஒரு தலையாகவேற்றுத் திணைபாலிடங்களைவிளக்கித் தனித்துநடவாவாகலின் வேறோதல்வேண்டுமென்க.

மற்று, மற்றை, பிறஎன்றற்றொடக்கத்தன, பெயரிடைச்சொல்; போல, புரைய, ஒப்ப, உறழ என்றற்றொடக்கத்தன, வினையிடைச்சொல்; சால, உறு, தவ, நனி, கழி என்றற்றொடக்கத்தன, உரிச்சொற்கள்.

'திசைவடசொல்லணுகாவழி' எனவே இப்பகுதிப்படுவது தமிழ்நாட்டிற்குரியசொல்லென்பதூஉம், திசைச்சொல்லும் வடசொல்லும் ஈண்டுச்சேரவும் பெறுமென்பதூஉம், சேர்தல் ஒருதலையன்மையின் அவற்றிற்கு இலக்கணம் ஈண்டுக் [3]கூறாரென்பதூஉமாயிற்று.

[4]இனி, இவ்வெட்டனுட் பெயர்ச்சொல்லிரண்டையும் ஒருமொழி, தொடர்மொழி, பொதுமொழியான மூன்றினானும்உறழ ஆறாம்; அவற்றை இருதிணையும் பொதுவுமான மூன்றினானும்மூணப் பதினெட்டாம்; அவற்றை ஐம்பாலும் பொதுவுமான ஆறனுமாற நூற்றெட்டாம்; அவற்றை மூன்றிடத்தானும்பெருக்க, முந்நூற்றிருபத்துநாலாம்; அவற்றை இடுகுறிமுதல் நான்கினானும் [5] தாக்க ஆயிரத்திருநூற்றுத்தொண்ணூற்றாறாம்; அவற்றைப் பொருளாதியாறினாலும்பொர ஏழாயிரத்தெழுநூற்றெழுபத்தாறாம். வினைச்சொல்லையும் இவ்வாறே முந்நூற்றிருபத்துநான்களவும்பெருக்கி அவற்றை இருமுற்றீரெச்சங்களான நான்கினானும்பெருக்க ஆயிரத்திருநூற்றுத்தொண்ணூற்றாறாம். இடைச்சொல்லிரண்டையும் இடைச்சொல், பெயரிடைச்சொல், வினையிடைச்சொல்லான மூன்றானுமுறழ ஆறாம். உரிச்சொல்லிரண்டையும் வினைச்சொல், இயற்குணப்பெயர், தொழிற்குணப்பெயரென்னும் மூன்றினானுமுழற

ஆறும். ஆக நால்வகைத்தமிழ்மொழிவிரிஎண் ஒன்பதினாயிரத்தெண் பத்துநாலாம். இவ்வாறன்றிப் பிறவாற்றானும்பெருக்கப் பெரிதும் பலவாம். இவ்வாறுபெருக்கினாலும் ஏற்குமாறு அறிந்துகொள்க.

(பி - ம்.) 1 இரண்டாய்இடைச். 2 பெயரியற்சொல்லும்..... ...உரித் திரிசொல்லுமென. 3 கூறுமென்பதூஉம். 4 இவ்வெட்டனுள். 5 (க) பெரு க்க ; (உ) மாற. (கரு)

## (270.) செந்தமி ழாகித் திரியா தியார்க்கும் தம்பொருள் விளக்குந் தன்மைய வியற்சொல்.

எ - ன், "மேல் இயற்சொல்" என்றார், அஃது இஃதென்ப துணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) செந்தமிழ்நிலத்துமொழியாய்ச் சொல்லானும்பொரு ளானும்திரிபின்றிக் கற்றார்க்கும் கல்லாதார்க்குமொப்பத் தம்பொரு ள்விளக்கும் இயல்பினையுடையன இயற்சொல்லாவன. எ - று.

வ - று. அவன், அவள், மகன், மகள், மக்கள், மாந்தர், உட ம்பு, உறுப்பு, பொன், மணி, முத்து, மாலை, மணல், நீர், நெருப்பு, காற்று, சோறு, புடைவை, யானை, குதிரை, மயில், குயில், மா, பலா, தெங்கு, கமுகு எ - ம், நிலம், மண், தறை, மேடு, பள்ளம், குளம், குழி, யாறு, கடல் எ - ம், யாண்டு, பருவம், திங்கள், இன்று, நாளை, இரா, பகல் எ - ம், தலை, முகம், கண், காது, கை, கால், கொம்பு, கொழுந்து, இலை, பூ, காய், பழம், வேர் எ - ம், உணர்வு, ஒளி, கறுப்பு, சிவப்பு, வட்டம், சதுரம், வெம்மை, தண்மை, கைப்பு, புளிப்பு, துவர்ப்பு, [1]உவர்ப்பு, உறைப்பு, ஒப்பு, பொலிவு எ - ம், நிற் றல், இருத்தல், கிடத்தல், நடத்தல், ஓடல், பாடல், கொள்ளல், கொடுத்தல் எ - ம் [2]பொருளாதியாறுபொருளையும் பெயரியற்சொல் விளக்கினவாறு. உண்டான், உறங்கினான், நின்றான், நினைந்தான், எழுதினான், ஓதினான், பார்த்தான், பழித்தான், வந்தான், போனான் என வினையியற்சொல்வந்தவாறு. மற்று, மற்றை, பிற என இடை யியற்சொல்வந்தவாறு. *குழக்கன்று, உப்புக்கூர்த்தது, [3]அலமந்து திரியாநின்றான், அதிர்ந்திருந்தான், நோய்தீர்ந்தது என உரியியற் சொல்வந்தவாறு. பிறவும் இவ்வாறேவழங்குமியற்சொற்களெல்லாம் ஆராய்ந்துகொள்க.

---

* நாலடி. பழவினை, க.

(பி - ம்.) [1] கூர்ப்பு, காழ்ப்பு, தித்திப்பு. [2] பொருளாதியாறும்பெயரியற்சொல். 3 அலந்து. (கச)

(271.) ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்
பலபொருள் குறித்த வொருசொல் லாகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் லாகும்.

எ - ன், மேல்நிறுத்தமுறையானே திரிசொல்லாவனஉணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) ஒருபொருளைக்கருதிய பலசொல்லாகியும், பலபொருளைக்கருதியஒருசொல்லாகியும், கல்லாதார்க்கு அறியலாகாப்பொருளவாவன, [1] திரிசொல். எ - று.

இச்சொல்லிற்கு வேறோர்இயற்சொற் கொடுவந்து திரித்துச் சொல்லவேண்டுதலால், திரிசொல்லெனக்கொள்க. இதற்குப் பிறவாறுசொல்லுவாருமுளர்.

வ - று. வெற்பு, விலங்கல், விண்டு, அடுக்கல், பொற்றை, பொருப்பு, பொறை, அறை, நவிரம், குன்று, குவடு, வரை, சிலம்பு, ஓங்கல் எ - ம், படி, பார், புடவி, பொழில், இடம் எ - ம், எல்லி, கங்குல், அல்கல், அல் எ - ம், கொங்கை, குரூக்கண், குயம், வல்லு எ - ம், சுணங்கு, துத்தி, உத்தி, திதலை, தொய்யில் எ - ம், துய்த்தல், மிசைதல், நுகர்தல், அயிறல் எ - ம் இவை முறையே பொருளாதியாறனுள், ஒருபொருள்கருதிய பலபெயர்த்திரிசொல். இயங்கினன், ஏகினன் எனவிவை ஒருதொழில்குறித்த பலவினைத் திரிசொல். சாத்தனே, வந்தாயே; கூத்தனோ, வந்தாயோ எ - ம், "*ஓஒ [2]வுவம னுறழ்வின்றி யொத்ததே", "†குறவரு மருளுங் குன்றம்" எ - ம் வருமிவை வினைஒருமையினும் உயர்வுசிறப்பொருமையினும்வந்த பலவிடைத்திரிசொல். உறு, தவ, நனி, கழி எனுமிவை மிகுதியொருமையைத்தழுவிய பல உரித்திரிசொல். பிறவுமன்ன.

இனிப் பலபொருள்குறித்த ஒருபெயர்த்திரிசொல்வருமாறு: உந்தி, ஓடை, நறவம், வாரணம் என்றற்றொடக்கத்தன. இவற்றுள், உந்தியென்பது, கொப்பூழினையும் ஆற்றிடைக்குறையினையும் தேர்த்தட்டினையும் யாழ்ப்பத்தற்றுளையினையுமுணர்த்தும். ஓடையென்

* கலிவழி. ௩௬. † மலைபடு. உ௭௫.

பது, யானைப்பட்டத்தினையும் ஒருமரத்தினையும் ஒருகொடியினையும் நீர்நிலையினையுமுணர்த்தும். [3]நறவமென்பது, கள்ளினையும் ஒருகொடியினையுமுணர்த்தும். வாரணமென்பது, கோழியினையும், பன்றியினையும், யானையினையும், சங்கினையுமுணர்த்தும். துஞ்சினார், ஒதுங்கினார், மாண்டது என்றற்றொடக்கத்தன, பலதொழில்குறித்த ஒருதொழிற்றிரிசொல்; இவற்றுள், துஞ்சினாரென்பது, உறங்கினாரென்பதனையும் இறந்தாரென்பதனையுமுணர்த்தும். ஒதுங்கினாரென்பது நடந்தாரென்பதனையும் ஒடுங்கினாரென்பதனையுமுணர்த்தும். மாண்டதென்பது மாட்சிமைப்பட்டதென்பதனையும் மாய்ந்ததென்பதனையுமுணர்த்தும். பிறவுமன்ன. தில், மன், மற்று, கொல் என்றற்றொடக்கத்தன, பலபொருள்கருதிய ஓரிடைத்திரிசொல். 'கடியென்கிளவி' முதலாயின, பலகுணந்தழுவிய ஒருரித்திரிசொல். பிறவுமன்ன.

(பி - ம்.) [1] திரிசொல்லாவன. [2] உவமை. [3] நறவென்பது. (கரு)

(272.) செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினிற் றமிழொழி நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொ லென்ப.

எ - ன், மேல்நிறுத்தமுறையானே, முன்னின்ற இயற்சொல்லும் திரிசொல்லுமுணர்த்தி, அவற்றின்பகுதியாய் இடையில்நின்றவற்றைத் தத்தமோத்துக்களுள்உணர்த்தியநிறீஇ எஞ்சியவிரண்டினுள் திசைச்சொல்லாமாறு உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) செந்தமிழ்நிலத்தைச்சேர்ந்த பன்னிருநிலத்தினும் இருவகைத்தமிழாம் ஒருமொழிநிலத்தையொழிந்த பதினேழ்நிலத்தினும் தத்தங்குறிப்பினான்வழங்குவனவற்றைத் திசைச்சொல்லென்றுசொல்லுவர், ஆசிரியர். எ - று.

செந்தமிழ்நிலமும் அதனைச்சேர்ந்த பன்னிருநிலமும் மற்றைப் பதினேழ்நிலமுமாக நிலம்முப்பதாம்பிறவெனின், ஆகாது; பதினெண்பூமி பதினெண்மொழியென்றே உலகத்து வழங்கிவருதலின். அவற்றுள், ஈண்டொழித்த தமிழொன்றே இப்பதின்மூன்றுபாலும்பட்ட [1]தென்க. அவற்றுள்ளும் ஒன்று செந்தமிழென்றும் அல்லன கொடுந்தமிழென்றும்கூறப்படும். அவற்றுள், செந்தமிழ்நிலம், கருவூரின்கிழக்கும் மருவூரின்மேற்கும் வையையாற்றின்[2]வடக்கும் மருத

யாற்றின்[3]தெற்குமாம். கொடுந்தமிழ்நிலம், அதனைச்சூழ்ந்த, "தென்பாண்டி குட்டங் குடங்கற்கா [4]வேள்பூழி, பன்றி [5]யருவா ளதன் வடக்கு - நன்றாய, சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர், ரேதமில்சீர்ப் பன்னிருநாட் டெண்" என்னும் இப்பன்னிருநாடுமாம். அவற்றுள், தென்பாண்டிநாட்டார் ஆவினைப் பெற்றமென்றும் சோற்றினைச் சொன்றியென்றும், குட்டநாட்டார் தாயைத் தள்ளையென்றும், குடநாட்டார் தந்தையை அச்சனென்றும், கற்காநாட்டார் வஞ்சரைக் கையரென்றும், வேணாட்டார் தோட்டத்தைக்[6]கிழாரென்றும், பூழிநாட்டார் சிறுகுளத்தைப் பாழியென்றும், பன்றிநாட்டார் செறுவைச் செய்யென்றும், [7]அருவாணாட்டார் சிறுகுளத்தைக் கேணியென்றும், [8]அருவாள்வடதலையார் புளியை எகினமென்றும், சீதநாட்டார் தோழனை எலுவனென்றும், [9]மலாடார் தோழியை இகுளையென்றும், புனனாட்டார் தாயை ஆயென்றும் வழங்குவர். பிறவும் அறிந்துகொள்க.

தமிழொழி பதினேழ்நிலமாவன: "சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக்குடகங், கொங்கணங் கன்னடங் கொல்லந் [10]தெலிங்கங் கலிங்கம் வங்கம், கங்க மகதங் கடாரங் கவுடங் கடுங்குசலந், தங்கும் [11]புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்நிலந் தாமிவையே" என்பன. 'அருமணம் [12]காம்போசம் ஈழம் கூவிளம் [13]பல்லவமங்கம்' என்பன முதலானவை, இவற்றின்பரியாயமும் இவற்றின்பேதமுமாய் இவற்றுள்ளே அடங்குமென்க. இவற்றின்மொழிகளும் வந்த வழி அறிந்துகொள்க; "கன்னித் தென்கரைக் கட்பழந் தீவஞ், சிங்களங் [14]கொல்லங் கூவிள மென்னு, மெல்லையின் புறத்தவு மீழம் பல்லவங், கன்னடம் வடுகு கலிங்கந் தெலிங்கம், கொங்கணந் துளுவங் குடகங் குன்ற, மென்பன குடபா லிருபுறச் சையத், [15]துடனுறைபு பழகுந் தமிழ்திரி நிலங்களும், முடியுடை மூவரு மிடுநிலவாட்சி, [16]யரசுமேம் பட்ட குறுநிலக் குடிகள், பதின்மரு முடனிருப்பிருவரும் படைத்த, பன்னிரு திசையிற் சொன்னப முடையவும்" என்றார் அகத்தியனார்.

(பி - ம்.) 1 என்றும்அவற்றுள்ளும். 2 தெற்கும். 3 வடக்கும். 4 வேண். 5 அருவா. 6 கிழவென்றும். 7 அருவாநாட்டார். 8 அருவாவடதலை. 9 (க) மலாடர்; (உ) மலாடுநாட்டார்; (ங) மலையமானாட்டார். 10 தெலுங்குவங்கங்கலிங்கம். 11 தமிழ்ப்புவி சூழ். 12 காம்போதியீழம். 13 பல்லவம்வங்கம். 14 கொல்லமென்னும். 15 உடனுறைபுறழபழகுந். 16 ஆட்சியாகமெய்ப்பட்ட. (கரு)

(273.) பொதுவெழுத் தானுஞ் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானு மியைவன வடசொல்.

எ - ன், நிறுத்தமுறையானே வடமொழியாவன உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொதுவான எழுத்தானும் ஆரியத்திற்கேயுரிய எழுத்தானும் [1]இவ்விரண்டெழுத்தானும் நடப்பனவாம், ஆரியச்சொற்கள். எ - று.

வ - று. அமலம், இராகம், உபமம், ஏகம், *ஓது; கமலம், கீர்த்தி, குங்குமம், [2]கோபம்; சரணம், சிக்கணம், †சஞ்சு, சௌளம்; ஞானம், ஞேயம்; [3]இடங்கணம்; தமாலம், தாரம், திலகம், தீரம்; நாமம், நீலம், நூனம்; பானம், பீனம், புராணம்; மனம், மானம், மீனம், மூலம், மௌனம்; யானம், யூபம், யோகினி, யௌவனம்; இராவணன், உரூபம், உரோமம்; இலிபி, உலூதம், இலேபம், உலோபம்; வாரம், வீரம், வேணு, வைரம் என்றற்றொடக்கத்தன பொதுவெழுத்தான்வருவன. கந்தம், சேதம், சதம், [4]இட்டம், திண்டிமம், தீர்க்கம், போதம், போகம், சத்தம், சட்டம், சுகம், சிங்கம், குதை என்றற்றொடக்கத்தன ஆரியத்திற்கேயுரிய எழுத்தான் வருவன. அரன் அரி, அயன் [5]அருகன்; கடினம், குரகம், கீதம், கனம்; சண்டம், சலம், சாதி, சச்சரை; துரங்கம், தூலம், தூரம், துரை; பாடம், பலம், பேரம், பூதம்; மோகம்; யாகம்; இராகம்; வந்தனை; சூலம்; நட்டம்; ஆரம்; சோமன், தூளி; பக்கம் என்றற்றொடக்கத்தன பொதுவும் சிறப்புமான ஈரெழுத்தானும் வருவன.

இஃது, ஒரு நிலத்திற்கேயுரியதன்றிப் பதினெண் பூமிக்கும் விண்ணிற்கும் புவனதிகட்கும் பொதுவாய்வருதலின், திசைச்சொல்லின் அடக்காது வேறோதினாரென்க. [6]அஃதென்னை? வடக்கண்மொழியென்றாலோவெனின், ஆண்டு வழக்குப்பயிற்சியை நோக்கி அவ்வாறுகூறினாரென்க.

(பி - ம்.) 1 ஈரெழுத்தானுமானஇம்மூன்று. 2 கோவலம், சாணம். 3 இடபங்கணம். 4 இடிட்டீபம், தீர்க்கம். 5 அருகன், சிங்கம், மோகம். 6 அஃதேல். (கள)

* ஓது - பூனை. † சஞ்சு - பறவையின் மூக்கு.

(274.) இடுகுறி காரண மரபோ டாக்கம்
தொடர்ந்து தொழிலல காலந் தோற்று
வேற்றுமைக் கிடனாய்த் திணைபா லிடத்தொன்
றேற்பவும் பொதுவு மாவன பெயரே.

எ - ன், இவ்வதிகாரத்துட் சொல்லுணர்த்துவான் எடுத்துக் கொண்டு ஒருவகையான் அச்சொல்லாவது இன்னதென்பதும் அதன் பகுதியும் அதற்கு ஆதாரமானபொருளும் பொருட்கூறும் அவற்றை உணர்த்துமிடமும் உணர்த்தும்பகுதியு முரைத்துப் பின்னும் அதனையே பெயர்முதலாக வகுத்தும் விரித்தும் உணர்த்துவான்றொடங்கினார், அவற்றுள், இச்சூத்திரம் பெயர்க்குப்பொதுவிதியும் அதன் பகுதியுமுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) தனித்தும் தொகுத்தும் மறைத்தும் வழங்குதற் பொருட்டு இதற்கிதுபெயரென்று இட்ட இடுகுறியும், பொருளாதி ஆறும் கருத்தாவும் மிகவுமான [1]காரணமும், வரலாறானகாரணமும் ஒன்றன்பெயரை ஒன்றற்கு ஆக்கலும் ஆகும் இந்நான்குபகுதியையும் பற்றி, வினைநிமித்தமாகவரும் பெயரொன்றும்காலங்காட்ட அல்லன காலங்காட்டாவாய் எட்டுவேற்றுமையுஞ்சார்தற்கு இடனாய்த் திணை பாலிடங்களில் ஒன்றற்குரியவாயும் பலவற்றிற்குரியவாயும்வருவன, பெயர்களாம். எ - று.

மரபுப்பெயரும் ஆகுபெயரும் காரணப்பெயருள் அடங்குமேனும், முதலது இடுகுறியாயமரபுகாரணமாகவும், ஆகுபெயர் பகுதி விகுதியாய்க் காரணம்விளக்காததாகவும்வருதலின், அவ்வேறுபாடறிதற்கு வேறோதினாரென்க.

வ - று. சாத்தன், கொற்றன், கூத்தன், கெத்தன், நாகன், தேவன், பூதன், தாழி, கோதை, முட்டை, பொன்னன் என்றற்றொடக்கத்தன தனித்துவழங்கிடுகுறி. சனம், படை, சேனை, நிரை, தொறு, உலகு, நாடு, ஊர் என்றற்றொடக்கத்தன தொகுத்துவழங்கிடுகுறி. இடக்கரடக்கன்முதலானமூன்றுவழக்கும் மறைத்துவழங்கிடுகுறி.

குழையன், கோலன், வில்லி, வாளி, பொன்னன், பூணன் எ - ம், வெற்பன், நாடன், ஊரன், சேர்ப்பன், வானன், நிலத்தன், அகத்தன், புறத்தன் எ - ம், காரான், கூதிரான், ஐயாட்டையான், அறுதிங்களான், ஆதிரையான் எ - ம், நெடுமூக்கன், தாழ்காதன்,

குழலன், தோளன், கூனன், குருடன், கொம்பன், வாலன் எ - ம், அறிவன், புலவன், சிறியன், பெரியன், செய்யான், கரியான், கடியான், இனியான், சேயனுன், ஏறனுன் எ - ம், உழவன், வாணிகன், ஒற்றன், தூதன், உண்டான், உறங்கினுன், வருகின்றுன், போகின்றுன், காப்பான், கடிவான் எ - ம், வள்ளுவப்பயன், குயக்கலம், தொல்காப்பியம் எ - ம், கமுகந்தோட்டம், காரைக்காடு எ - ம் முறையே எண்வகைக் காரணப்பெயரும் வந்தவாறு.

தேவன், தேவி, மகன், மகள், மக்கள், மாந்தர், மைந்தர், ஆடூஉ, மகடூஉ, நாகன், நாகி, யானை, குதிரை, ஆமா, நாய், நரி, மயில், குயில், பொன், மணி, மரம், பனை, தெங்கு, நீர், வளி, நெருப்பு எ - ம், வான், நிலம், அகம், புறம், கீழ், மேல், குழி, அவல் எ - ம், ஊழி, யாண்டு, அயனம், இருது, மதி, பக்கம், நாள், இரா, பகல், யாமம், நாழிகை, மாத்திரை எ - ம், கை, கால், தலை, சினை, தளிர், பூ, காய் எ - ம், வட்டம், சதுரம், குறுமை, நெடுமை, கருமை, சிவப்பு, தண்மை, வெம்மை, கைப்பு, இனிப்பு, புளிப்பு, விரை, மணம், உண்மை, இன்மை, நன்மை, தீமை, வன்மை, மென்மை எ - ம், 2 ஊண், தீன், உணல், தினல், உணப்படல், தினப்படல், ஏவப்படல், 3 உணப்பாடு, தினப்பாடு எ - ம் வரும் இத்தொடக்கத்தன பொருளாதி அறுபொருளிடுகுறி மரபுகாரணப்பெயர். அவன், அவள், அவர்; அந்நிலம், அந்நாள், அக்கை, அக்குணம், அவ்வூண் எ - ம், எவன், எவள், எவர்; எந்நிலம், எந்நாள், எக்கை, எக்குணம், எவ்வூண் எ - ம் இவ்வாறு அவை சுட்டுவினுக்களடுத்தும்வரும்; ஏனைச் சுட்டு வினுக்களோடும் இப்படியே ஒட்டுக.

தெங்கு கடு என்றற்றொடக்கத்தன ஆகுபெயர்; அவை முன்னர்க் காட்டுதும்.

இவற்றுள்ளும் சாத்தையுடையான் சாத்தன்; பொன்னையுடையான் பொன்னனெனக்கொள்ளின் அவை காரணப்பெயராமென்க.

சங்கரன், அருகன், நான்முகன், நாராயணன், தேவன், தேவி என்னும் இத்தொடக்கத்தனவாகிய காரணப்பெயர், மக்கட்காயினும் விலங்குகட்காயினும்வரின், இடுகுறிப்பெயராமென்க. அகலம் உரையிற்கொள்க.

(பி - ம்.) 1 காரணமுமரபால்வருங்காரணமும். 2 உண், தின், உணல். 3 உண்பாடு, தின்பாடு.

(கஅ)

(275.) அவற்றுள்,
கிளையெண் குழூஉமுதற் பலபொரு டிணைதேம்
ஊர்வா னகம்புற முதல நிலன்யாண்
டிருது மதிநா ளாதிக் காலம்
தோள்குழன் மார்புகண் காது முதலுறுப்
பளவறி வொப்பு வடிவு நிறங்கதி
சாதி குடிசிறப் பாதிப் பல்குணம்
ஓத லீத லாதிப் பல்வினை
இவையடை சுட்டு வினுப்பிற மற்றொ
டுற்ற னவ்வீறு நம்பி யாடூஉ
விடலை கோவேள் குருசி றோன்றல்
இன்னன வாண்பெய ராகு மென்ப.

எ - ன், மேல், "ஒன்மீறற்பவும்" என்றார், அவற்றுள் ஆண்பாற்குரிய பெயருணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) மேற்பொதுவகையாற்சொல்லியபெயர்களுள், நான்குகிளையும் எண்ணும் திரளுமுதலான பலபொருளையும், குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தலென்னும் ஐந்திணையையும், தேசமும் ஊரும் வானும் அகமும் புறமுமுதலாகிய நிலத்தையும், யாண்டும் பருவமும் திங்களும் நாளுமுதலான காலத்தையும், தோளும் குழலும் மார்பும் கண்ணும் காதுமுதலான உறுப்பையும், அளவும் அறிவும் ஒப்பும் வடிவும் நிறனும் கதியும் சாதியும் குடியும் சிறப்புமுதலான பண்பையும், ஓதலும் ஈதலுமுதலான பலதொழிலையும் இவற்றைப்பொருந்திவரும் மூன்றுசுட்டையும், மூன்றுமுதல்வினாவையும், பிறவென்பதனையும், மற்றையென்பதனையும் பொருந்தி னகரத்தைஈறாகக்கொண்டுவரும்பெயர்களும், நம்பியென்பதும், ஆடூஉவென்பதும், விடலையென்பதும், கோவென்பதும், வேளென்பதும், குருசிலென்பதும், தோன்றலென்பதும் இவைபோல்வன பிறவுமானபெயர்களும் ஆண்பாற்குரியபெயர்களாமென்று சொல்லுவர்புலவர். எ - று.

ஆண்பாற்கெனவே உயர்திணையென்பதும் ஒருமையென்பதும் தானேவிளங்கும். மேல்வருவனவற்றிற்கும் இவ்வுரை ஒக்கும்.

"தநநு, எகர முதலா[1] மகர மிடையிட்டு, னளரவா மீற்றின சுற்றப் பெயரே" என்பதனாற் கிளைப்பெயரறிக.

வ - று. தமன், நமன், நுமன், எமன் எ - ம், ஒருவன் எ - ம், அவையத்தான், அத்திகோசத்தான், சங்கத்தான் எ - ம், பொருளன், பொன்னன், முடியன் எ - ம் வருமிவை பொருள்தொடர்ந்தன. வெற்பன், பொருப்பன், சிலம்பன், நாடன், கானவன், குறவன் எ - ம், எயினன், மறவன், வேடன் எ - ம், புறவன், பொதுவன், அண்டன், ஆயன் எ - ம், மகிழ்நன், ஊரன், வினைஞன், களமன் எ - ம், கொண்கன், சேர்ப்பன், துறைவன், படவன், பரவன், பரதவன், நுளையன் எ - ம், அருவாளன், சோழியன், கொங்கன், கன்னடன், கலிங்கன், தெலிங்கன் எ - ம், கருவூரான், மதுரையான், கச்சியான், கோழியான், மருவூரான் எ - ம், வானான், அகத்தான், புறத்தான் எ - ம், நிலத்தான், பிலத்தான் எ - ம் வரும் இவை இடம் தொடர்ந்தன. ஈராட்டையான், மூவாட்டையான், எ - ம், காரான், கூதிரான் எ - ம், தையான், மாசியான் எ - ம், மூலத்தான், பூசத்தான், ஓணத்தான், எ - ம், நெருநலான், இற்றையான், முற்காலத்தான், இக்காலத்தான் எ - ம் வரும் இவை காலம்தொடர்ந்தன. திணிதோளன், சுரிகுழலன், வரைமார்பன், செங்கண்ணன், அலைகாதன், எ - ம், குருடன் எ - ம் வருமிவை சினைதொடர்ந்தன. பெரியான், சிறியான் எ - ம், அறிவன், புலவன் எ - ம், பொன்னொப்பான், மணியொப்பான் எ - ம், கூனன், குறளன் எ - ம், கரியான், செய்யான் எ - ம், மகன், மானிடவன், தேவன், நரகன் எ - ம், அரசன், அந்தணன், வணிகன், வீரணுக்கன், கைக்கோளன், கணவாளன் எ - ம், சேரன், சோழன், பாண்டியன், கங்கன், [2] கட்டிமான், காடவன், கோனூர்கிழான், தேனூர்கிழான், அம்பர்கிழான், வல்லங்கிழான், [3]அரசூருடையான், பழையனூருடையான் எ - ம், ஆசிரியன், படைத்தலைவன், சேனாவரையன் எ - ம் வருமிவை பண்புதொடர்ந்தன. ஓதுவான், [4]ஈவான் எ - ம், உண்பான், உறங்குவான், கணக்கன், பிணக்கன், திருடன் எ - ம் வருமிவை தொழில் தொடர்ந்தன. அவன், அவ்வழியான், அந்நாளான், அக்குழலான், அக்கரியான், அக்கூத்தனென அகரச்சுட்டுடன் பொருளாதியாறும்தொடர்ந்தன. ஏனைச்சுட்டுவினாக்களினும் இவ்வாறே ஒட்டிக்கொள்க. பிறன், மற்றையான், பிறவிடத்தான், மற்றையிடத்தான் ; இவ்விரண்டோடும் ஏனைநான்கிடத்தும் இவ்வாறே ஒட்டிக்கொள்க. சுட்டுமுதலாயின எப்பொருளினும் அடுத்துவருதலின், வேறோதினாரென்க.

பொருளாதியாறுவகையினும், 'முதல்' 'ஆதி' என்றுசொன்ன மையான், அவற்றிற்கு வரும் பகுதிகளும் அவற்றின்பரியாயச் சொற்களும் கொள்க.

இறுதிக்கண், 'இன்னன' என்றதனால், வில்லி, வாளி, மீளி, குடுமி, சென்னி, கிள்ளி, செட்டி, கொற்றந்தை, சாத்தந்தை, வடு கந்தை, சேய், ஏந்தல் என்றற்றொடக்கத்தனவும், சுட்டுநீண்டு ஆண்டையான், ஆங்கணுன், ஆயிடையானென வருவனவும், ஏனைச் சுட்டுவினக்களில் இவ்வாறுவருவனவும் பிறவும் கொள்க.

இப்படாம் பட்டினவன், இக்குதிரை சோனகன், இவ்வியானை 5 பப்பாவன் என்பனவும், அருமணவன், சாத்தன், கொற்றன், வலி யான், வயான், கலுழன், அலவன், கருடன், இகலனென்றற்றொடக் கத்தனவும் 6உயர்திணையாக 7ஓதாமையான் உயர்திணை ஆணொரு மைப்பால் ஆகாவென்க.

(பி - ம்.) 1 மகரவிடைநிலையிட்டு, ளளரவாலிற்றன சுற்றப். 2 கட்டி மான், காட்டுவன், கோனுழான், தேனுழான். 3 அரசுடையான். 4 ஈகை யன், ஊணன், தீனன், உறங்குவான். 5 பப்பூவன். 6 உயர்திணைப்பாலன் மையின்ஓதிற்றிலர். 7 ஓதாதலால். (கசூ)

(276.) கிளைமுத லாகக் கிளந்த பொருள்களுள்
ளவ்வொற் றிகரக் கேற்ற வீற்றவும்
தோழி செவிலி [1]மகடூஉ நங்கை
தையலோ டின்னன பெண்பாற் பெயரே.

எ - ன், பெண்பாற்குரியபெயர் இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற் கிளைமுதலாகச்சொல்லப்பட்ட பொருட்பகுதி களுள், ளகரவொற்றிற்கும் இகரத்திற்குமேற்ற ஈற்றான்வருவன வும், தோழி செவிலி மகடூஉ நங்கை தையலென்பவற்றுடனே இவை போல்வனபிறவும் பெண்பாற்குரிய பெயர்களாம். எ - று.

'ஏற்றவீற்றவும்' என்றது, இவற்றுள்ளும் ளவ்வொற்றேற்பன சிலவும் இகரமேற்பனசிலவும் ஒன்றே இரண்டும் ஏற்பனசிலவும் இர ண்டும் ஏலாதனசிலவுமாமென்றற்கெனக்கொள்க.

வ - று. தமள், நமள், நுமள், எமள், அவையத்தாள், அத்தி கோசத்தாள், சங்கத்தாள், பொருளாள், பொன்னாள், முடியாளென இவ்வாறே ளகாரவீற்றிற்கு ஏற்பனவறிந்து ஒட்டுக. ஒருத்தி,

குறத்தி, எயிற்றி, மறத்தி, உழத்தி, ஆய்ச்சி, பரத்தி, கிழத்தி, அருவாட்டி, சோழிச்சி, கொங்கிச்சி, கன்னடிச்சி, கலிங்கிச்சி, தெலிங்கிச்சி, மானிடத்தி, தேவி, நரகி, அரசி, வீரணுக்கிச்சி, கைக்கோளிச்சி, கணவாட்டி, [2]கோனூர்கிழத்தி, தேனூர்கிழத்தி, அம்பர்கிழத்தி, வல்லங்கிழத்தி, அரசூருடைச்சி, பழையனூருடைச்சி, படைத்தலைவி, சேனாவரசி, கணக்கிச்சி, [3]வெள்ளாட்டிச்சி, பிணக்கிச்சி, திருடி என்பன இகரமேற்றன. திணிதோளாள் திணிதோளி, சுரிகுழலாள் சுரிகுழலி, செங்கண்ணாள் செங்கண்ணி, அலைகாதாள் அலைகாதி, கூனாள் கூனி என்பன இரண்டீறும் ஏற்றன. வெற்பன் நாடன் சிலம்பன் சேர்ப்பனென்றற்றொடக்கத்தனசில இரண்டீறும் ஏலாவாயின.

'இன்னன' என்றதனான், இருளைமுதலாயின கொள்க. பருவப்பெயரான பேதைமுதலேழும் காலப்பெயருள் அடங்குமெனக் கொள்க.

கோள், தோள், தேள், நாளென்றற்றொடக்கத்தன உயர்திணையன்மையின், ஈண்டைக்கு ஏலாவென்க.

(பி - ம்.) [1] மகடூஉங்கை. [2] (க) கோனுழத்தி; (உ) கோனூழைச்சி. [3] வெள்ளாடிச்சி.

(உ0)

(277.) கிளந்த கிளைமுத லுற்றரவ் வீற்றவும்
கள்ளெ னீற்றி னேற்பவும் பிறவும்
பல்லோர் பெயரின் பகுதி யாகும்.

எ - ன், பலர்பாற்பெயராவன உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) கிளைமுதலாகச் சொல்லப்பட்ட பொருளனைத்தினையும் பொருந்திவந்த ரகாரவொற்றை ஈறாகவுடையமொழிகளும், அப்பொருளிற் கள்ளென்னும்விகுதியை ஈறாகவுடைய மொழிகளுள் ஈண்டைக்குப் பொருந்துவனவும் இவைபோல்வன பிறவும் பல்லோர் பாற்குரிய பெயர்களாம் எ - று.

இவற்றிற்கு உதாரணம் ஆண்பாற்பெயர்க்கு மேற்காட்டிய உதாரணங்களை ரகரவீறாகத்திரித்து, தமர் நமர் நுமர் எமரென இவ்வாறே ஒட்டிக்காண்க.

கள்ளீற்றுப்பெயர்கள்: அடிகள், முனிகள், மனுக்கள், கோக்கள், வேள்கள், விடலைகள், வில்லிகள், வாளிகள், பள்ளிகள், [1]கணி

கள், மயரிகள், மடந்தைகள், பரத்தைகள், உழத்திகள், மறத்திகள், குறத்திகள், வலைச்சிகள், புலைச்சிகளென்றற்றொடக்கத்தன. 'பிறவும்' என்றதனால், வேறுவருவன உளவேனும்கொள்க; அவர்கள், அரசர்கள், பார்ப்பார்கள், உண்டவர்கள், உறங்கினவர்களென்றற்றொடக்கத்தன [2]ரகாரவொற்றும் கள்ளென்னும்விகுதியுங்கூடிவந்தாலும் முதனின்ற ரகாரவொற்றே பால்விளக்கும்; ஏனையது [3]வாய்பாடு நிரம்பல்மாத்திரையேயாவதல்லது பாலுணர்த்தாதென்க;

இவ்வுரை: உண்டார்கள், உண்ணாநின்றார்கள், உண்பார்கள்; உண்ணார்கள்; உறங்கினார்கள், உறங்காநின்றார்கள், உறங்குவார்கள்; உறங்கார்கள் எ-ம், வில்லினர்கள், ஆண்டையர்கள், நாளினர்கள், கையினர்கள், கரியர்கள், செலவினர்கள் எ-ம் வரும் வினைக்கும் வினைக்குறிப்பிற்கும் ஒக்கும்.

நாய்கள், நரிகளென்றற்றொடக்கத்தன உயர்திணையன்மையின், ஈண்டைக்கேலாவென்க.

**(பி-ம்.)** [1] கன்னிகள், வயிரிகள், மடந்தைகள். [2] **ரகரவொற்றின்** மேல் அக்கள்ளென்விகுதியும். [3] வாய்பாடன்று நிரம்பல். (உக)

(278.) வினச்சுட் டுடனும் வேறு மாம்பொருள்
ஆதி யுறுதுச் சுட்டணை யாய்தம்
ஒன்றெனெ ணின்னன வொன்றன் பெயரே.

எ-ன், நிறுத்தமுறையானே அஃறிணையொருமைப்பெயராவன உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மூன்றுமுதல்வினாவையும் மூன்றுசுட்டையுமடுத்தும் அடாதும்வரும் பொருளாதியாறினையுமுற்ற துவ்வீற்றுமொழிகளும், மூன்றுசுட்டையுமணைந்த ஆய்தமடுத்தமொழிகளும், ஒன்றென்னுமெண்ணும், இவைபோல்வனபிறவும் அஃறிணையொருமைப்பாற்பெயர்களாம். எ-று.

வ-று. எது, எவ்விடத்தது, எந்நாளது, எக்கோட்டது, எந்நிறத்தது, எந்நடையது எனவரும். இவ்வாறே ஏனை [1]வினாக்களுடனும் மூன்று சுட்டுக்களுடனுமொட்டிப் பொருளாதியாறும் வினச்சுட்டுக்களுடன் துவ்வீறாகிவந்தவாறு காண்க. ஏகாரவினா இடமுதலைந்தினும் யாவினாக் காலமுதல்நான்கினும் வருதல் அரிய தெனக்கொள்க. குழையது, நிலத்தது, மூலத்தது, வாலது, குறி

யது, ஆடலது எனப் பொருளாதியாறும் தனியே அவ்வீறாகி வந்த வாறு. அஃது இஃது உஃது எனச் சுட்டணையாய்த்தப்பெயர் வந்த வாறு. ஒன்று என எண் வந்தவாறு. 'இன்னன' என்றதனால், பிறிது மற்றையது என்றற்றொடக்கத்தனவும் கொள்க.

(பி - ம்.) [1] (க) வினாச்சுட்டுக்களுடனொட்டியும்; (உ) வினாச்சுட்டு களினுமொட்டி. (உஉ)

(279.) முன்ன ரவ்வொடு வருவை யவ்வும்
சுட்டிறு வவ்வுங் கள்ளிறு மொழியும்
ஒன்ற லெண்ணு முள்ள வில்ல
பல்ல சில்ல வுளவில பலசில
[1]இன்னவும் பலவின் பெயரா கும்மே.

எ - ன், அஃறிணைப்பன்மைப் பெயராவன உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் அஃறிணையொருமைப்பாற்கு [2]ஓதிய பெயர்களின்மேலேவரும் வையீற்றுமொழிகளும், அகரவீற்றுமொழிகளும், சுட்டோடுகூடிய வகரவீற்றுமொழிகளும், கள்ளென்னும்விகுதியை ஈறாகக்கொண்டுவரும் பெயர்களும், ஒன்றென்பதனை யொழித்த எல்லாவெண்ணும், உள்ளவென்பதுமுதலான எட்டும், இவைபோல் வனபிறவும் அஃறிணைப்பன்மைப்பாற்குரிய பெயர்களாம். எ - று.

வ - று. எப்பொருளவை, எவ்விடத்தவை, எந்நாளவை, எக்கோட்டவை, எந்நிறத்தவை, எந்நடையவை எ - ம், எப்பொருள எப்பொருளன, எவ்விடத்த எவ்விடத்தன, எந்நாள எந்நாளன, எக்கோட்ட எக்கோட்டன, எந்நிறத்த எந்நிறத்தன, எந்நடைய எந்நடையன எ - ம் வரும். இவ்வாறே [3]ஏனைவினாக்களுடனும் மூன்று சுட்டுக்களுடனும் ஒட்டிப் பொருளாதியாறும் வினாச்சுட்டுக்களுடன் வையீறும் அகரவீறுமாய் வந்தவாறுகாண்க. அவ், இவ், உவ் எ - ம், நிலங்கள், நீர்கள், மரங்கள், நாய்கள், நரிகள், மஞ்ஞைகள், கிள்ளைகள் எ - ம், இரண்டு, பத்து, நூறு, ஆயிரம் எ - ம், உள்ள, இல்ல, பல்ல, சில்ல, உள, இல, பல, சில எ - ம் வந்தவாறு காண்க. 'இன்னவும்' என்றதனால், உள்ளவை, இல்லவை, நல்லவை, தீயவை, மற்றையவை, மற்றையன, மற்றைய, பிற என்றற்றொடக்கத்தனவும் கொள்க.

(பி - ம்.) [1] இன்னன. [2] எய்திய. [3] ஏனைவினாச்சுட்டுக்களிலும். (உங)

(280.) பால்பகா வஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய.

எ - ன், அஃறிணைப்பெயர்க்கு ஆவதோர் விதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அஃறிணைப்பெயர்களுள், மேற் பால்பகுத்துரைத்த வைமொழித்து ஒழிந்த பெயர்களனைத்தும் ஒருமைபன்மைகட்குப் பொதுவாய்நிற்பனவாம். எ - று.

வ - று. மரம்வளர்ந்தது மரம்வளர்ந்தன, மாவந்தது மாவந்தன எனக்காண்க. (உச)

(281.) முதற்பெயர் நான்குஞ் சினைப்பெயர் நான்கும்
சினைமுதற் பெயரொரு நான்குமுறை யிரண்டும்
தன்மை நான்கு முன்னிலை யைந்தும்
எல்லாந் தாந்தா னின்னன பொதுப்பெயர்.

எ - ன், இருதிணைக்குமுரிய பெயருணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) முதற்பெயர்முதலான ஒன்பதுகூற்றுப்பெயர்களும் இருதிணைக்கும் பொதுவான் பெயர்களாம். எ - று.

'பெயர்' என்பதனை, 'முறையிரண்டும்' என்பதுமுதல் எல்லாவற்றோடும் கூட்டியுரைக்க. (உரு)

(282.) ஆண்மை பெண்மை யொருமை பன்மையின்
ஆமந் நான்மைக ளாண்பெண் முறைப்பெயர்.

எ - ன், மேல் தொகைப்படுத்துரைத்தபெயர்களை, [1]வகைப் படுத்துணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) ஆண்மைப்பெயர்முதலான நான்கினுமே மேற் சொன்ன முதற்பெயர் முதலான மூன்றுள் ஒவ்வொன்றும் நந்நான் காம்; ஆண்மை [2]பெண்மையானே முறைப்பெயர் இரண்டாம். எ - று.

என்றது: ஆண்மைமுதற்பெயர், பெண்மைமுதற்பெயர், ஒருமைமுதற்பெயர், பன்மைமுதற்பெயர் எ - ம், ஆண்மைச்சினைப் பெயர், பெண்மைச்சினைப்பெயர், ஒருமைச்சினைப்பெயர், பன்மைச் சினைப்பெயர் எ - ம், ஆண்மைச்சினைமுதற்பெயர், பெண்மைச்சினை முதற்பெயர், ஒருமைச்சினைமுதற்பெயர், பன்மைச்சினைமுதற்பெயர்

எ - ம், ஆண்மைமுறைப்பெயர், பெண்மைமுறைப்பெயர் எ - ம் வருமென்றவாறு. ஏனைய போக்கிச்சொல்லுதும்.

வ - று. சாத்தன், சாத்தி, கோதை, யானை இவைமுதற்பெயர்; யானையென்பது எல்லாவற்றிற்குமுரித்து. முடவன், முடத்தி, செவியிலி, நெடுங்கழுத்தல் இவைசினைப்பெயர். முடக்கொற்றன், முடக்கொற்றி, கொடும்புறமருதி, 3பெருங்கால்யானை இவைசினைமுதற்பெயர். தந்தை, தாய் இவை முறைப்பெயர். பிறவும் இவ்வாறறிந்துகொள்க.

(பி - ம்.) 1 வகுத்துணர்த்துதல். 2 பெண்மையான. 3 நெடுந்தாள் யானை.

(உசு)

(283.) [1]அவற்றுள்,
ஒன்றே யிருதிணைத் தன்பா லேற்கும்.

எ - ன், மேல் [2]ஆண்மைமுதற்பெயர்முதலாக வகுத்தவற்றை இருதிணைப்பாலுள்ளும் இன்னது இன்னபாற்குரித்தென்பதுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) ஆண்மைமுதற்பெயர்முதலாகச்சொல்லப்பட்ட இப்பதினுள்ளும் ஒருபெயரே இருதிணையிடத்தும்வரும்தன்பாலனைத்தையும்விளக்கும். எ - று.

வ - று. அவை: சாத்தன், முடவன், முடக்கொற்றன், தந்தையென்பன வந்தான், வந்தது எ - ம், சாத்தி, முடத்தி, முடக்கொற்றி, தாய் என்பன வந்தாள், வந்தது எ - ம், கோதை, செவியிலி, கொடும்புறமருதி யென்பன வந்தான், வந்தாள், வந்தது எ - ம், யானை, நெடுங்கழுத்தல், பெருங்கால்யானை யென்பன வந்தான், வந்தாள், வந்தது, வந்தன எனவும் வரும்.

(பி - ம்.) 1 இவற்றுள். 2 ஆண்மைபெண்மைமுதலாக. (உஎ)

(284.) தன்மை யானுன் யாநா முன்னிலை
எல்லீர் நீயிர் நீவிர் நீர்நீ
அல்லன படர்க்கை யெல்லா மெனல்பொது.

எ - ன், மேல், "தன்மை நான்கு முன்னிலை யைந்தும்" என்றார், அவை இவையென்பதும், ஏனைப்பெயர்கள் எவ்விடத்தவாங் கொலென்னும் ஐயமறுத்தலும் உணர்த்துதல் நுதலிற்று. அன்றி, [1] எல்லாப்பெயர்க்கும் இடமடைத்தல் நுதலிற்றெனினுமமையும்.

(இ - ள்.) தன்மைக்குரியபெயர்கள், யானென்றும், நானென்றும் யாமென்றும், நாமென்றும்வரும் நான்குமாம். முன்னிலைக்குரிய பெயர்கள், எல்லீரென்றும், நீயிரென்றும், நீவிரென்றும், நீரென்றும், நீயென்றும்வரும் ஐந்துமாம். இவையொழிந்த பெயர்களெல்லாம் படர்க்கையிடத்திற்குரியபெயர்களாம். அவற்றுள், எல்லாமென்னும்பெயர் மூவிடத்திற்குமுரித்தாம். எ - று.

தன்மைக்கும் முன்னிலைக்குமுதாரணம் உரைக்கிடையிற்காண்க; படர்க்கைக்கு உதாரணம் மேற்காட்டினவற்றுட்காண்க.

தன்மை, [2]உயர்திணைக்கேயன்றி அஃறிணைக்கும்உரித்தாமோ வெனின், "பேய்பூத மந்தி கிளிபூவை பேசுதலா, லாகுமே தன்மை பொது" என்பதனால், ஆமென்க.

வ - று. "நுமரெங்குந் தீதின்றி நும்மையான் காப்பே, னமரெங்கு நாட்டி யரும்பிணங் தின்பேன், [3]புணரங்கி யென்பதென் புல்லிய மெய்ப்பேர், நமரங்காள் பேணுமி னன்கென் றதுவே", "மூன்றைந்தின் மூன்றிட்ட மொய்கொள் கணங்களுட், டோன்றல பூதமென் றோற்றந் [4]தெரியல", *[5]"ஈங்கினி யென்னை நோக்கி யென்செய்தி யெனக்கு வாழ்நா, ணீங்கிற்றுச் சிறிது நிற்பிற் காண்டியா னீயு [6]மென்னத், தூங்கித்தான் றுளங்கி மந்தி தொழுத்தை [7]யேன் செய்த தென்று, தாங்குபு தழுவிக் கொண்டு தன்னைத்தான் பழித்த தன்றே," †"பூவையுங் கிளியுங் கேட்டுப் புழை [8]முகம் வைத்து நோக்கிக், காவலன் மடந்தை [9]யுள்ளங் கற்கொலோ விரும்பு கொல்லோ, [10]சாவம்யா முருகி யொன்றுந் தவறிலா [11]னருளு நங்கை, பாவையென் றிரத்து மென்ற பறவைக டம்முட் டாமே" எனவரும்.

(பி - ம்.) 1 எல்லாமென்னும்பெயர்க்கு. 2 உயர்திணைக்குரித்தாமன்றி. 3 புணரங்கி. 4 திரியிலென். 5 ஈங்குநீ யெம்மைநோக்கி யென்செய்தா யெமக்கு வாழ்நா ணீங்கின. 6 என்று. 7 (க) என்செய்கேனென்று; (உ) என் செய்வதென்று. 8 முகம்புதைத்துநோக்கி. 9 நெஞ்சங்கற். 10 யாவதுமுருகாதென்றுங். 11 அருளுஞ்செம்பொற் பாவையென்றாற்றுமென்ற. (உஅ)

(285.) வினையின் பெயரே படர்க்கை வினையா
லணையும் பெயரே யாண்டு மாகும்.

எ - ன், எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தல் நுதலிற்று.

* சீவக. உஎஉ௩. † ஷை உ௫கo.

(இ - ள்.) தொழில்தன்னைச்சொல்லும்பெயர் படர்க்கையாம்; தொழிலாலாகும்பெயர்கள் [1]மூவிடத்தும்ஆவனவாம். எ - று.

வ - று. உணல், தினல், வரவு, செலவு, கூத்து, பாட்டு, உறங்கல், போதல், வருதல், நிற்றல், இருத்தலென்றற்றொடக்கத்தன, நன்று, தீது என்றற்றொடக்கத்துமுற்றுவினைக்குறிப்புக்கொண்டு முடிதலிற் படர்க்கைப்பெயராயின. வந்தான், வந்தாள், வந்தார், வந்தது, வந்தன எ - ம், வந்தேன், வந்தேம் எ - ம், வந்தாய், வந்தீர் எ - ம் வருமிவை வந்தானை, வந்தான்கண் என [2]உருபேற்றலின், வினைப்பெயராய் மூவிடத்திற்கும் உரியவாயின. பிறவுமன்ன.

இவை பெயராயினபொழுது [3]உருபேற்றுநிற்கும்; வினையாயின பொழுது பொருண்முற்றிப் பெயர்கொண்டுமுடியும். இது தம்முள் வேற்றுமையெனக்கொள்க.

(பி - ம்.) [1] மூவிடத்திற்குமாவனவாம். [2] உருபேற்றுவினைப். [3] உருபேற்கும். (உகூ)

(286.) தான்யா னானீ யொருமை பன்மைதாம்
யாம்நா மெலாமெலீர் நீயிர்நீர் நீவிர்.

எ - ன், மேற்சொன்ன, 'எல்லாந் தாந்தான்' என்பனவற்றிற்கும் தன்மைமுன்னிலைப்பெயர்கட்கும் பால்வகுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) தான் யான் நான் நீயென்பன ஒருமைப்பாலாவனவாம்; ஒழிந்தன பன்மைப்பாலாவனவாம். எ - று.

வ - று. தான்வந்தான், யான்வந்தேன், நான்வந்தேன், நீவந்தாய் எ - ம், தாம்வந்தார், [1]யாம்வந்தேம், நாம்வந்தேம், யாமெல்லாம் வந்தேம், எல்லீரும் வந்தீர், நீயிர்வந்தீர், நீர்வந்தீர், நீவிர்வந்தீர் எ - ம் வரும்.

(பி - ம்.) [1] யாம்வந்தோம், நாம்வந்தோம், யாமெல்லாம் வந்தோம். (௩0)

(287.) ஒருவ னொருத்திப் பெயர்மே லெண்ணில.

எ - ன், இவ்விருபெயர்கட்கும் ஆவதோர்விதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விருபெயரும் இவ்வியம்பிய வாய்பாட்டால்நிற்றலன்றி இருவன் மூவன் இருத்தி முத்தியென்பன [1]முதலாக மேல் வரும் எண்களைக்கொள்ளா. எ - று.

(பி - ம்.) [1] முதலானஎண்களை. (௩க)

(288.) ஒருவ ரென்ப துயரிரு பாற்றாய்ப்
பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப.

எ - ன், இருபாற் பொதுச்சொன்முடிபுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருவரென்னும்பெயர், உயர்திணையாண்பால் பெண்பாலிரண்டிற்கும் பொதுவாய் ஒருபொருளைத்தருமெனினும் பன்மை வினைகொண்டுமுடியும்பகுதித்தென்றுசொல்லுவர்புலவர். எ - று.

வ - று. பார்ப்பாரொருவர்வந்தார், பார்ப்பனியாரொருவர் வந்தார் எனவரும். (௬௨)

(289.) பொருண்முத லாறோ டளவைசொற் [1]றானி
கருவி காரியங் கருத்த னாதியுள்
ஒன்றன் பெயரா னதற்கியை பிறிதைத்
தொன்முறை யுரைப்பன வாகு பெயரே.

எ - ன், ஆகுபெயராமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருளே இடனே காலமே சினையே [2]குணனே தொழிலே நால்வகைஅளவையே சொல்லே [3]தானியே கருவியே காரியமே கருத்தனேயென்னும் இவைமுதலானவற்றுள் ஒன்றன் பெயரானே அதற்கு இயைபுடைய பிறி[4]தொன்றினை வரலாற்று முறைமையோடும்சொல்லுவன, ஆகுபெயர்களாம். எ - று.

எனவே, [5]ஆக்கவாகும்பெயர் ஆகுபெயரென்பதாயிற்று; ஆகவே இயற்பெயரும் ஆகுபெயருமென எல்லாப்பெயரும் இருகூற்றவாமென்பதூஉமாயிற்று.

வ - று. புளி, கடு, தெங்கு, தாமரை, ஆம்பலென்பன, அம்முதற்பொருள்களையுணர்த்தின் இயற்பெயராம்; புளித்தின்றான், கடுத்தின்றான், தெங்குதின்றான், *"தாமரை புரையும் காமர் சேவடி," †"ஆம்ப னாறுந் தேம்பொதி துவர்வாய்" என அவற்றின் சினைகளையுணர்த்தின், ஆகுபெயராம்.

குழிப்பாடி, சீனமென்பன, அவ்விடமுணர்த்தின் இயற்பெயராம்; இப்படாம் குழிப்பாடி, இப்பட்டுச் சீனமென அவ்விடத்திற் பொருளுணர்த்தின் ஆகுபெயராம்.

---

* குறு. கடவுள்வாழ்த்து. † ஷெ ௬௦௦.

கார், கூதிர், கார்த்திகை, சித்திரையென்பன, அக்காலமுணர்த்தின் இயற்பெயராம்; காரறுத்தது, கூதிர்வீசும், கார்த்திகைபூப்ப, சித்திரையாடுமென அக்காலத்துப்பயிரினையும், காற்றினையும், காந்தளாகுந்தோன்றியையும், ஆருடலையுமுணர்த்தின் ஆகுபெயராம்.

கொழுந்து, இலை, பூ, வேரென்பன, அவ்வுறுப்பையுணர்த்தின் இயற்பெயராம்; அவற்றின் முதலையுணர்த்தின் ஆகுபெயராம்.

நீலம், வட்டமென்பன, அப்பண்பையுணர்த்தின் இயற்பெயராம்; 6"நெறிநீ ரிருங்கழி நீலமுஞ் சூடாள்", இச்செறுவட்டமென அப்பண்பியையுணர்த்தின் ஆகுபெயராம்.

ஊண், எழுத்து, செய், பாட்டு என்பன, அத்தொழிலையுணர்த்தின் இயற்பெயராம்; ஊண்கொடுத்தார், "எழுத்தறியத் தீருமிழிதகைமை," பெருஞ்செய் நெல்லின்," "பாட்டின் பொருளைப் 7 பரவிப் பலகால்" என அத்தொழிற்பொருள்களையுணர்த்தின் ஆகுபெயராம்.

ஒன்று, துலாம், நாழி, உழக்கு, ஆழாக்கு, கோலென்பன, அளவைகளையுணர்த்தின் இயற்பெயராம்; இப்பணம்ஒன்று, இப்பொன்துலாம், இப்பால்நாழி, இந்நெய் உழக்கு, இவ்வெண்ணெய் ஆழாக்கு, இம்மனை ஒருகோலென அவ்வளவைப்பொருள்களையுணர்த்தின் ஆகுபெயராம்.

எழுத்துச் சொற் பொருள் யாப்பணியென்பன, அச்சொல்லப்பட்ட பொருள்களையுணர்த்தின் இயற்பெயராம்; இவ்வதிகாரம் எழுத்து, இவ்வதிகாரம் சொல், இவ்வதிகாரம் பொருள், இவ்வதிகாரம் யாப்பு, இவ்வதிகாரம் அணியென அவற்றைச்சொல்லும் அதிகாரங்களையுணர்த்தின் ஆகுபெயராம்.

விளக்கு, நெஞ்சு, நிருதியென்பன, சுடரினையும் உணர்வினையும் தெய்வத்தினையுமுணர்த்தின் இயற்பெயராம்; விளக்குமுரிந்தது, நெஞ்சுநொந்தது, நிருதிமேலெழுந்ததென அவற்றிற்கிடமான பிழம்பினையும் உறுப்பினையும் திசையினையுமுணர்த்தின் ஆகுபெயராம்.

8அம்பு, வேல், பஞ்சு என்பன 9கருவிகளையுணர்த்தின், இயற்பெயராம்; இஃதோரம்பு, இஃதோர்வேல், இவ்வாடைபஞ்சு என அவற்றின்காரியமாகிய வடுக்களையும் ஆடையினையுமுணர்த்தின் ஆகுபெயராம்.

சோறு, அவல், கடகம், துலாமென்பன அக்காரியங்களையுணர்த்தின், இயற்பெயராம். இக்காணம் சோறு, [10]இந்நெல் அவல், இப்பொன் கடகம், இம்மரம் துலாமென அவற்றிற்குக்காரணமாகிய காணம் நெல் பொன் மரங்களையுணர்த்தின், ஆகுபெயராம்.

கோலிகன், சாலிகன், பட்டணவன், சேணிகனென்பன அச்சாதிகளையுணர்த்தின், இயற்பெயராம்; இவ்வாடை கோலிகன், இவ்வாடை சாலிகன், இவ்வாடை பட்டணவன், இவ்வாடை சேணிகனென அவ்வவரான் ஆக்கப்பட்ட ஆடைகளையுணர்த்தின், ஆகுபெயராம். பிறவுமன்ன.

பொற்றொடியென்பது ஆகுபெயரென்பாருமுளர். அது, தொகைமொழியாய்ப் புறத்துப்பொருள்தருதலின், ஆகுபெயராகாது; அன்மொழித்தொகையாமென்க.

(பி - ம்.) 1 தானம். 2 பண்பேதொழிலே. 3 தானமே. 4 ஒன்றனை வரலாற்றோடு. 5 ஆக்கமாகும்பெயர் ஆகுபெயராயிற்று. 6 நெருநலிருங்கழிநீலமுஞ்சூடாள், செறுவட்டம். 7 படுவிப்பசொல். 8 யாழ்குழலென்பன அக்கருவியையுணர்த்தின் இயற்பெயராம்; யாழ்கேட்டன குழல்கேட்டன என்று அவற்றானுய ஓசையையுணர்த்தின் ஆகுபெயராம்; நெல்லாதல் காணமாதல்பெற்றான் சோறுபெற்றேனெனக் காரணப்பெயர் காரியத்தின் மேல் ஆகுபெயராய்வந்தன. காரணங்களையுணர்த்தின். 10 இந்நெல்லு அவல். (௩௩)

(290.) ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீ றாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன வெட்டே வேற்றுமை.

எ - ன், மேல் வேற்றுமைசார்தற்கிடனுமாய் வினைப்பெயரல்லாதன காலந்[1]தோன்றாதனவுமாய் வருதல் பெயர்க்கிலக்கணமென்றதன்பகுதியெல்லாமுணர்த்தி, ஈண்டு அவ்வேற்றுமையுணர்த்துவானெடுத்துக்கொண்டார், அவற்றுள், இச்சூத்திரம் வேற்றுமைகளினியல்பும் அவற்றின்பகுதியுமுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) தம்மை ஏற்பனவான ஒருமொழிப்பெயர், தொடர்மொழிப்பெயர், பொதுமொழிப்பெயர், உயர்திணைப்பெயர், அஃறிணைப்பெயர், ஆண்பாற்பெயர், பெண்பாற்பெயர், [2]பலர்பாற்பெயர், ஒன்றன்பாற்பெயர், பலவின்பாற்பெயர், தன்மைப்பெயர், முன்னிலைப்பெயர், படர்க்கைப்பெயர், பொருட்பெயர், இடப்பெயர், காலப்பெயர், சினைப்பெயர், பண்புப்பெயர், தொழிற்பெயர், எண்ணுப்பெயர், நிறைப்பெயர், அளவுப்பெயர், ஆகுபெயர், சுட்டுப்பெயர், வினைப்பெய

ரென்னும் எல்லாப்பெயர்களுக்கும் ஈற்றிலேநின்று பொருள்களை வேற்றுமை செய்வனவான வேற்றுமைகள் எட்டாம். எ - று.

வேற்றுமை செய்தலான் வேற்றுமை; வேற்றுமைசெய்வன யாவை அவை வேற்றுமையெனவுமாம். 'எட்டே' என்புழி ஏகாரம் தேற்றேகாரம்; 3விளியைப் பெயரதுவிகாரமென்று அப்பெயருளடக்கி ஏழென்பாருமுளர்; அது பெயரின்விகாரமேயாயினும் படர்க்கையை முன்னிலையாக வேறுபடுத்தலுடைமையின், எட்டென்பார் மதங்கோடற்குவந்ததென்க; "ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை, வேறென விளம்பான் பெயரது விகாரமென், றோதிய புலவனு முளனொரு வகையா, னிந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்" என்றார், அகத்தியனாரென்க.

வேற்றுமைசெய்தலாவது: முதலாவது சாத்தனெனஅப்பெயர் தான் தன்பொருண்மையிற்றிரிபின்றி ஏனையவற்றின்வேறுபடுத்தது. இரண்டாவது சாத்தனையென அப்பெயர்ப் பொருண்மையைக் காரியமாக்கிற்று. மூன்றாவது சாத்தனாலென அப்பெயர்ப்பொருண்மையைக் கருத்தாவாக்கிற்று. நான்காவது சாத்தற்கென ஏற்றுக்கொள்வ4தாக்கிற்று. ஐந்தாவது சாத்தனினென நீக்குவ5தாக்கிற்று. ஆறாவது சாத்தனதெனக் கிழமைத்6தாக்கிற்று. ஏழாவது சாத்தன்கண்ணென இட7மாக்கிற்று. எட்டாவது சாத்தாவென முன்னிலை8யாக்கிற்று. இவ்வகையவாதல் தத்தம் இலக்கணச்சூத்திரங்களுட் காண்க.

'ஏற்குமெவ்வகைப்பெயர்க்குமீறாய்' எனவே, ஏனைவினைச் சொற்களும் பெயர்ப்படாஇடையுரிச்சொற்களும் வேற்றுமையேலா வென்பது தானேபோதருமெனக்கொள்க.

(பி - ம்.) 1 தோன்றாவுமாய். 2 பல்லோர்பெயர் ஒன்றன்பெயர் பலவின்பெயர். 3 விளிபெயர்களதுவிகாரமென்றடக்கி. 4 - 8 ஆயிற்று. (நுச)

**(291.) பெயரே ஐஆல் குஇன் அதுகண்
விளியென் றாகு மவற்றின் பெயர்முறை.**

எ - ன், மேல், "எட்டே" என்றவேற்றுமைகளின் பெயரும் முறையுமுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) மேல், பெயர்கள் வேற்றுமையேற்குமென்றதற்கு ஈண்டு ஓதியபெயரே பெயர்; இம்முறையேமுறை. எ - று.

ஏகாரம் அசைநிலை. (நுரு)

(292.) ஆற னுருபு மேற்குமவ் வுருபே.

எ - ன், எய்தாதது எய்துவித்தல்நுதலிற்று.

(இ - ள்.) மேல், பெயர்கள் வேற்றுமையை ஏற்குமென்றார்; அவையேயன்றி ஆறனுருபும் [1]அவ்வுருபுகளையேற்கும். எ - று.

அஃதேல், பெயரோடு இதற்கு வேற்றுமை யாதோவெனின், உருபேற்புழியும் தன் இருகிழமைப்பொருளினும் திரியாதுநிற்ற லென்க.

[2]உம்மை எண்ணும்மை.

வ - று. சாத்தனது, சாத்தனதை, சாத்தனதால், சாத்தன தற்கு, சாத்தனதனின், சாத்தனதனது, சாத்தனதன்கணெனவரும்.

விளியேலாதெனினும் உருபேற்றலிற் குறைபட்டதாகாது; சில உறுப்பிற் குறைபட்டாரும் மக்களெனப்படுவர், அதுபோலவென்பது.

பெயர்வேற்றுமையும் ஏனையுருபுகளையும் ஏற்குமால், அஃது ஒழித்ததென்னையோ வெனின், பெயர் எழுவாயுருபாவது தன்பய னிலை தோன்றநின்றகாலையன்றே; ஆண்டுப் பிறவுருபுகளையேலாது; ஏற்பின் தன் பொருண்மையும் ஏற்கும் உருபின்பொருண்மையும் ஒருங்குடைத்தாதல்வேண்டும்; அதனாற் பயனிலைகொள்ளாது நின்ற பெயரே உருபுகளை ஏற்குமெனக்கொள்க.

(பி - ம்.) [1] உருபுகளேற்கும். [2] உம் எண்ணும்மை. (௩௬)

(293.) நீயிர் நீவிர்நா னெழுவா யலபெறா.

எ - ன், மேல், "ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீ றாய்" என்றார்; எனவே ஏலாப்பெயருமுளவென்பதுமாயிற்று; அவை இவை யென்பது உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இம் [1]மூன்றுபெயரும் எழுவாயுருபினையொழிய ஏனையுருபுகளையேலா. எ - று.

(பி - ம்.) [1] மூவகைப்பெயரும். (௩௭)

(294.) அவற்றுள்,
எழுவா யுருபு திரிபில் பெயரே
வினைபெயர் வினாக்கொள லதன்பய னிலையே.

எ - ன், நிறுத்தமுறையானே பெயர்வேற்றுமையது இலக்கண முணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) மேற்சொன்ன எட்டனுள்ளும் முதல்வேற்றுமைக்கு உருபாவது திரிபு யாதுமின்றிநிற்கும் பெயர்தானேயாம்; வினையையும் பெயரையும் வினாவையுங்கோடல் அதற்குப் பொருணிலையாம். எ - று.

வினைபெயரென்று பொதுப்படவைத்தமையான், வினைமுற்றுக் குறிப்புமுற்றுப் பெயரெச்ச வினையெச்சங்களினும் [1]இருதிணையைம்பால் மூவிடத்துப்பெயர்களினும் இவற்றின்பொதுப்பெயர்களினும் ஏற்பனவெல்லாம் கொள்க.

ஏகாரஓகாரங்கள் இடைச்சொல்லாய் இவற்றுளடங்காமையின் வினாவென வேறெடுத்தோதினாரென்க. மேலே உருபுசொல்லி ஈண்டுஞ்சொல்லுதல் கூறியது கூறலென்னும் குற்றமாம்பிறவெனின், ஆண்டுப் பெயரும் முறையும் சொன்னார்; ஈண்டு வேற்றுமைக்குவரும் இலக்கணமெல்லாம் சொன்னாராதலின் ஆகாதென்க. இக்கடாவிடை மேல்வருவனவற்றிற்கும் ஒக்கும்.

வ - று. அவன்வந்தான், அவள்வந்தாள், அவர்வந்தார், அது வந்தது, அவைவந்தன எ - ம், யான்வந்தேன், யாம்வந்தேம் எ - ம், நீவந்தாய், நீவிர்வந்தீர் எ - ம், தான்வந்தான், தான்வந்தாள், தான் வந்தது, தாம்வந்தார், தாம்வந்தன, எல்லாம்வந்தார், எல்லாம் வந்தன, எல்லாம்வந்தேம், எல்லாம்வந்தீர் எ - ம், அவன்வாழ்க, [2] யான்வாழிய, நீவாழியர் எ - ம் வினைமுற்றுவந்தன. [3]அவன்வேலினன், அவன்அகத்தான், அவன்ஆதிரையான், அவன் [4]தாடியான், அவன்கரியான், அவன்செலவினன், அவனுண்டு, அவனில்லை, அவர் வேறு, அதுகரிது, அவையுளவென வினைக்குறிப்புமுற்றுவந்தன. அவன்செய்த, [5]அவள்செய்கின்ற, அவர்செய்யும், அதுசெய்த, அவை செய்யுமெனப் பெயரெச்சமேற்றன. அவன்செய்து, அவள்செய்பு, அவர்செய்யா, அதுசெய்யூ, அவைசெய்தெனவென இவை வினையெச்சங்கொண்டன.

அவன்அந்தணன், அவள்பேதை, [6]அவர்சான்றோர், அவன் யான், அவன் நீ, அவன்யாவன், இவன் எவன், இவள் எவள், அவள்நீ, உவர்தந்தையார், அது பெடை, இது சேவல், உவை ஊர்கள் எ - ம், யான்அரசன், யாம் விறலியர், யான் நீ, யாம்நீங்கள், யாம்[7]மந்திரிகள் எ - ம், நீ புலவன், [8]நீயிர்அவையீர், நீகிள்ளை, நீயிர் தாயர் எ - ம், சாத்தன் அவன், எல்லாம்மாந்தர், எல்லாம் மான்கள் எ - ம் பெயர்களேற்றன.

அவன்யாவன், 9இவள்யாவள்; அவனே, இவளே, உவரே, அதுவோ, அவையோ எ-ம், யான்யாவன், யான்யாவள்; யாமே, யாமோ எ-ம், 10நீயிரெவரீர்; நீரே, நீரோ எ-ம், சாத்தனே, மக்களோ எ-ம் வினுவேற்றன.

11ஆயன்சாத்தனென்றற்றொடக்கத்தன பண்பொட்டுப் பெயராய் இம்மூன்றனுள் ஒன்றுகொள்ளுமென்க.

*"பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல், வினைநிலையுரைத் தல் வினுவிற் கேற்றல், பண்புகொள வருதல் பெயர்கொள வருத 12லென், றன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே" என்னுமிவ்வாறும் இம்மூன்றனுளடங்குமெனக்கொள்க.

"வினைநிலை யுரைத்தலும் வினுவிற் கேற்றலும், பெயர்கொள வருதலும் பெயர்ப்பய னிலையே" என்றார், அகத்தியனாருமென்க.

(பி-ம்.) 1 இருதிணை மூவிடத்தைம்பாற்பெயர்களினும். 2 யான் வாழ்க. 3 அவன்வேலன். 4 அவன்முடியான். 5 அவன்செய்கின்ற, அவன் செய்யும். 6 அவர்சான்றார். 7 வந்திகள். 8 நீயிர் அரிவையீர். 9 (க) இவ ளெவள், உவரோ, அதுவோ; (உ) யானோ, யாமோ எ-ம். 10 நீயிர்யாவர். 11 ஆதன்சாத்தன். 12 (க) என்றிவ்வனைத்தும்; (உ) என்றிவையனைத்தும்.()

(295.) இரண்டா வதனுரு வையே யதன்பொருள்
ஆக்க லழித்த லடைத னீத்தல்
ஒத்த லுடைமை யாதி யாகும்.

எ-ன், நிறுத்த முறையானே இரண்டாம் வேற்றுமையாமா றுணர்த்துதல்நுதலிற்று.

(இ-ள்.) இரண்டாம் எண்ணுமுறைமைக்கணின்றவேற்று மைக்கு ஐயென்பது உருபாம்; அதனது பொருள் ஒன்றைஆக்க லும் அழித்தலும் அடைதலும் நீத்தலும் ஒத்தலும் உடைமையு முத லானவையாம். எ-று.

'ஆதி' என்றதனுல், ஒவ்வாமைமுதலானவும் இவற்றின் பரி யாயமொழிகளும் கொள்க.

வ-று. அறத்தை ஆக்கினுன், நூலைக்கற்றான், தேரைஊர்ந் தான், அணியை அணிந்தான், பொன்னை நிறுத்தான், நெல்லை அளந் தான், 1நீரைக்கட்டினுனென்றற்றொடக்கத்தன ஆக்கல். அறத்தை

* தொல். வேற்றுமையியல், ௫.

அழித்தான், மரத்தை அறுத்தான், காமனைவென்றான், பகையைக் கொன்றான், ஊரை எரித்தான், மரத்தைக்குறைத்தானென்றற்றொடக்கத்தன அழித்தல். அறத்தை அடைந்தான், வீட்டை மேவினான், ஊரை ஒன்றினான், நாட்டை நண்ணினான், குன்றைக் குறுகினானென்றற்றொடக்கத்தன அடைதல். அறத்தைத் துறந்தான், மறத்தை நீத்தான், வீட்டைவிட்டான், பாட்டை [2]ஒழிந்தானென்றற்றொடக்கத்தன நீத்தல். மண்ணை ஒத்தான், பொன்னை ஒத்தான், புலியை ஒத்தான், சிங்கத்தைப்போன்றானென்றற்றொடக்கத்தன ஒத்தல். அருளையுடையான், [3]கொடையையுடையான், முடியையுடையானென்றற்றொடக்கத்தன உடைமை; வினைக்குறிப்பு.

அவனை ஒவ்வான், இவனைப்போலானென்றற்றொடக்கத்தன ஒவ்வாமை. அறத்தைக்காத்தான்; வளர்த்தான், பெருக்கினான், படைத்தானென்றற்றொடக்கத்தன ஆக்கல் மொழிப்பரியாயம். பிறவற்றிற்கும் இவ்வாறே வருவனகண்டுகொள்க.

(பி - ம்.) [1] நிரையைக்கட்டினான். [2] ஒழித்தான். 3 கொடையை.()

(296.) மூன்றா வதனுரு பாலா னோடு
கருவி கருத்தா வுடனிகழ் வதன்பொருள்.

எ - ன், நிறுத்தமுறையானே மூன்றாம்வேற்றுமையாமாறு உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) மூன்றாம் வேற்றுமைக்கு உருபு ஆலும் ஆனும் ஓடும் ஒடுவுமாம்; அதற்குப் பொருள் கருவியாதலும் கருத்தாவாதலும் உடனிகழ்ச்சியுமாம். எ - று.

மேல், ஆலொன்றையும் இதற்கு உருபாகச்சொல்லி, ஈண்டு [1] நாலுருபு சொல்லுதல் மலைவாம்பிறவெனின், ஆண்டுப் பெயரும் முறையும் காட்டுதன்மாத்திரைக்கு வழக்கிடத்தும் செய்யுளிடத்தும் பயின்றுவருவதனைச் சொன்னார்; [2]ஈண்டு இவ்வேற்றுமைக்குவரும் உருபெல்லாம் எடுத்தோதினாராகலான், மலைவாகாதென்க. 3இக்கடாவிடை மேல்வருவனவற்றிற்கும் ஒக்கும்.

" ஆனு மானு மோடு மொடுவுஞ், சானு மூன்றாம் வேற்றுமைத் தனுவே, செய்வோன் காரணஞ் செயத்தகு கருவி, மெய்திய தொழின்முத லியைபுடைத் ததன்பொருள்" என்றார் அகத்தியனாருமென்க. அஃதேதல், அவர் ஐந்துபொருளாகச்சொன்னாராலோவெனின், இவர், இவ்வாறு அறிதற்குக்கருவியானஞாபகக்கருவியை

யும் இயற்றுதற்குக் கருவியான காரகக்கருவியையும் பொதுவே கருவியெனவும், ஏவுதற்கருத்தாவையும் இயற்றுதற்கருத்தாவையும் பொதுவேகருத்தாவெனவும் அடக்கி மூன்றுகவோதினுரென்க. கருவியெனினுங் காரணமெனினும் ஏதுவெனினும் நிமித்தமெனினுமொக்கும். அவ்விருவகைக்கருவியும் முதற்காரணமும் துணைக்காரணமுமென இரண்டாம். அவற்றுள் முதற்காரணமாவது அவ்விருவழியுள்ளும் தன்னை இன்றியாமையாச்சிறப்புடையது. துணைக்காரணமாவது அவ்விருவழியுள்ளும் முதற்காரணத்துக்குத் துணையாக வருவது.

வ - று. கடல்கண்டானென்றல், அக்காட்சிக்குஉணர்வு முதற்காரணம்; கண்ணும் ஒளியுமுதலானவை துணைக்காரணம்; இவை ஞாபகக்கருவி. குழைசெய்தானென்றல், அதற்குப் பொன்முதற்காரணம்; 4கம்மக்கருவியும்தீயுமுதலானவை துணைக்காரணம். இவை காரகக்கருவி; பிறவுமன்ன. கருவியைப் பொருண்மைப்பன்மையான் முற்கூறினுரென்க. உணர்விஞல்உணர்ந்தான், சுடரிஞற்கண்டான், புகையுண்மையால் எரியுள்ளது, அலகிஞல்எண்ணிஞன், நாழியால்அளந்தான்; இவைஞாபகக்கருவி. பொன்னலாயமணி, மண்ணலாயகுடம், வாளாலெறிந்தான், கையால்வாங்கிஞன், தவத்தால்வீடெய்திஞன், முயற்சியாலாயிஞன், காலாலேகிஞன், பொன்னலணிந்தான்; இவை காரகக்கருவி; "முதல்வனும் பொருளுங் கருமமுங் கருவியு, மேற்பது நீக்கமு மெனவிவை காரகம்."

தச்சஞலியற்றப்பட்டவையம், கடவுளாலாக்கப்பட்டவிமானம், புலியால் 5விழுங்கப்பட்டான், சுறவால் ஏறுண்டான்; இவை செய்யும்வினைமுதல். அரசஞலியற்றப்பட்ட தேவகுலம், தேவராலாய திரு; இவை ஏவல்வினைமுதல்.

*"தூங்குகையாலோங்கு நடைய, உறழ்மணியா லுயர்மருப்பின", †"பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன், பெண்டகையாற் பேரமர்க் கட்டு;" இவை உடனிகழ்ச்சி. ஆனுருபோடும் இவ்வாறே ஒட்டிக்கொள்க.

‡ "உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங், கல்லா ரறிவிலா தார்", §"நாவீற் றிருந்த கலைமாமக ளோடு நன்பொற், பூவீற் றிருந்த திருமாமகள் புல்ல நாளும்", "சுழியோ டெறிபுனற்

* புறநா. உஉ. † திருக்குறள், ௧௦அங. ‡ ஷை ௧௪௦. § சீவக. ௩௦.

பொன்னிநன் னாடன் *சுரகுருவின், வழியோ னமலன் மயிலையன் னீர்மணி வாயினின்று, மொழியோ தெரிந்தில கொங்கையுஞ் செய்ய முகத்தினின்ற, விழியோ படுகொலை யோவிலங் கோவந்து மீண்டனவே", 6†"மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு, தானஞ்செய் வாரிற் றலை" என ஒடுவந்தவாறு.

அரசனால் இயற்றப்பட்ட தேவகுலமென்றற்றொடக்கத்தனவற்றுள் உருபல்லாத பிறமொழிகள் 7வருமாறென்னையெனின், அவை கனலொடு புகையும் குடையொடு நிழலும்போல உருபுவரவந்து நீங்கநீங்கும், பொருளை விளக்கவேண்டுழியெனக்கொள்க.

(பி - ம்.) 1 நாலுருபாகச். 2 ஈண்டை. 3 இக்கடாவும்விடையும். 4 கருமக்கருவியும். 5 விழுங்கப்பட்டானென்றற்றொடக்கத்தன இவை. 6 துறைநகைத்துறை. 7 என்னைவருமாறெனின். (௪0)

(297.) நான்கா வதற்குரு பாகுங் குவ்வே
கொடை பகை நேர்ச்சி தகவது வாதல்
பொருட்டுமுறை யாதியி னிதற்கிதெனல் பொருளே.

எ - ன், நிறுத்த முறையானே நான்காம்வேற்றுமையாமாறு உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) நான்காம் வேற்றுமைக்குக் குவ்வென்பது உருபாம்; கொடையும் பகையும் நேர்ச்சியும் தகவும் அதுவாதலும் பொருட்டும் முறையுமுதலானபொருண்மைக்கண் இதற்கிதுவென்பதுபட நிற்றல் அதற்குப்பொருளாம். எ - று.

வ - று. தேவர்க்குப்பூசை, சாத்தற்குச்சோறு, ‡"இரப்பார்க் கொன், றீவார்மே னிற்கும் புகழ்", "இரந்தோர்க்குத் 1தேர்வீசும் வண்கை யவன்" என்பன கொடை. மக்கட்குப்பகைவெகுளி, பாம்புக்குப்பகைகீரி, §"அல்லவை செய்தார்க் கறங்கூற்றம்", ||"பிணிக்கு மருந்து பிறமன் னணியிழை, தன்னோய்க்குத் தானே மருந்து." என்பன பகை. 2கற்றோற்கு மகள்நேர்ந்தான், அறத்திற்குப் பொருணேர்ந்தான், இறைக்கதுநேரின் 3நினக்கிதுநேருமென்பன நேர்ச்சி. அறத்திற்குத்தக்கது அருள், சாத்தற்குத்தக்காள்கொற்றி, ¶"செல்

* சுரகுரு - ஒருசோழன். † திருக்குறள், ௨௯௫. ‡ ஷ ௨௩௨. § நான்மணி. ௮௪; முதுமொ. ௨௭; சிலப். வழக். இறுதிவெண்பா, ௧. || திருக்குறள், ௧௧0௨. ¶ ஷ ௧௨௫.

வர்க்கே செல்வந் தகைத்து", *"அருங்கல முலகின் மிக்க வர சர்க்கே யுரிய" என்பன 4தகுதி; ஆடைக்குநூல், ஆழிக்குப்பொன் என்பன அதுவாதல். †"5வரிசைக்குவருந்தும்", கூழுக்குக்குற்றே வல்செய்யுமென்பன பொருட்டு; சாத்தற்குமகன், கொற்றற்குமகள் என்பன முறை.

'ஆதி' என்றதனால், கரும்பிற்குவேலி, மயிருக்கெண்ணெய், உயிருக்குண்டியென்னும் அதற்குவினையுடைமையும், சாத்தற்குப் பொருளென்னும் படுபொருளும், கைக்குயாப்புடையதுகடகமென் னும் யாப்புடைமையும், நாய்க்கு நட்புடையனென்னும் நட்புடை மையும், தாய்க்குக்காதலனென்னும் காதலும், 6வடுகரசர்க்குச்சிறந் தார் சோழியவரசரென்னும் சிறப்புடைமையும்கொள்க.

இன்னும் இஃது, ஏனைவேற்றுமைகள்போல அளவுபட்டபொ ருண்மைத்தன்றிவரும்; அவையும் இதற்கிஃதென்பதேபடவுரைத் துக்கொள்க. அவை அரசர்க்கு அமைச்சன், அவர்க்குத்தமர், 7நமக்கு நல்லன், ‡"நிலத்துக் கணியென்ப நெல்லுங் கரும்பும்", §"மனைக் குப்பாழ் வாணுத லின்மை", ||"போர்க்குப்புணைமன்", ¶"கள் வார்க்குத் தள்ளா முயிர்நிலை", **"அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்", ††"உண்டி வெய்யோர்க் குறுபிணி யெளிது", "பல் லுக்குத் தோற்ற பனிமுல்லை", ‡‡"ஊர்க்கு மணித்தே பொய்கை பொய்கைக்குச், சேய்த்து மன்றே சிறுகான் யாறே", "8தனக் குச்சரியென்பநல்லாடானவற்கின்றமைந்தன்", "மைந்தற்கு மட வாட்கு நிகழ்ந்தகேட் டஞ்சுமின் கொலை9யஞ்சு மின்றீயன" என் பனமுதலாயினவெனக்கொள்க.

"சிறப்புடைப் பொருளைத் தானெடுத்து மொழிதல்" என்பத னால், இதற்குச்சிறந்தன எடுத்தோதி, இவை 'ஆதி' என்பதனால் தழுவவைத்தாரென்க.

(பி - ம்.) 1 தேரீயும். 2 சான்றோற்கு. 3 எனக்கிது. 4 தகவாம். 5 வரிசைக்குழும். 6 வடுகரரசர்க்கு. 7 (க) நமர்க்கு; (உ) நமனுக்கு. 8 (க) தனக்குச்சரியென்பநல்லமானவர்க்கின்ற. (உ) தனகிரியென்ப். 9 அஞ்சன் மினன்றியென. (சக)

(298.) ஐந்தா வதனுரு 1பின்னு மில்லும்
நீங்கலொப் பெல்லை யேதுப் பொருளே.

* சூளா. கல்யாண. கஅகூ † புறநா. சஎ. ‡ நான்மணி. க. § ஷை. உ0. || பு - வெ. காஞ்சி. உ0. ¶ திருக்குறள், உகூ0. ** ஷை. இசங. †† முது மொழி. எஎ. ‡‡ குறு. ககங.

எ - ன், நிறுத்தமுறையானே ஐந்தாம் வேற்றுமையாமாறு [2] உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐந்தாம்வேற்றுமைக்கு இன்னென்பதூஉம் இல்லென்பதூஉம் உருபாம்; நீங்கிநிற்றலும், உவமையும், எல்லையும், கருவியும் [3]பொருளாம். எ - று.

வ - று. ஊரினீங்கினான், தமரிற்றீர்ந்தான், வரையின் வீழருவி, *"தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர், நிலையி னிழிந்தக் கடை" எனவருமிவை நீக்கம். †"திறல்வே னுதியிற் பூத்த கேணி", ‡"நெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரக்கும்", "பொன்னிற் பிதிர்ந்த பொறிசுணங் கிளமுலை." இவை ஒப்பு; இதனினெடிது, இதனினினிது, இதனினன்று, இதனிற்றண்ணிது, இதனின்மெல்லிது என்பன நீக்கந்தழுவிநிற்கும் போலி; கருவூரின் கிழக்கு, மருவூரின் மேற்கு, வையையாற்றின் வடக்கு, [4]மருதயாற்றின் தெற்கு எனவருமிவை எல்லை. முயற்சியிற்பிறத்தலான் ஒலி நிலையாது, புகையுண்மையின் எரியுள்ளது, பொன்னினாயகுடம், §"கோட்டிற் செய்த கொடுஞ்சி நெடுந்தேர்", 'அறிவிற்பெரியன்' எனவருமிவை [5] கருவி; இல்லொடும் ஒட்டுக.

(பி - ம்.) 1 இல்லுமின்னும். 2 தொகுத்துணர்த்துதல். 3 அதற்குப் பொருளாம். 4 மருதையாற்றின். 5 ஏது. (௬௨)

(299.) ஆற னொருமைக் கதுவு மாதுவும்
பன்மைக் கவ்வு முருபாம் பண்புறுப்
பொன்றன் கூட்டம் பலவி னீட்டம்
திரிபி னாக்க மாந்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.

எ - ன், நிறுத்தமுறையானே ஆறாம்வேற்றுமையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆறாம்வேற்றுமையின் [1]ஒருமைப்பொருண்மைக்கு [2] அதுவும் ஆதுவும், பன்மைப்பொருண்மைக்கு அவ்வும் உருபாம். பண்பும் உறுப்பும் ஒருபொருட்டிரட்சியும் பலபொருட்டிரட்சியும் ஒன்று திரிந்து ஒன்றாதலுமாகும் [3]ஐந்துதற்கிழமையும் பிறிதின் கிழமையும்போற்றுதல் அதற்குப்பொருளாம். எ - று.

* திருக்குறள். ௯௬௪. † சிறுபாண். ௧௭௨. ‡ அகநா. ௯. § பொருந. ௧௬௩.

"ஆற னுருபே 4யதுவா தவ்வும், வேறொன் றுரியதைத் தனக்குரி யதையென, விருபாற் கிழமையின் 5மருவுற வருமே, ஐம்பா லுரிமையு மதன்றற் கிழமை" என்றார், அகத்தியனார்,

வ - று. சாத்தனது இயல்பு; இளமை, வன்மை, குறுமை, உண்மை, நன்மை, நிறம், உணர்வு, கல்வி, கேள்வி என்பவை பண்புத்தற்கிழமை; சாத்தனதுசெலவு; நிலை, இருக்கை, உணவு, செய்கை 6 என்றற்றொடக்கத்து வினைகளும் ஈண்டுத் தொழிற்பண்பாயடங்குமெனக்கொள்க. சாத்தனதுகை, யானையதுகோடு, வாழையதுபழம், 7 தேரதுதட்டு, செய்யுளதடி என்பன உறுப்புத்தற்கிழமை; நெல்லது குப்பை, எள்ளது ஈட்டம், கொள்ளதுகுழாம், ஆனையதுதொகை, மாந்தரதுதொகுதியென்பன ஒன்றன்கூட்டத்தற்கிழமை; படையது தொகை, விலங்கினது ஈட்டம், மரத்ததுகுழாமென்பவை 8பலவினீட்டத்தற்கிழமை; கொள்ளதுநூறு, எள்ளதுசாந்து, நெல்லதுசோறு, பயற்றதுகும்மாயமென்பவை திரிபுத்தற்கிழமை; சாத்தனதுஆடை, அரசனதுஆழி, ஆவினதுகன்று, கபிலரதுபாட்டு என்பவை பிறிதின்கிழமை. 9எனதுகை, தனதுதாள், நினதுநிறம் எ - ம், எனதெயில், நினதுநிலம், தனதுதரை எ - ம் இருகிழமைக்கண்ணும் அதுவும் ஆதுவும் வந்தவாறு. எனகைகள், நினதோள்கள், தனதாள்கள், எ - ம், எனயானைகள், நினநிரைகள், தனதானைகள், *"உய்த்துச் சொரியினும் போகா தம" எ - ம் இருகிழமைக்கண்ணும் அகர வுருபுவந்தவாறு.

(பி - ம்.) 1 ஒருமைக்கு. 2 அதுவென்பதுவும் ஆதென்பதுவும். 3 இந்தஐந்து. 4 அதுவும் ஆதுவும் வேறொன்றுடையதை. 5 பொருளுற்றுவருமே. 6 என்றற்றொடக்கத்தன. 7 தேரதுசெதிள், தட்டு, தடி. 8 (க) பலகுழீஇயதற்கிழமை; (உ) பலவியற்றற்கிழமை. 9 எனது, எனது.. ...(௩௩)

(300.) ஏழ னுருபு கண்ணாதி யாகும்
பொருண்முத லாறு மோரிரு கிழமையின்
இடனாய் நிற்ற லிதன்பொரு ளென்ப.

எ - ன், நிறுத்தமுறையானே ஏழாம்வேற்றுமையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஏழாம் வேற்றுமைக்கு உருபு கண்ணென்பதுமுதலானவையாம். பொருளாதியாறும் தற்கிழமையானும் பிறிதின்கிழ

* திருக்குறள், ௩௭௬.

மையானும் ஒன்றற்கிடனாய்நிற்றல் இதன்பொருளென்று சொல்லுவர் புலவர். எ - று.

வ - று. மணியின்கணொளி, மலையின்கண் ஒக்கம் எ - ம், பனையின்கண் அன்றில், தினையின்கட்கிள்ளை எ - ம் இருகிழமையானும் பொருள் [1]இடனாயிற்று. ஊரின்கண் இல்லம், கடலின்கட்டிரை எ - ம், ஆகாயத்தின்கட்பறவை, குடக்கின்கட்குன்று எ - ம் இடம் இடனாயிற்று. யாண்டின்கணிருது, நாளின்கணாழிகை எ - ம், வேனிற்கட்பாதிரி, காரின்கட்கொன்றை எ - ம் காலம் இடனாயிற்று. கையின் கண்விரல், மலரின்கணாற்றம் எ - ம், கையின்கட் கடகம், மலரின்கண் வண்டு எ - ம் சினை இடனாயிற்று. நிறத்தின்கணெழில், உணர்ச்சிக் கட்கூர்மை எ - ம், இளமைக்கட்செல்வம், வளமைக்கண்விருந்து எ - ம் பண்பு இடனாயிற்று. ஆடற்கணழகு, பாடற்கட்பணிவு எ - ம், ஆடற்கட்பாட்டு, பாடற்கண்யாழ் எ - ம் தொழிற்பெயர் இடனாயிற்று.

இதனுள், 'பொருண்முதலாறும்' என்றாராயினும் வினை வேற்றுமையேலாமையின், ஈண்டுத் தொழிற்பெயரேகொள்க.

(பி - ம்.) 1 இடமாயிற்று. (சச)

(301.) கண்கால் [1]கடையிடை தலைவாய் திசைவயின்
முன்சார் வலமிட மேல்கீழ் புடைமுதல்
பின்பா டளைதே முறைவழி யுழியுளி
உள்ளகம் புறமில் லிடப்பொரு ளுருபே.

எ - ன், ஏழாம்வேற்றுமைக்குக் கண்முதலானவை உருபென்றார், அவை இவையென்பதுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கண்முதலாக எண்ணப்பட்ட இருபத்தெட்டும் இடப்பொருளைக்காட்டும் உருபுகளாம். எ - று.

வ - று. *"நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே", †"ஊர்க் கா னிவந்த [2]பொதும்பருள்," ‡"ஈதலியை யாக்கடை", §"நல்லாரிடைப்புக்கு", "நனந்தலை வந்த நல்லோர்", "புன்னைநன்னீழற் புலவுத்திரைவாய்", ||"தென்றிசை [3]யாஅய் குடியின் றாயின்", "அவர் [4]வயினிடைச் செல்வாய்", ¶"கற்றார்முற் றோன்றா கழிவிரக்கம்",

* திருக்குறள். சOஅ. † கலி. டுசு. ‡ திருக்குறள், உ௩O. § நாலடி. அவை. ச. || புறநா. க௩உ. ¶ நான்மணி. அ.

“ காட்டுச்சாரோடுங்குறுமுயால் ”, “ காழ்வரைநில்லாக்[5]களிறவன் கைவலத்தியாழ்வரைநின்றது ”, “ இல்லிடப்பரத்தை, ”, *“ தன் மேற் கடுவரை நீரிற் கடுத்து வரக்கண்டும் ”, “ பேரிணர்க்கொத்தி ஞெர் பிண்டிநிழற்கீழ் ”, “ கடைபுடைக்கொள்ளிய நீர் ”, †“[6]சுரன் முதல்வந்த வுரன்மாய் மாலை ”, “ காதலிபின்சென்றதம்ம ”, “ நம் பாடணை யாதநாள் ”, “ கல்லளைச்சுனைநீர் கையிலுண்டமையான் ”, ‡“ தோழிக்குரியவை கோடாய் தேஎத்து ”, §“அவனுழையிருந்த தண்டமிழ்ச்சாத்தன் ”, “ நின்றதோர் நறவேங்கை நிழல்வழி [7]யசை ந்தனளே ”, “ குயில்சேர் குளிர்கா வுளிசேர் புறையும் ” ||“உறைப் புழி யோலை போல, ¶“ மூலையங் குவட்டுள் வாழும் ”, **“ பயன் சாராப் பண்பில்சொற் பல்லா ரகத்து ” ††“செல்லுமென் னுயிர்ப் புறத் திறுத்தந்த மருண்மாலை ”, ‘ ஊரிலிருந்தார், நீரில்விழுந்தார் ’ என வரும்.

(பி - ம்.) [1] தலையிடைகடை. [2] உயர்நிலைமாடம். 3 ஆயுயர்குடி. 4 வயி ன்கட். 5 கடுங்களிறு கைவலத்து. 6 கான்முதல்வந்த. 7 அசைந்தனன். (௬௫)

(302.) எட்ட னுருபே யெய்துபெய ரீற்றின்
திரிபு குன்றன் மிகுத லியல்பயற்
[1]றிரிபு மாம்பொருள் படர்க்கை யோரைத்
தன்முக மாகத் தானழைப் பதுவே.

எ - ன், எட்டாம் வேற்றுமையுருபும் பொருளுமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எட்டாமெண்ணுமுறைமைக்கணின்ற வேற்றுமை க்கு உருபாவது விளியேற்கும்பெயரின் ஈற்றது திரிபும் கேடும் மிகுத லும் இயல்பும் [2]ஈற்றயலினின்றதன் திரிபுமாம். அதற்குப்பொருள், படர்க்கையிடத்தாரை ஒருவன் தனக்கு எதிர்முகமாக அழைக்கை யாம். எ - று.

‘ எய்துபெயர் ’ எனவே, எய்தாதபெயரும் [3]உளவென்பதாம்; அவை போக்கிச்சொல்லுதும். ‘ படர்க்கையோரை ’ எனவே முன் னிலையோரும் தன்மையோரும் ஈண்டே விலக்கப்பட்டாராவர். படர்க்கையோரையென்றாரேனும், “ ஒருமொழி யொழிதன் னினங் கொளற்குரித்தே ” என்பதனாற் படர்க்கையிடத்து ஐம்பாலுங் கொள்க.

---

* பு - வே. வெட்சி. ௧௧. † நற். ௩. ‡ இறை. ௧௪. § சிலப். பதி. ௧௦. || புறநா. ௨௬௦. ¶ சீவக. ௧௨௩௨. ** திருக்குறள். ௧௯௪. ††கலி. ௧௪௮.

பெயருருபிற்கும் இயல்பானவிளியுருபிற்கும் 4உருபான் வேற்றுமையின்றேனும் பொருளான் உண்டெனக்கொள்க.

தானென்பது சந்தவின்பப் 5பொருட்டுவந்தது.

(பி - ம்.) 1 திரிவு. 2 ஈற்றயலின்றிரிபுமாம். 3 உளவாம். 4 உருவான். 5 (க) பொருட்டாய்; (உ) பொருள்தர. (சகு)

(303.) இஉ ஊவோ டையோ னளரல
யவ்வீற் றுயர்திணை யோரவல் லிவற்றொடு
ணஃகா னுவீ றுகும் பொதுப்பெயர்
ஞநவொழி யனைத்தீற் றஃறிணை விளிப்பன.

எ - ன், மேல் விளியேற்கும்பெயரென்றார், அவை இவையெனத் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இ உ ஊ ஐ ஓ ன ள ர ல ய என்னும் பத்தீற்று உயர்திணைப்பெயரும், இவற்றுள் ஓகாரமும் ரகாரமுமான இரண்டும் ஒழித்துநின்ற இவற்றுடனே ணகாரஆகாரங்களை ஈறுகவுடைய 1பத்துப் பொதுப்பெயரும், ஞகாரநகாரங்களும் மேலையதிகாரத்துள் அளபின் கண் அல்லது ஈறுகாதென்று விலக்கின எகாரமுமொழித்து ஒழிந்த இருபத்தோரீற்று அஃறிணைப்பெயரும் விளியேற்பனவாம். எ - று.

ஏனையீற்றுப்பெயர்கள் விளியேலாவென்றவாறு. இதனுட் பெயரென்பதனை இருதிணையிடத்தும்வருவித்துக்கொள்க.

(பி - ம்.) 1 பத்தீற்றுப்பொதுப்பெயரும். (சஎ)

(304.) இம்முப் பெயர்க்க ணியல்பு மேயும்
இகர நீட்சியு முருபா மன்னே.

எ - ன், மூவகைப்பெயர்க்கும் பொதுவானவிளியுருபு தொகுத்துணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) உயர்திணைப்பெயர் பொதுப்பெயர் அஃறிணைப்பெயரென்னும் மூவகைப்பெயர்க்கண்ணும் எல்லாஈறும் இயல்பாதலும் அவற்றின்கண் ஏகாரமிகுதலும் இகரவீறு ஈகாரவீறாய்த்திரிதலும் விளி 1வேற்றுமைக்கு உருபுகளாம். எ - று.

வ - று. நம்பிகூறாய், 2மனைவிகூறாய், கணிகூறாய், தோழிகூறாய், தொழும்பிகூறாய், வேந்துகூறாய், பெண்டுகூறாய், பூண்டுகூறாய்,

ஆடூஉக்கூறாய், மகடூஉக்கூறாய், விடலைகூறாய், மங்கைகூறாய், கோக்கூறாய் எ - ம், நம்பியே, முனியே, 3கணியே, வேந்தே, பெண்டே, பூண்டே, ஆடூஉவே, மகடூஉவே, கோவே எ - ம், நம்பீ, மனைவீ, தோழீ, தொழும்பீ எ - ம், 4கோமான்கூறாய், இறைவன் கூறாய், வெற்பன்கூறாய், அருவாளன்கூறாய், பார்ப்பான்கூறாய் எ - ம், * "பார்ப்பன மகனே பார்ப்பன மகனே", "†எம்மானே தோன்றினை யென்னை யொளித்தியோ" எ - ம், அடிகள்கூறீர், கோமாள் கூறீர் எ - ம், ‡ "அகவன் மகளே யகவன் மகளே" எ - ம், மாந்தர்கூறீர், சான்றோர் கூறீர் எ - ம், இறைவரே, ஈசரே, குழையரே, வெற்பரே எ - ம், குருசில்கூறாய், தோன்றல்கூறாய், எ - ம், "குருசிலே யெம்மையுள்ளாய்", § திருமாலே, தோன்றலே எ - ம், ஆய்கூறாய், எ - ம், ஆயேசொல்லாய் எ - ம் உயர்திணைப்பெயர்க்கண் விளியுருபு வந்தவாறு.

பிதாவுரையாய், பிணாவுரையாய், தம்பிகூறாய், சாத்திகூறாய், 5 கொற்றிகூறாய், அரசுகூறாய், அழிதூஉக்கூறாய், பேதைபேசாய், தந்தைதாராய், 6அம்மையருளாய், அன்னையருளாய், ஆண்கூறாய், பெண்கூறாய், சாத்தன்கூறாய், கொற்றன்கூறாய், மகன்வாராய், மகள்வாராய், மக்கள்வாரீர், ஒதுங்கல்கூறாய், தூங்கல்கூறாய், தாய்கூறாய், சேய்கூறாய், எ - ம், பிதாவே, பிணாவே, அரசே, அழிதூஉவே, ஆணே, பெண்ணே, சாத்தனே, கொற்றனே, மகனே, மகளே, ஒதுங்கலே, தூங்கலே, தாயே, சேயே எ - ம், தம்பீ, சாத்தீ, கொற்றீ எ - ம் பொதுப்பெயர்க்கண் விளியுருபுவந்தவாறு.

விளக்கொடியை, புறாக்கொடியை, தும்பிகொடியை, வீகொடியை, முசுக்கொடியை, வண்டுகொடியை, பூக்கொடியை, சேக்கொடியை, மழைகொடியை, நொக்கொடியை, கோக்கொடியை, வெளக்கொடியை, இதண் உரையாய், அன்னம் கூறாய், புனம் கூறாய், மான்கூறாய், வேய்கொடியை, சூர்கொடியை, வேல்கொடியை, தெவ்வலியை, யாழ்கொடியை, புள்கொடியை எ - ம், விளவே, புறாவே, தும்பியே, வீயே, முசுவே, வண்டே, பூவே, சேவே, மழையே, நொவ்வே, கோவே, வெளவே, இதணே, புனமே, மானே, வேயே, சூரே, வேலே, தெவ்வே, யாழே, புள்ளே எ - ம், மந்தீ, தும்பீ எ - ம் அஃறிணைப்பெயர்க்கண் விளியுருபுவந்தவாறு.

---

* குறு. கஙக. † சீவக. கஅ௦௧. ‡ குறு. உங. § பெருமாள். ௪. ௯.

'மன்' என்ற 7மிகையானே உயர்திணைப்பெயரீற்று ஐகாரம் ஏகாரமேலாதெனவும் ஏனைய ஏற்புழி ஐகாரம் திரிந்தும் திரியாதும் ஏற்பனவாமெனவுங்கொள்க.

(பி - ம்.) [1] வேற்றுமையுருபுகளாம். [2] தேவி. 3 கன்னியே. 4 கோன். 5 முடத்தி. 6 அம்மே, அன்னே. 7 விதப்பானே. (சூஅ)

(305.) ஐயிறு பொதுப்பெயர்க் காயு மாவும்
உருபா மல்லவற் றாயு மாகும்.

எ - ன், ஐகாரவீற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்தல் நுதலிற்று.

(இ - ள்.) ஐகாரவீற்றுப் பொதுப்பெயர்க்கண் ஆயும் ஆவும் விளியுருபாம்; உயர்திணை அஃறிணைப்பெயர்க்கண் ஐகாரத்துக்கு ஆயும் உருபாம். எ - று.

வ - று. அன்னாய், தந்தாய், [1]"ஆவன்னா வன்னா வலந்தேனெழுந்திராய்", என விரவுப்பெயர்க்கண் இரண்டுருபும் வந்தவாறு. விடலாய், மடந்தாயென உயர்திணைக்கண்ணும், *"சிறுமீன் கவுட்கொண்ட செங்குவி நாராய்", "†கொன்றாய் குருந்தே கொடிமுல்லாய் வாடினீர்" என அஃறிணைக்கண்ணும் ஆயுருபுவந்தவாறு.

உம்மைகள் இவையுமாமென எண்ணின்கண்வந்தன.

(பி - ம்.) [1] ஆத்தாய். (சுக)

(306.) ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்கண்
[1]அளபீ றழிவய னீட்சி யதனோ
டீறு போத லவற்றோ டோவுறல்
ஈறழிந் தோவுற லிறுதியவ் வாதல்
ரு அதனோ டயறிரிந் தேயுற லீறழிந்
தயலே யாதலும் விளியுரு பாகும்.

எ - ன், னகாரவீற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதல் நுதலிற்று,

(இ - ள்.) னகாரவீற்றுயர்திணைப் பெயர்களுட்சில அளபெழுதலும், சில ஈறுகெடுதலும், சில ஈற்றயல் நீளலும், சில ஈற்றயல் நீண்டு ஈறுகெடுதலும், சில ஈற்றயல் நீண்டு ஈறுகெட்டு ஓகாரமிகு

* ஐந் - எழு. கூஅ. † திணை - நூற். அக.

தலும், சில ஈறுகெட்டு ஓகாரமிகுதலும், சிலஇறுதி யவ்வொற்றாத லும், சிலஇறுதி யகாரமாய் அயலில் ஆகாரம் ஓகாரமாய் ஏகாரமேற் றலும், சில ஈறழிந்து அயலில் அகாரம் ஏகாரமாதலும் விளியுருபாம். எ - று.

'ஒருசார்' என்பதனை விளிபதிகாரமுடியுமளவும் [2]எல்லா ஈற் றுள்ளும் யாண்டும் வருவித்துக் கண்டுகொள்க.

வ - று. அம்பர்கிழாஅன், வல்லங்கிழாஅனெனச் சேய்மைக் கண் அளபாயின. இறைவகேள், [3]நாதகேள், *"எனுவ சிறுஅ ரெம்முறு நண்ப, புலவர் தோழ கேளா யத்தை", †"பேரேமுற் றார்போல முன்னின்று விலக்குவா யாரெல்லா" என அண் மைக்கண் ஈறழிந்தன. [4]நம்பானெம்பெருமானென அயல்நீண் டது. இறைவா, மன்ன, தேவாவென அயல்நீண்டு ஈறுகெட்டன. ஐயாவோ அன்பாவோவெனப் புலம்பின்கண் அயல்நீண்டு ஈறழிந்து ஓகாரமிக்கன. "திரையவோ", ஐயவோ எனப் புலம்பின்கண் ஈறழிந்து ஓகாரமிக்கன. குழையாய், வாயிலாய், ஆதிரையாய், ‡"எண்கையாய்" கரியாய், ஊரனெயென இறுதி யவ்வொற்றாயின. §"வாயி லோயே வாயி லோயே" என ஈற்றயல்திரிந்து இறுதியக ரம் ஏகாரமேற்றது. "ஐயே யெமக்கீங் கருள்", ||"மடவை மன்ற வாழிய முருகே" என ஈறழிந்து அயலில் அகாரம் ஏகாரமாயின. பிறவும் இவ்வாறேவருவன கண்டுகொள்க.

(பி - ம்.) 1 அளவீறு. 2 அவ்வவ்வீற்றுள்ளும். 3 நந்த. 4 நம்பெரு மான். (௩0)

(307.) ளஃகா னுயர்பெயர்க் [1]களபீ றழிவயல்
நீட்சி யிறுதி யவ்வொற் றாதல்
அயலி லகரமே யாதலும் விளித்தனு.

எ - ன், ளகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ளகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கண் அளபெழ லும் ஈறுகெடலும் அயல்நீடலும் இறுதியகரவொற்றாய்த் திரிதலும் அயலில் அகரம் ஏகாரமாதலும் விளியுருபாம். எ - று.

வ - று. "மேவார்த் தொலைத்த விறன்மிகு வேஎள்" என அளபாயிற்று. ¶"துனிகொள்ள லெல்லா நீ" என ஈறுகெட்டது.

* குறு. கஉக. † கலி. கசுரு. ‡ ஷெ. க. § புறநா. உ0சு; சில - வழக். உச. || நற். ருச. ¶ கலி. ருஙு.

நமர்காள், எமர்காளென ஈற்றயல்நீண்டன. குழையாய், வாயிலாய், ஆதிரையாய், எண்டோளாய், கரியாய், [2]ஊணுயென இறுதி யகர வொற்ருயின. "தலைமீது கொள்வெ மடிகேள்" என ஈற்றயல் அகரம் ஏகாரமாயிற்று. பிறவுமன்ன.

(பி - ம்.) [1] அளவீறழிவு. [2] உண்டாய். (ருக)

(308) ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழ லீற்றயல்
அகரம் இஈ யாத லாண்டையா
ஈயாத லதனோ டேயுற லீற்றே
மிக்கயல் யாக்கெட் டதனய னீடல்
ரு ஈற்றி னீருற லிவையுமீண் டுருபே.

எ - ன், ரகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ரகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கண் அளபெழலும் ஈற்றயலில் அகரம் இகரமாதலும் ஈகாரமாதலும் ஆகாரம் ஈகாரமாதலும் ஆகாரம் ஈகாரமாய் ஏகாரமேற்றலும், ஈற்றில் ஏகாரமிக்கு அயலில் யாக்கெட்டு அதனயலில் இகரம் ஈகாரமாதலும் ஈற்றின் ஈர் ஆதலுமென்றிவையும் விளியுருபாம். எ - று.

வ - று. * "எலுவ சிருஅ ரெம்முறு நண்ப" என அளபாயிற்று. † "என்னைமுன் னில்லன்மின் றெவ்விர்" என அகரம் இகரமாயிற்று. வேந்தீர், "நாய்கீர்", அமரீர், அசுரீர், நாகீரென அகரம் ஈகாரமாயிற்று. சான்றீர், மடவீர், பார்ப்பீர், ஊரீரென ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாயிற்று. ‡"பலசான்றீரே." கணியீரே முனியீரே என ஈற்றயலில் ஆகாரம் ஈகாரமாய் ஏகாரமேற்றன. நம்பீரே, தம்பீரே, தோழீரே, தொழும்பீரேயென ஏகாரமிக்கு ஈற்றயலில் யாக்கெட்டு அதனயலில் இகரம் ஈகாரமாயின. எமரீர், பிறரீர், தமரீரென ஈரேற்றன.

இதனுள், 'ஈண்டு' என்றமிகையானே, கடலார், கழியார், மயிலார், குயிலார், சாத்தியார், கொற்றியாரென்றற்றொடக்கத்துஅஃறிணைப்பெயர்விரவுப்பெயர்களும் சிறப்பித்து உயர்திணைபோலவழங்கப்படுதலின், ஈண்டும் கடலீரே, கழியீரே, மயிலீரே, குயிலீரே,

---

* குறு. கஉக. † திருக்குறள், எஎக. ‡ புறநா. கசுரு.

சாத்தீரே, கொற்றீரேயென்றற்றொடக்கத்துமுடிபும் பிறவும் இவ்வாறுவருவனவெல்லாம் கண்டுகொள்க. (௫௨)

(309.) லகாரவீற் றுயர்பெயர்க் களபய னீட்சியும்
யகார வீற்றிற் களபுமா முருபே.

எ - ன், லகார யகாரவீற்றுயர்திணைப்பெயர்க்கு எய்தியதன் மேற் சிறப்புவிதியுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) லகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கண் அளபெழலும் அயல்நீட்சியும், யகாரவீற்று உயர்திணைப்பெயர்க்கண் அளபெழலும் விளியுருபாம். எ - று.

வ - று. "வலம்புரித் தடக்கை மாஅனின்னிறம்" எ - ம், "தோன்றால்", "தாழ்குழால்", "மடவரால்" எ - ம், *"விளங்கு மணிக் கொடும்பூ ணாஅய் நின்னாட் டிளம்பிடி" எ - ம் வரும். (௫௩)

(310.) னவ்வீற் றுயர்திணை யல்லிரு பெயர்க்கண்
இறுதி யழிவத னோடய னீட்சி.

எ - ன், னகாரவீற்றஃறிணைப்பெயர்பொதுப்பெயர்கட்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) னகாரவீற்றுஅஃறிணைப்பெயர்க்கண்ணும் விரவுப் பெயர்கண்ணும் இறுதியழிவும் இறுதியழிவதனோடு அயல்நீட்சியும் விளியுருபாம். எ - று.

வ - று. †"கொடுந்தா ளலவ குறையா மிரப்பேம்", "இகலுபு குதிக்கு மிகலா", "கண்டல் வேரளை சேரல வாநீ", [1]"கடும் பறைக் கருடா" எ - ம், சாத்தகேள் கொற்றகேள், சாத்தாகேள், கொற்றாகேள் எ - ம் வரும்.

(பி - ம்.) [1] கடுஞ்சிறைக். (௫௪)

(311.) ளவீற் றஃறிணைப் பெயர்பொதுப் பெயர்க்கண்
ஈற்றய னீட்சியு முருபா கும்மே.

எ - ன், இவ்விரண்டீற்றுப்பெயர்க்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதல் நுதலிற்று.

* புறநா. ௧௩௦. † ஐந் - ஐம். ௪௨.

(இ - ள்.) லகார ளகாரவீற்று அஃறிணைப்பெயர்க்கண்ணும் பொதுப்பெயர்க்கண்ணும் ஈற்றயல் நீட்சியும் உருபாம் எ - று.

வ - று. "காட்டுச்சாரோடுங்குறுமுயால்," கிளிகாள் எ - ம், தூங்கால், [1]ஓங்கால், மக்காள் எ - ம் வரும்; பிறவுமன்ன.

(பி - ம்.) [1] ஒதுங்கால். (ருரு)

**(312.) அண்மையி னியல்புமீ றழிவுஞ் சேய்மையின்**
**அளபும் புலம்பி னோவு மாகும்.**

எ - ன், உரைத்தவிளிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அணியாரை விளிக்குமிடத்து இயல்பும் ஈற்றினது அழிவும், சேயாரைவிளிக்குமிடத்து அளபெழலும், புலம்பின்கண் ஓகாரமுமாம். எ - று.

உதாரணம் முன்னர்க்காட்டினவற்றிற் கண்டுகொள்க. (ருசு)

**(313.) நுவ்வொடு வினாச்சுட் டுற்ற னளர**
**வைதுத் தாந்தா னின்னன விளியா.**

எ - ன், மேல் விளியேற்குமென்ற ஈற்றுப்பெயர்களுள் இவை ஏலாவென எடுத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நுவ்வையும் முதல்வினாக்களையும் சுட்டையுமுதலாகவுடைய னகாரமே ளகாரமே ரகாரமே வையே துவ்வேயென்றீற்றுப்பெயர்களும் தாமென்பதும் தானென்பதும் விளியேலா. எ - று.

வ - று. நுமன், நுமள், நுமர்; எவன், எவள், எவர், எவை, எது; ஏவன், ஏவள், ஏவர், ஏவை, ஏது; யாவன், யாவள், யாவர், யாவை, யாது; அவன், அவள், அவர், அவை, அது; இவன், இவள், இவர், இவை, இது; உவன், உவள், உவர், உவை, உது; தாம்; தான் என்பன.

'இன்னன' என்றதனால், மற்றையான், மற்றையாள், மற்றையார், மற்றையவை, மற்றையதென்பனவும், எண்ணிறையளவுப்பெயர் முதலாயினவுங்கொள்க.

நுவ்வையும் செவ்வெண்ணாக எண்ணாது ஒடுக்கொடுத்து வேறோதியது, வையும் துவ்வும் அதனொடு சாராவென்பது அறிவித்தற்கெனக்கொள்க. (ருஎ)

**(314.) முதலை யையுறிற் சினையைக் கண்ணுறும்**
**அதுமுதற் [1]காயிற் சினைக்கை யாகும்.**

எ - ன், இஃதோர்சொல்லுதல் [2]வகைமையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சினைதொடர்ந்த முதற்பொருட்கு இரண்டாம் வேற்றுமையுருபுவரிற் சினைக்கு ஏழனுருபுவரும்; முதற்குஆறாமுருபுவரிற் சினைக்கு இரண்டனுருபுவரும். எ - று.

வ - று. [3]யானையைக்கோட்டின்கட்குறைத்தான் எ - ம், யானையதுகோட்டைக்குறைத்தான் எ - ம் வரும்.

'ஐயுற' என்னாது, 'ஐயுறின்' என்றதனால், யானையைக் கோட்டைக்குறைத்தானெனவும் வருமெனக்கொள்க.

(பி - ம்.) [1] ஆகின். [2] வழுவமைப்புணர்த்துதல். [3] ஆனையை. (ருஅ)

**(315.) முதலிவை சினையிவை யெனவே றுளவில**
**உரைப்போர் குறிப்பின வற்றே பிண்டமும்.**

இதுவுமது.

(இ - ள்.) இவையேமுதல், இவையேசினையென வேறறியக்கிடப்பனவில்லை; சொல்லுவோர்குறிப்பினானே முதலே சினையுமாம்; சினையே முதலுமாம்; பிண்டப்பொருளும் அவ்வாறேயாம். எ - று.

வ - று. கோட்டதுநுனியைக்குறைத்தான் எ - ம், கோட்டை நுனிக்கட் குறைத்தான் எ - ம் சினையேமுதலுமாம். நெற்குப்பை யென்றால், நெல்லதுகுப்பை குப்பையதுநெல்லென வரும். இதில் இரண்டாவது வேறில்லாதவாறுகாண்க. (ருகூ)

**(316.) யாத னுருபிற் கூறிற் றாயினும்**
**பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்.**

எ - ன், உருபுகள் ஒருவழித் தம்பொருண்மேலன்றி [1]மயங்கி வருதலுமுடையவென வழுவமைப்புணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) யாதானுமொருருபினாற் சொல்லப்பட்டதேஒருசொல் லெனினும் அச்சொற்கு அவ்வுருபின்பொருளே பொருளென்று கொள்ளற்க; அச்சொல்லின்பொருள் எவ்வுருபிற்கேற்கும்? அவ்வுருபாகக்கொள்வதேமுறை. எ - று.

வ - று. *"கிளையரி ஞாணற் கிழங்குமணற் கீன்ற, முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்" என நான்காம்வேற்றுமைவந்த தாயினும், அதனை ஏழாம்வேற்றுமையாகக்கொள்க. "நாகு வேயொடு நக்கு வீங்குதோள்." இதனுள், ஒடுவை ஐயாகக்கொள்க. †"அறிவுடை யந்தண னவளைக்காட் டென்றதோ." இதனுள், ஐயைக் குவ்வாகக்கொள்க. பிறவுமன்ன.

இஃது உருபுமயக்கம்; பொருண்மயக்கம் தொகை சொல்லுழிச் சொல்லுதும்.

(பி - ம்.) [1] மருங்கின்வருதலும். (௬0)

(317.) ஐயான்குச் செய்யுட் கவ்வு மாகும்
ஆகா வஃறிணைக் கானல் லாதன.

எ - ன், அவ்வுருபுகள் செய்யுளுட்டிரியவும் பெறுமென்பது உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) ஐயும் ஆனும் குவ்வுமென்னுமூன்றுருபும் செய்யுட் கண்அகரமாகிநிற்கவும் பெறும்; அஃறிணைக்கண் ஐயும் குவ்வும் திரியாவாம். எ - று.

'ஆகா வஃறிணைக் கானல் லாதன' எனவே மூன்றும் உயர் திணைக்கண்ஆமென்பது தானேபோதருமென்க.

வ - று. "காவ லோனைக் களிறஞ் சும்மே" எ - து, "காவ லோனக் களிறஞ் சும்மே" எ - ம், "புலவரான்" எ - து, "புலவ ரான" எ - ம், "கடிநிலை யின்றே யாசிரி யற்கு" எ - து, ‡"கடி நிலை யின்றே யாசிரி யற்க." எ - ம் மூன்றுருபும் உயர்திணைக்கண் அகரமாய்த்திரிந்தன. "புள்ளினான்" எ - து, "புள்ளினான" என ஆனீறு அஃறிணைக்கட் டிரிந்தது.

உம்மை எதிர்மறையாதலின், அவ்வாறுதிரிதல் சிறுபான்மை யெனக்கொள்க. (௬௧)

(318.) எல்லை யின்னு மதுவும் பெயர்கொளும்
அல்ல வினைகொளு நான்கே ழிருமையும்
புல்லும் பொதும்பாலு மென்மனார் புலவர்.

எ - ன், வேற்றுமைகட்குஆவதோர் விதியுணர்த்துதல் நுதலிற்று.

* அகநா. உ௧௧. † கலி. எஉ. ‡ தொல். புள்ளி. ௬௪.

(இ - ள்.) எல்லைப்பொருண்மைக்கண்வரும் ஐந்தாம்வேற்றுமையும் அதுவென்னும் ஆறும்வேற்றுமையும் பெயரையும், ஒழிந்தன வினையையும் வினைக்குறிப்பையும், நான்காம்வேற்றுமையும் ஏழாம்வேற்றுமையும் பெயரையும் வினையையும் கொண்டுமுடியும் பெரும்பாலுமென்று சொல்லுவர்புலவர். எ - று.

எழுவாய்வேற்றுமைக்கு ஆண்டே பயனிலைசொல்லுதலின், ஈண்டு இரண்டாவதுமுதல் ஏழுக்குமே இவ்விதிசொன்னாரெனக் கொள்க.

வ - று. கருவூரின் கிழக்கு, மருவூரின் மேற்கு எ - ம், சாத்தனதுகுணம், சாத்தனதுகை, நெல்லதுகுப்பை, படையதுகுழாம், எள்ளதுசாந்து ; சாத்தனதாடை எ - ம் பெயர்கொண்டன. அறத்தை ஆக்கும், மறத்தை மாற்றும், [1]குருவைச்சேரும், தாயை ஒக்கும், எ - ம், கொழுநனை இலள், எம்மையின்றிப் பொன்னையுடையன் எ - ம் இரண்டாவது வினையும் வினைக்குறிப்பும் கொண்டது. சுடரினாற்கண்டான், அரசனாற்பெற்றான், சாத்தனொடுவந்தான் எ - ம், கல்வியால் நல்லன், அரசனாற்செவ்வியன் எ - ம் மூன்றாவது வினையும் வினைக்குறிப்புங்கொண்டது. மலையினிழிந்தான், பொன்னிற்றிகழும், வாளின்வணக்கினான் எ - ம், இதனின்வெளிது(நீங்கல்), காக்கையிற்கரியன்(ஒப்பு), அறிவிற்பெரியன்(ஏது) எ - ம் ஐந்தாவது வினையும் வினைக்குறிப்பும்கொண்டது. இறைவகூறாய், மன்னவாராய், சாத்ததாராய், கொற்றகொள்ளாய், நிலனேநில்லாய், புலனேபோகாய் எ - ம், இறைவ கொடியை, மன்ன வலியை, சாத்த நெடியை, கொற்றகொடியை, நீரே தண்ணியை, தீயேவெய்யை எ - ம் எட்டாவது வினையும் வினைக்குறிப்புங்கொண்டது. நாகர்க்குப்பலி, வளைக்குப்பொன், கரும்பிற்குவேலி எ - ம், இரவலர்க்கீந்தான், பொருட்குப்போயினான் எ - ம், மறுமைக்கு நன்று, அவர்க்கினிது எ - ம் நான்காவது முறையானே பெயரும் வினையும் வினைக்குறிப்புங் கொண்டது. மணியின்கண்ஒளி, மலரின்கண் வண்டு ; மலையின்கண் ஒக்கம், பனையின்கண் அன்றில் எ - ம், அரங்கின்கண் அகழ்ந்தான், [2] யாண்டின்கட் சென்றான் எ - ம், நாட்டின்கண் நன்று, கூதிர்க்கண் உள்ளது, விலங்கின்கட் கொடிது எ - ம் ஏழாவது முறையே பெயரும் வினையும் வினைக்குறிப்பும் கொண்டது.

'பெரும்பாலும்' என்றதனால், ஆறாவது வினையும் வினைக்குறிப்பும் கொண்டும், அல்லன வினையும் வினைக்குறிப்பும் பற்றிய பெயர் கொண்டும் முடியவும் பெறுமெனக்கொள்க.

வ - று. சாத்தனதுவந்தது, சாத்தன வந்தன எ - ம், சாத்தனதுநனறு, சாத்தன நல்லன எ - ம் ஆறுவது வினையும் வினைக்குறிப்பும் கொண்டது. அறத்தை அடைந்தவன், மறத்தை மறந்தவன், திருவைச்சேர்ந்தவன் எ - ம், பொருளைஉடையவன், புதல்வனை இல்லவன், அறத்தைஆக்கல், மறத்தைமாற்றல் எ - ம், இரண்டாவது வினையும் வினைக்குறிப்பும்பற்றிய பெயர்கொண்டது. சுடரினாற் கண்டவன், அரசனாற்பெற்றவன், நெய்யானுகர்ந்தவன் எ - ம், குணத்தாற்பெரியவன், இனத்தாற்செவ்வியவன், அரசனாற்பெறுதல், வாளால்வணக்குதல் எ - ம் மூன்றாவது வினையும் வினைக்குறிப்பும் பற்றியபெயர்கொண்டது. இரவலர்க்கீந்தவன், பொருட்குப்போனவன் எ - ம், எனக்கினியவன், அவர்க்கு நல்லவன், இரவலர்க்கீதல் எ - ம், நான்காவது வினையும் வினைக்குறிப்பும் பற்றிய பெயர்கொண்டது. மலையின் இழிபவன், மன்னரில் வாழ்ந்தவன், பொன்னிற்றிகழ்பவன், வாளியிற்செகுத்தவன் எ - ம், காக்கையிற்கரியவன், அறிவிற் பெரியவன், வாளியிற் செகுத்தல் எ - ம் ஐந்தாவது வினையும் வினைக்குறிப்பும்பற்றிய பெயர்கொண்டது. அரங்கின்கண் அகழ்ந்தவன், ஆகாயத்தின்கட்சென்றவன், ஆண்டின்கட்போனவன், குணத்தின்கண்ஒழிந்தவன் எ - ம், நாட்டின்கண்நல்லது, கூதிர்க்கண் உள்ளது, வாளின்கண்உள்ளது, அரங்கின்கண் அகழ்தல், பரணிக்கட்பிறத்தல் எ - ம் ஏழாவது வினையும் வினைக்குறிப்பும்பற்றியபெயர் கொண்டது.

நான்காவதற்கும் ஏழாவதற்கும் இவ்விலேசினானே இருமையுங் கொள்ளுமென்பது பெறலாகவும் எடுத்தோதியது, இலேசாற்பெறுவன இவ்வாறு அருகிவருவனவென்பது அறிவித்தற்கெனக்கொள்க.

தச்சனாற்செய்தமாடம், வாளாற்கொண்டகொடி என்பனவும் பெயர்கொண்டனவன்றோ வெனின், அவை, செய்த கொண்டவென்னும் பெயரெச்சவினைகொண்டனவெனக்கொள்க.

(பி - ம்.) 1 (க) திருவினைச்; (உ) சீரினைச். 2 ஆண்டின்கட். (சூஉ)

முதலாவது பெயரியல் முற்றிற்று.

---

இரண்டாவது

# வினையியல்.

(319.) செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்
செய்பொரு ளாறுந் தருவது வினையே.

என்பதுசூத்திரம்.

இவ்வோத்து என்னுதலிற்றோவெனின், ஓத்துநுதலியதூஉம் ஓத்தினதுபெயருரைப்பவேவிளங்கும். ஆயின், இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், வினைச்சொற்களது இயல்புணர்த்திற்றுதலான், வினையியலென்னும்பெயர்த்து. மேலோத்தினோடு இதற்கு இயைபு என்னையோவெனின், மேற் பெயர் வினை இடை உரியெனச் சொல்லை நான்காக்கி, அவற்றுட் பெயர்க்கு இலக்கணம் முன்னருணர்த்தினர், அதன்பின்னர் வினைக்கு ஈண்டு உணர்த்துகின்றாராகலின், அதனோடு இயைபுடைத்தென்க.

இதனுள், இத்தலைச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், பொது வகையான் வினைச்சொல்லாவது இன்னதென்பது உணர்த்துதல்நுத லிற்று.

(இ - ள்.) கருத்தாவும் கருவியும் நிலனும் தொழிலும் கால மும் செயப்படுபொருளுமென்னும் ஆறுபொருளையும் விளக்குவது, வினைச்சொல்லாவது. எ - று.

'செய்பவன்' என்று ஒருபால்மேல் வைத்தாரேனும், "ஒரு மொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனால், ஐந்து பாற்கண்ணுங்கொள்க. செய்பவனென்றும், கருவியென்றும் பொது ப்படவைத்தமையான், ஏவற்கருத்தாவும் கருமக்கருத்தாவும், முதற் காரணமும் துணைக்காரணமுங்கொள்க.

'ஆறும்' என்புழி உம்மை முற்றும்மை.

வ - று. வனைந்தானென்புழி, கருமக்கருத்தாவும், மண்ணெ ன்னும் முதற்கருவியும், [1] திரிகையும் கோலுமுதலான துணைக்கருவி யும், அகத்தானும் புறத்தானுமென்னும் இடமும், வனைதலென்னும் தொழிலும் வனைந்தானென்னும் இறந்தகாலமும், குடத்தொடக்கத்

தனமென்னும் செயப்படுபொருளுமான ஆறும் முறையே விளங்கின வாறு காண்க.

"முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்" என்பதனானே எச்சமாக்கி, அதனானே இவற்றுட் சில குன்றிவரப்பெறுமென்பதும், [2] இன்னதற்கென்பதும் இதுபயனாகவென்பதுங்கூட்டி எட்டும் தருமென்பார்கருத்தும் அறிந்துகொள்க.

கொடியாடிற்று, கொடிதுஞ்சுமென்றற் றொடக்கத்தவற்றுட் சில குறைந்துவந்தவாறு காண்க.

இன்னதற்கென்பதும், இதுபயனாகவென்பதும் 'வனைந்தான்' என்றதனுள்வந்தவாறுகாண்க.

இவை அத்துணைச் சிறப்பிலவென்று யாவரும் ஒப்ப வேண்டாமையின், 3விதப்பினாற் றழீஇயினாரென்க.

வனைவித்தானென்பது 4ஏவற்கருத்தாவெனக்கொள்க. பெயரெச்சவினையெச்சங்களும் வினையேயாகலின், இவ்வாறுந் தரல்வேண்டும்பிறவெனின், அவை செய்த செய்து என எச்சமாய்நின்றே கருவிமுதலைந்தையுந்தோற்றிப் பின்னர்த் தம்மெச்சமான பெயர் வினைகளை ஏற்றவாறே கருத்தாவையும் காட்டுமென்பாருமுளர்; அற்றன்று; அவை மேலேவிதந்தோதுவாரென்க. அஃதேல், இவ் வாறனையும்தருவதனை வினைச்சொல்லென்னுமாறென்னை? வினையை விளம்புஞ்சொல் வினைச்சொலென்றன்றோ முடிவதெனின், அஃதே! நன்றுசொன்னாய்; 5வினையும் கருத்தாவுமொழிந்த நான்கும் உள வழி வினையுளதாமென்னுநியதியில்லை; யாண்டு ஓர்வினையுண்டு? ஆண்டுஅவ்வேனையைந்தும் உளவாதல் ஒருதலை; அதனான், அச் சிறப்பு நோக்கி வினைச்சொல்லெனவே படுமெனக்கொள்க. இதற்கு, "கால மறிதொழில் கருத்தனோ டியையப், பால்வகை தோறும் படு மொழி வேறே" எ-ம், *"வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது, நினையுங் காலைக் காலமொடு தோன்றும்" எ-ம் சொன்ன அவிநயனார் கருத்தும், தொல்காப்பியனார் கருத்தும் அறிந்து கொள்க.

**(பி-ம்.)** [1] **திருகையும்.** [2] **இன்னதற்குக்கொடுக்கவென்பதும் இது கொடுக்க இன்னதுபயக்குமென்னும்பயனும் இதனுள் வந்தவாறுகாண்க.** 3 **ஆதியிற்சொல்லாத விதப்பினால்.** 4 **ஏவற்கருத்தாவாகக்.** 5 **வினையும் செயப்படுபொருளுமொழிந்த.** (க)

* தொல். வினை. க.

(320.) பொருண்முத லாறினுந் தோற்றிமுன் னாறனுள்
வினைமுதன் மாத்திரை விளக்கல்வினைக் குறிப்பே.

எ - ன், வினைச்சொலென்பது வினையும் வினைக்குறிப்புமென இரண்டு ; அவற்றுள், வினையாவது உணர்த்தினார், இது வினைக்குறிப்பாவது உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) பொருள் இடம் காலம் சினை குணம் தொழிலென்னுமாறும் இடமாகத்தோன்றி மேற் கருத்தாமுதலாகச்சொன்ன ஆறனுட் கருத்தாஒருவனையுமேகாட்டிநிற்றல், வினைக்குறிப்பிற்கு இயல்பாவது. எ - று.

வினையைக்குறிப்பாக உடைமையின், வினைக்குறிப்பு.

வ - று. குழையினன், குழையினள், குழையினர், குழையிற்று, குழையின ; குழையினேன், குழையினேம் ; குழையினை, குழையினீர் எ - ம், அகத்தினன், அகத்தினள், அகத்தினர், [I]அகத்தது, அகத்தன ; அகத்தினேன், அகத்தினேம் ; அகத்தினை, அகத்தினீர் எ - ம், நாளினன், நாளினள், நாளினர், நாளிற்று, நாளின ; நாளினேன், நாளினேம் ; நாளினை, நாளினீர் எ - ம், கண்ணினன், கண்ணினள், கண்ணினர், கண்ணிற்று, கண்ணின ; கண்ணினேன், கண்ணினேம் ; கண்ணினை, கண்ணினீர் எ - ம், கரியன், கரியள், கரியர், கரியது, கரியன; கரியேன், கரியேம்; கரியை, கரியீர் எ - ம், செலவினன், செலவினள், செலவினர், செலவிற்று, செலவின ; செலவினேன், செலவினேம் ; செலவினை, செலவினீர் எ - ம் முறையே காண்க.

(பி - ம்.) [I] அகத்திற்று. (௨)

(321.) அவைதாம்,
முற்றும் பெயர்வினை யெச்சமு மாகி
ஒன்றற் குரியவும் பொதுவு மாகும்.

எ - ன், மேற்சொன்ன வினை வினைக்குறிப்புகட்கு எய்தியதோர் விதி உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) மேல் வினையும்வினைக்குறிப்புமென்றுசொல்லப்பட்ட இரண்டும், முற்றென்றும் பெயரெச்சமென்றும் வினையெச்சமென்றுமாகி, ஒருதிணைக்கே உரியவும் [I]இருதிணைக்குமுரியவும் ஒருபாற்கே

உரியவும் பலபாற்குரியவும் ஓரிடத்திற்கேயுரியவும் பலவிடத்திற்குரியவுமாம். எ - று.

உதாரணம் தத்தம் சிறப்புவிதிச்சூத்திரங்களுட்காண்க.

(பி - ம்.) [1] பலதிணைக்கும். (ரு)

(322.) பொதுவியல் பாறையுந் தோற்றிப் பொருட்பெயர்
முதலறு பெயரல தேற்பில முற்றே.

எ - ன், நிறுத்தமுறையானே [1] இருமுற்றுக்கும்இலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேல் வினைக்கெல்லாம் பொதுவாகச்சொன்ன கருத்தன்முதல் ஆறுபொருளையுங்காட்டிப் பொருட்பெயர்முதலான ஆறு பெயரையுமேற்றுப் பின்னர் வேறொன்றையும்வேண்டாதுநிற்பன, முற்றுவினைச்சொல். எ - று.

வ - று. செய்தனனவன், செய்தனளவள், செய்தனரவர், செய்தது அது, செய்தன அவை; [2]செய்தனன்யான், செய்தனம்யாம், செய்தனைநீ, செய்தனிர்நீயிர் எ - ம், செய்கின்றனனவன், செய்கின்றனளவள், செய்கின்றனரவர், செய்கின்றது அது, செய்கின்றன அவை; [3] செய்கின்றனன்யான், செய்கின்றனம்யாம்; செய்கின்றனைநீ, செய்கின்றனிர்நீவிர் எ - ம், செய்குவனவன், செய்குவளவள், செய்குவரவர், செய்குவது அது, செய்குவ அவை; செய்குவேன்யான், செய்குவேம்யாம்; செய்குவைநீ, செய்குவிர்நீயிர் எ - ம் வினைமுற்று மூவிடத்தும் முக்காலத்தும்வந்தவாறு. வினைக்குறிப்புமுற்று: குழையினனவன், குழையினளவள், குழையினரவர், குழையிற்று அது, குழையின அவை; குழையினேன்யான், குழையினேம்யாம்; குழையினைநீ, குழையினீர்நீவிர்.........என மேற்காட்டினவேகொள்க.

செய்தனனெனவே திணையும் பாலும் இடமும் கருத்தன்முதலாறுந்தோற்றி, அவனென்னும் பெயரேற்றவாறும், [4]பெயர்ப்பின் வேறொன்றையும் வேண்டாதவாறும் காண்க.

குளிர்ந்ததுநிலம், வந்ததுகார், இற்றதுகை, பரந்ததுபசப்பு, வந்ததுபோக்கென இடமுதற்பெயரேற்றவாறுகாண்க.

இதனுள் திணைபாலிடங்கள் தோன்றுமென்ற[5]தில்லையாலோவெனின், அவைகருத்தாத்தோன்றவே தோன்றுமாதலின், அமையு

மென்க. அஃதேல், தன்மைமுன்னிலைவினைமுற்றுக்களில் திணைபா ரேன்றுமையின், விதந்தோதல்வேண்டும்பிறவெனின், [6]அஃதே! அதுவும், போனவோத்தினுட், "படர்க்கை வினைமுற்று நாமங் குறிப்பிற், பெறப்படுந் திணைபா லனைத்து மேனை, யிடத்தவற் றொரு மை பன்மைப் பாலே" எனச் சொன்னாரென்க.

முற்றிநிற்றலான் முற்று; "மற்றுச்சொன் னோக்கா மரபின வனைத்து, முற்றி நிற்பன முற்றியன் மொழியே" என்றார், அகத் தியனார்.

(பி - ம்.) 1 முற்றுக்கு. 2 செய்தனேன்யான், செய்தனேம்யாம். 3 செய் கின்றேன்யான், செய்கின்றேம்யாம். 4 வேறொன்றை. 5 இல்லையாலெ னின். 6 அஃதேலதுவும். (௪)

(323.) ஒருவன்முத லைந்தையும் படர்க்கை யிடத்தும்
ஒருமை பன்மையைத் தன்மைமுன் னிலையினும்
முக்கா லத்தினு முறண முறையே
மூவைந் திருமூன் றுறுய் முற்று
௫ வினைப்பத மொன்றே மூவொன் பானும்.

எ - ன், முற்றுவினையின் வகையும் தொகையுமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பலவென்னும் ஐம் பாலையும் படர்க்கையிடத்தும், ஒருமை பன்மைப்பால்களைத் தன் மையிடத்தும் முன்னிலையிடத்தும் முக்காலங்களானுமாற முறையே படர்க்கைவினைமுற்றுப்பதினைந்தும் தன்மைவினைமுற்று ஆறும் முன் னிலைவினைமுற்று ஆறும் ஆக வினைமுற்றொன்றே இருபத்தேழு கூறும். எ - று.

எனவே இதனானும் தன்மைமுன்னிலைகளில் ஒருமைபன்மைப் பால்களல்லது ஏனைப்பால்கள் இல்லையென்பதுமாயிற்று. (௫)

(324.) அன்னா னிறுமொழி யாண்பாற் படர்க்கை.

எ - ன், நிறுத்தமுறையானே முற்றைவிரித்துணர்த்துவான் தொடங்கினார், இச்சூத்திரம் ஆண்பாற்படர்க்கைமுற்றுமாறு உணர் த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விருவிகுதியையும் ஈறாகவுடையமொழிகள் ஆண்பாற்படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம். எ - று.

பொதுவாகவைத்தமையான், வினையும் குறிப்புங்கொள்க.

எச்சங்களை மேலே விதந்தோதலின், விதவாதுவருவனவெல்லாம் ஈண்டு முற்றென்றே கொள்க.

வ - று. வந்தனன், வந்தான்; வாராநின்றனன், வாராநின்றான்; வருவன், [1]வருவான் எ - ம், பூணினன், பூணினான்; புறத்தன், புறத்தான்; ஆதிரையன், *"ஆதிரையான்"; கண்ணினன், கண்ணினான்; பொன்னன்னன், பொன்னன்னான்; வரவினன், [2]வரவினான் எ - ம் வினையும் குறிப்பும் வந்தன; அவனென்னும் பெயர் தந்து முடிக்க.

(பி - ம்.) [1] வருவானவன். [2] வரவினானவன். (௬)

(325.) அள்ளா ளிறுமொழி பெண்பாற் படர்க்கை.

எ - ன், பெண்பாற்படர்க்கைமுற்றுமாறு உணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) இவ்விருவிகுதியையும் ஈறாகவுடையமொழிகள் பெண்பாற்படர்க்கைவினைமுற்றும் குறிப்புமுற்றுமாம். எ - று.

வ - று. வந்தனள், வந்தாள்; வாராநின்றனள், வாராநின்றாள்; வருவள், வருவாளென வினைமுற்று வந்தவாறு. மேலனவற்றை ளகாரமாகத் திரித்துக் குறிப்புமுற்று வந்தவாறுங்காண்க; அவளென்னும் பெயர் தந்துமுடிக்க. (எ)

(326.) அர்ஆர் பவ்வூ ரகரமா ரீற்ற
பல்லோர் படர்க்கைமார் வினையொடு முடிமே.

எ - ன், பல்லோர்படர்க்கைமுற்றுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இந்நான்கு [1]விகுதிகளையும் ஈறாகவுடையமொழிகள் பல்லோர்படர்க்கைவினைமுற்றும் குறிப்புமுற்றுமாம்; மார் வினைகொண்டு [2]முடிவதுமாம். எ - று.

வ - று. வந்தனர், வந்தார்; வாராநின்றனர், வாராநின்றார்; வருவர், வருவாரென வந்தவாறு. மேற்காட்டின னகார ளகார

* முத்தொள்ளாயிரம், கட.

வீற்றை ரகாரமாகத்திரித்துக் குறிப்புமுற்று வந்தவாறுகாண்க; அவ ரென்னும் பெயர்கொணர்ந்து முடிக்க.

ஒப்ப, உரைப்ப, சொல்லுப, புல்லுப எ - ம், 3" ஆகொண் மார்வந்தார் 4பூக்குழாய்" எ - ம் பவ்வூர்அகரவீறும், மாரீறும் வந் தன. *"விழுக்கோட் பலவின் 5பழுப்பயன் கொண்மார், குறவ ரூன்றிய குரம்பை புதைய" என்பது, குறவரென்னும்பெயர்கொள் ளாது ஊன்றியவென்னும் பெயரெச்சவினைகொண்டது.

'வினையொடும்' என்ற உம்மையான், †"பெரிய வோதினுஞ் சிறிய வுணராப், பீடின்று பெருகிய திருவிற், பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே" எனப் பெயரொடுமுடிதலும் கொள்க.

ஒப்ப, உரைப்பமுதலானவை, ஒப்பவை, உரைப்பவையெனப் பெயர்படின், அவை அஃறிணைப்பன்மைப்பெயராமென்க.

"காலமொடு கருத வரினு மாரை, மேலைக் கிளவியொடு வேறு பா டின்றே" என்பது, அகத்தியம்.

(பி - ம்.) 1 மொழிகளையும். 2 முடிவதாம். 3 ஆர்த்தார்கொண்மார். 4 பூங்குழாய். 5 பழூஉப்பயன். (அ)

(327.) துறுடுக் குற்றிய லுகர வீற்ற
ஒன்றன் படர்க்கைடுக் குறிப்பி னுகும்.

எ - ன், அஃறிணையொருமைப்படர்க்கை முற்றுமாறு உணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்றுகுற்றியலுகரவீற்றுமொழிகளும், அஃ றிணையொருமைப்படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம்; அவற் றுள், டுவ்வீறு வினைக்குறிப்பின்கண்ணேவரும். எ - று.

வ - று. வந்தது, வாராநின்றது, வருவது; கூயிற்று, தாயி ற்று எ - ம், பெயர்த்து, ஊர்த்து, கார்த்து, மயிர்த்து, கரிது, 1நடை த்து; பாற்று, மேற்று, வேனிற்று, கோடிற்று, சுழியிற்று, செல விற்று எ - ம் துறுக்கள் ஈரிடத்தும்வந்தவாறு. பலபொருட்டு, ஆதி ரைநாட்டு, குண்டுகட்டு என டுக்குறிப்புமுற்று வந்தது; 'அது' என்னும்பெயர்தந்துமுடிக்க.

(பி - ம்.) 1 நடைத்துஅது, எ - ம், பாலிற்றுமேலிற்று. (கூ)

* அகநா. கஉ. † புறநா. கூஎடு.

(328.) அஆ வீற்ற பலவின் படர்க்கை
ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும்.

எ - ன், அஃறிணைப்பன்மைப்படர்க்கைமுற்றுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அகர ஆகாரங்களை விகுதியாகவுடைய மொழிகள், அஃறிணைப்படர்க்கைப்பன்மைவினைமுற்றும் குறிப்புமுற்றுமாம்; அவற்றுள், ஆகாரவீறு எதிர்மறுத்துரைக்குமிடத்தேவரும். எ - று.

வ - று. வந்தன, வாராநின்றன, வருவன; [1] வாரா எ - ம், பொருள, மேல, நாள, கண்ண, கடிய, செயல எ - ம் வரும்; அவை யென்னும்பெயர் தந்துமுடிக்க.

வவ்வீறு அகரவீறாயடங்குதலானும், கள்ளீறு தானேநின்று ஒருவினைக்கீறாய் [2]வாராமையானும் ஈண்டுக்கொண்டிலரென்க. அஃதென்னை ? உண்டார்கள், உண்மின்கள், உண்டேங்கள், *" கற்றனங்கள் யாமுமுடன் கற்பனக ளெல்லாம்", எ - ம், உண்ணுங்கள், உறங்குங்கள், †" கழல்களார்க் குங்களே கலங்கிமே கக்குழாம், பொழில்கள் வெள்ளத்திடைப் புரளநூ றுங்களே", [3]" பெயரீயந்தவணகை பெரியபழுக்குங்களே" எ - ம் இருதிணைக்கண்ணும் கள்ளீறு ஈரிடத்தும்வருமாலோவெனின், உயர்திணைக்கண் முன்னின்ற அர் ஆர் முதலானவையே பால் விளக்கும்; அஃறிணைக்கட் செய்யுமென்னுநிகழ்காலவினைமுற்று ஒருமைபன்மைகட்குப் பொதுவாதலான், அதனுமேலவிளங்காத ஒருமை பன்மை, " பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கு, மேல்வருஞ் சிறப்புப் பெயர்வினை தாமே" என்பதனான் விளங்குமென்க.

(பி - ம்.) [1] வாராஅவை. [2] வாராமலானும். 3 (க) பெரீநதனவணகை; (உ) பெரிதீததவணமைபெரிய. (க0)

(329.) தன்மை முன்னிலை வியங்கோள் வேறிலை
உண்டீ ரெச்ச மிருதிணைப் பொதுவினை.

எ - ன், பொதுவினையைத் தொகுத்துணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) தன்மைமுன்னிலைவினைமுற்றும் வினைக்குறிப்புமுற்றும், வியங்கோளும், வேறு இல்லை உண்டு என்னும் மூன்று

* சீவக. கஎகூ௫. † சூளா. சிய. கசுஎ.

வினைக்குறிப்புமுற்றும், பெயரும்வினையுமெஞ்சும் இரண்டெச்சமும் ஆகிய எட்டும் இருதிணைக்கும் பொதுவான வினைகளாம். எ - று.

வியங்கோளென்பது ஏவல். (கக)

(330.) குடுதுறு வென்னுங் குன்றிய லுகரமோ
டல்ல னென்னே னாகு மீற்ற
இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை.

எ - ன், நிறுத்தமுறையானே [1]இருதிணைமுக்கூற்றொருமைத் தன்மைவினை வினைக்குறிப்புமுற்றுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்வெட்டுவிகுதிகளையும் ஈறாகவுடைய மொழிகள் இருதிணையவான ஒருவன் ஒருத்தி ஒன்றென்னும் மூன்று ஒருமைத்தன்மையையுணர்த்தும் வினைமுற்றும் வினைக்குறிப்புமுற்றுமாம். எ - று.

வ - று. உண்கு, கோடு, வருது, சேறு; உண்பல்; உண்டனன், உண்ணாநின்றனன், உண்பன்; உண்டனென், உண்ணாநின்றனென், உண்குவென்; உண்டேன், உண்ணாநின்றேன், உண்பேன் எ - ம், தாரினேன், ஈண்டையேன், பண்டையேன், காலினேன், சிறுமையினேன், [2]செயலினேன் எ - ம் வினைமுற்றும் வினைக்குறிப்புமுற்றும் வந்தன; யானென்னும்பெயர் தந்துரைக்க.

தன்மைக்கண்ணும் அன்விகுதி கொள்ளாதொழியின், *"எழுத்தசைசீர், பந்த மடிதொடை பாவினங் கூறுவன்", "தாதிவர் தாமரைத் தடமலரொதுங்கிய, வாதியை வணங்கி யறைகுவனெண்ணே", †"கல்லாப்புன் மாக்கள் கவற்ற விடுவனோ", "நின்னறநெறி தலைப்பட்டன [3]னிந்நெறி யிருநிலம் பிறழினும் [4]பிறழலன்" என வரும் இத்தொடக்கத்தன [5]முடியாவென்க.

(பி - ம்.) [1] இருதிணைத்தன்மையொருமைவினைமுற்றும் வினைக்குறிப்புமுற்றும். [2] செய்கையினேன். [3] நின்னெறி. [4] பிழையலன். [5] கிடையா.

(331.) அம்மா மென்பன முன்னிலை யாரையும்
எம்மே மோமிவை படர்க்கை யாரையும்
உம்மூர் கடதற விருபா லாரையும்
தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை.

---

* காரிகை, கடவுள். † நாலடி. தூய்தன்மை, ௫.

எ - ன், உளப்பாட்டுத்தன்மைப்பன்மைவினையும் வினைக்குறிப்புமுற்றுமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்வொன்பது விகுதியீற்றுமொழிகளும் இவர்களைத் தன்னொடுபடுக்கும் தன்மைப்பன்மைவினையும் வினைக்குறிப்புமுற்றுமாம். எ - று.

வ - று. உண்டனம், உண்ணாநின்றனம், [1]உண்குவம்; உண்டாம், உண்ணாநின்றாம், உண்பாம்; உண்டனெம், உண்ணாநின்றனெம், உண்குவெம்; உண்டேம், உண்ணாநின்றேம், உண்பேம்; உண்டோம், உண்ணாநின்றோம், உண்போம்; உண்கும், உண்டும், வருதும், சேறும் எ - ம், தாரினம், [2]ஊரினம், பண்டையம், காலினம், கரியம், செய்கையம் எ - ம் வினை வினைக்குறிப்புமுற்றுவந்தன; யாமென்னும் பெயர் வருவித்து முடிக்க.

ஓம் விகுதியையும் வழக்குண்மையிற் கொண்டாரென்க.

(பி - ம்.) [1] உண்பம். [2] ஆண்டையம், நாளினம். (௧௩)

### (332.) செய்கெ னொருமையுஞ் செய்குமென் பன்மையும் வினையொடு முடியினும் விளம்பிய முற்றே.

எ - ன், எய்தியது இகந்துபடாமற் காத்தல் நுதலிற்று.

(இ - ள்.) செய்கு, செய்குமென்னும் இவையிரண்டும் வினைகொண்டுமுடியும்; முடிந்தாலும் வினையெச்சமெனப்படா; தன்மைமுற்றே ஆம். எ - று.

வ - று. உண்குவந்தேன், உண்கும்வந்தேமெனவரும்.

உம்மை, எண்ணின்கண்ணதாகக்கொள்க.

“முற்றுச் சொற்றும் வினையொடு முடியினு, முற்றுச்சொலென்னு முறைமையிற் றிரியா” என்பது, அகத்தியம். (௧௪)

### (333.) முன்னிலை கூடிய படர்க்கையு முன்னிலை.

எ - ன், தன்மையோடுகூடிய முன்னிலைபடர்க்கைகள் தன்மையான்முடிந்தன; முன்னிலையோடுகூடிய படர்க்கை எம்முடிபிற்றுமென்று ஐயுறுவார்க்கு ஐயமறுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) முன்னிலைகூடிய படர்க்கையையும் முன்னிலையால் முடிக்க. எ - று.

வ - று. அவனும் நீயும் போமின், அவரும் நீரும் வம்மின் எ - ம், "ஒண்டேவி நாராய்நின் சேவலு நீயுமாய், வண்டேது [1]பூங்கானல் வைகலுஞ் சேறிரால்", *"நின்ன கண்ணியு மார்மிடைந் தன்றே, நின்னொடு, பொருவோன் கண்ணியு மார்மிடைந் தன்றே, யொருவீர் தோற்பினுந் தோற்பதுங் குடியே, யிருவீர் வேற லியற்கையு மன்றே" எ - ம் ஈரிடத்தும் வரும்.

(பி - ம்.) [1] பூங்கானம். (கரு)

(334.) ஐயா யிகர வீற்ற மூன்றும்
ஏவலின் வருஉ மெல்லா வீற்றவும்
முப்பா லொருமை முன்னிலை மொழியே.

எ - ன், முன்னிலையொருமைவினையும் வினைக்குறிப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்றுவிகுதியீற்றனவானமுற்றும், ஏவலின் வரும் இருபத்துமூன்றீற்றவானமொழிகளும் ஒருமைமுப்பாலையுமுணர்த்தும் முன்னிலைவினை வினைக்குறிப்புமுற்றுக்களாம். எ - று.

இவற்றுள் முன்மூன்றும் முன்னின்றானது தொழிலையுணர்த்துவன; ஏனைய முன்னின்றானைத் தொழிற்படுத்துவனவாம்.

வ - று. உண்டனை, உண்ணாநின்றனை, உண்குவை; உண்டாய், உண்ணாநின்றாய், உண்பாய்; உண்டி எ - ம், நட வா மடி சீ விடு கூ [1]வே வை நொ போ வௌ உரிஞ் உண் பொருந் திரும் தின் தேய் பார் செல் வவ் வாழ் கேள் அஃகு எ - ம், தாரினை, தழையினை, காரினை, காலினை, வலியினை, வரவினை எ - ம் வினை வினைக்குறிப்புமுற்றுவந்தன; யாண்டும் நீயென்னும்பெயர் தந்துகொள்க.

(பி - ம்.) [1] ஏ. (கசு)

(335.) முன்னிலை முன்ன ரீயு மேயும்
அந்நிலை மரபின மெய்யூர்ந்தும் வருமே.

எ - ன், மேலதற்கு எய்தியதொரு சிறப்புவிதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருமைமுன்னிலைமொழியிடத்து ஈகாரமும் ஏகாரமும் [1]தமக்கேற்றமெய்யையூர்ந்து [2]வருவனவும் சிலவுளவாம். எ-று.

* புறநா. சகு.

வ - று. *"சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ" †"அட்டிலோலை தொட்டனை நின்மே" எனவரும்.

இது, [3]புணர்ச்சிவிதியன்மையின் ஈண்டே வைத்தாரென்க.

(பி - ம்.) [1] அதற்கேற்ற. [2] வருவனசில. [3] வேறுசூத்திரமின்மையின்.

(336.) இர்ஈ ரீற்ற விரண்டு மிருதிணைப்
பன்மை முன்னிலை மின்னவற் றேவல்.

எ - ன், முன்னிலைப்பன்மை வினையும் வினைக்குறிப்புமுற்றும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விருவிகுதியீற்றுமொழியிரண்டும் இருதிணை முன்னிலைப்பன்மையையுணர்த்தும் வினை வினைக்குறிப்புமுற்றும்; மின்னென்பது அப்பன்மையேவற்கண் வரும். எ - று.

வ - று. உண்டனிர், உண்ணாநின்றனிர், உண்குவிர்; உண்டீர், உண்ணாநின்றீர், உண்பீர்; உண்மின் எ - ம், தாரினிர், தளையினிர், காரினிர், காவினிர், வலியினிர், வரவினிர் எ - ம், தாரினீர், தளையினீர், காரினீர், காவினீர், வலியினீர், வரவினீர் எ - ம் வினைவினைக்குறிப்புமுற்றுவந்தன; நீயிரென்னும்பெயர் தந்துகொள்க. (கஅ)

(337.) கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலு மிடம்பா லெங்கு மென்ப.

எ - ன், வியங்கோண்முற்று உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ககார யகாரங்களையும் ரகாரவொற்றையும் ஈறுகவுடையமொழிகள் வியங்கோள்முற்றுவினையாம்; அது மூவிடத்து ஐம்பாற்கண்ணும் நடக்குமென்பர், ஆசிரியர். எ - று.

'ரவ்வொற்று' எனவே ஏனைய உயிர்மெய்யாம் எனக.

வ - று. ‡"அமுத முண்கநம் [1]மயலி லாட்டி", §"அருளிலர் கொடாமை வல்ல ராகுக", ||"பெறுகதி லம்ம யானே", ¶"மடவ மாக மடந்தை நாமே", **"கேட்டிது மறக்க நம்பி", "[2]யாவிருங் கேட்க", ††"வெல்க வாழிநின் வென்றி வார்கழல், செல்க தீபன

* அகநா. சசு. † நற். ௬00. ‡ ஷை. சுடு; குறு. உ0க. § புறநா. உஎ. || குறு. கச. ¶ ஷை. உ0. ** சீவக. சஎடு. †† சூளா. சீய. டு.

சிறக்க நின்புகழ்" எ-ம், *"யான்வாழு நாளும் 3பண்ணன் வாழிய" †"மன்னிய பெருமநீ நிலமிசை யானே" எ-ம், ‡"4நடுக் கின்றி நிலியரோ வத்தை", §"5நீவாழியர்நின் றந்தை, தாய்வா ழியர்நிற் பயந்திசி னோரே" எ-ம் 6இடம் பாலெங்கும் வந்தன.

வியங்கோள் மூவிடத்தும்வருதலின், ஏவலுள் அடங்காதென்க.

(பி-ம்.) 1 மயிலியலாட்டி. 2 யாவருங்கேட்க. 3 பாணன். 4 நடுக் கின்றுநிலையரோ. 5 நீ வாழிய. 6 இருதிணைக்கண்ணும். (கக)

(338.) 1வேறில்லை யுண்டைம் பான்மூ விடத்தன.

எ-ன், இம்மூன்றற்கும் 2பாலிடவுரிமையுணர்த்துதல் நுத லிற்று.

(இ-ள்.) 3வேறு, இல்லை, உண்டு என்னுமூன்றும், ஐம்பால் களினும் மூவிடங்களினும் ஒழியாதுவரும் வினைக்குறிப்புமுற்றுக்க ளாம். எ-று.

வ-று. வேறவன், வேறவள், வேறவர், வேறது, வேறவை; வேறியான், வேறியாம்; வேறுநீ, வேறுநீயிர் எ-ம், இல்லைஅவன், இல்லைஅவள், இல்லைஅவர், இல்லைஅது, இல்லைஅவை; இல்லையான், இல்லையாம்; இல்லைநீ, இல்லைநீயிர் எ-ம், அவனுண்டு, அவளுண்டு, அவருண்டு, அதுவுண்டு, அவையுண்டு; யானுண்டு, யாமுண்டு; நீயுண்டு, நீயிருண்டு எ-ம் வரும்.

'உண்டு' என்பதனையும் இவ்வாறே பொதுவினையாகக்கொள் ளாது 4அஃறிணையொருமையாகக்கொண்டு, ||"தினைத்தா ளன்ன சிறுபசுங் கால, வொழுகுநீ ராரல் பார்க்குங், குருகு முண்டுதா மணந்த ஞான்றே" என்றற்றொடக்கத்தனவற்றைப் பன்மையொருமைப் பால்வழுவமைப்பாகக்கொள்ளின், "நாவுண்டு நீயுண்டு நாமந் தரித் தோதப், பாவுண்டு நெஞ்சே பயமுண்டோ-பூவுண்டு, வண்டுறங்குஞ் சோலை மதிலரங்கத் தேயுலகை, யுண்டுறங்கு வானொருவ னுண்டு", ¶"பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல், கொண்ட கொழுந ருறுகுறை தாங்குறூஉம், பெண்டிரு முண்டுகொல் பெண் டிரு முண்டுகொல், சான்றோரு முண்டுகொல் சான்றோரு முண்டு கொ, லீன்ற குழவி யெடுத்து வளர்க்குறூஉஞ், சான்றோரு முண்டு

* புறநா. களங. † ஷை. கூ. ‡ ஷை. உ. § ஷை கஙௗ. || குறு. உரு.
¶ சிலப். ஊர்சூழ். ருக-கூ.

கொல் சான்றோரு முண்டுகொல்" என்றற்றொடக்கத்தன முடியா வென்க.

(பி - ம்.) 1 வேறுண்டில்லையைம். 2 பாலிடமுணர்த்துதல். 3 வேறுண் டில்லை. 4 (க) அஃறிணையொருமைக்கேகொண்டு; (உ) அஃறிணையொரு மைக்குக்கொண்டு. (உ0)

(339.) செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்
[1]காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொடு
[2]செய்வ தாதி யறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே.

எ - ன், நிறுத்தமுறையானே பெயரெச்சமாமாறு உணர்த்து தல்நுதலிற்று.

(இ - ள்.) செய்த செய்கின்ற செய்யுமென்னும்வாய்பாட்டால் முக்காலமும் தொழிலுந்தோன்றிப் 3பால்தோன்றாது, கருத்தாமுத லாகியபொருள்களாறின்பெயரும் ஒழியநிற்பன, பெயரெச்சவினை வினைக்குறிப்புக்களாம். எ - று.

'பாட்டிற்காலமும்' என்றது, அம்முக்கால வாய்பாடு யாவையும் கோடற்கென்க.

வ - று. நின்றஒருவன், நிற்கின்றஒருவன், நிற்குமொருவன்; எறிந்தவேல், எறியாநின்றவேல், எறியும்வேல்; பொருதகளம், பொராநின்றகளம், பொருங்களம்; செய்தசெயல், செய்யாநின்றசெ யல், செய்யுஞ்செயல்; வாழ்ந்தநாள், வாழாநின்றநாள், வாழும்நாள்; 4 பண்ணிய மா, பண்ணுநின்ற மா, பண்ணு மா எனவரும்.

இவ்வாறே ஒழிந்தபாலிடங்களிலும் ஒட்டிப் பெயரெச்சவினை வந்தவாறுகாண்க.

கரியகொற்றன், கரியகொற்றி, கரியகொற்றர், கரியகுதிரை, கரியகுதிரைகள்; கரியயான், கரியயாம்; கரியநீ, கரியநீயிர், "*செய்ய கோவினுய் செப்ப லாவதன், றைய தாரிஞ னருளின் வண்ணமே", "†பெரிய, கேழ லட்ட பேழ்வா யேற்றை" எனப்பெயரெச்சவினைக் குறிப்புவந்தவாறு காண்க. ஓடாக்குதிரை, பாடாப்பாணனென்றற் றொடக்கத்தனவும், ஓடாமலைச்செய்த, பாடாமலைச்செய்தவென்னும் 5 வாய்பாடாகவேகொள்க.

* சூளா. சீய. உசு. † அகநா. அ.

"காலமும் வினையுந் தோன்றிப்பா ஞேன்றூது, [6]பெயர்கொள் ளும்மது பெயரெச் சம்மே" என்றார், அகத்தியனார்.

இதற்கு நிகழ்காலங்கொள்ளாதார் [7]கோளும் அறிந்துகொள்க.

(பி - ம்.) 1 காலஞ்செயலொடு. 2 செய்வதாதியும். 3 பாலும்கருத்தா முதலியனவும் பொருளாதியறுபொருட்பெயரும். 4 பண்ணியமரம், பண்ணு கின்றமரம், பண்ணுமரம். 5 வாய்பாட்டுட்கொள்க. 6 பெயர்கொளும்மதுவே பெயரெச்சம்மே. 7 கொள்ளுதலும். (உக)

(340.) [1]செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலும்
செய்யுளு ளும்முந் தாகலு முற்றேல்
உயிரு முயிர்மெய்யு மேகலு முளவே.

எ - ன், பெயரெச்சத்திற்கும் முற்றிற்கும் ஆவதோர் விதி யுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) செய்யுமென்னும் பெயரெச்சச்சொற்களுட் சில மொழியீற்று உயிர்மெய் கெடுதலும், செய்யுளுட்சில உம்மை உந் தென்றுதலும், செய்யுமென்னுமுற்றுவினைச்சொல்லுட் சில ஈற்றுயி ரேகலும், சில ஈற்றுயிர்மெய் ஏகலுமுள. எ - று.

உம்மையான், இவை இவ்வாறுதல் ஒருதலையன்றெனக் கொள்க.

வ - று. "*ஆம்பொருள்க ளாகுமவை யார்க்குமழிக் கொண் ணு", "போம்புழை", "வாம்புரவி வழுதி" என [1]இவை உயிர்மெய் கெட்டன; இவை மகரவொற்றுநிற்றலான், வினைத்தொகையாகாவெ ன்க. †"நெல்லரியு மிருந்தொழுவர், செஞ்ஞாயிற்று வெயின்முனையிற், றெண்கடற்றிரை மிசைப்பாயுந்து, திண்டிமில் வன்பரதவர்", ‡"நீர்க் கோழி கூஉப்பெயர்க் குந்து." என இவை உம் உந்தென்றுயின. "சாரனாடவென் ஞேழியுங் கலுழ்மே", §"அம்ப லூரு மவனொடு மொழிமே", ||"ஆஅ மெனக்கெளிதென் றன்றுலக மாண்டவன்" என முற்றுச்சொல் உயிரும் உயிர்மெய்யும் கெட்டன. பிறவுமன்ன.

(பி - ம்.) 1 ஆகும், போகும், வாவுமென்ற உயிர்மெய். (உஉ)

(341.) தொழிலுங் காலமுந் தோன்றிப் [1]பால்வினை
ஒழிய நிற்பது வினையெச் சம்மே.

* சீவக. அசஅ. † புறநா. உச. ‡ ஷெ. நகரு. § குறு. ருக. || பழ. எ.

எ - ன், வினையெச்சமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செயலையும் காலத்தையுங்காட்டிப் பால்தோன்றாது வினையெஞ்சநிற்பது, வினையெச்சமாம். எ - று.

வினையெஞ்சநிற்றலான் வினையெச்சமென்றார். வினையாவன : வினைமுற்றும், குறிப்புமுற்றும், பெயரெச்சமும், பெயரெச்சக்குறிப்பும், வினையெச்சமும், வினையெச்சக்குறிப்புமாமென்க.

வ - று. ஓதிவந்தான், ஓதிநல்லன் எ - ம், ஓதிப் பெற்ற பொருள், ஓதிநல்லசாத்தன் எ - ம் *"உழுதுபயன் [2]கொண்டு", உழுதன்றி யுண்ணார் எ - ம் முறையேகாண்க.

"காலமும் வினையுந் தோன்றிப்பா லொன்றாது, வினைகொள் ளும்மது வினையெச் சம்மே" என்றார், அகத்தியனார்.

(பி - ம்.) [1] பாலற்றுவினையொழிய. [2] கொண்டுவந்தான். (உ௩)

(342.) செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
வான்பான் [1]பாக்கின வினையெச் சம்பிற
ஐந்தொன் றாறுமுக் காலமு முறைதரும்.

எ - ன், வினையெச்சப்பகுதியுணர்த்துதனுதலிற்று.

(இ - ள்.) செய்தென்பதுமுதலான ஒன்பதுமொழிகளின் வாய்பாட்டான்வருவனவும், வான் பான் பாக்கென்னுமூன்றும் இவை போல்வனபிறவும் வினையெச்சப்பகுதிகளாம் ; இவற்றில் முதலைந்தும் இறந்தகாலமும், இடையொன்றும் நிகழ்காலமும், ஒழிந்த ஆறும் எதிர்காலமும் காட்டுவனவாம். எ - று.

வான், பான், பாக்கை வேறெடுத்தோதியது, இவை செய்து முதலியனபோலத் தாமே வினையாக நில்லாது ஒரு வினைச்சொல்லைக் கொண்டுவரும் பெயர்களாகையாலென்க.

இதனுள், 'பிற' என்றமிகையானே, செயவென்பது நிகழ்கால மேயன்றி எதிர்காலமுங்காட்டுமெனக்கொள்க. 'இன்ன' என்றதனால், †"கூற்றமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி" எ - ம், ‡"கூற்றமை நோக்கிக் குறிப்பறிவான்" எ - ம் இவற்றிற்கு எதிர்

* பு - வெ. வாகை. க0. † கலி. கடவுள். ‡ திருக்குறள், எ0௧.

மறையாய் வருவனவும், *"அற்றா லளவறிந் துண்க", "பெற்றாலுந் செல்வம் பிறர்க்கீயார்", †"நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே", "காண்டலு மிதுவே சொல்லும்", "செவ்வன் றெரிகிற்பான்", ‡"அவாவுண்டே லுண்டாம்" என்றற்றொடக்கத்தனவும் இவ்வாய் பாடுகளிலே அடக்கிக்கொள்க. செய்தற்கென்பதுவும், பின் முன் கால் கடை என்பனமுதலானவும் வினையெச்சமென்பாருமுளர். அவற்றுள், செய்தற்கென்பது தொழிற்பெயர்வழிவந்த நான்கனுருபாயும் ஏனைய செய்தவென்னும் காலம்பற்றிய இடப்பொருளுருபாயும் [2] அடங்குமெனக்கொள்க.

(பி - ம்.) [1] பாக்குவினையெச்சம். [2] அடங்குமென்பர். (உச)

(343.) அவற்றுள்
முதலி னான்கு மீற்றின் மூன்றும்
வினைமுதல் கொள்ளும் பிறவுமேற் கும்பிற.

எ - ன், வினையெச்சத்திற்கு ஆவதோர்விதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மேற்சொன்ன பன்னிரண்டனுள்ளும் செய்து, செய்பு, செய்யா, செய்யூ என்னு[1]நான்கும் வான் பான் பாக்கென்னு மூன்றும் வினைமுதல்வினைகொண்டுமுடியும்; ஒழிந்தன ஐந்தும் வினைமுதல் வினையையும் பிறிதின்வினையையும் கொண்டுமுடியும். எ - று.

வ - று. §"வாளொடு கனையிருள் வந்து தோன்றினன்", ||"எண்ணித் துணிக கருமம்", ¶"பரீஇ யுயிர்செகுக்கும்", **"ஐவரொடு சினைஇ, நிலந்தலைக்கொண்ட"[2] எ - ம், ††"புலராப் பச்சிலையிடையிடுபு தொடுத்த", ‡‡"தெரிபு தெரிபு குத்தின வேறு" எ - ம், §§"கல்லாக் கழிப்பர் தலையாயார்", ||||"[3]காணாது கழிந்த வைகல் காணு, வழிநாட் கிரங்குமென் னெஞ்சம்", ¶¶"நிலங்கிளையா, நாணி நின்றோ ணிலை" எ - ம், ***"படுமகன் கிடக்கை காணூஉ, வீன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே", "நிலம்புடையூஉ வெழுதரும் வலம்படு குஞ்சரம்" எ-ம் முதலில் நான்கும் வினைமுதலும் இறந்தகாலமும் தழுவின. 4. "கொல்வான் கொடித்தானை கொண்டெழுந்தான்", ஓது

* திருக்குறள், கூசங. † கலி. ௩௬. ‡ திருக்குறள், க0எரு. § சீவக. ௩உ0. || திருக்குறள், சகூஎ. ¶ நாலடி, நட்பாராய்தல், க0. ** புறநா. உ. †† ஷை. ௩௩. ‡‡ கலி. க0௩. §§ நாலடி. பன். கூ. |||| புறநா. கஎகூ. ¶¶ அகநா. ககூ. *** புறநா. உஎஅ.

வான்போனான், உறங்குவான்வந்தான் எ-ம், *" திருவிற்றான் மாரி கற்பான் றுவலைநாட் செய்ததேபோல்" உண்பான்வந்தான் எ-ம், "புணர்தரு செல்வர் தருபாக்குச் சென்றார்," உண்பாக்குச்சென்றான், உண்பாக்குவந்தான் எ-ம் ஈற்றின்மூன்றும் வினைமுதலும் எதிர் காலமுமேற்றன. †"காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி பசித்தெனக், கடுங் கண் யானைக் 5கோடுநொடுத் துண்ணும்" எ-ம், ‡"கோவா வாரம் வீழ்ந்தெனக் குளிர்கொண்டு, பேஎ நாறுந் தாழ்நீர்ப் பனிச்சுனை" எ-ம் 6எனவெனீறு தன்றொழிலும் பிறிதின்றொழிலும் இறந்தகாலமுமேற் றது. §"கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்" எ-ம், ||"மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து, நோக்கக் குழையும் விருந்து" எ-ம் செயவெனெச்சம் இருதொழிலும் நிகழ்காலமுமேற்றது. ¶"தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டிற், கவ்வை யெடுக்கு மிவ் வூர்" எனச் செயினென்னு7மெச்சமும்,**"காணியவாரீ வாழிய தோழி" எ-ம், ††"மாணிழை யரிவை காணிய வொருநாட், பூண்க மாளநின் புரவி நெடுந்தேர்" எ-ம் செய்பியவென்னுமெச்சமும், ‡‡ "பசலையுணீயர்வேண்டும்" எ-ம், §§"கொற்கைச் செழியர் கொங்கர்ப் பணீஇயர், வெண்கோட் டியானைப் போஒர் கிழவோன், பழையன் வேல்வாய்த் தன்ன" எ-ம் செய்பியரென்னுமெச்சமும் எதிர்காலமும் இருதொழிலும் கொண்டன.

'பிற' என்ற 8விதப்பினானே சிறுபான்மை, தொழிற்பெயர் கொண்டுமுடிவனவும் உளவெனக்கொள்க.

வ-று. உண்டுவருதல், உண்குபுவருதல், உண்ணுவருதல், உண்ணூஉவருதல், பசித்தெனஉண்டல், வாழக்கருதல், மழைபெயின் விளைதல், காணியசேறல், மழைபெய்பியரெழுதல், கொள்வான் போதல், உரைப்பான்றொடங்கல், உண்பாக்கிருத்தல், ||||" எரிபுரை யெழிலதாய விளந்தளி ரிரண்டு நாளின், மரகத வுருவ மெய்தி மற் றது பசலை கொண்டு, 9சருகிலை யாகி வீழ்ந்து சரிந்துமண் ணுதல் கண்டும், வெருளிலர் வாழ்து மென்பார் வெளிற்றினை விலக்கலாமோ" எனத் தொழிற்பெயரேற்றவாறு.10

தேடியவான்பொருள், ஏறியயானை, ஓடியபுரவி என இவ்வாறு 11பெயர்கொண்டு முடியிற் பெயரெச்சமாவனவும் காண்க.

---

* சீவக. உ0எ0. † குறு. க00; (பி-ம்). ‡ "பையுண் மாலை." § புற நா. எ0. || திருக்குறள், கூ0. ¶ ஷெ. ககடு0. ** கலி. சஉ. †† பதிற். அக. ‡‡ குறு. உஎ. §§ நற். க0. |||| சூளா. துறவு. எ.

*" விருந்தின்றி யுண்டபகலும் ", †" துயிலின்றி [12]யானீந்த ", ‡[13]" நாளன்று போகிப் புள்ளிடை தட்பப், பதனன்றுபுக்குத் திற னன்று மொழியினும் " என வினையெச்சக்குறிப்பு வந்தவாறுகாண்க. [14]பிறவும் இவ்வாறுவருவனவும் ஆராய்ந்துகொள்க.

(பி - ம்.) 1 நான்கும் செய்தென்னு மிறந்தகாலங்கொண்டும், வான் ...........மூன்றும் எதிர்காலங்கொண்டும் முடியுமிடத்து வினைமுதல் வினை யேற்றுமுடியும்; ஒழிந்தவைந்தும். 2 எனச் செய்தென்னும் வாய்பாட்டுக்கு வந்து, எண்ணி, பருகி என இறந்தகாலம் முறையே வந்தது. 'புலராப் பசலையிடையெழூஉ'. 3 காணக்கழிந்தநாட்கிரங்கும். 4 இவற்றுள் இடை யெழுபு என்றது இடையிலெழூந்தென்றும், கல்லா என்றது கற்றென்றும் காண என்றது கண்டென்றும் காணூஉ என்றது கண்டென்றும் செய்பு செய் யாச்செய்யூஉ என்னும் வாய்பாடுகள் செய்தென்னும் இறந்தகாலத்திலடங்கின வாறுகாண்க. இனி, தோன்றினனென்றும் துணிகசாத்தனென்றும் பருகி யுயிர்செகுக்குமரவென்றும் பசலையெழுந்ததென்றும் தெரிந்து குத்தின னென்றும் கற்றுக்கழிப்பரென்றும் இரங்குமென்னெஞ்சமென்றும் நாணி நின்றவளென்றும் பெரிதுவந்தனளென்றும் குஞ்சரமென்றும் வினைமுதலை இருதிணையுமேற்றன. கொள்வான். 5(க) கோடுநொடித்துண்ணும்; (உ) கோ டுகொடுத்துண்ணும். 6 செய்தெனநின்றுதன்றொழிலும். 7 எச்சமிருதொழி லுமெதிர்காலமுமேற்றன. 8 மிகையானே. 9 கருகிலையாகிவீழ்ந்துகரிந்து. 10 இவற்றில் மண்ணுதல் தொழிற்பெயர். கல்விகொண்டுதேடிய. 11 பொரு ள்கொண்டு முடிவனவுங்காண்க. 12 யான்றுயர", 13" நாளின்று. 14 'நா ளின்றி' என்றது நாளின்றென்றாயது வினையெச்சக்குறிப்பு; அன்றி இன்றி என்பனவல்லாது வாராவெனவறிக. (உரு)

(344.) சினைவினை சினையொடு [1]முதலொடுஞ் செறியும்.

எ - ன், [2]மேலதற்கு எய்தியதோர் புறநடையுணர்த்துதல் நுத லிற்று.

(இ - ள்.) சினைவினை என்னுமோவெனின், சினைதன்னுடனும் முடியும் முதலுடனுமுடியும். எ - று.

வ - று. கையிற்றுவீழ்ந்தது, கையிற்றுவீழ்ந்தான்; கையிறுபு வீழ்ந்தது, கையிறுபுவீழ்ந்தான்; கையிறாவீழ்ந்தது, கையிறாவீழ்ந் தான்; கையிறூஉ வீழ்ந்தது, கையிறூஉ வீழ்ந்தான் என[3]வரும். பிறவும் வந்தவழிக்காண்க.

(பி - ம்.) 1 முதலொடுசெறியும். 2 முன்சொன்னவினைகளுக்கோர் புறநடை. 3 முதலினுங் வினைமுதல்கொண்டுமுடிந்தன. (உசு)

* திரி. சஙு. † கலி. நு0. ‡ புறநா. கஉச.

(345.) சொற்றிரி யினும்பொருடிரியா வினைக்குறை.

இதுவுமது.

(இ - ள்.) தத்தம் உருபு ஒன்று ஒன்றாய்த் திரிந்துவருவன உளவேனும் தம்பொருளிற்றிரியாவாம், வினையெச்சங்கள். எ - று.

உம்மையால், திரிபு சிறுபான்மையவெனக்கொள்க.

வ - று. ஞாயிறுபட்டுவந்தான், கோழிகூவிப்பொழுது [1]புலர்ந்தது; *"உரற்கா லியானை யொடித்துண் டெஞ்சிய, யாஅ வரிநிழற் றுஞ்சும்", †"செந்நா வேற்றை கேழ றுக்கி, யிரியற் பிணவ றீண்ட விற் பரீஇச், செங்கா யுதிர்ந்த பைங்குலை யீந்தின்" என்பன [2]செயவெனெச்சந்திரிந்து செய்தெனெச்சமாய் வந்தனவேனும் செயவெனெச்சப்பொருளே ஆயினவாறு காண்க. பிறவுமன்ன.

(பி - ம்.) [1] புகுந்தது. [2] ஞாயிறுபட, கோழிகூவ, யானையொடித் துண்ண, கேழறுக்க, எனச் செயவெனெச்சந்திரிந்து செய்தெனெச்சமாய் வந்தனவேனுஞ் செயவெனெச்சப்பொருளேயாகித் தன்றொழிலும் பிறிதின் வினையுமேற்றவாறுகாண்க. பிறவுமன்ன. (உஎ)

(346.) ஆக்க வினைக்குறிப் பாக்கமின் றியலா.

இதுவுமது.

(இ - ள்.) ஆக்கப் பொருண்மைக்கண் வரும் வினையெச்சக் குறிப்பு ஆக்கச்சொல்லினையொழிய வாரா. எ - று.

வ - று. அறங்கெட்டு அருளுடையனாயினான், மருந்துண்டு நல்லனாயினானெனவரும். ஆயினானென்பது ஆக்கம். ‡"வேங்கையுங் காந்தளு நாறி, யாம்பன் மலரினுந் தான்றண் ணியளே", §"குருதி படிந் துண்ட காக முருவிழந்து, குக்கிற் புறத்த சிரல்வாய செங்கண் மால், [1]தப்பியா ரட்ட களத்து" என்பன செய்யுளாகலான், தொகுக்கப்பட்டனவெனக்கொள்க.

(பி - ம்.) [1] "பற்றாரை யட்ட களத்து" என்பன..........தொக்கு நின்றன. இவையிலாக்கவினைக்குறிப்புக்கண்டுகொள்க. (உஅ)

(347.) பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்
செல்லா தாகுஞ் செய்யுமென் முற்றே.

---

* குறு. உ௬உ. † அகநா. உக. ‡ குறு. அச. § களவ. ரு.

எ - ன், இஃது இவ்வாற்றாற் பொது [1]வினையாமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயர்திணைப் பன்மைப்படர்க்கையிடத்தும் முன்னிலையிடத்தும் தன்மையிடத்தும் செய்யுமென்னும் நிகழ்காலமுற்று வினை, ஆகாது. எ - று.

எனவே [2]உயர்திணை ஆண்பாலொருமையினும் பெண்பாலொருமையினும் அஃறிணையொருமையினும் பன்மையினுமாமென்றவாறு.

உ - ம். அவனுண்ணும், அவளுண்ணும், அதுவுண்ணும், அவையுண்ணுமெனவரும்.

(பி - ம்.) [1] வினையென்பதுணர்த்துதல்நுதலிற்று. [2] உயர்திணைப்படர்க்கையாண்பால். (உகூ)

## (348.) யாரென் வினாவினைக் குறிப்புயர் முப்பால்

எ - ன், மேல், இருதிணைக்கும் பொதுவான வினை வினைக்குறிப்பு உணர்த்தினார்; இதனால், உயர்திணைமுப்பாற்கும் பொதுவான வினைக்குறிப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினாப்பொருண்மையின்வரும் யாரென்னும் வினைக்குறிப்புமொழி உயர்திணைமூன்றுபாற்கும் பொதுவாம். எ - று.

வ - று. யாரவன், யாரவள், யாரவரெனவரும்.

யாரென்றது எத்தன்மையுடையாரென, வினைக்குறிப்பானது காண்க. (ங0)

## (349.) எவனென் வினாவினைக் குறிப்பிழி யிருபால்.

எ - ன், அஃறிணை [1]இருபாற்கும் பொதுவான வினைக்குறிப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எவனென்னும் வினாப்பொருண்மை வினைக்குறிப்புச்சொல் அஃறிணை இருபாற்கும்பொதுவாம். எ - று.

வ - று. எவனது, எவனவை எனவரும்.

எவனென்றது எத்தன்மையுடையதென வினைக்குறிப்பானது காண்க.[2]

(பி - ம்.) [1] இருபாற்குமுரியபொது. [2] இனி, எவன் அவனென உயர்திணைக்கண்ணுமாமென்க. (ஙக)

(350.) வினைமுற் றேவினை யெச்ச மாகலும்
குறிப்புமுற் றீரெச்ச மாகலு முளவே.

எ - ன், முற்றுச்சொற்கட்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) முற்றுவினைச்சொல் வினையெச்சமாகி வருதலும் வினைக்குறிப்புமுற்றுச்சொல் வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலும் உளவாம். எ - று.

'ஆகலும்' என்றவும்மையான், அவ்வாறுதல் சிறுபான்மையெனக்கொள்க.

வ - று. "காணுன் கழிதலு முண்டென் றொருநாள்", *"மோயின ளுயிர்த்த காலை", †"முகந்தனர் [2]கொடுப்ப வுகந்தனர் பெயரும்", ‡"விளிப்பது பயிலுங் குறும்பர்துஞ் சுமியொடு", §"எருவினுண் டாது குடைவன வாடி" [3] எ - ம், ||"பெயர்த்தனென் [4]முயங்கயான்", "மக்களு ளிரட்டையாய் மாறினம் பிறந்தியாம்"[5] எ - ம் ¶"சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப", **"கருங்கோட் டின்னிய மியக்கினிர் கழிமின்"[6] எ - ம் மூவிடத்து ஐம்பாலினும் வினைமுற்று வினையெச்சமாயின.

††"வரிபுனை வில்லன் ஒருகணை தெரிந்துகொண்டு", ‡‡"அளிநிலை[7]பெறாஅ தமரிய முகத்தள், விளிநிலை கேளாள்", §§"உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து", [8]"விழுமியது கழிவ தாயினும்", ||||"நிலமிசைப் புரளுங் கைய வெய்துயிர்த்து" எ - ம், "துணையி[9]னெஞ்சினேன் றுயருழந் தினைவேன்", ¶¶"நீர்வார் கண்ணேந் தொழுதுநிற் பழிச்சி" எ - ம், ***"நீர்வார் கண்ணை நீயிவ ணொழிய", †††"வெள்வேல் வலத்திர் பொருடரல் வேட்கையி, னுள்ளினிர்" எ - ம் ஐம்பால் [10]மூவிடத்தும் வினைக்குறிப்புமுற்று வினையெச்சக் குறிப்பாயின.

"வெந்துப்பினன் விறல்வழுதி யொடு", "அஞ்சாயல ளாயிழைமுன்", "கடற்றானையர் கழல்வேந்தரை", ‡‡‡"பெருவரை மிசை

---

* அகநா. ரு. † புறநா. ௩௩. ‡ "இளிப்பயி ரிமிருங் குறும்பரந் தூம்பொடு." மலைபடு. எ. § குறு. சசு. || ஷை. அசு. ¶ "எம்மூரல்ல தூர்நனி." என்னும் செய்யுள். ** பெரும்பாண். ௩கஉ. †† அகநா. சஅ. ‡‡ ஷை. ரு. §§ திருமுரு. கஅரு. |||| புறநா. சச. ¶¶ ஷை ககூ. *** குறு. உஉ. ††† கலி. ச. ‡‡‡ குறு. எஅ.

யது நெடுவெள் ளருவி", *"புன்று ளோமைய சுரனிறந் தோரே" எ - ம், "பெருவேட்கைய னெற்பிரிந்து", "கண்புரை காதலே [11]மெம்மு முள்ளாள்" எ - ம், "உலங்கொ டோளினே யொருநின் ஞல்", "வினைவேட்கையிர் வீரர் வம்மின்" எ - ம் வினைக்குறிப்பு முற்றுக்கள் ஐம்பான் [12]மூவிடத்தும் பெயரெச்சவினைக்குறிப்பாயின. இவை இவ்வாறு பெயர்படாதனவெனக்கொள்க.

அஃதேல், முற்று எச்சமாமென்றது என்னை? எச்சந்தானே பாலும் திணையும் இடமும் விளக்கிற்[13]றென்ன அமையாதோவெனின், எச்சமாகவோதிய வாய்பாட்டுமொழிகள் வழக்கிடத்தும் செய்யுளிடத்தும் பாலும் திணையும் இடமும் விளக்காது பொது வாய்நிற்றலானும், இவற்றுட்சில வினையெச்சந்தன்னையேற்று நிற்பனவும் உளவாகலானும் அமையாதென்க.

இவற்றுள், வினையெச்சமாய் வினையேற்றனவும் தம்தொழிலேற்றனவும் ஈண்டுக்காட்டினவற்றுள்ளே காண்க.

இனிப்[14]பிறதொழில்கொண்டனவருமாறு:† "விண்ணிற் றாவியிட் டான்வந்து வீழ்ந்தன", ‡"கலைத்தொழில் படவெழீஇப் பாடினுள்கனிந், திலைப்பொழில் குரங்கின வீன்ற தூண்டளிர்", § "பாயு மாரிபோற் பகழி [15]சிந்தினு, ராயர் மத்தெறி தயிரி னுயினுர்", ||"கானவ ரிரிய வில்வாய்க் கடுங்கணை தொடுத்த லோடு, மானிரை [16]பெயர்ந்த தாய ரார்த்தன ரணிந்த திண்டோ, டானுென்று முடங்கிற் றொன்று நிமிர்ந்தது சரம்பெய் மாரி, போனின்ற தென்ப மற்றப் பொருவருஞ் சிலையி னுற்கே", "¶செய்யோன் செழும்பொற் சரஞ் சென்றன சென்ற தாவி" எனக்காண்க. பிறவுமன்ன.

**(பி - ம்.)** 1 வினையெச்சமாதலும். 2 கொடுப்ப" என உயர்திணை முப்பாலும், "விளிப்பதும் பயிரும். 3 என அஃறிணையிருபாலும் பெயர். 4 முயங்குகையான்". 5 எனத் தன்மையிடத்து ஒருமைபன்மையும், "நீ சேர்ந்தனை. 6 என முன்னிலையொருமைபன்மையுமாகிய மூவிடத்தைம்பால் வினைமுற்று 'காணுது, மோய், [வருந்தி] முகந்து, விளித்து, குடைந்து, பெயர்த்து, மாறி, சேர்ந்து, இயக்கி' என முறையே செய்தென்னும் வினையெச்சமாகி மூவிடத்தைம்பாலுமேற்றன. இனி, விளிப்பதும் என்றவும்மை எண்ணும்மை; பயிரும் என்றது பயிலுந்தொழில். 7 பொருஅதமரிய. 8 எ - ம் விழுமிதுகழியாதாயினும். 9 நெஞ்சினன் றுயருழந்தனன்". 10 மூவிடத்தும் வினைக்குறிப்புமுற்று வில்லனுகி, முகத்தளாகி கையினராகி, விழுமியதாகி,

* குறு. உ௬0. † சீவக. அ௯௪. ‡ ஷி. ௬0௭. § ஷி. ௪உ௪. || ஷி. ௪0உ. ¶ ஷி. உ௩உஉ.

கையவாகி, நெஞ்சினேனாகி, கண்ணேனாகி, கண்ணிணையாகி, வலத்திலுடையவராகி' என ஆகியென்னும் வினையெச்சந்தருங்குறிப்பாய் மூவிடத்தைம் பாலு முறைறையேயாயின. 11 எம்முள்ளான் எ - ம். 12 மூவிடத்தும் வெந்துப்பின்வந்த, அஞ்சாயல்பெற்ற, கடற்றானைபெற்ற, பெருவரைமிசைநின்ற, புன்றாளோமைநின்ற, வேட்கைபெற்ற, காதல்பெற்ற, தோள்பெற்ற, வினை வேட்கைபெற்ற' எனச் செய்தவென்னும் பெயரெச்சக்குறிப்பாயின. இவை இவ்வாறு பெயர்தொடர்ந்தனவெனக்கொள்க. 13 என்ற தொல்காப்பியனார் கருத்தாகவுரைத்தலமையாதோவெனின். 14 பிறிதுதொழில். 15 சிந்தினாரயர். 16 பெயர்ந்தவாயர். (௩உ)

இரண்டாவது வினையியல் முற்றிற்று.



மூன்றாவது,

# பொதுவியல்.

(351.) **இருதிணை யாண்பெண் ணுளொன்றனை யொழிக்கும்**
**பெயரும் வினையுங் குறிப்பி னானே.**

என்பது சூத்திரம்.

இவ்வோத்து [1]என்னுதலியதோவெனின், ஒத்து நுதலியதூஉம் ஒத்தினது பெயருரைப்பவேவிளங்கும். ஆயின், இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், பெயர் வினை யிடை யுரி யென்னும் நான்கு சொல்லின் இயல்பும் உணர்த்திற்றாதலாற் பொதுவிய லென்னும் பெயர்த்து; மேலோத்தினோடு இதற்கு இயைபு என்னையோவெனின், கீழ்ப்போன பெயரையும் வினையையும் மேல்வரும் இடையையும் உரியையும் நோக்கிநிற்றலிற் சிங்கநோக்கெனக்கொள்க.

இவ்வோத்தினுள், இத்தலைச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், பெயர்க்கும் வினைக்கும் உரியதோரிலக்கணமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இருதிணையிடத்தும் ஆண்மைப்பொருளினும் பெண்மைப்பொருளினும் ஒன்றனையொழிக்கும், அவ்விருபாற்கும்பொதுவான பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் குறிப்பினான். எ - று.

வ - று. வடுகரசர் [2]ஆயிரவர் மக்களையுடையார், *"மம்மர் கொண் மாந்தர்க் கணங்காகுந் தன்கைக்கோ, லம்மனைக்கோ லாகிய ஞான்று" எ - ம், பெருந்தேவி [3]பொறையுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்களுளர், இது, பத்துமானிடத்தின்மூலைப்பால் எ - ம் உயர்திணைப்பெண்ணொழிபெயரும் ஆணொழிபெயரும் வந்தவாறு. அரசர் ஆயிரவர்மக்களொடு தாவடிபோயினார், இன்று இச்சேரியாரும் அச்சேரியாரும் பொருப எ - ம், இன்று இவ்வூரரெல்லாம் தைந்நீராடுப, குறுங்கானம்போப எ - ம் உயர்திணைப்பெண்ணொழிவினையும் ஆணொழிவினையும் வந்தவாறு. நம்மரசன் ஆயிரம்யானையுடையன் எ - ம், நம்பி நூறு எருமையுடையன் எ - ம் அஃறிணைப் பெண்ணொழிபெயரும் ஆணொழிபெயரும் வந்தவாறு. இன்று இவ்வூர்ப்பெற்ற

---

* நாலடி. இளமை. ௯.

மெல்லாம் உழுவொழிந்தன எ - ம், இன்று இவ்வூர்ப்பெற்றமெல்லாம் அறத்திற்கேகறக்கும் எ - ம் அஃறிணைப் பெண்ணொழிவினையும் ஆணொழிவினையும் வந்தவாறு.

பி - ம்.) [1] என்னுதலியெடுத்துக்கொள்ளப்பட்டதோவெனின். [2] ஆயிரமக்களையுடையர் இவண்மாட்டுங்காழிலா மம்மர். [3] புறையுயிர்த்த. (கு)

(352.) பெயர்வினை யிடத்து னளரய வீற்றயல்
ஆவோ [1]வாகலுஞ் செய்யுளு ளுரித்தே.

எ - ன், செய்யுட்காவதோர்[2]முறைமையுணர்த்துதல்நுதலிற்று.

(இ - ள்.) பெயர்வினைகளின் ஈற்றினின்ற னளரயக்களின்அயலினுள்ள ஆகாரம் ஓகாரமாகவும்பெறும், செய்யுளுள். எ - று.

உம்மையால், ஆகாமலும் உரித்தென்றவாறு.

வ - று. *"வில்லோன் காலன கழலே தொடியோள், மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர், யார்கொ லளியர்தாமே", † "பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" எ - ம்; ‡ "படைத்தோன் மன்றவப் பண்பி லாளன்", §"[3]நல்லை மன்னென நகூப்பெயர்ந்தோளே", ‖ "சென்றோ ரன்பிலர் தோழி", ¶ "வந்தோய் மன்ற தண்கடற் சேர்ப்ப" எ - ம் பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் வந்தவாறு.

(பி - ம்.) [1] ஆதலும். [2] இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று. [3] (க) நல்லண்மன்றகூய்ப்பெயர்ந்தோளே; (உ) நல்லோண்மன்ற (உ)

(353.) உருபும் வினையு மெதிர்மறுத் துரைப்பினும்
திரியா தத்த [1]மீற்றுருபி னென்ப.

எ - ன், வேற்றுமையுருபுகட்கும் வினைச்சொற்கட்கும் ஆவதோர் விதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எண்வகைவேற்றுமையுருபுகளும் மூவகை வினைச்சொற்களும் எதிர்மறுத்துச்சொல்லுமிடத்தும் தத்தம் ஈற்றுருபுகளின் வேறுபடா. எ - று.

வ - று. ஆவாராது, மரத்தைக்குறையான், சாத்தனொடுசேரான், தேவர்க்குச்சிறப்பெடான், மலையின் இழியான், சாத்தனது

* குறு. எ. † புறநா. உ. ‡ ஷை. கககூ. § அகநா. உசஅ. ‖ ஷை நுகூக
¶ ஷை. அ0.

அன்று, ஊர்க்கண்இரான், சாத்தாசாயல் (சாயாதே)என எட்டு வேற்றுமையுருபும்திரியாதுவந்தன. உண்ணுன்சாத்தன், [2](கொடான், கொடாள், கொடார், கொடாது, [3]கொடா, கொடேன், கொடேம், கொடுக்கிலை, கொடுக்கிலீர்) + (சாத்தற்கு) என முற்றுவினை திரியாது வந்தன. (உண்ணுத, தின்னுத) + (அவன், அவள், அவர், அது, அவை, யான், யாம், நீ, நீயிர்) எனப் பெயரெச்சம் திரியாது வந்தன.

இவை, உண்ணு, தின்னுவெனத் திரிவ வன்றோவெனின், அவை, உண்ணுத, தின்னுதவென்பனவற்றைக் குறைத்துவழங்குகின்றாரென்க. இதற்கு முக்காலத்திற்கும் ஒன்றே எதிர்மறையென்க.

(செய்யாது) + (வந்தான், வந்தாள், வந்தார், வந்தது, வந்தன, வந்தேன், வந்தேம், வந்தாய் வந்தீர்) என வினையெச்சம் திரியாது வந்தது[4]

(பி - ம்.) [1] ஈற்றுருபென்ப. [2] முற்றுவினைதிரியாதுவந்தன. [3] கொடாதவை. [4] எனைவினையெச்சங்களுக்கும் எதிர்மறையுரியவுளவேற் காண்க.

(354.) உருபுபல வடுக்கினும் வினைவே றடுக்கினும்
ஒருதம் மெச்ச மீறுற முடியும்.

இதுவுமது.

(இ - ள்.) உருபொன்றே அடுக்கியும் பல மயங்கியடுக்கியும் வினைச்சொற்கள் மூன்றும் தம்முள் விரவாது வேறுவேறடுக்கியும் வந்தாலும், தத்தமெச்சம் [1]இறுதியிலே யொன்றுவர அதனோடு அனைத்தும் முடிவனவாம். எ - று.

'வினைவேறடுக்கினும்' எனவே உருபுகள் தம்முள் மயங்கியு மடுக்குமென்க.

வ - று. *"கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவா, ளுட்குடையா [2]ளூரா ணியல்பினு - ளுட்கி, இடனறிந் தூடி யினிதினுணரு, மடமொழி மாதராள் பெண்", †"காலார் கழலார் கடுஞ்சிலையார் கைக்கொண்ட, வேலார் [3]வெருவந்த தோற்றத்தார் - காலன், கிளர்ந்தாலும் போல்வார் கிணைப்பூசல் கேட்டே, யுளர்ந்தார் நிரைப் பெயர்வு முண்டு." என [4]இவை ஒருருபு அடுக்கித் தமக்கேற்ற ஒரு பெயரும் ஒருவினையும் இறுதிவர முடிந்தன. [5]யானையது கோட்டை நுனிக்கட்பொருட்கு வாளாற் குறைத்தானென இது [6]பலவும் மயங்கியடுக்கி இறுதி ஒருவினைகொண்டு முடிந்தது. பிறவுமன்ன.

* நாலடி. கற்புடை. ச. † பு - வே. கரந்தை. உ.

(உண்டான் தின்றான் ஓடினான் பாடினான்) + (சாத்தன்), "வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய், பொருதி புலம்புதி நீயுங்-கருதுங்காற், 7 பண்டினை யல்லையாற் பாழித்தோட் கோதையைக், கண்டனையோ வாழி கடல்" எ - ம், * "இளையண் மெல்லியண் மடந்தை, யரிய சேய பெருங்கான் யாறே" 8எ - ம் வினை வினைக்குறிப்புமுற்று விரவாது அடுக்கி ஒரு பெயரொடுமுடிந்தன. †"நெல்லரியு மிருந்தொழுவர், செஞ்ஞாயிற்று வெயின்முனையிற், றெண்கடற்றிரை மிசைப்பாயுந்து, திண்டிமில் வன்பரதவர், வெப்புடைய மட்டுண்டு, தண்குரவைச் சீர்தூங்குந்து, தூவற் கலித்த தேம்பாய் புன்னை, மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்த,ரெல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து,வண்டுபடமலர்ந்த தண்ணறுங் கானன், முண்டகக் கோதை யொண்டொடி மகளி, ரிரும்பனையின் குரும்பைநீரும், பூங்கரும்பின் றீஞ்சாறும், ஓங்குமணற் குவவுத்தாழைத், தீநீரோ டுடன்விராய், முந்நீ ருண்டு முந்நீர்ப் பாயுந்து, தாங்கா விளையு ணல்லூர் கெழீஇய" எ - ம், ‡"சிறிய பெரிய நிகர்மலர்க் கோதைதன்" 9எ - ம் பெயரெச்சவினையும் குறிப்பும் அடுக்கிவந்து ஒருபெயர்கொண்டன. §"சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போன், மெல்லவே கருவிருந் தீன்று மேலலார், செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற், கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே", ||"நாளன்று போகிப் புள்ளிடை தட்பப், பதனன்று புக்குத் திறனன்று மொழியினும், வறிது 10பெயர்குவ ரல்லர்" எ - ம் வினையெச்சவினையும் குறிப்புமடுக்கி ஒருவினை கொண்டன. 11"எனைத்துமுற் றடுக்கினு மனைத்துமொரு பெயர்மே, னினைத்துக்கொள நிகழு நிகழ்த்திய முற்றே, வினையெஞ்சு கிளவியும் பெயரெஞ்சு கிளவியும், பலபல வடுக்கினு முற்று12மொழிப் படிய." என்பது, அகத்தியம்.

(பி - ம்.) 1 இறுதியிலேவரின் அதனோடாதியினடுக்கினவுருபுகளும் வினைகளுந் தமக்கு ஏற்றபெயரும் வினையும்கொண்டு முடிவனவாமென்ற வாறு. 2 (க) ஊர்காணியல்பு; (உ) ஊர்நாணியல்பு. 3 வெருவருதோற்றத்தார். 4 இவை மாதராள்பெண்ணென்றும், வெருவருதோற்றத்தார் உளர்ந்தாரென்றும் எழுவாயுருபுபலவடுக்கித். 5 கிணைப்பூசல் - பறைமுழக்கம். யானையது. 6 பலமயங்கி. 7 (க) பண்டையை; (உ) பண்டின்னை. 8 எ - ம் படர்க்கைவினைமுற்றும் முன்னிலைவினைமுற்றும் வினைக்குறிப்புமுற்றும் விரவாதடுக்கி, 'சாத்தன், கடல், மடந்தை' எனத் தமக்கேற்றபெயர்கொண்டுமுடிந்தன. 9 எ - ம் 'பாயுந்து........பாயுந்து' செய்யுமென்ற பெயரெச்

* "எம்மூரல்லது." † புறநா. உச. ‡ "சீறடிப்பேரகல்." § சீவக. ௫௩. || புறநா. ௧௨௪.

சம் விளையுளென்றபெயர்கொண்டும், சிறிய பெரிய என்ற பெயரெச்சவினைக் குறிப்பு [10] போகுவரல்லர் எ - ம் 'மெல்லவேகருவிருந்து' என்னுஞ் செய் தென்ற வினையெச்சமும், நாளன்றென்ற நாளன்றிஎன்ற வினையெச்சக்குறிப் பும் அடுக்கிவந்து ஒருவினைகொண்டன. வினையாவது 'காய்த்த' என்றதும் 'போகுவரல்லர்' என்றதுமாம். சொல் - நெல். தட்ப - தடுப்ப. [11]" வினை முற்றடுக்கினும்......... [12] மொழிப்படியே" என்பது அகத்தியம். (சு)

## (355.) உருபு முற்றீ ரெச்சங் கொள்ளும் பெயர்வினை யிடைப்பிற வரலுமா மேற்பன.

இதுவுமது.

(இ - ள்.) உருபுகளும் முற்றுவினைகளும் பெயரெச்ச வினை யெச்சங்களும் தாம்தாம்கொள்ளும் பெயர்க்கும் வினைக்கும்நடுவே ஆண்டைக்கு ஏற்பனவான பிறசொற்கள் வரவும்பெறும். எ - று.

உம்மையான் [1]வரப்பெறுதல் ஒருதலையல்லவென்க.

வ - று. சாத்தன் பகல் வயிறாரவுண்டான், அறத்தை அழகு [2] பெருகச்செய்தான், வாளானே மருவாரை மாய வெட்டினான், தேவ ர்க்குச் செல்வம்வேண்டிச் சிறப்பெடுத்தான், மலையினின்று உருண்டு வீழ்ந்தான், சாத்தனது இத்தடக்கையானை, ஊர்க்கணுயர்ந்தவொளி மாடம், சாத்தா கூத்தற்குக் கூறைகொடு எ - ம், *"பாடினான் றேவ கீதம் பண்ணினுக் கரசன்", †"அழுதா டடமாக வணங்கிழையே" எ - ம், "கொன்றுருத்த கூர்வேலவர்க் குறுகி", ‡"ஒட்டார், செவி புதைக்குந் தீய கடுஞ்சொற் [3]கவியுடைத்தாய்" எ - ம், §"அளமரு குயிலின மழுங்கிப் பூம்பொழி, லுளமெலி மகளிரி னொடுங்கு மென் பவே",||"முரிந்துபோ தவிழ்ந்துகொங் குயிர்க்கு முல்லையின்" [4]எ-ம், முறையே ஏற்பன இடைவந்தன, "உப்பின்றிப் புற்கை யுண்கமா கொற்கை யோனே" என வினையெச்சக்குறிப்பினும் இடைவந்தது. பிறவுமன்ன.

'ஏற்பன' எனவே ஏலாதன வரப்பெறுவென்பதாம். அவை வல்லமெறிந்த நல்லிளங்கோசர்தந்தை மல்லல்யானைப்பெருவழுதி [5] என்பதனுள், வல்லமெறிதல் பெருவழுதிமேற்றேயெனின், நல்லி ளங்கோசர்தந்தையென்பதனை இடைநிறுவின், ஏலாதாம்; வல்ல

* சீவக. உ0௫உ. † ஷை கருஉந. ‡ "பல்யானைமன்னர்" § சீவக. சக. || ஷை சஅ.

மெறிந்த மல்லல்யானைப் பெருவழுதி நல்லிளங்கோசாது தந்தை யெனின், ஏற்பதாம். பிறவுமன்ன.

(பி - ம்.) 1 (க) வருதலொருதலை; (உ) வரவுஒருதலை. 2 பெருக்கச் செய்தான். 3 அவியுடைத்தாய்க்கற்றானெனச்செய்தசெய்யுமென்னும் பெயரெச்சமும். 4 என அழுங்கி, போதவிழ்ந்தென்ற வினையெச்சங்களும். உண்டான், பண்ணினுக்கரசன், அணங்கிழை, வேலவர், சொற்கவி, ஓடுங்கும், உயிர்க்குமென முறையே பெயரும் வினையுமேற்றவிடத்திடை. 5 என்றால் வல்லமெறிதல். (ரு)

## (356.) எச்சப் பெயர்வினை யெய்து மீற்றினும்.

இதுவுமது.

(இ - ள்.) உருபு முற்று [1]பெயரெச்ச வினையெச்சங்களென்பனவற்றிற்கு எச்சமாய்வரும்பெயரும்வினையும் அவற்றின் ஈற்றின் கண்ணேயும்வந்து நிற்கும். எ - று.

[2]உம்மையால், முதற்கணிற்கவும்பெறுமென்க.

வ - று. சாத்தன்வந்தான், மரத்தைக்குறைத்தான், சாத்தனொடுவந்தான், சாத்தற்குக்கொடுத்தான், சாத்தனினீங்கினான். சாத்தனது ஆடை, சாத்தன்கட்சென்றான், சாத்தாவா என ஈற்றின் கண்வந்தன; வந்தான்சாத்தன், குறைத்தான்மரத்தை, வந்தான் சாத்தனொடு என (ஏனையவற்றோடும்) முதலின்கண்ணே வருவித்துக் காண்க. உண்டான்சாத்தன், உண்டாள்சாத்தி, உண்டார்சாத்தர், உண்டது அது, உண்டன அவை, உண்டேன்யான், உண்டேம்யாம், உண்டாய்நீ, உண்டீர்நீயிரென ஈற்றின்கண்வந்தன; சாத்தனுண்டான், சாத்தியுண்டாள், சாத்தருண்டாரென (ஏனையவற்றோடும்) முதலிலே வருவித்துக்காண்க. 3உண்டுவந்தான், உண்டுவந்தாள், உண்டுவந்தார் எ - ம், வந்தானுண்டு, வந்தாளுண்டு, வந்தாருண்டு எ - ம் (இவ்வாறு ஏனைப் பாலிடங்கடோறுமொட்டி) வினையெச்சம் இருவழியும் வந்தவாறுகாண்க. உண்டசாத்தன், உண்டசாத்தி, உண்டசாத்தரென (இவ்வாறு ஏனைப்பாலிடங்கடோறுமொட்டிப்) பெயரெச்சத்திறுதிவந்தவாறுகாண்க. பெயரெச்சத்தின் முதற்கட் பெயர் வாராது; ஏனெனின், அது, சாத்தனுண்டவென அஃறிணை வாய்பாடாகமுடியுமாதலாலெனக் கடாவிடை காட்டிமறுக்க.

(பி - ம்.) 1 பெயரெச்சம்வினையெச்சமென்பனவற்றிற்கு. 2 உம்மையான் முதற்கணிவ்வாறு பெயரும்வினையுநிற்குமென்பதற்கு இச்சூத்திரஞ்

செய்தாரென்க. 3 உண்டசாத்தன், உண்கின்றசாத்தன், உண்ணுஞ்சாத்தன் எனப் பெயரெச்சத்திறுதி வந்தவாறுகாண்க. உண்டுவந்தான். (சு)

## (357.) ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே.

எ - ன், பெயர்ச்சொல் வினைச்சொற்கட்கு எய்தியதோர் விதி யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் [1]ஒன்றேநின்று ஒழிந்த தன்னினங்களையும் தழுவுதற்கு உரித்தாம். எ - று.

*"தக்கோலந் தின்று தலைநிறையப் பூச்சூடி" எ - ம், நஞ்சுண்டான்சாம், பார்ப்பான்கள்ளுண்ணான் எ - ம் நின்ற ஒருமொழிகள் தமக்கு இனமான தீம்பூ இலவங்கம் சாதி முதலானவுந்தின்று எ - ம், நஞ்சுண்டாள்சாம், நஞ்சுண்டார்சாவர், நஞ்சுண்டதுசாம், நஞ்சுண்டவைசாம் எ - ம், பார்ப்பனியும் கள்ளுண்ணாள், பார்ப்பாரும் கள்ளுண்ணார் [2]எ - ம் தமக்கினமானவற்றையும் தழுவிநின்றவாறுகாண்க. பிறவுமன்ன.

†"ஒருபாற் கிளவி யெனைப்பாற் கண்ணும், வருவகை தானே வழக்கென மொழிப" என்றார், மெய்ந்நூலார் தோல்காப்பியனார்.

(பி - ம்.) [1] ஒன்றெனினும்ஒழிந்த. [2] எ - ம். பெயராகும் தக்கோலமும் வினையாகும் உண்டானென்பதும் பார்ப்பானென்பதும் முதலினின்று ஒழிந்தவையெல்லாந் தழுவிநின்றவைகாண்க. "ஒருபாற்கிளவி யேனைப்பாற் கண்ணும் வருவனதாமே வழக்கெனப்படுமே" என்றார் முன்னூலார் தோல்காப்பியனாருமென்க. (எ)

## (358.) பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கும் மேல்வருஞ் சிறப்புப் பெயர்வினை தாமே.

இதுவுமது.

(இ - ள்.) திணைபாலிடங்கட்குப் பொதுவாய்நின்றபெயர்வினைகளுடைய பொதுமையைநீக்கி ஒன்றற்கு உரித்தாக்கும், அவற்றின் மேல்வரும் பொதுவல்லாப் பெயரும்வினையும். எ - று.

எனவே பொதுவான [1]பெயர்வினைகள்வந்தால், விளங்காவென்றவாறு.

* நாலடி. தூய்மை, ந. † தோல். பொருளியல், உஅ.

வ - று. சாத்தன், முடவன், முடக்கொற்றன், தந்தை என்பன [2]இருதிணைக்கும் பொதுவானபெயர்; இவற்றைச் சாத்தன் இவன் மகன், சாத்தன் இதன்மகன்; முடவன் இவன்மகன், முடவன் இதன்மகன்; முடக்கொற்றன் இவன்மகன், முடக்கொற்றன்இதன் மகன்; சாத்தன்தந்தை இவன், சாத்தன்றந்தை இது எனச் சிறப்புப் பெயர் ஒருதிணைக்கு உரிமைசெய்தன. (சாத்தன்) + (வந்தான், வந்தது) (முடவன்) + (வந்தான், வந்தது) (முடக்கொற்றன்) + (வந்தான், வந்தது) (தந்தை) + (வந்தான், வந்தது) [3]எனச் சிறப்புவினை ஒருதிணைக்கு உரிமைசெய்தன. சாத்திமுதற்[4]பெயர்முதலானவற்றிற்கும் இவ்வாறேகொள்க. யான், யாம் எ - ம், நீ, நீயிர் எ - ம் வரும் தன்மைமுன்னிலைப்பெயர்கள் சிறப்புப்பெயராலன்றி வினையால் திணையும் பாலும் விளங்கா; அவை: யான்பாணன், யான்பாடினி; யான் கடுவன், யான்பேடை; (யாம்) + (அரசர் அரிவையர், சேவல்கள், பேடைகள்) எ - ம், (நீ) + (நம்பி, நங்கை, சேவல், பேடை); (நீயிர்) + (புலவிர், விறலியிர், சேவலிர், பேடையிர்) எனச் சிறப்புப்பெயரால் திணை பால் விளங்கின. உண்ணும், வாழ்க, வேறு, இல்லை, உண்டு என்பன திணைபாற்குப் பொதுவான முற்றுவினை. இவற்றை, (உண்ணும்) + (நம்பி, நங்கை, போத்து, நாகு, நாடு, நல்லன) எ - ம், (வாழ்க) + (நம்பி, நங்கை, நல்லோர், போத்து, நாகு, நாடு, நல்லன, யான், யாம், நீ, நீயிர்) எ - ம், (வேறு) + (நம்பி, நங்கை, நல்லோர், போத்து, நாகு, நாடு, நல்லன, யான், யாம், நீ, நீயிர்) எ - ம், (இல்லை) + (நம்பி, நங்கை, நல்லோர், போத்து, நாகு, நாடு, நல்லன, யான், யாம், நீ, நீயிர்) எ - ம், (உண்டு) + (நம்பி,......நீயிர்) எ - ம் பெயர் ஒன்றற்கு உரிமைசெய்தன. பெயரெச்சவினை: உண்ட, உண்ணுநின்ற, உண்ணுமென்பன. இவற்றை, (உண்ட) + (நம்பி, நங்கை, நல்லோர், போத்து, நாகு, நாடு, நல்லன, யான், யாம், நீ, நீயிர்) எனப் பெயர் ஒன்றற்கு உரிமைசெய்தன. ஒழிந்தனவிரண்டும் இன்ன. உண்டென்பது வினையெச்சப்பொது. இதனை (உண்டு) + (வந்தான், வந்தாள், வந்தார், வந்தது, வந்தன, வந்தேன், வந்தேம், வந்தாய், வந்தீர்) என வினை ஒன்றற் குரிமை செய்தன. பிறவுமன்ன.

இனி, வருவன்யான், வருதும்யாம்; வருதிநீ, வருதிர் நீயிர் எ - ம், யான்வந்தேன், யாம்வந்தேம், நீ வந்தாய், நீயிர்வந்தீர் எ - ம் இவ்வாறு வரும் பெயர்வினைகளான் விளங்காதவாறுகாண்க.

(பி - ம்.) [1] பெயரும்வினையும்வந்துபுணர்ந்தால் சிறப்புப்பெயர்விளங்காவெனக்கொள்க. [2] பொதுவாகியமுதற்பெயரும் சினைப்பெயரும் சினை

முதற்பெயரும் முறைப்பெயரும் ஆம்; இவற்றைச் சாத்தனிவன். 3 என வினை. 4 முதற்பெயர்க்கும் இன்னன ஒட்டிக்கொள்க. இனியான். (அ)

(359.) பெயர்வினை யும்மைசொற் பிரிப்பென வொழியிசை
எதிர்மறை யிசையெனுஞ் [1]சொல்லொழி பொன்ப
குறிப்புந் தத்த மெச்சங் கொள்ளும். [தும்

எ - ன், எச்சங்களின் வகையும் முடிபும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சொல்லெச்சமும் குறிப்பெச்சமுமென எச்சம் இரண்டாம்; அவற்றுட் பெயர்முதலாக இசையீறாகச்சொல்லப்பட்ட சொல்லெச்சமொன்பதாம்; குறிப்பெச்சமொன்றும்; இப் பத்தெச்சமும் தத்தம் எச்சங்களைக்கொண்டு முடியும். எ - று.

இன்னதற்கு இன்னது எச்சமென்று மொழிந்திலாதார் தத்த மெச்சமென்று குறித்துரைத்தவாறு என்னையோ வெனின், அஃதே! நன்று சொன்னாய்; அவற்றைப் பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகையாகக்கொள்ளத் தாமே விளங்குதலின், அவ்வாறே சொன்னாரென்க. அஃதாவது, பெயராகிய எச்சத்தையுடையது யாது அது பெயரெச்சமென்பது. பிறவுமன்ன.

பெயரெச்சமும் வினையெச்சமும் மேலே சொல்லப்பட்டன; ஏனைய இடையியலிற் [2]சொல்லப்படும்; ஈண்டு அவற்றையே வேறெடுத்தோதுவது என்னையோவெனின், அக்குறியான் ஒத்தனவேனும் இலக்கணத்தான் வேறுபாடுடையன வென்க. அவ்வேறுபாடு அவ்வவற்றிற்குக்காட்டும் இலக்கியங்களுட் காண்க.

வ - று. * "இணரெரி தோய்வன்ன வின்னா செயினும், புணரின் வெகுளாமை நன்று", † "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங், கண்ணென்ப வாழு முயிர்க்கு", ‡ "யாதனின் யாதனி னீங்கியா னோத, லதனி னதனி னிலன்." எனவரும் இவை, முறையானே பிறர் இன்னாசெயினும் தான் வெகுளாமை நன்றெனவும், எண்ணென்ப ஏனை எழுத்தென்ப உலகத்துவாழும் உயிர்க்கெல்லாம் கண்ணென்ப கற்றாரெனவும், யாதனின் யாதனின் நீங்கியான் ஒருவன் நோதல் அதனின் அதனின் இலனெனவும் இவ்வாறு எஞ்சிய பெயர் கொண்டுமுடிதலிற் பெயரெச்சமாயின.

* திருக்குறள், ௩0அ. † ஷை ௩௯உ. ‡ ஷை ௩௪௧.

* "காலங் கருதி யிருப்பர் கலங்காது, ஞாலங் கருது பவர்", † "வேண்டி னுண் டாகத் துறக்க துறந்தபி, னீண்டியற் பால பல.", ‡ "நுண்மா ணுழைபுல மில்லா னெழினல, மண்மாண் புனை பாவை யற்று" எனவரும் இவை, முறையானே கொள்ளுங்காலம் குறித்துக் கலங்காதிருப்பர் ஞாலங்கருதுபவரெனவும், உய்யவேண் டிற் காலமுண்டாகத் துறக்க, துறந்தபின் இப்பிறப்பில் உய்யற் பாலன பலவெனவும், நுண்ணறிவில்லாதான் எழில் நலம் மண்புனை மாண் பாவை எழில் நலம் எற்று அற்றெனவும் வினையும் வினையுளடங்கும் வினைக்குறிப்புங்கொண்டு முடிதலின், வினையெச்சமாயின. அஃ தேல், § "எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன் றுங், கள்ளாமை காக்கதன் னெஞ்சு," எ - ம், || "சிறுவரையே யாயினுஞ் செய்தநன் றல்லா, லுறுபயனோ வில்லை யுயிர்க்கு." எ - ம் வரும் இவை, தன்னை எள்ளாமைவேண்டுவானென்பான் கள்ளாமை காக்க தன் நெஞ்செனவும், தன்னாற்செய்யப்பட்ட நன்றல்லது உயிர்க்கு உறுபயனில்லை யெனவும் உருபுச்சொற்கள் எஞ்சவந்தன, எப்பாற் படுமோ வெனின், உருபுச்சொற்களும் வினைவினைக்குறிப்பாயடங்கு தலின், வினையெச்சத்தின்பாற்படுமென்க.

'தன்னை' என்றது, தானடக்கும் ஒழுங்கையெனவும், 'தன்னால்' என்றது, தன் தொழிலினாலெனவும் வினை வினைக்குறிப்பினால் விளங்குதலால், எட்டுருபுமேற்ற சொற்களும் வினை வினைக்குறிப் பென்றறிக.

"இலங்குவா ளிரண்டினு விருகைவீ சிப்பெயர்ந், தலங்கன்மா லைஇயவிழ்ந் தாடவா டும்மிவள்", "கடுவன் முதுமகன் கல்லா மூல ற்கு, வதுவை வந்த வன்பறழ்க் குமரி, யிருதோ டோழர் பற்ற" என வரும் இவை, இருகையும் வீசியெனவும் இருதோளும் பற்றவென வும் உம்மைகொண்டு முடிதலின், உம்மையெச்சமாயின.

¶ "பூண்ட, மிடியென்னுங் காரணத்தின் மேன்முறைக் கண் ணே, கடியென்றார் கற்றறிந் தார்", ** "செய்யீரோ வென்னு மென்னுஞ்சொற் கின்னாதே, பையத்தாஞ் செல்லுநெறி.", †† "கைம் மாலை யிட்டுக் கலுழ்ந்தா டுணையில்லார்க், கிம்மாலை யென் [3]செய்வ தென்று.", ‡‡ "[4]இசைபா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்,

---

* திருக்குறள், ௬௪௬. † ஷை ௩௪௨. ‡ ஷை ௪0௭. § ஷை ௨அக. || நாலடி. தீவினை. க0. ¶ ஷை துறவு. ௬. ** ஷை இரவச்சம். ௯. †† ஷை காம. ௩. ‡‡ ஷை மெய்ம்மை. க.

வசையன்று" எனவரும் இவை, கடியென்று சொன்னாரெனவும், செய்யீரோவென்னு மென்றுசொல்லும் சொற்கெனவும், இம் மாலை என்செய்வதென்று சொல்லியெனவும், 5இசையா வொருபொருளில்லென்றுசொல்லுதலெனவும் சொல்லென்பது கொண்டுமுடிதலின், சொல்லெச்சமாயின.

* "அறிமி னறநெறி யஞ்சுமின் கூற்றம், பொறுமின் பிறர் கடுஞ்சொற் போற்றுமின் வஞ்சம், வெறுமின் வினைதீயார் கேண்மை யெஞ் ஞான்றும், பெறுமின் பெரியோர்வாய்ச் சொல்" என்னும் இதனுள், ஒருவழிநின்ற எஞ்ஞான்றுமென்றதனைப்பிரித்துப் பிறவழியும் கூட்டிமுடிக்கவேண்டுதலிற் பிரிநிலைஎச்சமாயிற்று ; இதனை 6விளக்கு மென்ப.

"எடுத்தலும் படுத்தலு மாயிரண் டல்லது, நவித லில்லை யென் மரு முளரே", † "வீடுணர்ந் தோர்க்கும் வியப்பாமா லிந்நின்ற, வாடன் முதியாள் வயிற்றிடங்-கூடார், பெரும்படை வெள்ள நெரிதரவும் பேரா, விரும்புலி சேர்ந்த விடம்" எனவரும் இவை, எடுத்தலும் படுத்தலுமென அவ்விரண்டல்லதெனவும், இரும்புலி சேர்ந்த இடமென வியப்பாமா லெனவும் எனவென்பது கொண்டுமுடிதலின், எனவெனெச்சமாயின;

‡ "செறுநரைக் காணிற் சுமக்க விறுவரை, காணிற் கிழக்காந் தலை", "§இன்னா செயினு மினிய வொழிகென்று, தன்னையே தானோவி னல்லது - துன்னிக், கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட, விலங்கிற்கும் விள்ள லரிது." எனவரும் இவை, கிழக்காந்தலையென்பதன் துணிபுதோன்றுதற்கு ஒழிக்கப்பட்ட அவர்கெடுவரென்பதையும், கலந்தாரைக்கைவிடுதல் அருமைதோன்றுதற்கு ஒழிக்கப்பட்ட மக்கட்கெளிதோவென்பதையும் கொண்டுமுடிதலின், ஒழியிசையெச்சமாயின. இசையென்பது சொல்.

‖ பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா, ரிறைவ னடிசேராதார்.", ¶ "கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம், போக்கு மதுவிளிந் தற்று.", ** "நேரல்லார் நீரல்ல சொல்லியக்கால் மற்றது, தாரித் திருத்த றகுதிமற்—றோரும், புகழ்மையாக் கொள் ளாது பொங்குநீர் ஞாலஞ், 7சமழ்மையாக் கொண்டு விடும்" என

---

* நாலடி. நல்வினம். ௨. † பு - வே. வஞ்சி. ௧௧. ‡ திருக்குறள், ௪௮௮. § நாலடி. பொறை. ௬. ‖ திருக்குறள், ௧௦. ¶ ஷை ௩௩௨. ** நாலடி. பொறை. ௨.

வரும் இவை, சேர்ந்தார் நீந்துவரெனவும், கூத்தாட்டவைக் குழாத்து வரவு எற்று அற்று அவர்பெற்ற பெருஞ்செல்வத்து வரவெனவும், தாரித்திராது வெருடல் புகழ்மையாகக் கொள்ளாதெனவும் இவற்று எதிர்மறை கொண்டு முடிதலின், எதிர்மறை யெச்சமாயின.

இனி இசையெச்சமாவது, ஒன்றுசொல்ல அச்சொல்லானே வேறொரு பொருளிசைத்தல். அஃதாவது இரட்டுற மொழிதலென்ற வாறு; "உஞ்சை யரச னொருமகன் றோழன்ற, னெஞ்சிற் கினியா னெறித்துணை யாக்கொண்டு, பங்தெறி [8]பாணிய பாய்பரி மாவொடு, வந்தன னடிவலஞ் செய்வதற் கென்றான்.", * "வந்தவர வென்னை யென வாட்கண்மட வாய்கேள், சிந்தைநலி கின்றதிரு நீர்க்குமரி யாட, வந்திலதி னுயபய னென்னைமொழி கென்றாண், முந்தைநலி கின்றமுது மூப்பொழியு மென்றான்." எனவருமிவை, இச்சொன்ன பொருளொழிய வேறு இசைந்தபொருள் கொண்டு முடிதலின், இசையெச்சமாயின. இதைச் சிலேடையுமென்ப.

† "பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ், சால மிகுத்துப் பெயின்", ‡ "கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு, நாவாயு மோடா நிலத்து," § "மாவென மடலு மூர்ப பூவெனக், குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப, மறுகி னார்க்கவும்படுப, பிறிது மாகுப காமங்காழ் கொளினே." எனுமிவை முறையே, மெலியரும் பலர் தொகின், வலியராகுப; இவ்விடம் இவர்க்குச்செல்லும், இவ்விடம் இவர்க்குச்செல்லாதென அவ்வவர்க்கேற்ற இடனறிந்து கருமம் கொள்க; யானும் அவ்வண்ணம் செய்வேனெனக் குறித்தபொருள் கொண்டு முடிதலிற் குறிப்பெச்சமாயின. இதனை நுவலாநுவற்சியு மென்ப. பிறவுமன்ன.

இந்தப் பத்தெச்சமும், புவிபுகழ் புலமை யவினய னூலுட் டண் டலங் கிழவன் றகைவரு நேமி யெண்டிசை நிறைபெய ரிராச பவித் திரப் [9]பல்லவ தரையன் பகர்ச்சியென் றறிக.

இனி, இவற்றை இவ்வாறன்றி வினையியலுள்ளும் இடைச்சொல் லியலுள்ளுமொழிந்தனவாக்கி, உண்டசாத்தன், உண்ணுஞ்சாத் தன்; உண்டவூண், உண்ணுமூணென்பன பெயரெச்சம்; தம்பெயர் கொண்டன. உழுதுவந்தான், மருந்துண்டுநல்லனுயினான், உழுது வருதலென்பன வினையெச்சம்; வினையும் குறிப்பும் வினைப்பெயரும் கொண்டன. சாத்தனும் வந்தானென்பது உம்மையெச்சம்; கொற்ற

* சீவக. ௨௦௨௦. † திருக்குறள், ௪௭௫. ‡ ஷை ௪௯௬. § குறு. ௧௭.

னும் வந்தானெனத் தன்னெச்சங் கொண்டது. "பசித்தேன் பழஞ்சோறு தாவென்று நின்று, னுசுப்போ வுலகம் பெறும்." என்பது சொல்லெச்சம்; இது தாவென்றுசொல்லிநின்றுளெனச் சொல்லியென்பதனைக் கொண்டது. அவனே கொண்டான்; அவனே கொண்டானென்பன பிரிநிலையெச்சம்; இவை ஒரு குழுவிற் பிரிக்கப்பட்டானையே கொண்டன. கொள்ளெனக் கொண்டானென்பது எனவெனெச்சம்; இது கொண்டானென்னும் வினை கொண்டது. கொள்ளென்பது முற்று; அது முற்றேலாமையின், இறுதி எனவென்பது முற்றுக்கொண்டது. ஒழியிசையெச்சமாவது, மன்னும் தில்லும் ஓவுமெனுமூன்றும்; அவை: பண்டு கூரியதோர் வாண்மனென்பது இப்போது கோடிற்று, இற்றதென்பவற்றையும், * "வருகதில் லம்ம" என்பது வந்தால் இன்னதொன்று செய்வலென்பதனையும், கொளலோ கொண்டானென்பது கொண்டுய்யப் போயினனல்லனென்பதனையும் கொண்டு முடிந்தன. எதிர்மறையெச்சம் இரண்டு; ஓகார வெதிர்மறை, உம்மையெதிர்மறையென, யானேகொண்டேனென்பது யான் கொண்டிலனென்பதையும், வரலுமுரியனென்பது வராமைக்குமுரியனென்பதையும் கொண்டு முடிதலின், எதிர்மறையெச்சம். ஒல்லென வொலித்ததென்பது ஒல்லென்ற அநுகரண ஓசையே இசைத்ததென்று முடிதலின், இசையெச்சம். விண்ணென விசைத்ததென்பது விண்ணென்றதே விசைத்ததென்று முடிதலிற் குறிப்பெச்சம்; "சலங்கொண்டநோயின் நோவு விண்ணெனத் தெறித்தல்செய்யும்" என்னுங் குறிப்பினான், விண்ணென்றது குறிப்பெச்சமாயிற்றென்று இவ்வாறு சொல்லுவர்.

இஃது, ஒல்காப் புலமைத் தொல்காப்பியத்துள் உளங்கூர்கேள்வி [10]யிளம்பூரணரேனு மேதமின் மாதவ ரோதிய வுரையேன் றுணர்க.

(பி - ம்.) 1 சொல்லொழியொன்பதும். 2 பெறப்பாடுஞ் சொல்லப்பட்டன. 3 செய்யாதென்று. 4 இசையாதொருபொருள். 5 இசையாதொரு பொருள். 6 நடுநிலைத்தீபமுமென்ப. 7 (க) சமண்மையா; (உ) சகண்மையா. 8 பாணியாய்பாய்பரி. 9 பல்லவதரைசர். 10 இளம்பூரண ருரையெனத் தேறிய கவிஞர் கூறுபட வறிமின். (௬)

(360.) பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளி னவற்றி னுருபிடை

---

* அகநா. உஎ௬.

ஒழிய விரண்டு முதலாத் தொடர்ந்தொரு [மொழி.
மொழிபோ [1]னடப்பன தொகைநிலைத் தொடர்

எ - ன், மேல் தொடர்மொழி யென்றார், அது தொகைநிலைத் தொடரும் தொகாநிலைத் தொடருமென இரண்டாம்; அவற்றுள், தொகைநிலைத் தொடர்மொழியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயருடனே பெயரும் பெயருடனே வினையும் தம் முட் புணருமிடத்து, வேற்றுமை முதலானவற்றின்பொருளிலே அவற்றின் உருபுகளை இடையிடையேயொழித்து, இரண்டுசொல் முதலாகத்தொடர்ந்து ஒருபெயர்ச்சொற்போல்வும் ஒருவினைச்சொற் போலவும் வழங்குவன தொகைநிலைத் தொடர்மொழிகளாம். எ - று.

ஒருமொழிபோலாவது பலசொல்லேயெனினும் தொடர்ந்து ஒற் றுமைப்பட்டு ஒருபெயராய் எட்டுவேற்றுமைகளையும் வினைகளையும் ஏற்றலும், நிலைமொழிவருமொழிகளாய்ப் புணர்ச்சிவகையேற்றலும், ஒருவினைச்சொல்லேயாய்ப் பெயரேற்றல் முதலான வினையிலக்கண மெல்லாமேற்றலுமென மூவகையாகக்கொள்க.

(பி - ம்.) [1] நடப்ப தொகைநிலைத் தொடர்ச்சொல். (கo)

(361.) வேற்றுமை வினைபண் புவமை யும்மை
அன்மொழி யெனவத் தொகையா றுகும்.

எ - ன், தொகைநிலைத்தொடர்மொழியது பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமைமுதலான இவ்வாறுகூற்றதாம், மேற் சொன்ன தொகைநிலைத் தொடர்மொழியாவது. எ - று. (கக)

(362.) இரண்டு [1]முதலா மிடையா றுருபும்
வெளிப்பட லில்லது வேற்றுமைத் தொகையே.

எ - ன், நிறுத்த முறையானே வேற்றுமைத் தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐ முதலாகக் கண் ஈறாகநின்ற ஆறுருபும் இடையே தோன்றாதுநிற்பது, வேற்றுமைத்தொகையாவது. எ - று.

வ - று. நிலங்கடந்தான், பொற்குடம், கருப்புவேலி, வரை வீழருவி, சாத்தன்கை, குன்றக்கூகையென இடையே தொக்கவாறு காண்க.

இடையிலே தொகுமென்றதென்னை? கடந்தானிலம், இருந்தான்குன்றத்து, *"தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க் கழலே," †"புள்ளினிர் மன்ற வெற்றாக் குறுதலின்" என்பன, நிலத்தை, குன்றத்தின்கண், அழலானது, எற்றாக்குதலினாலென்று வேற்றுமையுருபுகள் ஈற்றினும் தொகுமாலோவெனின், அவை ஒருபெயரனைய வாய் உருபுமுதலாயின வலாமையின், தொகைவிதியாற்றொக்கன வாகா; செய்யுள்விகாரவகையால் தொகுக்கப்பட்டனவென்க.

இனி இவை விரியுமாறு: நிலத்தைக்கடந்தான், பொன்னனைய குடம், கரும்பிற்கு வேலி, வரையின்வீழருவி, சாத்தனதுகை, குன்றத்துக்கட்கூகை யெனவிரியும்.[2]

(பி - ம்.) [1]முதலாவிடை. [2]"ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின், மெய்யுருபு தொகாஅ விறுதியான." என்பது தோல்காப்பியம். இந்தவிதி கொண்டு இறுதி வேற்றுமையுருபு தொகாதென்றறிக. (கஉ)

## (363) காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.

எ - ன், வினைத்தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) காலங்கள் தோன்றாது தன்னெச்சமான பெயர் கொண்டுநிற்கும்பெயரெச்சம் வினைத்தொகையாம். எ - று.

வ - று. பொருகளிறு, பொருவேல், பொருகளம், பொருபகை, பொருபொழுது, பொருபோரெனவரும்.

இவற்றுள், காலமாவது, முக்காலத்தையும் தோற்றுவிக்கும் இடைநிலைகள்; அவை ஆகுபெயராய்நின்றன. இவை விரிவுழி, பொருதகளிறு, பொராநின்றகளிறு, பொருங்களிறெனவிரியும்; பிறவுமன்ன. (கங)

## (364.) பண்பை விளக்கு மொழிதொக் கனவும்
## ஒருபொருட் கிருபெயர் வந்தவுங் குணத்தொகை.

எ - ன், பண்புத்தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருளின்கட் கிடந்த குணத்தைக்காட்டுதற்கு ஆண்டு வருமொழி தொக்கனவும், ஒருபொருட்கு உரிய இருபெயர் ஒருங்குவந்தவும் பண்புத்தொகையாம். எ - று.

வருமொழி, ஐகாரமுதலியன.

---

* குறு. ௩௫. † மலை. ௬௬.

வ - று. கருஞ்சாத்தன், தண்ணீர், நறுமலர், தீம்பால், குறுங்கொற்றன்; வட்டக்கல், உள்பொருள், இல்குணம் எ - ம், *"கேழற்பன்றி," "வேழக்கரும்பு," அளகைநகர், ஆனித்திங்கள், † "அகரமுதல்," ‡ "சகரக்கிளவி" எ - ம் வரும். இவை விரிவுழி, கருஞ்சாத்தனென்பது, கரியசாத்தனென இருதிணையைம்பாற்கும் பொதுவாகியபெயரெச்சக்குறிப்புவாய்பாட்டான் விரியும். இவ்வாறன்றிக் கரியதெனின், அஃறிணையொருமைக்கேயுரிய முற்றுத் தொகாநிலையாமென்க. இனி, பண்பாவது, பொருட்குணமாதலின், அப்பொருட்கு உரிமைதோன்றக் கருமையையுடையசாத்தனென்பாருமுளர். அவையும்அறிந்துகொள்க. இனி, ஏனையவற்றை விரிக்குமிடத்து, தண்ணிய நீர், நறியமலர், தீவியபால், குறியகொற்றன்; வட்டமாயகல், உள்ள பொருள், இல்லாக் குணம் எ - ம், கேழலான பன்றி, வேழமான கரும்பு, அளகையானநகர், ஆனியான திங்கள், அகரமானமுதல், சகரமானகிளவி எ - ம் விரியும். கேழற்பன்றிமுதலானவும் சாதிதொக்கபண்புடைமையின், ஈண்டுவேண்டினாரென்க. ஒத்த பண்புபற்றி ஒற்றுமைகுறித்துவரும் கைத்தாமரை, கண்வேல், புருவச்சிலை என்றித்தொடக்கத்தனவும் ஈண்டேகொள்க.

பண்புக்குத்தொக்குநின்றது கருமையென்ற ஐகாரம்.

இனி, தோல்காப்பியனார்க்குக் கரியனென்ற அன்னீறு தொக்குநிற்பதென்றறிக. (க௪)

## (365.) உவம வுருபில துவமத் தொகையே.

எ - ன், உவமத் தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பண்பு, பயன், வினை, மெய் என்பனபற்றிவரும் உவமவுருபு தோன்றாதது, உவமத்தொகையாம். எ - று.

வ - று. பான்மொழி, மாரிவண்கை, புலிப்பாய்த்துள், துடியிடை எனவரும்.

இவைவிரிவுழி, பால்போலுமொழி, மாரிபோலும்வண்கை, புலிபோலும்பாய்த்துள், துடிபோலுமிடையெனவிரியும்; இவ்வாறன்றி, பாலைப்போலுமொழி பான்மொழி யெனின், உருபுத்தொகையாகக் கொள்க; அஃதென்னையோவெனின், ஈண்டு உவமையான பாலோடு பொருளான மொழியைப் புணர்த்தலேகருத்தாகலின், பாலைப்போலு

---

* புறநா. கஙஉ. † திருக்குறள், க. ‡ தோல். மொழி. உக.

மொழியென்றவழிப் பால் கருமமாக அவ்வுருபிற்குப் போலுமென்பது பயனிலையாக அது மொழியென்னும் பெயர்கொள்ள உவமையோடு பொருட்குப் புணர்ச்சியின்றாமாகலினென்க. பிறவுமன்ன.

(பி - ம்.) I என உருபுத் தொகையாகக் கொள்ளற்க. (கரு)

(366.) போலப் புரைய வொப்ப வுறழ
மானக் கடுப்ப வியைய வேய்ப்ப
நேர நிகர வன்ன வின்ன
என்பவும் பிறவு முவமத் துருபே.

எ - ன், மேல் உவமவுருபென்றார், அவை இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இச்சொன்னபன்னிரண்டும் இவைபோல்வன பிறவும் உவமவுருபுகளாம். எ - று.

வ - று. * "வேந்தன், மனம்போல வந்த மகன்", "உயிர் புரை யூகியோ டெண்ணி", "என்னொப்பா Iரிவ்வுலகி லில்", †"பகலுரு வுறழ நிலவுக்கான்று", "வரைபுகுபுள்ளினமான", "அவிர றல் கடுக்கு மம்மென் கூந்தல்", "காரிகையயுங் காவலன்றன் கை", "செம்பவழ மேய்ப்பத் திகழ்ந்திலங்கும்", "பொன்னேர்மேனி", ‡"நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்," §"அரிமா னிடித் தன்ன வஞ்சிலை", ||"இன்னவிறனு முளகொல்" எனவரும்.

பிறவென்றதனால் வேறு வருவனவுங் கொள்க.

(பி - ம்.) I இவ்வுலகில். (கசு)

(367.) எண்ண லெடுத்தன் முகத்த னீட்டல்
எனுநான் களவையு ளும்மில தத்தொகை.

எ - ன், உம்மைத்தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எண்ணியும் எடுத்தும் முகந்தும் நீட்டியும் அளக்கப்படும் நால்வகை அளவையின்கண்ணும் உம்மை தொக்கு நிற்பது, உம்மைத்தொகையாவது. எ - று.

---

* பு - வே. கரந்தை. ரு. † அகநா. கஉஉ. ‡ நாலடி. சினம். ச. §கலி. கரு. ||புறநா. கக.

வ - று. உவாப்பதினான்கு, கபிலபரணர், கல்லாடமாமூலர், பதினொன்று, பதினைந்து, ஆயிரத்தொருநூற்றைம்பத்தொன்று எ - ம், கழஞ்சேகால், கழஞ்சரையேயரைமாவரைக்காணிமுந்திரிகை எ - ம், நாழியாழாக்கு, கலனைமுக்குறுணி நானாழி யாழாக்கே முச்செவிடு எ - ம், சாணரை எ - ம் வரும். இவை விரியுங்கால் உவாவும் பதினான்கும், கபிலனும் பரணனும், கல்லாடனும் மாமூலனுமென விரியும். பிறவுமன்ன.

உவாவையும் பதினான்கையுமென விரியுமேல் ஆண்டு வேற்றுமைத் தொகையாம் பிறவெனின், [1]வேங்கைமலரொன்னும் வேற்றுமைத்தொகை வேங்கையது மலரெனவிரியும்; உம்மை வேறில்லை, உவாவும் பதினான்குமென்புழி உம்மை ஒருதலையாகவே வேண்டலின், சிறப்பினால் உம்மைத்தொகையாகவே படுமென்பது.

(பி - ம்.) [1] வேங்கைமலரென்பது வேற்றுமைத்தொகைக்கு வேங்கையது. (கஎ)

## (368.) ஐந்தொகை மொழிமேற் பிறதொக லன்மொழி.

எ - ன், அன்மொழித்தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமை முதலான ஐவகையுருபுகளும் தொக்குநின்ற மொழிகளின் மேலே அவற்றின் பொருள்களைத்தழுவிய வேற்றுப்பொருள்களும் அவற்றின் சொற்களுந் தொகுவது அன்மொழித்தொகையாவது. எ - று.

வ - று. பூங்குழல், பொற்றொடி, கவியிலக்கணம், பொற்றாலி, கிள்ளிகுடி, கீழ்வயிற்றுக்கழலை எ - ம், தாழ்குழல், கருங்குழல், துடியிடை, தகரஞாழல் எ - ம் காண்க. இவை விரிவுழி, பூவையுடைய குழலையுடையாள், பொன்னானாய தொடியினை யுடையாள், கவிக்கு இலக்கணம் சொன்னநூல், பொன்னினாய தாலியினை யுடையாள், கிள்ளியது குடிமக்களிருக்குமூர், கீழ்வயிற்றின்கண் எழுந்த கழலையைப் போல்வான் எ - ம், தாழ்ந்த குழலினையுடையாள், கரிய குழலினையுடையாள், துடியன்ன இடையினையுடையாள், தகரமும் ஞாழலும் உறுப்பாகவுடைய சாந்து எ - ம் விரியும். [1]

(பி - ம்.) [1] ஆதலால் இரண்டுசொற்புணராது ஒருமொழிப்பெயராகிக் கமலம் கரும்பு எனவந்தவை ஆகுபெயரும் முற்றுவமையுமாகுமல்லாது அன்மொழித் தொகையாகா வென்றறிக. (கஅ)

(369.) முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி
எனுநான் கிடத்துஞ் சிறக்குந் தொகைப்பொருள்.

எ-ன், தொகைச்சொற்பொருள் நிற்குமிடம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) தொகைச் சொற்களில் முதலில்நிற்கு மொழியிடத்துத்தான் பின்மொழிக்கட்டான் அனைத்துமொழிக்கண்ணுந்தான் அனைத்து மொழிக்கும் புறத்துத்தான் சிறந்துநிற்கும், தொகைச் சொற்பொருள்கள். எ-று.

ஈண்டு இடம் என்றதனாற் காலமுன்கொள்ளாது இடமுன் கொள்க.

வ-று. கால்வாய், அடைகடலென்பன வாயையுடையகால், கடலினது அடையென முன்மொழிப் பொருள்குறித்தன. வேங்கைப்பூ, கருங்குதிரை என்பன பின்மொழிப்பொருள் கருதின. இவை ஈரிடத்திற்கும் [1]அவினயத்திற் காட்டினவை. இனி, இளம் பூரணவாசிரியர் வேங்கைப்பூவென்பதனை முன்னிடத்திற்கும், அடைகடலென்பதனைப் பின்னிடத்திற்கும் காட்டுவர்; இருவர்மதமுமறிந்துகொள்க. இராப்பகல், தாய்தந்தை, அந்தணரரசர்வணிகர்வேளாளரென்பன, அனைத்துமொழிப்பொருளும் கருதவந்தன. பொற்றொடி, துடியிடை, தருசுரபி, பெய்ம்முகில் என்பன, அவற்றையுடையாரையும் ஒப்பாரையும் குறித்தமையின், புறமொழிமேல்நின்றன. பிறவுமன்ன.

(பி-ம்.) [1] அவினயனூர். (கக)

(370.) வல்லொற்று வரினே யிடத்தொகை யாகும்
மெல்லொற்று வரினே பெயர்த்தொகை யாகும்.

எ-ன், அத்தொகைக்கு [1]ஏற்பதோர் விதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) வல்லொற்று இடையேவந்துழிப் பெயரோடு இடம் தொக்கதாம்; மெல்லொற்று இடையேவந்துழிப் பெயரோடு பெயர் தொக்கதாம். எ-று.

வ-று. வடுகக்கண்ணனென்றால், வடுகநாட்டிற்பிறந்த கண்ணனென்றும், வடுகங்கண்ணனென்றால் வடுகற்குமகனாகிய கண்ண

னென்றுமாம். இஃது எழுத்துமுடிபேனும் தொகையதிகாரப்பட்டமையான் ஈண்டுவைத்தாரென்க.

(பி - ம்.) [1] ஒப்பதோர். (உ0)

(371.) உயர்திணை யும்மைத் தொகைபல ரீறே.

இதுவுமது.

இ - ள். உயர்திணையிடத்துவந்த உம்மைத்தொகை பல்லோரைக்காட்டும் ரகரவொற்றாய் நிற்கும். எ - று.

வ - று. கபிலபரணர்வந்தா [1]ரெனவும், சாத்தன் கொற்றன் வந்தாரெனவும் வரும். இவைவிரியின், கபிலனும் பரணனும் வந்தார், சாத்தனும் கொற்றனும் வந்தாரென்று ஆம். என்னை? *"உயர்திணை மருங்கி னும்மைத் தொகையே, பலர்சொன் னடைத்தென மொழிமனார் புலவர்" என்றார், தோல்காப்பியனார்.

(பி - ம்.) [1] எனவரும். என்னை, " உயர்திணை. (உக)

(372.) தொக்குழி மயங்குந விரண்டு முதலேழ்
எல்லைப் பொருளின் மயங்கு மென்ப.

எ - ன், தொகைச் சொற்பொருள் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள். சொற்கள் தொக்குநின்றவிடத்து, மயங்கும்இயல்பினையுடைய சொற்கள் (வேற்றுமைமுதலாக அன்மொழியீறாகச் சொன்ன ஆறுவகைப்பொருட்சொற்களும்), இரண்டுமுதலாக ஏழீறாகநின்ற [1]பொருண்மேல் மயங்குமென்று சொல்லுவர்புலவர். எ-று.

'தொக்குழிமயங்குந' எனவே தொகாவிடத்து மயங்காவெனவும், 'மயங்குநமயங்கும்' எனவே மயங்கும் இயல்பில்லன மயங்காவெனவும்கொள்க.

வ - று. தெய்வவணக்கம், தற்சேர்ந்தார் எ - ம், பொற்குடம், திரையனூர் எ - ம், நாகர் பலி, போர்நேர்ந்தார் எ - ம், வையைவடக்கு, நோய்நீங்கினான் எ - ம், யானைக்கூடம், கடற்றிரை எ - ம், ஊர்ப்புக்கான், ஊர்மனை எ - ம், அலர்முல்லை, தாழ்குழல் எ - ம், கோண்டலாம், முந்நான்கு எ - ம், தளிரடி, தளவநகை எ - ம், பதினைந்து, தகாஞாழல் எ - ம் வரும் இவை இரண்டு தொடர்ச்சிப் பொருள்மயங்கிய ஒருதொடர்த் தொகைமொழி; இவை, தெய்

* எச்ச. உ௫.

வத்தை வணங்கும் வணக்கம், தெய்வத்துக்கு வணக்கம்; தன்னைச் சேர்ந்தார், தன்பாற் சேர்ந்தார் எ-ம், பொன்னாற்செய்தகுடம், பொன்னினியகுடம்; திரையனாற்செய்யப்பட்டவூர், திரையனதூர் எ-ம், நாகர்க்குப்பலி, நாகரதுபலி; போர்க்கு நேர்ந்தார், போரைநேர்ந்தார் எ-ம், வையையின்வடக்கு, வையைக்குவடக்கு; நோயினீங்கினான், நோயைநீங்கினான் எ-ம், யானையது கூடம், யானைக்குக்கூடம்; கடலினதுதிரை, கடலின்கட்டிரை எ-ம், ஊரின்கட்புக்கான், ஊரைப்புக்கான்; ஊரின்கண்மனை, ஊரினுடையமனை எ-ம் வேற்றுமையுருபுகள் முறையே மயங்கினவாறு.

இனி அலர்ந்தமுல்லை, அலரையுடைய முல்லை; தாழ்ந்தகுழல், தாழ்ந்தகுழலினையுடையாளென வினையுருபு மயங்கியவாறு.

கோணாகியதுலாம், கோணையுடைய துலாம்; மூன்றாகியநான்கு, மூன்றனாற்பெருக்கப்பட்ட நான்கு எ-ம், தளிரன்னஅடி, தளிரையொக்குமடி; தளவமன்னநகை, [2]தளவத்தை யொக்கு நகை எ-ம், பத்துமைந்தும், பத்தின்மேலைந்து; தகரமுஞாழலும், தகரமுஞாழலுமுடையசாந்து எ-ம் வரும்.[3]

நெறிசெய்தான், பொற்றொடி, கடிப்பகை, வரையிழிந்தான், சான்றோரிலக்கணம், ஊர்க்குளம் எ-ம், ஒலிவளை, ஆனேறு, துடியிடை, ஏழேகால் எ-ம் வரும் இவை, மூன்றுதொடர்ச்சிப்பொருள் மயங்கிய ஒருதொடர்த் தொகைமொழி; இவை, நெறியைச்செய்தான், நெறியினாற்செய்தான், நெறியினிற் செய்தான்; பொன்னாறிய தொடி, பொன்னினியதொடி, பொன்னிற்செய்த தொடியையுடையாள்; கடிக்குப்பகை, கடியினதுபகை, கடியாகியபகை; வரையினிழிந்தான், வரையையிழிந்தான், வரைக்கணிழிந்தான்; சான்றோரதிலக்கணம், [4]சான்றோராற் செய்யப்பட்ட இலக்கணம், சான்றோர்க்கிலக்கணம்; ஊரின்கட்குளம், ஊரினது குளம், ஊர்க்குக்குளம் [5] எ-ம், ஒலிக்கும்வளை, ஒலியையுடையவளை, ஒலிக்கும் வளையையுடையாள்; [6]ஆனாகிய ஏறு, ஆனின்கணேறு, ஆனேறனையான்;[7] துடியன்ன இடை, துடியையொக்குமிடை, துடியன்ன இடையினையுடையாள்;[8] ஏழும் காலும், ஏழின்மேற்கால், ஏழேகால் நிலமானவூர் எ-ம்[9] வரும்.

சொல்லிலக்கணம், பொன்மணி எனவரும் இவை, நான்குதொடர்ச்சிப்பொருள்மயங்கின ஒரு தொடர்த்தொகைமொழி; இவை, சொற்கிலக்கணம், சொல்லதுஇலக்கணம், சொல்லும் இலக்கணமும்,

சொல்லிலக்கணஞ்சொன்ன நூல் எ - ம், பொன்னுனையமணி, பொன்னினையமணி, பொன்னின்கண்மணி, பொன்னுமணியும் எ-ம் [10]வரும்.

கருப்புவேலி, இயலிசை எனவரும் இவை, ஐந்துதொடர்ச்சிப் பொருண்மயங்கினஒருதொடர்த் தொகைமொழி ; இவை, கரும்பாற் செய்தவேலி, கரும்புக்குவேலி, கரும்பினிற் செய்தவேலி, கரும்பினதுவேலி, கரும்பின்கண்வேலி எ - ம், இயலையுடையவிசை, [11]இயலினிசை, இயற்கணிசை, இயலாகியஇசை, இயலுமிசையும் எ - ம் வரும். [12]

நூலுரை, உரைவிரி எனும் இவை, ஆறுதொடர்ச்சிப்பொருள் மயங்கிய ஒருதொடர்த் தொகைமொழி. இவை நூலையொக்குமுரை, நூற்குரை, [13]நூலதுரை, நூற்கணுரை, நூலன்னஉரை, நூலுமுரையும் எ - ம், உரையைவிரி, உரைக்குவிரி, உரையதுவிரி, உரைக்கண்விரி, உரைக்கும்விரி, உரைவிரியுடையது எ - ம் வரும்.[14]

கருத்துப்பொருள், சொற்பொருள் எனவரும் இவை, ஏழுதொடர்ச்சிப்பொருள் மயங்கிய ஒருதொடர்த் தொகைமொழி; இவை, கருத்தையுடையபொருள், கருத்தினலறியும்பொருள், கருத்திற்குப் பொருள், கருத்தினறியும்பொருள், கருத்தினதுபொருள், கருத்தின்கட்பொருள், கருத்தும்பொருளும் எ - ம், சொல்லான்அறியப்படும் பொருள், சொற்குப்பொருள், சொல்லின் அறியப்படும் பொருள், சொல்லதுபொருள், சொல்லின்கட்பொருள், சொல்லாகியபொருள், சொல்லும் பொருளும் எ - ம் வரும். பிறவுமன்ன.

* "வாளைமீ னுள்ள றலைப்படல்" என்பது, இரண்டுதொடர்ச்சிப்பொருண்மயங்கிய பலதொடர்த் தொகைமொழி; இது, வாளைமீனை உள்ளல் தலைப்படல், வாளைமீன் உள்ளலைத் தலைப்படலெனவரும்.

"புலி கொல்யானை" என்பது மூன்று தொடர்ச்சிப்பொருள் மயங்கிய பலதொடர்த்தொகைமொழி ; இது, புலியைக் கொன்ற யானை, புலியாற் கொல்லப்பட்ட யானை, புலியினிற் கொல்லப்பட்ட யானை எனவரும்.

"குரங்கெறிவிளங்காய்" என்பது, நான்கு தொடர்ச்சிப் பொருள்மயங்கிய பலதொடர்த்தொகைமொழி ; இது, குரங்கையெறிந்த விளங்காய், குரங்கால் எறியப்பட்ட விளங்காய், குரங்கிற்கு [15]எறிந்த விளங்காய், குரங்கினெறியப்பட்ட விளங்காயெனவரும். இவ்வாறு பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

---

* திரி. அ.

(பி - ம்.) [1] பொருளால் மயங்குமென்று. [2] தளவை யெள்ளுநகை. 3 அன்மொழித்தொகை வந்தவாறு. இரண்டுபொருண்மயக்கம்முற்றும். 4 சான்றோர்செய்த இலக்கணம். 5 எ - ம் வேற்றுமைத்தொகை விரிந்தன. 6 எ - ம் வினைத்தொகை விரிந்தன. 7 எ - ம் பண்புத்தொகைவிரிந்தன. 8 எ - ம் உவமத்தொகைவிரிந்தன. 9 உம்மைத்தொகைவிரிந்தன. மூன்று பொருண்முற்றும். 10 விரிந்துவரும். நான்குபொருண்முற்றும். 11 இயலுமிசை. இயலுவதைச்செய்யுமிசை. 12 ஐந்துபொருண்முற்றும். 13 நூலினுரை. 14 ஆறுபொருண்முற்றும். 15 எறியப்பட்டவிளங்காய். (உஉ)

(373.) முற்றீ ரெச்ச மெழுவாய் விளிப்பொருள்
ஆறுரு பிடையுரி யடுக்கிவை தொகாநிலே.

எ - ன், தொகாநிலைத்தொடர்மொழி இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினைமுற்று, வினைக்குறிப்பு முற்று, பெயரெச்சம், வினையெச்சம், எழுவாய்வேற்றுமை, விளிவேற்றுமைகள் தம் பொருளான பெயர்வினைகளோடு புணரும் புணர்ச்சியும், ஆறுருபும், இடைச்சொல்லும், உரிச்சொல்லும் புணரும் புணர்ச்சியும், இரண்டு முதலான அடுக்குமொழிகளும் தொகாநிலைத்தொடர் மொழிகளாம். எ - று.

வ - று. உண்டான் சாத்தன், குழையன்கொற்றன், உண்ட சாத்தன், உழுதுவந்தான், சாத்தன் உண்டான், சாத்தாகொள், சாத்தனை, சாத்தனால், சாத்தற்கு, சாத்தனின், சாத்தனது, சாத்தன் கண், * "அதுகொ ேறாழி காம நோயே", † "நனிபேதையே நயனில் கூற்றம்", பாம்புபாம்பு எனமுறையே காண்க.

"காலங்கரந்த பெயரெச்சம் வினைத்தொகை" என்றமையால், காலந்தோன்றும் பெயரெச்சம் தொகாநிலையாமென்க. (உ௩)

(374.) திணையே பாலிடம் பொழுது வினாவிறை
மரபா மேழு மயங்கினும் வழுவே.

எ - ன், வழுநிலையும் வழாநிலையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) திணைமுதலான ஏழும் தத்தம் இயல்பன்றி மயங்கிவரின் அவை வழுக்களாம். எ - று.

---

* குறு. ௫. † புறநா. உஉஎ.

மயங்கின் வழுவாமெனவே, மயங்காதுவருதல் வழாநிலையா மென்க. இவ்வாற்றுனும் [1]சொற்பகுத்து ஆராய்ந்தா[2]ராம். அஃதாவது, ஒன்று பிறிதின்மேற்சேறலும் பிறிதினைக்கொண்டு முடிதலுமாமென்க.

அவற்றுள், திணைவழு நான்காம்; தனித்திணைவழுவும், பாற்றிணைவழுவும், இடத்திணைவழுவும், பாலிடத்திணைவழுவுமென.

அவற்றுள், தனித்திணைவழுவாவது:—பாலும் இடனுமின்றித் திணை தனியே மயங்குவது. அது: வந்தான் அது, வந்தாள் அது, வந்தார் அவை எ - ம், வந்தது அவன், வந்தது அவள், வந்தன அவர் எ - ம் இருதிணை வினைமேலும் இருதிணைப் பெயர் வந்து மயங்கிய ஆறும்; அவன் வந்தது, அவள் வந்தது, அவர்வந்தன எ - ம், அது வந்தான், அதுவந்தாள், அவைவந்தார் எ - ம் இருதிணைப்பெயர் மேலும் இருதிணைவினைவந்து மயங்கிய ஆறும் ஆகத் தனித்திணை வழுப் பன்னிரண்டாம்.

இனி, பாற்றிணை வழுவாவது:—இடமயக்கமின்றிப் பாலும் திணையும் மயங்குவது. அது: வந்தான் அவை, வந்தாள் அவை, வந்தார்அது எ - ம், வந்ததுஅவர், வந்தன அவன், வந்தன அவள் எ - ம் இருதிணைவினைப்பான்மேல் இருதிணைப்பெயர்ப்பால் மயக்கம் ஆறும்; அவன்வந்தன, அவள்வந்தன, அவர்வந்தது எ - ம், அதுவந்தார், அவைவந்தான், அவைவந்தாள் எ - ம் இருதிணைப் பெயர்ப்பால்மேல் இருதிணைவினைப்பால்மயக்கம் ஆறும் ஆகப் பாற்றிணைவழுப் பன்னிரண்டாம்.

இடத்திணைவழுவாவது:—பான்மயக்கமின்றி இடமும் திணையு மயங்குவது. அது: வந்தான் சேவலேன், வந்தாள் பேடையேன், வந்தார் மான்களேம் எ - ம், வந்தது பாணனேன், வந்தது விறலியேன், வந்தனவயவரேம் எ - ம் படர்க்கை இருதிணைவினைமேல் தன்மையிருதிணைப்பெயர்மயக்கம் ஆறும்; வந்தான் கடுவனை, வந்தாள் பேடைபை, வந்தார் [3]மான்களீர் எ - ம், வந்தது தலைவனை, வந்தது தலைவியை, வந்தனமாந்தரீர் எ - ம் படர்க்கையிருதிணைவினைமேல் முன்னிலையிருதிணைப்பெயர்மயக்கம் ஆறும்; சேவலேன் வந்தான், பேடையேன் வந்தாள், மான்களேம் வந்தார் எ - ம், பாணனேன் வந்தது, விறலியேன் வந்தது, [4]மல்லரேம் வந்தன எ - ம் தன்மையிருதிணைப்பெயர்மேற் படர்க்கையிருதிணைவினைமயக்கம் ஆறும்; கடுவனைவந்தான், பேடையைவந்தாள், மறிகளிர்வந்தார் எ - ம்,

தலைவனைவந்தது, தலைவியைவந்தது, மாந்தரீர்வந்தன எ-ம் முன்னிலை இருதிணைப்பெயர்மேற் படர்க்கை இருதிணைவினை மயக்கம் ஆறும் ஆகப் படர்க்கைவினையோடு தன்மை முன்னிலைப்பெயரும் அவற்றின்மேற் படர்க்கைவினையும் மயங்கின இடத்திணைவழு இருபத்துநான்காம்.

தன்மை முன்னிலைவினைகள் இருதிணைக்கும் பொதுவாகலான், அவற்றால் திணைமயக்கவழு வாராதெனக்கொள்க.

பாலிடத்திணைவழுவாவது:—அம்மும்மையும் மயங்கிவருவது; அது: வந்தான் பேடையேம், வந்தாள் சேவலேம், வந்தார் கடுவனேன் எ-ம், வந்தது 5மாந்தரேம், வந்தது மாதரேம், வந்தன பாணனேன் எ-ம் படர்க்கை இருதிணை யொருமைப் பன்மை வினைமேல் தன்மையிருதிணை யொருமைப் பன்மைப் பெயர் மயங்கிய மயக்கமாறும்; வந்தான்பேடையீர், வந்தாள்சேவலீர், வந்தார்மஞ்ஞையை எ-ம், வந்தது 6ஊரீர், வந்ததுகிழத்தியீர், வந்தனபாணனை எ-ம் படர்க்கையிருதிணை யொருமைப்பன்மை வினைமேல் இருதிணை முன்னிலை யொருமைப் பன்மைப் பெயர் மயங்கிய மயக்கமாறும்; பேடையேம் வந்தான், சேவலேம் வந்தாள், கடுவனேன் வந்தார் எ-ம், ஊரேம் வந்தது, கிழத்தியேம் வந்தது, மல்லனேன் வந்தன எ-ம் இருதிணைத் தன்மை யொருமைப் பன்மைப் பெயர்மேல் இருதிணைப்படர்க்கை யொருமைப் பன்மைவினை மயங்கிய மயக்கமாறும்; பேடையீர்வந்தான், சேவலீர்வந்தாள், கடுவனைவந்தார் எ-ம், ஊரீர்வந்தது, கிழத்தியீர்வந்தது, மல்லனைவந்தாள் எ-ம் இருதிணை முன்னிலை யொருமைப் பன்மைப் பெயர்மேற் படர்க்கையிருதிணை யொருமைப் பன்மைவினை மயங்கிய மயக்கமாறும் ஆகப் பாலிடத்திணைவழு இருபத்துநான்கு.

ஆகத் தனித்திணைவழுப் பன்னிரண்டும், பாற்றிணை வழுப் பன்னிரண்டும், இடத்திணைவழு இருபத்துநான்கும், பாலிடத்திணைவழு இருபத்துநான்கும் ஆகத் திணைவழு எழுபத்திரண்டாம்.

அதுமல்லன், மல்லன் அது; அதுவிறலி, விறலியது; அவையாடவர், ஆடவரவை; அவைஅரிவையர், அரிவையர்அவை என இவ்வாறு பெயரும் பெயரும் மயங்கிய திணைவழுவுங்கொள்க.

இனிப் பால்வழுவாது:—திணையிடமயக்கமின்றிப் பாலே மயங்குவது; அது: உண்டான் அவள், உண்டாள் அவன், உண்டார் அவன் எ-ம், அவன் உண்டாள், அவள்உண்டான், அவர்உண்டான்

எ - ம் வினைமேற் பெயரும் பெயர்மேல் வினையும் வந்து, ஆண்பால் பெண்பால் ஒருமைப்பால் பன்மைப்பால் மயங்கின உயர்திணைப் பால் வழு ஆறும்; உண்டது அவை, உண்டன அது எ - ம், அவைஉண்டது, அது உண்டன எ - ம் வினைமேற் பெயரும் பெயர்மேல் வினையும் வந்து, ஒருமை பன்மை மயங்கிய அஃறிணைப்பால்வழு நான்கும் ஆகப் பால்வழுப் பத்து.

அவன்முனிகள், அவள்அரிவையர், அவர்நம்பி, அவர் நங்கை, அவன் 7அரசிகள், அவள் சாத்தரெனப் பெயரும் பெயருமயங்கின பால்வழுவும் கொள்க.

இனி இடவழு, தனியிடவழுவும் பாலிடவழுவுமென இரண்டாம் :—

அவற்றுள், தனியிடவழுவாவது, திணையும் பாலுமின்றி இடமே மயங்குவது; அது: வந்தான்யான், 8வந்தார்யாம் எ - ம், வந்தான்நீ, வந்தார்நீயிர் எ - ம், வந்தாய் யான், வந்தீர்யாம் எ - ம், வந்தாய் அவன், வந்தீர்அவர் எ - ம், வந்தேன்நீ, வந்தேம்நீயிர் எ - ம், வந்தேன்அவன், வந்தேம்அவர் எ - ம் மூவிடவினைமேலும் மூவிடப் பெயர் மயங்கிய மயக்கம் பன்னிரண்டும்; யான்வந்தான், யாம்வந்தார் எ - ம், நீவந்தான், நீயிர்வந்தார் எ - ம், யான்வந்தாய், யாம்வந்தீர் எ - ம், அவன்வந்தாய், அவர்வந்தீர் எ - ம், நீவந்தேன், நீயிர்வந்தேம் எ - ம், அவன்வந்தேன், அவர்வந்தேம் எ - ம் மூவிடப்பெயர் மேலும் மூவிடவினை மயங்கிய மயக்கம் பன்னிரண்டும் ஆகத்தனியிடவழு இருபத்துநான்கு.

இனிப் பாலிடவழுவாவது :—திணையின்றிப் பாலும் இடமும் மயங்கிவருவது; அது: வந்தான்யாம், வந்தார்யான் எ - ம், வந்தான்நீயிர், வந்தார்நீ எ - ம், வந்தாய் யாம், வந்தீர் யான் - எ - ம், வந்தாய்அவர், வந்தீர் அவன் எ - ம், வந்தேன் நீயிர், வந்தேம் நீ எ - ம், வந்தேனவர், வந்தேமவன் எ - ம் மூவிடவினைமேலும் மூவிடப்பெயரும் பாலுமான மயக்கம் பன்னிரண்டும்; யான் வந்தார், யாம்வந்தான் எ - ம், நீவந்தார், நீயிர்வந்தான் எ - ம், யாம் வந்தாய், யான்வந்தீர் எ - ம், அவர்வந்தாய், அவன்வந்தீர் எ - ம், நீயிர்வந்தேன், நீவந்தேம் எ - ம், அவர்வந்தேன், அவன்வந்தேம் எ - ம் மூவிடப்பெயர்மேலும் மூவிடவினையும்பாலுமான மயக்கம் பன்னிரண்டும் ஆகப் பாலிடவழு இருபத்துநான்கு; ஆகஇடவழு நாற்பத்தெட்டு.

அவன்யான், சாத்தன்யாமென்றற்றொடக்கத்துப் பெயரொடு பெயர்மயங்கின இடவழுவும் கண்டுகொள்க.

இனிக் காலவழுவாவது:—பண்டு, அன்று, நெருநல் எ - ம், இன்று, இப்பொழுது எ - ம், நாளை, இனி, மேல், எதிர் எ - ம் வரும் இத்தொடக்கத்து இறப்பு நிகழ்பு எதிர்பென்னும் முக்காலப் பெயரோடும் முக்காலவினையுமயங்குவது. அது:வந்தான்நாளை, வாராநின்றான்நெருநல், வாராநின்றான்நாளை, வரும்நெருநல் எ - ம், நாளை வந்தான், நெருநல்வாராநின்றான், நாளைவாராநின்றான், நெருநல் வரும் எ - ம் வினைமேற் பெயரும் பெயர்மேல்வினையும் வந்துமயங்கின காலவழு எட்டெனக்கொள்க. அஃதேல், இன்றென்னுநிகழ் காலப்பெயருடன், இன்றுவந்தான், இன்றுவருமெனவழங்குதலும் வழுவாம்பிறவெனின், இன்றென்பது இற்றைநாளையன்றே! அதனகத்து நிகழ்சமயநோக்க ஏனைக்காலங்களுமுளவாகலின், வழுவன்றென்க. பிறவுமன்ன.

இனி வினாவழுவாவது:—கறக்கின்றஎருமை பாலோ? சினையோ? எனவும், ஒருவிரல்காட்டி, இது சிறிதோ? பெரிதோ? எனவும் வரும் இத்தொடக்கத்தனவெனக்கொள்க.

இனிச்செப்புவழுவாவது:—கடம்பூர்க்குவழியாதெனின், இடம்பூணிஎன்னுவின்கன்றெனவும், கருவூர்க்குவழியாதென்றால், பருநூல் பன்னிருதொடியெனவும் வரும் இத்தொடக்கத்தனவெனக் கொள்க.

இனி மரபுவழுவாவது:—வரலாற்றுமுறைமை மயங்கச்சொல்லுவது; அது: யானைமேய்ப்பானை ஆயனென்றும், பசுமேய்ப்பானைப் பாகனென்றும், எருமைபிலத்தி, குதிரைச்சாணகமென்றும்வரும் இத்தொடக்கத்தனவெனக்கொள்க.

(பி - ம்.) 1 சொற்பகுத்தார். அஃதாவது. 2 ஆப. 3 (க) மான்மாக்களீர் (உ) மான்மகளீர். 4 மடையரேம்வந்தன. 5 ஊரரேம். 6 நீர், வந்தது குளத்தியீர். 7 சாத்தர். 8 வந்தாள்யான், வந்தார். (உச)

## (375.) ஐயந் திணைபா லவ்வப் பொதுவினும் மெய்தெரி பொருண்மே லன்மையும் விளம்புப.

எ - ன், திணைபால் ஐயுற்றவழியும் துணிந்தவழியும் இவ்வாறே சொல்லுகவெனத் திணைபால் வழுக்காத்தல் நுதலிற்று.

(இ - ள்.) திணைமேல் ஐயந்தோன்றியவழி அவ்விருதிணைக்கும் பொதுவினானும், பால்மேல் ஐயந்தோன்றியவழி அவ்வப்பால்களுக்குப் பொதுவினானும், இன்னதென்று உண்மைதெரிந்த பொருளின் மேல் அல்லாத தன்மையைவைத்தும் சொல்லுவர், ஆசிரியர். எ-று

வ - று. தெற்றெனவுணர்தலாகாத இடமானும் காலமானும் பற்றி நான்குமுழ அளவின் ஒருருவுகண்டு, குற்றிகொல்லோ? மகன்கொல்லோ? என்று, ஐயுற்றவழிக் குற்றிகொல்லோ மகன் கொல்லோ தோன்றுவதென்றலுமாகாது, தோன்றுவானென்றலு மாகாது; அவ்விருதிணைக்கும் ஏற்ப இஃதோதோன்றுகின்ற உரு வென்க; அஃதேல், உருவென்பது பொதுச்சொல்லாயினன்றே அவ் வாறமைவதெனின், மகனுருவுகொல்லோவென்னுங் குறிப்பினைச் சொல்லுதலின் அமையுமென்க.

உயர்திணையுள், பெண்மகள் கொல்லோ? ஆண்மகன்கொல்லோ? எனப் பாலையம்தோன்றியவழி, இஃதோ தோன்றுவானெனலும் ஆகாது, தோன்றுவாளெனலும் ஆகாது; அவ்விருபாற்கும்பொது வாகத் தோன்றுவாரென்க.

இனி, அஃறிணைக்கட்செய்யகத்துப் பல அடிச்சுவடுகண்டால் ஒன்றே பலஅடிச்சுவடுபடவுந்திரியும்; பலவும் பலவடிச்சுவடுபடவுந் திரியுமாகலின், ஒன்றுகொல்லோ? பலகொல்லோ? என்று ஐயுற்ற வழி, ஒன்றுகொல்லோ பலகொல்லோ இச்செய்புக்கதெனலுமாகாது, புக்கனவெனலுமாகாது; அவ்விருபாற்கும் ஏற்ப ஒன்று கொல்லோ பலகொல்லோ இச்செய்புக்கபெற்றமென்க.

இனித் துணிவுதோன்றியவழி, குற்றிகொல்லோ? மகன்கொல் லோ? என நின்ற திணையைத்துக்கண் மகனாதல் துணிந்தாற் குற்றி யல்லன் மகனென்க; குற்றியாதல் துணிந்தால் மகனன்று குற்றி யென்க.

இனிப்பாலையத்துப் பெண்மகளாதல் துணிந்தானேல், ஆண்மக னல்லள் பெண்மகளென்க; ஆண்மகனாதல்துணிந்தானேற் பெண்மக ளல்லன், ஆண்மகனென்க.

இனி, அஃறிணைக்கண் ஒன்றாதல் துணிந்தானேல், பலவன்று ஒன்றென்க; பலவாதல் துணிந்தானேல், ஒன்றல்ல பலவென்க. அஃ தேற் குற்றியல்லன் மகனென்றவழி, அல்லனென்னும் உயர்திணை வினைக்குறிப்புமுற்று மகனென்னும் பெயர்கொண்டு முடியக் குற்றி

யென்னும் பெயர்க்கு ஒரு பயனிலையின்மையின் அது நின்றுவற்று மெனின், நீக்கப்பொருண்மைக்கண் வரும் ஐந்தனுருபு குற்றியினல்ல னென விரிய நின்றுவற்றுதாமென்க. அல்லனவற்றிற்கும் இவ்வாறே கொள்க. (உ௫)

(376.) உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும்
அதனொடு சார்த்தி னத்திணை முடிபின.

எ - ன், உயர்திணைவழுவமைப் புணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயர்திணையைச் சார்ந்துவரும் பொருளாதியாறும், அவ்வுயர்திணையோடு சார்த்தி முடிப்பின், உயர்திணைமுடிபினவாம். எ - று.

எனவே, தம்வினையோடு சார்த்தின், தம் அஃறிணையானே முடியுமென்பதூஉமாயிற்று.

வ - று. நம்பி பொன்பெரியன்; மகஅழகியன், குழவி அழகியன், விருந்தழகியன், அடிமையழகியன் எ - ம், [1]நாடுபெரியன், ஊர் பெரியன், இல்லம்பெரியன் எ - ம், வாழ்நாள் பெரியன் எ - ம், கண் பெரியன், தோள்பெரியன், மூக்குக் கூரியன், மார்பகலியன் எ - ம், குடிமைநல்லன், ஆண்மைநல்லன், இளமைநல்லன், மூப்புநல்லன், அலியல்லன், கூனல்லன், குருடல்லன் எ - ம், செலவுநல்லன், வரவு நல்லன், உணவுநல்லன் எ - ம் வருமிவை உயர்திணையான் முடிந்தன.

இனித் தம்வினையான் முடியுமாறு: நம்பிக்குப் பொன்பெரிது; மகவழகிது, குழவியழகிது, விருந்தழகிது, அடிமையழகிது எ - ம், நாடுபெரிது, ஊர்பெரிது, இல்லம்பெரிது எ - ம், வாழ்நாள் பெரிது எ - ம், கண்பெரிது, தோள்பெரிது, மூக்குக்கூரிது, மார்பகலிது எ - ம், குடிமையழகிது, ஆண்மையழகிது, இளமையழகிது, மூப்பழகிது, அலிபோயிற்று, கூன்போயிற்று, குருடுபோயிற்று எ - ம், செலவழகிது, வரவழகிது, உணவழகிது எ - ம் வரும். பிறவுமன்ன.

(பி - ம்.) [1] நாடு அழகியன், ஊர் அழகியன், இல்லம் அழகியன், எ - ம், வாழ்நாளழகியன். (உ௬)

(377.) திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும்
மிகவினு[1] மிழிபினு மொருமுடி பினவே.

எ-ன், திணை[2] பால்மரபு வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) திணையும் பாலும் பலபொருளும் தம்முள்விரவி நின்றவழிச் சிறப்பினானும் மிகுதியினானும் இழிப்பினானும் ஒன் றனைக் கொண்டுமுடியும். எ - று.

வ - று. * "அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்குந், திங்க ளுஞ் சான்றோரு மொப்பர்மற் - றிங்கண், மறுவாற்றுஞ் சான்றோ ரஃதாற்றார் தெருமந்து, தேய்வ ரொருமா சுறின்", † "பழியஞ் சான் வாழும் பசுவு மழிவின்றற், கொண்ட வருந்தவம் விட்டானுங் கொண்டிருந், தில்லஞ்சி வாழு மெருது மிவர்மூவர், நெல்லுண்ட நெஞ்சிற்கோர் நோய்" எ - ம் வருமிவை சிறப்பினான் உயர்திணை முடிபுபெற்றன.

"வேந்தன் பெரும்பதி மண்ணுண் மாந்த, ரீங்கிம் மூவ ரிதற் குரி யோரே", ‡"தன்பான் மனையா ளயலான் றலைக்கண்டு பின்னு, மின்பா லடிசிற் கிவர்கின்ற கைப்பேடி போலா, நன்பால் பசுவே துறந்தார் பெண்டிர் பாலர் பார்ப்பா, ரென்பாரை யோம்பே னெனின் யானவனாக வென்றான்", § "பார்ப்பா ரறவோர் பசுப்பத் தினிப் பெண்டிர், மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டுத், தீத்திறத் தார் பக்கமே சேர்கென்று" எனவருமிவை (பன்மை) மிகவினால் உயர்திணை முடிபுபெற்றன.

"|| நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய, வசைபட வாழ்ந் தோர் பலர்கொல் புரையி, னற்பனுவ னால்வேதத், தருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை, நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண், வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி, யூப நட்ட வியன்களம் பலகொல், யாபல கொல்லோ பெரும", ¶ "தொல்லை நால்வகைத் தோழருந் தூமணி நெடுந்தேர், மல்லற் றம்பியு மாமனு மதுவிரி கமழ்தார்ச், செல்வன் றாதையுஞ் செழுநக ரொடுவள நாடும், வல்லைத் [3]தொக்கன வளங் கெழு கோயிலு ளொருங்கே." இவை சிறப்பினான்[4] அஃறிணை முடிபு பெற்றன.

** "கோலஞ்சி வாழுங் குடியுங் குடிதழீஇ, யாலம்வீழ் போலு மமைச்சனும்—வேலின், கடைமணிபோற் றிண்ணியான் காப்புமிம் மூன்றும், படைவேந்தன் பற்று விடல்.", †† "எச்சிலார் தீண்டார் பசுப்பார்ப்பார்[5] தீத்தெய்வ, முச்சந் தலையோ டிவையென்ப யாவருந்,

* நாலடி. மேன்மக்கள். க. † திரி. அ0. ‡ சீவக. சசஙு. § சில. வஞ்சின. ருங. || புறநா. கரு. ¶ சீவக. உஙசுO. ** திரி. ஙசு. †† ஆசார. சு.

திட்பத்தாற் றீண்டாப் பொருள்." இவை[6] பன்மைமிகவினுன் அஃறிணைமுடிபு பெற்றன.

"வடுக ரருவாளர் வான்கரு நாடர், சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறுங், குறுகா ரறிவுடை யார்", "மூர்க்கனு முதலையுங் கொண்டது விடா." எனுமிவை இழிப்பினுன் அஃறிணைமுடிபு பெற்றன.

ஒருவன்கொல்லோ பலர்கொல்லோ இச்செய்புக்கார்? ஒருத்திகொல்லோ பலர்கொல்லோ ஈண்டுப் புக்குற்ருர்? எனுமிவை ஒருமைபன்மை விரவிவந்து பன்மைமிகவினுற் பன்மைமுடிபுபெற்றன.

"கண்டபொன் மயங்கு மையக் கிளவி, [7]நின்ருேர் வருவோ ரென்றுசொன் னிகழக், காணு வையமும் பல்லோர் படர்க்கை" என்ருர், அகத்தியனுர். இச்சூத்திரத்தினுல், ஒருவர் கொல்லோ பலர்கொல்லோ என்ற இலக்கணவழுவுக்கு அமைதிகண்டுகொள்க.

*"பலவயி னானு மெண்ணுத்திணை விரவுப்பெய, ரஃறிணை முடிபின செய்யு ளுள்ளே." என்ருர், தொல்காப்பியனுர்.

இவற்ருல் இவைமுடியுமாறு ஆராய்ந்துகொள்க.

இனிப் பலபொருள்விரவின: † "ஊன்றுவை, கறிசோ றுண்டு வருந்துதொழி லல்லது, பிறிதுதொழி லறியா வாகலின்." இது, சிறப்பினுன் ஒன்றற்கேற்றவினைகொண்டது.

அரசன் எடுத்துவிட்டான், நாடகிஆடவந்தான்; இவை பலவிரவிச் சிறப்பினுன் ஒருபாலால் முடிந்தன.

எயினநாடு, மறநாடு, பார்ப்பனச்சேரி, அரசர்பெருந்தெரு, வாணிகநகரமெனுமிவை, உயர்திணைக்கட் பலவிரவிப் பன்மையான் ஒருபெயரேற்றன.

ஆதீண்டுகுற்றி, வயிரகடகம், மாந்தோட்டம், கமுகந்தோட்டம் எ-ம், ஒடுவங்காடு, காரைக்காடு எ-ம் வருமிவை அஃறிணைக்கட் டலைமையும் பன்மையும்பற்றி ஒருபெயரேற்றன. பிறவுமன்ன.

‡ "பாணன் பறையன் கடம்பன் றுடிய, னெனுநான் கல்லது குடியு மில்லை." என்பது உயர்திணை அஃறிணையான்முடிந்தது; இவ்வழு யாண்டு அமைக்கப் படுமோவெனின், அது வழுவாயினன்றே

---

* கிளவி. ருக. † புறநா. கசு. ‡ ஷை நகடு.

அமைக்கவேண்டுவது; குடியென்பதனை எல்லாவற்றோடுங் கூட்டி யுரைக்கப்படுதலின், வழாநிலையாமென்க.

(பி - ம்.) 1 இழிப்பினும். 2 பால்வழுவமைப்பு. 3 தொக்கது. 4 வியன் களம், தொக்கதென ஒருமை அஃறிணை. 5 தீய்த்தேவர். 6 மூன்று, இவை யென்ப என்ற பன்மைமிகுதியான். 7 நின்றோன் வருவோர். (உஎ)

(378.) உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும்
இழிப்பினும் பாறிணை யிழுக்கினு மியல்பே.

திணைபால் வழுவமைப்புணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்வைந்திடத்தும் பாலும் திணையும் மயங்கிவழங் கினும் அது முறைமையாம். எ - று.

வ - று. *"தேமல ரங்கட் டிருவே புகுதக, மாமலர்க் கோதை மணாளன் புகுதக, காமன் புகுதக காளை புகுதக, நாம வெழில் விஞ்சை நம்பி புகுதுதக." இஃது, உவப்பினால் ஆண்பால் பெண்பா லாய் மயங்கி வழங்கினவாறு.

ஒருத்தியை, என்பாவை வந்தது, போயிற்று எ - ம், ஒரு வனை, என் ஆனைவந்தது, போயிற்று எ - ம், ஓராவினை, என் அன்னை வந்தாள், போயினாள் எ - ம், ஒருத்தினை, என்தந்தை வந்தான், போயினான் எ - ம் வழங்குதல், உவப்பினால் இருதிணையும் மயங்கிய வாறு.

ஒருவனையும் ஒருத்தியையும் ஒன்றனையும், அவர்வந்தார், போயினார் என்றல், உயர்த்துச்சொல்லுதல்.

†"செந்தார்ப் பசுங்கிளியார் சென்றார்க்கோ ரின்னுரைதான், றந்தாரேற் றந்தாரென் னின்னுயிர்," ‡"மையார் தடங்கண் மயி லன்னாய் தீத்தீண்டு, கையார் பிரிவித்தல் காண்." இவை, உயர்த் துச்சொல்லுதற்கண் அஃறிணை உயர்திணையாயின.

"இரவின் வருவானைப் புல்லலுறு மென்மனனே தோழா" எ - ம், § "மகிழ்வார்க்கு மல்லார்க்குந் தாயாகித் தலையளிக்குந் தண்டுறை யூரகேள்." எ - ம் வருமிவை, சிறப்பின்கட் பெண்பால் ஆண்பாலாகவும், ஆண்பால் பெண்பாலாகவும் வழங்கின. ||"மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்", ¶"உற்றவன் றீர்ப்பான் மருந்

* சீவக. உகஉக. † ஷை கOஙரு. ‡ திணைமா. ங. § யா - கா. செய். கக - உரை; "விளங்குமணி." || புறநா. சஅரு. ¶ திருக்குறள், கூ௦O.

துழைச் செல்வானென், றப்பானுற் கூற்றே மருந்து", *"தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு, டந்தம் வினையான் வரும்." இவை சிறப்பினுல் அஃறிணையாயின.

† "எனைத்துணைய ராயினு மென்னுந் தினைத்துணையுந், தேரான் பிறனில் புகல்", ‡ "அவர்நமக், கன்னையு மத்தனு மல்லரோ தோழி, புலவிய தெவனோ வன்பிலங் கடையே." இவை செறலின்கட் பால்மயங்கின.

§ "ஏவவுஞ் செய்கலான் றான்றேரா னவ்வுயிர், போஓ மளவுமோர் நோய்", "இரவெதிர் கொள்ளா விருகாற் பசுவே, யரிய விரத மடங்குத லில்லார்." இவை இழிப்பின்கண் அஃறிணையாயின. பிறவுமன்ன.

இவை முடியுமாறு தொல்காப்பியத்துள் அறிந்துகொள்க. (உஅ)

(379.) ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும்
ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே.

எ - ன், பாவிட வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருமைச்சொல் பன்மைதழுவலும், பன்மைச்சொல் ஒருமைதழுவலும் ஓரிடத்துக்கு உரியசொல் பிறவிடங்கள்தழுவலும் உளவாம். எ - று.

இப்பான்மயக்கம், முன்னுரைத்த உவப்புமுதலாயின அல்லாத வழி வருவதெனக்கொள்க.

வ - று. நீரிருந்தன, பாலிருந்தன எ - ம், நாடெல்லாம் வாழ்ந்தது, ஊரெல்லாம் உவந்தது, சோறுமாண்டது, படைவந்தது, சாத்து வந்தது, கண்சிவந்தது, முலைவீங்கிற்று, ‖"இருநோக் கிவளுண்க ணுள்ளது", ¶"உள்ளிய தெல்லா முடனெய்தும்." எ - ம் இவை அஃறிணையொருமையுடன் பன்மையும், பன்மையுடன் ஒருமையு மயங்கின. ** "அகுதை தந்தை, யண்ணல் யானை யடுபோர்ச் சோழர்", ††"வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப ...... பொலிமினென் னும் புறநிலை வாழ்த்தே", ‡‡"கலம்பெறு கண்ணுள ரொக்கற் றலைவ,......பொழுதெதிர்ந்த, புள்ளினிர் மன்ற வெற்றாக் குறுதலின்,

* திருக்குறள், கூந. † ஷை கரசச. ‡ குறு. கூங. § திருக்குறள், அசஅ.
‖ ஷை க0கக. ¶ ஷை ௩0கூ. ** அகநா. கூரு. †† தொல். செய். ககO,
‡‡ மலைபடு. ருO, ரு௫—சு, க௫எ, உகஅ.

......பதமிகப் பெறுகுவிர்,.........ஒருவி யொருவி யோம்பினிர் கழிமின்", யான் எம்மூர்புகுவல் எ - ம், "புலைய னெறிந்த பூசற் றண்ணுமை, யேவவிளையர் தாய்வயிறு கரிப்ப" எ - ம் உயர்திணையொருமையிற் பன்மையும், பன்மையின் ஒருமையும் மயங்கின.

இனி இடமயக்கம்:—சாத்தன்றாய் இவை செய்வலோ, *"கல்வியென்னும் வல்லாண் சிறாஅ, னெல்லே வனல்ல னதுவா யாகுதல்", "ஆவெந்தை வசுமித்தா வழாநின்ற விவனையு, மாவென்ற நோக்கினையு மாதரம் புதல்வனையும், வீய்வின்று துணையாய்நின் விறலிழையொடுநோக்காய், வேய்நின்ற வியன்காட்டுள் விட்டெறிந் திறத்தியோ", "நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளு, மென்னே குறித்த நோக்கமொடு" எனவருமிவை, தன்மை படர்க்கை தழீஇயின.

†"திண்பொரு ளெய்த லாகுந் தெவ்வரைச் செருக்க லாகு, நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையு நண்ண லாகு, மொண்பொருளாவ தையா வுடன்பிறப் பாக்க லாகா, வெம்பியை யீங்குப் பெற்றே னென்னெனக் கரிய தென்றான்" என்பது, முன்னிலை படர்க்கை தழீஇயிற்று.

நீயோ அவனோ யாரிதுசெய்தார்? யானோஅவனோ யாரிதுசெய்தார்? அவனோ நீயோ யானோ யாரிதுசெய்தாரென்ன விரவியும் ஓரிடம் தழீஇயின; பிறவுமன்ன. (உகூ)

## (380.) தரல்வரல் கொடைசெலல் சாரும் படர்க்கை எழுவா யிரண்டு மெஞ்சிய வேற்கும்.

எ - ன், இடம் வழுவற்கவென வழுக்காத்தலுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இந்நான்குசொல்லும் படர்க்கைக்குஆம்; தரல், வரலென்னுமிரண்டும் தன்மைக்கும் முன்னிலைக்கும்ஆம். எ - று.

வ - று. அவர்க்கு ஆடைதந்தார் (தருதல்), அவர்க்கு ஆடைவந்தது (வருதல்), அவர்க்கு ஆடைகொடுத்தார் (கொடுத்தல்), அவர்க்கு ஆடைசென்றது (செலல்), ‡"புனறரு பசுங்காய் தின்றதன் றப்பற்கு", §"குப்பை நெல்லின் மூத்தூறு தந்த", ||"தூண்டில் வேட்டுவன் வாங்கவா ராது," ¶"ஊடிய மடந்தை போல வுறுசிலை வாங்க வாராது" எ - ம், எனக்குஆடை தந்தார், எனக்கு

* புறநா. ௩௪௬. † சீவக. ௧௭௬0. ‡ குறு. ௨௯௨. § புறநா. ௨௪. || அகநா. ௩௬. ¶ சீவக. ௨௧அரு.

ஆடைவந்தது எ - ம், நினக்கு ஆடைதந்தார், நினக்கு ஆடைவந்தது எ - ம் முறையேகாண்க.

எனக்கு ஆடைகொடுத்தார், எனக்கு ஆடைசென்றது; நினக்கு ஆடைகொடுத்தார், நினக்கு ஆடைசென்றதெனவும் வருமாலோவெனின், அவை [1]பராமுகமாகக்கருதியவிடத்து வருமென்க.

(பி - ம்.) [1] பராமுகனுகக்கருதி வருமென்க. (௩0)

## (381.) இறப் [1]பெதிர்வு நிகழ்வெனக் கால மூன்றே.

எ - ன், காலவமுவமைப்பான் எடுத்துக்கொண்டார், இது காலக்கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) போனதுவும் வருவதுவும் நிகழ்வதுவுமென்று காலம் மூன்றுவகைப்படும். எ - று.

இறப்பு நிகழ்வு எதிர்வென முறையிற்கூறுராயது, காலமென ஒருபொருளில்லையென்பாரும், நிகழ்காலமொன்றுமே என்பாரும், இறந்ததூஉம் எதிர்வதூஉமென இரண்டென்பாரும், இறப்பு நிகழ்வு எதிர்வென மூன்றென்பாருமான இப்பகுதியார், ஆசிரியர். அவருள், காலம் இல்லையென்பார், ஒருபொருள் நிகழுமிடத்துப் பொருண்மைப் பேறல்லது காலமென்று வேற்றுணர்வும் பிறவும் படுவதில்லையென்ப. இனி, காலம் ஒன்றென்பார், யாறொழுகும், மலைநிற்குமென உள்பொருள் ஒரு காலத்தானே சொல்லப்படும், பிறிதில்லையென்ப. இறப்பும் எதிர்வுமென இரண்டென்பார், கோலோடுங் காற் சென்றதூஉம் செல்வதூஉமன்றே? அதனால், நிகழ்வில்லையென்ப. மூன்றென்பார், நெருநல், இன்று, நாளை எ - ம், வந்தான், வாராநின்றான், வருவான் எ - ம் இவ்வாறு சொற்கள் மூன்றுகாலமும் காட்டுதலின் மூன்றென்ப. இவ்விகற்பமெல்லாம் அறிவித்தற்கு இவ்வாறு சூத்திரஞ்செய்தாரெனக்கொள்க.

ஏகாரத்தான் மூன்றென்பதே ஈண்டுப் பொருளெனக்கொள்க.

"உலக வழக்கமு மொருமுக் காலமு, நிலைபெற வுணர்தரு முது [2]மறை நெறியான்" என்றார், அகத்தியனார்.

(பி - ம்.) [1] (க) எதிர்நிகழ்பென; (உ) எதிர்புநிகழ்பென. [2] முறை. (௩க)

## (382.) முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச்
## செப்புவர் நிகழுங் காலத் தானே.

எ - ன், காலவழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முக்காலத்தினும் ஒருதன்மையவாய் நிகழும்பொருள்களை நிகழ்காலச்சொல்லானே சொல்லுவர், தொல்லாசிரியர். எ - று.

வ - று. யாறொழுகும், மலைநிற்கும், நிலம் கிடக்கும், [1]நீர்குளிரும், [2]தீச்சுடும். வளியுளரும் எனவரும்; பண்டும், இன்றும், மேலுமென முக்காலப்பொதுவாக்குக. பிறவுமன்ன.

(பி - ம்.) [1] நீர்தண்ணிது. [2] தீய்வெய்து. (௩௨)

(383.) விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும்
பிறழவும் பெறூஉ முக்காலமு மேற்புழி.

இதுவுமது.

(இ - ள்.) இந்நான்கு பொருண்மைக்கண்ணும் முக்காலமும் தம்முள் மயங்கிவரவும்பெறும், ஏற்குமிடத்து. எ - று.

உம்மையான், மயக்கம் ஒருதலையன்றென்க.

வ - று. விரைவு: சோறுவேவாநிற்க அதை உண்டு போதற்பொருட்டாக இருந்தானொருவனைப் புறத்துநின்றானொருவன் தாம் இருவரும் போகவேண்டுங்குறையுடைமையால், இன்னும் உண்டிலையோ? போதுகவென்றால், உண்டேனுண்டேன், போந்தேன் போந்தேனென்னும்; உண்ணுநின்றானைச்சொல்லினும், உண்டேனுண்டேன், போந்தேன் போந்தேனென்னும். இவை விரைவு.

மிகுதி: அறஞ்செய்தான் சுவர்க்கம்புக்கான், சுவர்க்கம்புகும்; தாயைக்கொன்றான் நிரயம்புக்கான், நிரயம்புகுமென்னுமிவை உலகின்மிக்கவாதலின்,(இப்பயன்கள்தப்பாமையின்)மிகுதிக்கண்வந்தன.

தெளிவு: எறும்பு முட்டைகொண்டு திட்டையேறின், மழைபெய்தது, மழைபெய்யுமென்பது; எறும்பு அவ்வாறு செய்ய அதுவாதல், கேள்வியானும் காட்சியானும் பிறழ்வின்றித்தெளிந்தமையின், இவ்வாறு கூறுதல் தெளிவென்க.

இயல்பு: இக்காட்டிற்போகிற் கூறைகோட்பட்டான்; இக்காட்டிற்புக்கால், தன் கூறைகோட்படுமெனவரும். அக்காட்டினியல்பு அதுவாதலறிந்து சொன்னமையின், இவை இயல்பின் வந்தன.

இனி, யாம் பண்டுவிளையாடுவது இக்கா, யாம்பண்டு விளையாடுங்கா இது எ - ம், சாத்தன் உழுதுவருவான்போனான் எ - ம் வரு

மிவையும் இயல்பாம். பிறவுமன்ன. 'மிகவு'எ என்றது, உலகத்திலுள்ள பெரும்பான்மைச் சொல்லென்றறிக. (௩௩)

(384.) அறிவறி யாமை யையுறல் கொளல்கொடை
ஏவ றரும்வினு வாறு மிழுக்கார்.

எ - ன், வினுவழுவற்கவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அறிவும் அறியாமையும் ஐயப்பாடும் கொளலும் கொடுத்தலும் ஏவலும்காரணமாகவரும் ஆறுவினுவிடத்தும் தப்ப வழங்கார், கற்ரேர். எ - று.

வ - று. அறிவினுல்வரும்வினு, எதிர்வாதியாலும் ஆசிரியனுலும் வரும்; எதிர்வாதி, எதிரியை அளத்தற்கும் அறியாமைகாட்டுதற்கும், இச்சூத்திரத்திற்குப்பொருள்யாது ? இப்பதம் முடிந்தவாறென்னே ? எனவினுவும். ஆசிரியன், ஒருவனே அளத்தற்கும் கொடுத்தற்கும் அவனே விளக்குதற்கும் அவ்வாறுவினுவும். அறியாமையான் வரும்வினு, தான் அறிதற்கு இச்சூத்திரத்திற்குப் பொருள்யாது? நெறியாது? வஞ்சியூர்க்குவழியாது? என வினுவும். ஐயத்தால் வரும்வினு, உண்மையுணர்தற்கும் கோடற்கும் வரும்; மஞ்சோ புகையோ மலேமேற்பரக்கின்றது? என்பது உண்மையுணர்தற்கண் வந்தது. நீரோ பேய்த்தேரோ தோன்றுகின்றது? என்பது, கோடற்கண் வந்தது; மணியுளவோ? வயிரமுளவோ? என்பதும் கோடற்கண்வரும் வினு. சாத்தனுக்கு ஆடையில்லேயோ? என்பது, கொடுத்தற்கண்வரும் வினு. சாத்தா உண்டாயோ? என்பது, ஏவற்பொருட்டாய் வரும் வினு. இவ்வாறுவருவனபிறவும், "அறியான் வினுத லறிவொப்புத் தான் [1]காண்ட, லைய மறுத்த லவனறிவு தான் காண்டன், மெய்யவற்குக் காட்டலோ டைந்தும் வினுவே" என்பனவும் இவ்வாறனுள்ளே அடங்குமென்க.

இவற்றின்வழு மேலே சொல்லிப்போந்தாம்.

(பி - ம்.) [1] கோடல். (௩௪)

(385.) சுட்டு மறைநே ரேவல் வினுதல்
உற்ற துரைத்த லுறுவது கூறல்
இனமொழி யெனுமெண் ணிறையு ளிறுதி
நிலவிய வைந்துமப் பொருண்மையி னேர்ப.

எ - ன், செப்பு வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்வெட்டினுள்ளும் முதன்மூன்றும் செவ்வன் இறையாம்; ஏவல்முதலைந்தும் செப்பின்பொருண்மையாய் வருத லின் அவற்றையும் செப்பெனக்கொள்வர், புலவர். எ - று.

வ - று. அறிவாணொருவனை ஒருவன் இச்சொற்குப் பொருள் யாது? மதுரைக்கு வழி யாது? என்றவழி, இஃதென்பது சுட்டு. சாத்தா உண்ணாயோ? என்றால், உண்ணேனென்பது மறை; உண் பேனென்பது நேர்தல்; நீஉண் என்பது ஏவல்; உண்ணேனோ? என் பது, வினாவெதிர்வினாதல்; வயிறுகுத்திற்றென்பது, உற்றதுஉரைத் தல்; வயிறுகுத்துமென்பது, உறுவதுகூறல். மணியுளவோ? பய றுளவோ? என்றால், வயிரமுள உழுந்துளவென்பது இனஞ்செப்பல்.

இனி, 'நிலவிய' என்றமிகையானே, வினாவின்றியும் செப்பு வருவனவுமுள வென்க; அறிவாணொருவன், இன்னநாட் காற்றடிக் கும்; இன்னநாள் மழைபெய்யும்; இன்னநாள் வாழ்வுவருமென்பன வும், ஆறுசெல்வாணொருவன், 'கங்கையாடிப்போந்தேன், ஒருபிடி சோறு தம்மின்; ஓராடைதம்மின்' என்பனவுமாம். பிறவுமன்ன. இவற்றின்வழு மேலேகாட்டினும். (ஙரு)

## (386.) வினாவினுஞ் செப்பினும் விரவா சினைமுதல்.

எ - ன், இவ்விரண்டும் வழுவற்கவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினாவிடத்தும் எதிர்மொழிசெப்புமிடத்தும் சினை யும் முதலும் தம்முள் மயங்கப்பெறா. எ - று.

வ - று. சாத்தனல்லனோ? கொற்றனல்லனோ? என வினாய விடத்துச் சாத்தனிற் கொற்றனல்லன்; கொற்றனிற் சாத்தனல்ல னென்க. சாத்தன் மயிர் நல்லவோ? கொற்றன் மயிர் நல்லவோ? என வினாயவழி, சாத்தன்மயிரிற் கொற்றன்மயிர் நல்ல; கொற்றன் மயிரிற் சாத்தன்மயிர் நல்லவென்க. பிறவுமன்ன. (ஙகூ)

## (387.) எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர் செப்பின ரப்படிச் செப்புதன் மரபே.

எ - ன், மரபாவது இன்னதென்று அதனிலக்கணம் உணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) யாதொருபொருளை யாதொருசொல்லான் யாதொரு படியானே முன்னுட் கற்றுவல்லோர்கள் சொன்னூர்கள்? அதனை அப்படியே சொல்லுதல் மரபாவது. எ - று.

அஃதாவது, பொருளாதி யாறனுள்ளும் ஒன்றைப் பலசொல்லானும், பலவற்றை ஒருசொல்லானும் வழங்குதலாம்; அவற்றுட் சிலவருமாறு:

வ - று. மக, குழவி, பிள்ளை, பார்ப்பு, பறழ், குருளை, மறி, கன்று, குட்டி, பொரி, [1]குழ, களபமென்றற்றொடக்கத்தன இளமைப் பண்பறிசொல். இவற்றுள், மகவென்பது மக்கள், முசு, குரங்குகட் குரித்து. குழவியென்பது மக்கள், யானை, பசு, எருமை, மான், மரை, கரடி, சீயம், வருடை, பருவம், மீன், நீர், கதிர், மதிகட் குரித்து. பிள்ளையென்பது மக்கள், பூசை, தத்துவன, ஒருசார்தவழ்வன, பறப்பன, கோடுவாழ்விலங்கு, ஓரறிவுயிர்கட்குரித்து. பார்ப்பென்பது பறவைக்கும் தவழ்வனவற்றிற்கும், கோடுவாழ்விலங்கிற்கு முரித்து. பறழென்பது பன்றிக்கும், புலிக்கும், முயற்கும், நீர்நாய்க்கும், கோடுவாழ்விலங்கிற்கு முரித்து. குருளை யென்பது ஆளி, புலி, பன்றி, நாய், மான், முசு, பாம்புகட்குரித்து. மறி யென்பது ஆடு, மான், குதிரை, கழுதைகட்குரித்து. கன்றென்பது பசு, எருமை, ஆமா, மரைமா, கவரிமா, மான், ஒட்டகம், யானை, ஒருசார் ஓரறிவுயிர்கட் குரித்து. குட்டியென்பது சிங்கம், புலி, கரடி, யானை, குதிரை, ஒட்டகம், மான், ஆடு, நாய், பன்றி, முயல், நரி, குரங்கு, முசு, கீரி, நாவி, வெருகு, பாம்பு, அணில், எலி என்பனவற்றிற் குரித்து. பொரியென்பது எருமைக்குரித்து. [2]குழவென்பது ஆவினங்கன்றுக்கும் எருமைக்கன்றிற்கு முரித்து. களபமென்பது யானைக்குரித்து.

இனி, இவற்றை இவ்வாறன்றி, மடப்பிடிமக, மான்பிணைமக; யாமைக்குழவி, நாரைக்குழவி; ஆவின்பிள்ளை, மேதிப்பிள்ளை; யானைப்பார்ப்பு, குதிரைப்பார்ப்பு; அன்னப்பறழ், ஆமான்பறழ்; கொக்கின்குருளை, குரங்கின்குருளை; யானைமறி, எருமைமறி; முசுவின்கன்று, மூங்காக்கன்று; பசுவின்குட்டி, எருமைக்குட்டி * என இவ்வாறு வழங்கின் மரபுவழுவாமென்க.

* பொரி, குழ, களபமென்றவற்றிற்கு ஒருபிரதியிலும் உதாரணம் கிடைத்திலது.

இனி, கை, விரல், முலை, கண், நுதல், கூந்தல், ஏடு, தோடு, இதழ், ஓலை, ஈர்க்கு, மடல், பாளை, குரும்பை, குலை, தாறு, சுளை, வீழ், நுகும்பு, இலை, அடை, 3பொகுட்டு, குரல், நெல் என்றற்றொடக்கத்தன சினையறிசொற்களாம்; இவற்றுள், கையென்பது மக்கள், யானை, புலி, கரடி, கோடுவாழ்விலங்குகட்குரித்து. விரலென்பது மக்கள், கரடி, கோடுவாழ்விலங்கு, நாய்கட்குரித்து. முலை என்பது மக்கள், ஆ, எருமை, ஆடு, நாய், பன்றிகட்குரித்து. 4கண்ணென்பது (கட்பொறி) ஓரறிவுயிர்களுள், கமுகு, கரும்பு, மூங்கில்; பீலி, தோற்கருவி, தேங்காய்கட்குரித்து. நுதலென்பது மக்கள், யானை, ஒருசார் புட்கட்குரித்து. கூந்தலென்பது பெண்டிர், பிடி, குதிரை, பனை, கமுகுகட்குரித்து. ஏடென்பது பனை, பூவிதழ்கட்குரித்து. தோடென்பது பனை, தெங்கு, தாழை, பூவிதழ்கட்குரித்து. இதழென்பது கண்ணிமை, உதடு, பூவிதழ், பனைகட்குரித்து. ஓலையென்பது பனை, தெங்கு, தாழைகட்குரிதது. ஈர்க்கென்பது தெங்கு, பனை, மா, வேம்பு, பறப்பனவற்றிற்குரித்து. மடலென்பது பனை, தெங்கு, கமுகு, வாழை, தாழை, காந்தள், ஈந்திற்குரித்து. பாளையென்பது தெங்கு, கமுகு, மூங்கில், ஈந்துகட்குரித்து. குரும்பையென்பது தெங்கு, பனைகட்குரித்து. குலையென்பது தெங்கு, கமுகு, வாழை, ஈந்து, பனை, காந்தட்குரித்து. தாறென்பது கமுகு, வாழை, ஈந்துகட்குரித்து. சுளையென்பது பலா, பருத்தி, பாகற்பழங்கட்குரித்து. வீழென்பது, ஆல், இறலி, தாழை, சீந்தில்கட்குரித்து. நுகும்பென்பது பனை, வாழை, மரல், புல் என்பவற்றிற்குரித்து. இலை என்பது பனை, ஈந்து, தெங்குகட்குரித்து. அடையென்பது தாமரை, ஆம்பல், நெய்தற்றொடக்கத்து நீர்நிலை ஓரறிவுயிர்கட்கும் தாம்பூலத்திற்குமுரித்து. 5பொகுட்டென்பது தாமரைக்கும் கோங்கிற்குமுரித்து. குரலென்பதுபெண்டிர்மயிர்க்கும் 6ஐயறிவுயிரின்மிடற்றிற்கும், தினை, வரகு, பூளை, நொச்சி, பதவம், மற்றப்புற்கட்குமுரித்து. நெல்லென்பது சாலிமுதற்பைங்கூழிற்கும் மூங்கிற்கும் 7ஐவனத்திற்கு முரித்து. பிறவுமன்ன.

இனி, இவை இவ்வாறன்றி, எருமைக்கை, அரிமாவிரல், கோழி முலை, தெங்கின்கண், குதிரை நுதல், மஞ்ஞைக்கூந்தல், தாழையேடு, வேப்பந்தோடு, ஈந்திதழ், கமுகோலை, தாழையீர்க்கு, பலாமடல், தாழைப்பாளை, மாங்குரும்பை, பலாக்குலை, மாந்தாறு, வாழைச்சுளை, அத்திவீழ், புளியநுகும்பு, புல்லிலை, 8தாழையடை, குவளைப்பொகுட்டு, நெற்குரல், இறுக்கநெல்லெனவரின், மரபுவழுவாமென்க.

இனி, இவ்வாறே ஆண்பாற்பொருட்பெயரும் பெண்பாற்பொருட்பெயரும் ஏனைப்பாற்பொருட்பெயரும், இடப்பெயரும், காலப்பெயரும், சினைப்பெயரும், பண்புப்பெயரும், தொழிற்பெயரும், மரபுப்பெயரும் வழுவாமல், ஐம்பெருங்காப்பியம், எண்பெருந்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கென்னும் இவ்விலக்கியங்களுள்ளும், விரிந்த உரிச்சொற்பனுவல்களுள்ளுமுரைத்தவாறு அறிந்து வழங்குக.

(பி - ம்.) 1 குழம். 2 குழமென்பது. 3 பொகுடு. 4 கண்ணென்பது, கட்பொறியில்லா ஓரறிவுயிர். 5 பொகுடென்பது. 6 ஐயறிவுயிர் யானையிடற்றிற்கும். 7 புதவத்திற்கும். 8 தாழையடகு, வாழைப்பொகுடு. (௩௭)

(388.) **வேறுவினைப் பல்பொருடழுவியபொதுச்சொலும்**
**வேறவற் றெண்ணுமோர் பொதுவினைவேண்டும்.**

எ - ன், மரபுவழுவற்கவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேறுபட்ட வினைக்குரிய பொருள் பலவற்றையும் ஒருங்குதழுவிநிற்கும் பொதுச்சொற்களும், வேறுவினையையுடையவாய் எண்ணி வினைகொடுக்கும் பலசொற்களும் ஒன்றற்குரியவினையன்றி அவற்றிற்கெல்லாம் பொதுவான வினைகொடுத்துச்சொல்லவேண்டுவனவாம். எ - று.

வ - று. அடிசிலென்பது, உண்பன தின்பன நக்குவன பருகுவனவற்றிற்கெல்லாம்பொதுவாகலான், அதனை, அயின்றார், மிசைந்தார், கைதொட்டாரென்க. அணியென்பது, கவிப்பன கட்டுவன இடுவன தொடுவன பூண்பனவற்றிற்கெல்லாம் பொதுவாதலால், அதனை, அணிந்தார், மெய்ப்படுத்தார், தாங்கினாரென்க. [1]இயமென்பது, கொட்டுவன ஊதுவனமுதலானவற்றிற்கெல்லாம் பொதுவாகலான், அதனை, இயம்பினார், படுத்தாரென்க. படையென்பது, எய்வன எறிவன வெட்டுவன குத்துவனவற்றிற்கெல்லாம் பொதுவாதலான், அதனை, தொட்டார், வழங்கினார், பயிற்றினாரென்க.

இனி, எண்ணியவழியும், குழையும் தோடும் நாணுமணிந்தார், யாழும் குழலும் பறையுமியம்பினார் எனவரும். பிறவுமன்ன.

சோறும் கறியும் தின்றார்; யாழும் குழலும் ஊதினாரெனின், வழுவாம்; *"எண்ணுங் காலு மதுவதன் மரபே" என்பது தொல்காப்பியம்.

(பி - ம்.) 1 வாச்சியமென்பது. (௩௮)

* கிளவி. ௪௭.

(389.) வினைசார் பினமிட மேவி விளங்காப்
பலபொரு ளொருசொற் பணிப்பர்சிறப்பெடுத்தே.

இதுவுமது.

(இ - ள்.) வினையானும் சார்பானும் இனத்தானும் இடத்தானும் பொதுமைநீங்காப் பலபொருளொருசொற்களை அவற்றிற்கேற்ற சிறப்பொடுங்கூட்டிச் சொல்லுவர், புலவர் எ - று.

வ - று. மா எ - து, மாமரத்திற்கும், வண்டிற்கும், விலங்கிற்கும், திருவிற்கும் பொதுவான பலபொருளொருசொல். அவற்றுள், மா பூத்தது, காய்த்தது என்றவழி, மரமென்பது வினையால் விளங்கிற்று. "மாவீழ் நொச்சி மணிக்குர லூழ்த்தது" என்றவழி, வண்டென்பது சார்பினால் விளங்கிற்று. மாவும் நாயும் வளர்ந்தனவென்ற வழி, விலங்குமாவென்பது இனத்தால் விளங்கிற்று. *"மாமறுத்த மலர்மார்பின்" என்றவழி, திருவென்பது இடத்தான் விளங்கிற்று.

இனி, பலகன்றும் ஒருங்குளவழி, கன்றுவளர்ந்தது, கன்றுக்கு நீரூட்டுகவென்றால், இன்னகன்றென்று அறியலாகாது; அவை மாங்கன்றுவளர்ந்தது, மருதங்கன்று வளர்ந்தது; ஆன்கன்றுக்குநீரூட்டுக, மான்கன்றுக்கு நீரூட்டுக என்றற்றொடக்கத்தன, சிறப்பான்விளங்கின. பிறவுமன்ன. (ந௯)

(390.) எழுத்திய றிரியாப் பொருடிரி புணர்மொழி
இசைத்திரி பாற்றெளி வெய்து மென்ப.

இதுவுமது.

(இ - ள்.) எழுத்து ஒருதன்மையவாயும் பொருள்வேறுபட்டும் வரும் புணர்ச்சிமொழிகள் இசையை எடுத்தும் படுத்தும் வேறுபடுத்தியுச்சரித்தாற் பொருள்வேறுபாடு விளங்குமென்று விளம்புவர், மேலோர், எ - று.

வ - று. செம்பொன்பதின்றொடி, குறும்பரம்பு, ஆற்றுக்கரை, செம்பருத்தி, நாகன்றேவன்போத்து, [1]தாமரைக்கண்ணியார், குன்றேறுமா என்பவை. இவற்றை வேறுபட உச்சரித்துக் கண்டுகொள்க. பிறவுமன்ன.

(பி - ம்.) [1] (க) தாமக்கண்ணியார்; (உ) தாமாக்கண்ணியார். (௯0)

* புறநா. எ.

(391.) ஒருபொருண் மேற்பல பெயர்வரி னிறுதி
ஒருவினை கொடுப்ப தனியு மொரோவழி.

இதுவுமது.

(இ - ள்.) ஒரு பொருளின்மேற் பலபெயர்கள் அடுக்கி வரின், அவற்றிற்கெல்லாம் ஈற்றிலே ஒருவினையைக் கொடுப்பர்; அவையன்றிச் சிறுபான்மை பெயர்தோறும் ஒருவினையைக் கொடுத்தும் வழங்குவர், பெரியோர். எ - று.

வ - று. ஆசிரியன்பேரூர்கிழான்செயிற்றியன்இளங்கண்ணன் சாத்தன்வந்தான், பாண்டியன்பல்யாகசாலைமுதுகுடுமிப்பெருவழுதி வந்தானென்றாற் பெயர்களனைத்தும் அவர்மேல் நிற்கும்; இனி, ஆசிரியன்வந்தான், பேரூர்கிழான்வந்தான், செயிற்றியன்வந்தான், இளங்கண்ணன்வந்தான், சாத்தன் வந்தானென்றால், அனைத்தும் அவன் மேற் செல்லாவாம்; இனி, ஒரோவழி: "எந்தைவருகவெம்பெருமான்வருக, மைந்தன்வருக மதலைவருக" எ - ம், *"மின்றோய் வரைகொன்ற வேலோன் புகுதக, வின்றேன் கமழ்தாரியக்கன் புகுதக, வென்றோன் புகுதக வீரன் புகுதக, வென்றே நகரமெதிர்கொண் டதுவே" எ - ம் பெயர்தோறும் ஒருவினைவந்தன.

இனி, எந்தைவருக; எம்பெருமான் போக; மைந்தன்நிற்க; மதலையிருக்க என்றால் ஒருவினையன்மையின் ஏலாவென்க. பிறவுமன்ன. ஒரோவழி - சிறுபான்மை. (சுக)

(392.) திணைநிலஞ் சாதி குடியே யுடைமை
குணந்தொழில் கல்வி சிறப்பாம் பெயரோ
டியற்பெய ரேற்றிடிற் பின்வரல் சிறப்பே.

இதுவுமது.

(இ - ள்.) திணைப்பெயர்முதலான இப்பெயர்களுடனே 'இயற்பெயர் அடுத்துச் சொல்லுங்கால், அவ்வியற்பெயரை ஏனைப்பெயர்களுக்குப் பின்னேசொல்லுதல் சிறப்புடைத்து. எ - று.

"இயன்று வரும் பெயரியற்பெய ராகும்."

வ - று. குன்றவன்குறவன், அருவாளனழகன், பார்ப்பான் பாராயணன், சேரமான்சேரலாதன், ஊர்கிழானோணன், மெய்யன்

* சீவக. உசஉஉ.

மேற்றிசைநின்றான், நாடகிநம்பி, ஆசிரியன் அமிழ்தன், ஏனாதி ஏற னெனக்காண்க.

'பின்வருக' என்றுவிதியாது, 'பின்வரல்சிறப்பு' என்றதனால், சிறுபான்மை, வெண்கொற்றப் படைத்தலைவன், வெள்ளேறக்காவிதி யென வரப்பெறுமாயினும் அவை சிறப்பிலவெனக்கொள்க.

பசுநங்கை வந்தது, எருதேறன்வந்ததென அஃறிணைக்குங் கொள்க.

(பி - ம்.) 1 இயற்பெயரொடுத்துச் சொல்லுங்கால். (சஉ)

(393.) படர்க்கைமுப் பெயரோ டணையிற் சுட்டுப்
பெயர்பின் வரும்வினை யெனிற்பெயர்க் கெங்கும்
மருவும் வழக்கிடைச் செய்யுட் கேற்புழி.

இதுவுமது.

(இ - ள்.) படர்க்கையிடத்தவான உயர்திணை அஃறிணை விரவுத்திணைப் பெயர்களுடனே சுட்டுப்பெயர் வினைக்கண்வருமாயின், அஃது அவற்றின்பின்னேவரும்; பெயர்க்கண்ணாயிற் பின்னும் முன்னும் வரும், வழக்கினுள்; செய்யுட்கண்ணே யெனின், இன்னவிடத் தென்னும் நியதியின்றி அப்பெயர்களுடனே வேண்டியவிடத்து வரப்பெறும். எ - று.

வ - று. வழக்கு: நம்பிவந்தான், அவற்குச் சோறுகொடுக்க; எருதுவந்தது, அதற்குப் புல்லிடுக; சாத்தன்வந்தான், அவற்குச் சோறுகொடுக்க; சாத்தன்வந்தது, அதற்குப் புல்லிடுகவென வினைக் கட்சுட்டுப்பெயர் பின்னேவந்தது; சாத்தனவன், அவன் சாத்தனெனப் பெயர்க்கண் அஃது ஈரிடத்தும்வந்தது. அவன் வந்தான், நம்பிக்குச் சோறுகொடுக்களன்றற்றொடக்கத்தன ஆகாவென்க.

இனி, செய்யுள்: "அவனணங்கு நோய்செய்தா னாயிழாய் வேலன், விறன்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி—முகனமர்ந், தன்னை யலர்கடப்பந் தாரணியி லென்னைகொல், பின்னை யதன்கண் விழைவு." சேந்தன், இயற்பெயர். பிறவுமன்ன. (சங)

(394.) அசைநிலைபொருணிலை யிசைநிறைக்கொருசொல்
இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை யடுக்கும்.

எ - ன், மரபு வழூவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அசைநிலைக்கண்ணும், விரைவு வெகுளி உவகை அச்சம் அவலமுதலிய பொருணிலைக்கண்ணும், இசைநிறைத்தற் பொருட்டும் ஒருசொல், இரண்டும் மூன்றும் நான்கும் எல்லையாக அடுக்கிவரப்பெறும். எ - று.

அசைநிலைக்கு இரண்டு அடுக்கும்; பொருள்நிலைக்கு இரண்டும் மூன்றும் அடுக்கும்; இசைநிறைக்கு இரண்டும் மூன்றும் நான்கும் அடுக்கும்.

வ - று. ஒக்கும் ஒக்கும், மற்றோமற்றோ, அன்றேஅன்றே என்பன அசைநிலை. கள்ளர்கள்ளர், பாம்புபாம்பு; தீத்தீத்தீ, போ போபோ என்பன விரைவு. எய்எய்; எறிஎறிஎறி என்பன வெகுளி. வருகவருக; பொலிகபொலிகபொலிக என்பன உவகை. படைபடை; எங்கே எங்கே எங்கே என்பன அச்சம். உய்யேன்உய்யேன்; வாழேன் வாழேன் வாழேன், மயிலே மயிலே மயிலே, மடவாய் மடவாய் மடவாய்; "புயலே ரொலிகூந்த லினியா யினியாய், குயிலேர் கிளவிநீ யுரையா யுரையா, யயில்வே லடுகண் ணழகிஇ யழகிஇ", * "ஐயாவென் னையாவென் னையா வகன்றனையே." என்பன அவலம்; இவை பொருணிலை. [1]"ஏஎ அம்பன் மொழிந்தனள் யாயே;" [2]"நல்குமே நல்குமே நல்குமே நாமகள்;" "பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ." இவை இசைநிறை. பிறவுமன்ன.

"அசைநிலை யிரண்டினும் பொருண்மொழி மூன்றினு, மிசைநிறை நான்கினு மொருமொழி தொடரும்" என்றார், அகத்தியனார்.

(பி - ம்.) [1] (க) ஏயேயம்பல் (உ) ஏஎ ஏஎ யம்பல். [2] நல்குமோ...... நல்குமோ. (௪௪)

## (395.) இரட்டைக் கிளவி [1]யிரட்டிற் பிரிந்திசையா.

எ - ன், மரபுவழுவற்கவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) [2]இரட்டித்து நிற்குஞ்சொற்கள் அவ்விரட்டிப்பிற் பிரிக்கப்பெறா. எ - று.

வ - று. செழுசெழுத்தார், மொடுமொடுத்தார் எ - ம், "கொறுகொறுத்தா ரென்றொருவர் கூறுங்கா லுள்ளந், துடிதுடித்துத் [3] துள்ளி விடும்", †"சலசல மும்மதஞ் சொரியத் தத்தமுட், கொலைமருப் பிரட்டைகள் குளிப்ப," ‡"கலகல, கூஉந்துணை யல்லாற்

* சீவக. ௧௮0௨. † ஷை ௮௨. ‡ நாலடி. கல்வி. ௧0.

கொண்டு தடுமாற்றம், போஒந் துணையறிவா ரில்", * "வற்றிய வோலை கலகலக்கு மெஞ்ஞான்றும், பச்சோலைக் கில்லை யொலி." † "குறுகுறு நடந்து சிறுகை நீட்டி, யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்" எ - ம் வரும். இரட்டைக்கிளவியென்றமையான், இவை இரண்டின் இறவாவெனக்கொள்க; இறந்துநின்று ஒருசொற்பொருள்படின், இவையாகாவென்க.

(பி - ம்.) [1] இரட்டுப். [2] இரட்டையாக நிற்குஞ் சொற்கள். [3] துள்ளி வரும். (சரு)

(396.) ஒருபொருட் பலபெயர் பிரிவில [1]வரையா.

இதுவுமது.

(இ - ள்.) ஒருபொருள்கருதிவரும் பலபெயர், பொருளின்நீங்காவாயின், ஒருபொருட்குப் பலபெயர்வந்தனவென்று கடியப்படா. எ - று.

'பிரிவில வரையா' எனவே, பிரிவனகடியப்படுமெனக்கொள்க.

வ - று. "வையைக் கிழவன் வயங்குதார் மாணகலந், தையலா யின்றுநீ நல்கினை நல்காயேற், கூடலார் கோவொடு நீயும் படுதியே, நாடறியக் கவ்வை யொருங்கு." இதுபிரிவின்றி இருபெயர் வந்தது. "கொய்தளிர்த் தண்படலைக் கூத்தப் பெருஞ்சேந்தன், வைகலு மேறும் வயக்களிறே - கைதொழுவல், காலேக வண்ணனைக் கண்ணுரக் காணவெஞ், சாலேகஞ் சார நட." இது, காலேகவண்ணம் இவனுக்கே உரிமைத்தன்மையிற் பிரிக்கப்படுதலின், ஆகாதென்க. பிறவுமன்ன. வடமொழிக்கு இரண்டல்லாதவெல்லாம் பலவென்றும் தமிழுக்கு ஒன்றல்லாதவெல்லாம் பலவென்றும் அறிக.

(பி - ம்.) [1] வரையார். (சசு)

(397.) ஒருபொருட் பன்மொழி சிறப்பி னின்வழா.

எ - ன், மரபுவழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருள்வேறின்றி ஒருபொருளைக்குறித்து வரும் பலசொற்கள், அப்பொருளைச் சிறப்பித்தலின், வழுவென்றுநீக்கப் படா. எ - று.

வ - று. அவன்றான், அதுதான் எ - ம், "மீமிசைஞாயிறு கடற்பாய்ந் தாங்கு," ‡ "விலங்ககன்ற வியன்மார்ப," § "ஆடுபசி

* நாலடி. அறிவின்மை. சு. † புறநா. கஅஅ. ‡ ஷை ந. § பொருந. சுக.

யுழந்தநின் னிரும்பே ரொக்கலொடு," *"உயர்ந்தோங்குபெருவரை யூறின்றேறலின்," "மழவிளமரையான்பாறேனளாய் மாந்துகென்பார்", †"குழிந்தாழ்ந்த கண்ணவாய்த் தோன்றி," ‡"கறைமிடறணியலு மணிந்தன் றக்கறை." §"உண்ணலுமுண்ணேன் வாழலும்வாழேன்," ||"நனிபெரிதும், வேற்கண்ண ளென்றிவளை வெஃகன்மின்" எ-ம் வரும்.

அஃதேதல், "பூமலர்", ¶"பூம்போது", **"களிற்றொருத்தல்", ††"கேழற்பன்றி" என்றற்றொடக்கத்தனவோவெனின், அவை: பூவென்பது பொலிவினையுணர்த்தலானும், களிறென்பது எருமையினொருத்தல்முதலாயினவற்றை நீக்குதலானும், கேழலென்பது எய்ப்பன்றிமுதலானவற்றை நீக்குதலானும் பொருள்வேறுபாடுடைமையின், ஒருபொருட் பன்மொழி யாகா; பண்புத்தொகையுள் அடங்குமென்க. (௪௭)

(398.) இனைத்தென் றறிபொரு ளுலகி னிலாப்பொருள்
வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும்.

எ-ன், மரபுவழுவற்கவென்பது உணர்த்துதல்நுதலிற்று.

(இ-ள்.) இத்துணைத்தென்று வரையறுத்து உணர்த்தப்படும் பொருளாதி எப்பொருள்களும் உலகின்கண் இல்லாதபொருள்களும் வினையொடு கூட்டிச்சொல்லுங்கால் உம்மைகொடுத்துச்சொல்லுக. எ-று.

வ-று. தமிழ்நாட்டு மூவேந்தரும்வந்தார், தேவர்முப்பத்துமூவரும்வந்தார், நமர்நால்வரும்வந்தார், உலகமூன்றும் ஒருங்குணர்ந்தான், காலமூன்றும் கண்டான், கண்ணிரண்டும் சிவந்தான், குணமூன்றும்கூறினான், தொழிலாறும்தோற்றினான் எ-ம், பவளக்கோட்டு நீலயானை பண்டுமில்லை, முயற்கோடும் ஆமைமயிரும் அம்மிப்பித்தும், துன்னூசிக்குடரும் ஈங்குமில்லை, என் [1]அகங்கைக்கும் மயிரில்லை, இக்கழுதைக்கும் கோடில்லை எ-ம் வரும். "கடுவன் முதுமகன் கல்லா [2]மூலற்கு, வதுவை வந்த வன்பறழ்க் குமரி, யிருதோட்டோழர் பற்ற", "எருமை நாற்கால் நீர்க்கீழ்வே", [3]"கண்களியாச் சென்றமர்ப்பக் கைநாஞ்சின் மேலசைஇ யொண்குழை

* மலைபடு. ௪௧. † நாலடி. தூய். ௯. ‡ புறநா. கடவுள். § கலி. உ௯. || நாலடி. இளமை. ௭. ¶ புறநா. உ௮. ** கலி. உ. †† புறநா. ௧௫உ.

பொன்முரல்கி பெருத்தலைப்ப." என்றற்றொடக்கத்தன, செய்யுள் விகாரத்தால், வந்த உம்மைதொக்கனவெனக்கொள்க.

இனி, தமிழ்நாட்டு மூவேந்தர்வந்தார், பவழக்கோட்டு நீல யானை பண்டில்லையெனின், 4வேறும் அரசருளரெனவும், இன்று இவ்வியானை உண்டெனவும் வரும்.

'வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும்' எனவே, வினைப் படாதவிடத்து உம்மைவேண்டுவனவும், வேண்டாதனவும் உளவெனக்கொள்க.

இவையிரண்டும் சே, இவைஇரண்டும் பசு எ - ம், வீடொன்று, அறமிரண்டு, குற்றமூன்று, பொருள்நான்கு, பொறியைந்து எ - ம் வரும். பிறவுமன்ன.

(பி - ம்.) 1 அங்கைக்கும். 2 மூவற்குவதுவையமைந்த. 3 கண்களி யாற். 4 வேறரசர். (சஅ)

## (399.) செயப்படு பொருளைச் செய்தது போலத் தொழிற்படக் கிளத்தலும் வழக்கினு ளுரித்தே.

இதுவுமது.

(இ - ள்.) தற்செய்கையின்றிப் பிறராற்செய்யப்படும்பொருளைத் தன்செய்கைத்துப்போலத் தொழிற்படக்கிளத்தலும் வழக்கடிப்பாட்டிற்கு உரித்து. எ - று.

எனவே, இலக்கணமன்றேனும் கருமத்தையும் கருவியையும் கருத்தாவாகச்சொல்லினும் 1அமைகவென்பதாயிற்று.

வ - று. இல்லம் மெழுகிற்று, சோறுஅடாநின்றது, பொன் வரும் எ - ம், சுரிகை குத்தும், எழுத்தாணி எழுதாநின்றது, வாள் எறியும் எ - ம் காண்க.

(பி - ம்.) 1 வழுவமைதியின் அமைக்க. (சகூ)

## (400.) பொருண்முத லாறு மடைசேர் மொழியினம் உள்ளவு மில்லவு மாமிரு வழக்கினும்.

எ - ன், மரபியலுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருளாதியாறனையும் அடையாகஅடுத்துவருமொழிகள் இனத்தைக்காட்டுவனவும் காட்டாதனவுமாம்; வழக்கிடத்தும் செய்யுளிடத்தும். எ - று.

வ - று. [1]நெய்க்குடம், குளநெல், கார்த்திகைவிளக்கு, பூந்தோடு, செந்தாமரை, குறுங்கூலி எ - ம், உப்பளம், ஊர்மன்று, (* கீழ்நோக்கியகிணறு, மேல்நோக்கியமரம்), சிறுகாலே, [2]கான்மாடு, செம்போத்து, தோய்தயிர் எ - ம் வழக்கிடத்து இனமுள்ளனவும் இல்லனவும் வந்தவாறு.

†"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்", ‡"கானியாற் றடைகரை யூரினிது", "முந்நாட் பிறையின் முனியாது வளர்ந்தது", §"கலவ மாமயி லெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா", ||"சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்", ¶"ஆடுபாம் பெனப்புடை யகன்ற வல்குன்மேல்" எ - ம், **"பொற்கோட் டிமயமும் பொதியிலும் போன்றே", ††"தென்குமரி வடபெருங் கல்", ‡‡"வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன", §§"சிறகர் வண்டு செவ்வழி பாட மாடத் தூடெலா, மிறைகொள் வானின் மீனென வரம்பை மூலெயி னிருந்தவே", ||||"செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும், வெண்டிங்களுள் வெயில்வேண்டினும்", ¶¶"முன்னைத் தஞ்சிற்றின் முழங்கு கடலோத மூழ்கிப் போக" எ - ம் செய்யுளில் இனமுள்ளனவும் இல்லனவும் வந்தவாறு.

***"இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை, வழக்கா றல்ல செய்யு ளாறே" என்பதனால், இவை முடியுமாறு அறிந்துகொள்க.

(பி - ம்.) 1 நொய்க்குடம். 2 காலிமாடு. (௫௦)

(401.) **அடைமொழி யினமல் லதுந்தரு மாண்டுறின்.**

எ - ன், மேலதற்கு எய்தாது எய்துவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) அடையடுத்தமொழி அதற்கு இனமல்லதனையும் காட்டும், அவ்விடத்திற்குப் பொருத்தமுடைத்தாயின். எ - று.

வ - று. சுமந்தான் விழுந்தான், புதுப்புனல் வந்தது, இருள் புலர்ந்தது என்பன, சுமக்கப்பட்டது வீழ்ந்தது, மழைபெய்தது, சுடர்தோன்றிற்றென்பனவற்றை முறையே விளக்கினவாறுகாண்க. பிறவுமன்ன.

* இவை சிலாசாசனவாக்கியங்கள். † திருக்குறள், ௯௧௩. ‡ இனியது. ௫. § சீவக. ௧௫௫௮. || குறு. ௧௮. ¶ சீவக. ௧௦௦௭. ** புறநா. உ. †† ஷை ௧௭. ‡‡ ஷை ௩௨௧. §§ சீவக. ௭௪. |||| புறநா. ௩௮. ¶¶ தொல். செய். சூ. ௬௪ - உரை. *** தொல். கிளவி. ௧௮.

மேலைச்சேரிக்கோழி [1]அலைத்ததென்றாற் கீழைச்சேரிக்கோழி அலைப்புண்டதென்பதும், "ஆவாழ்கவந்தணர்வாழ்க" என்றாற் பிறர் கெடுகவென்னுமையும் மேலிற் சூத்திரத்தானேமுடிதலின், இன்ன இதற்குப்பொருளாகாவென்றற்கு 'ஆண்டுறின்' என்றாரென்க.

"விதந்த மொழியினம் வேறுஞ் செப்பும்" என்றார், பரிமாணனார்.

(பி - ம்.) [1] அழைத்ததென்றாற்கீழைச்சேரிக்கோழியழைப்புண்டது.

(402.) அடைசினை முதன்முறை யடைதலு மீரடை
முதலோ டாதலும் வழக்கிய லீரடை
சினையொடு செறிதலு மயங்கலுஞ் செய்யுட்கே.

எ - ன், மரபுவழுவற்கவென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒன்றைச்சொல்லுங்கால், அடை சினை முதலெனக் கிடந்தமுறையே சொல்லுதலும், இரண்டு அடையை முதலுடனே சேர்த்துச்சொல்லுதலும் வழக்கினுள் இயல்பாம்; இரண்டடையைச் சினையொடு சேர்த்துச்சொல்லுதலும் வேண்டியவாறு மயங்கச்சொல்லுதலும் செய்யுட்கண் இயல்பாம். எ - று.

வ - று. பெருந்தலைச்சாத்தன், [1]செங்கால்நாரை, நெட்டிலைத்தெங்கு எ - ம், இளம்பெருங்கூத்தன், *சிறுகருங்காக்கை எ - ம் வழக்கினுள் வந்தவாறு. "சிறுபைந் தூவியிற் செயிரறச் செய்த", "கருநெடுங் கண்டருங் காம நோயே" எ - ம், "பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை" எ - ம் செய்யுளுள் மயங்கி வந்தன. பிறவுமன்ன.

(பி - ம்.) [1] செங்கணாரை. (ருஉ)

(403.) இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்.

இதுவுமது.

(இ - ள்.) உலகத்துப் பொருள்களெல்லாம் இயற்கைப்பொருளும் செயற்கைப்பொருளுமென இருவகையவாம். அவற்றுள், இயல்பாகவாயநின்றபொருளைச் சொல்லுமிடத்து இத்தன்மையதென்று சொல்லல்வேண்டும். எ - று.

---

* ஐங்குறு. ௩கக.

இவ்வாற்றானும் சொல்லும் பொருளும் வரையறுத்தாராப.

வ - று. நிலம்வலிது, நீர்தண்ணிது, தீவெய்யது, வளி உளரும், உயிருணருமெனவரும். (௫௩)

(404.) **காரண முதலா வாக்கம் பெற்றும்**
**காரண மின்றி யாக்கம் பெற்றும்**
**ஆக்க மின்றிக் காரண மடுத்தும்**
**இருமையு மின்றியு மியலுஞ் செயும்பொருள்.**

இதுவுமது.

(இ - ள்.) காரணச்சொல்லை முன்கொண்டு ஆக்கச்சொல்லொடு வருவனவும், காரணச்சொல்லின்றி ஆக்கச்சொல்லொடுவருவனவும் ஆக்கச்சொல்லின்றிக் காரணச்சொல்லொடு வருவனவும் ஆக்கமும் காரணமுமின்றிவருவனவுமென்னும் இந்நான்மையின் நடக்கும், செயற்கையையுடையபொருள்கள். எ - று.

வ - று. கடிவும் கைபிழியெண்ணெயும் பெற்றமையால் மயிர் நல்லவாயின, எருப்பெய்து இளங்களைகட்டு நீர் காலியாத்தமையாற் பைங்கூழ்நல்லவாயின எ - ம், மயிர் நல்லவாயின, பைங்கூழ் நல்லவாயின எ - ம், கடிவும் கைபிழியெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல, எருப்பெய்து இளங்களைகட்டு நீர்காலியாத்தமையாற் பைங்கூழ் நல்ல எ - ம், மயிர்நல்ல, பைங்கூழ்நல்ல எ - ம் முறையே நான்மையும் வந்தவாறு காண்க.

*"பல்லார்தோ டோய்ந்து வருதலாற் [1]பாய்புனல் வயலூரநின் றார்புலால் - புல்லெருக்க, மாசின் மணிப்பூணெம் மைந்தன் மலைந்தமையாற், காதற்றாய் நாறு மெமக்கு." என்றற்றொடக்கத்தனவும் அதன்பாற்படுத்தறிக. இது, பரத்தையிற் பிரிந்துவந்த கிழவனோடு புலந்துரைக்கின்றாளாதலின், [2]தார் புலால்நாறுதற்குக் காரணம் பரத்தையரொடுகூடலென்பதூஉம், எருக்கங்கண்ணி நறிதாதற்குக்காரணம் தலைவன்செய்ததீங்கு தன் புதல்வன் இனிய முகத்தால் தணிக்குமன்பென்பதூஉம் பெறப்படுகின்றன. 'தார்' என்ற சொல், ஆக்கமின்றிக் காரணமடுத்தது.

(பி - ம்.) [1] பூம்பொய்கை. [2] குவளைபுலால். (௫௪)

* தொல். கிளவி. சூ. ௫௬, ந. உரை.

(405.) தம்பா லில்ல தில்லெனி [1]னினனு
யுள்ளது கூறி மாற்றியு முள்ளது
சுட்டியு முரைப்பர் சொற்சுருங்கு தற்கே.

இதுவுமது.

(இ - ள்.) ஒருவன் ஒன்றை வினவினால் அது தம்பக்கலில்லை யென்று உரைக்கவேண்டின், அவன் வினயதற்கு இனமாய்த் தன் பக்கலுள்ளதனைச்சொல்லி வினயதனை இல்லையென்றும், உளதாயின் அதனை இத்துணையுண்டென்றுசுட்டியும்சொல்லுவர் தொல்லோர், உரை [2]பல்காமற்கு. எ - று.

வ - று. பயறுளவோ வணிகீரேயென்றாற்கு உழுந்தல்லதில்லை; இத்துணைப்பயறுளவென்க. நூறுவிற்கும் பட்டாடையுளவோ என்றாற்கு ஐம்பதுவிற்கும் கோசிகமல்லதில்லை; இத்துணைப்பட்டாடையுளவென்க. பிறவுமன்ன.

(பி - ம்.) [1] இனனுவுள்ளது. [2] பல்காமைக்கு. (௫௫)

(406.) ஈதா கொடுவெனு மூன்று முறையே
இழிந்தோ னொப்போன் மிக்கோ னிரப்புரை.

இதுவுமது.

(இ - ள்.) ஈயென்னுஞ்சொல் ஈவானின் இழிந்த இரப்போன் சொல்லுவதாம்; தாவென்னுஞ்சொல் ஈவானொடு ஒக்கும் இரப் போன் சொல்லுவதாம்; கொடுவென்னுஞ்சொல் ஈவானின் மிக்க இரப்போன் சொல்லுவதாம். எ - று. (௫௬)

(407.) முன்னத்தி னுணருங் கிளவியு முளவே.

இதுவுமது.

(இ - ள்.) சொற்கிடந்தவாறன்றிச் சொல்லுவான் குறிப்பினானே வேறுபொருள்பட வருஞ்சொற்களும் சிலவுளவாம். எ - று.

வ - று. "செஞ்செவியர் வெள்ளொக்கலர்" என்றவழி, செவ்வென்று உதிரஞ்சொரியுஞ்செவியர், வெள்ளிய சுற்றத்தாரென்பதன்று; செவியெல்லாம் சாலச் செம்பொனணிந்தார், முட்டில் செல்வத்துக் கிளையினையுடையா ரென்றவாறு; 'வெள்ளொக்கலர்' என்பது மாசற்ற சுற்றத்தினையுடையாரென்றுமாம். " குழைகொண்டு கோழியெறியும்

வாழ்க்கையவர்" என்றவழி, கோழியெறிவாரென்றுணரற்பாலதன்று; ஒன்றானும் முட்டில் செல்வத்தாரென்றவாறு. பிறவுமன்ன. (௫௭)

(408.) கேட்குந போலவுங் கிளக்குந போலவும்
இயங்குந போலவு மியற்றுந போலவும்
அஃறிணை மருங்கினு மறையப் படுமே.

இதுவுமது.

(இ - ள்.) இத்தொழில்களில்லனவும் உள்ளனபோல அஃறிணையிடத்தும் சொல்லப்பெறும். எ - று.

வ - று. *"நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு, மென்னீரள் யாம்வீழ் பவள்", †"காவலமென் றேரைக் கண்ட திலேயோ, விரவெலா நின்றுயா வீர்ங்கதிர்த் திங்காள்" எ - ம், ‡"பகையு முவகையுங் கண்ணுரைக்கும்", §"மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலுந், தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால்", நிலம் வல்லென்றது, நீர் தண்ணென்றது எ - ம், இந்நெறி இன்னவூர்க்குச்செல்லும், இம்மலை இன்னுழிவந்துகிடக்கும், கடல் இத்துணை ஆழ்ந்துகிடக்கும், நிலம் இத்துணை அகன்றுகிடக்கும் எ - ம், ||"தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின், றன்னெஞ்சே தன்னைச் சுடும்", ¶"வண்சிறைப் பவளச் செவ்வாய்ப் பெடையன மடமை கூரத், தண்கய நீருட் கண்ட தன்னிழல் பிறிதென் றெண்ணிக், கண்டனங் கள்வ மற்றுன் காதலி தன்னை நீர்க்கீழ்ப், பண்டைய மல்லம் வேண்டா படுக்கவென் றூடிற் றன்றே", **"கருவிரற் செம்முக வெண்பற்சூன் மந்தி, பருவிரலாற் பைஞ்சுனைநீர் தூஉய்ப் - பெருவரைமேற், [1]றேன்றேவர்க் கோக்கு மலைநாட வாரலோ, வான்றேவர் கொட்கும் வழி" எ-ம் முறையே காண்க. பிறவுமன்ன.

(பி - ம்.) [1] தேன்றேவர்க் கீயும். (௫௮)

(409.) உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள்
[1]பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே.

எ - ன், மரபுவழுவமைப்பும் இவ்வோத்திற்குப் புறநடையும் உணர்த்துதல் நுதலிற்று.

* திருக்குறள், ௧௧௧௧. † "அரவனைமென் றோள்"—(தொல். கள - சூ. ௪௨ - ந. உரை.) ‡ "பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்" என்பது, திருக்குறள், ௭0௬. § சீவக. உ௬௩உ. || திருக்குறள், உ௯௩. ¶ சீவக. ௧௬உ௩ ** திணைமா. ௬0.

(இ - ள்.) உருவகமும் உவமையுமென்னும் இவ்வலங்காரங்கட்கு ஏற்புழி இருதிணையும் தம்முள் மயங்கலும் சினையுமுதலும் தம்முள் மயங்கலும், இவ்வோத்தினுட் சொல்லாதொழிந்தனவும் போற்றி யறிந்துகொள்க. எ - று.

வ - று. *"தருமன் றண்ணளி யாற்றன தீகையால், வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே, யருமை யாலழ கிற்கணை யைந்துடைத், திரும கன்றிரு மாநில மன்னனே." இஃது உயர்திணையும் முதலும் மயங்காது வந்த உருவகம். †"முகந்தா மரைமுறுவன் முல்லைகண் ணீல, மிகந்தார் விரல்காந்த ளென்றென்-றுகந்தியைந்த, மாழைமா வண்டிற்கா நீழல் வருந்தாதே, யேழைதா னேகுமினிது." இஃது அஃறிணையும் சினையும் மயங்காது வந்த உருவகம். "மதிபவள முத்த முகம்வாய் முறுவல்." இது, திணைமயங்காது முதலும் சினையும் மயங்கி வந்த உருவகம். ‡"மன்னர் மடங்கன் மறையவர் சொன்மாலை, யன்ன நடையினார்க் காரமுதந் - துன்னும், பரிசிலர்க்கு வானம் பனிமலர்ப்பூம் பைந்தா, ரெரிசினவேற் றானையெங் கோ." §"தாழிருந் தடக்கையு மருப்புந் தம்பியர், தோழர்தன் றாள்களாச் சொரியு மும்மத, மாழ்கடற் சுற்றமா வழன்று சீவக, வேழுயர் போதக மினத்தொ டேற்றதே". இவை, உயர்திணை அஃறிணையாக மயங்கி வந்த உருவகம். ‖"பட்டவர்த் தப்பலிற் பாவையேந் தல்கு, லட்டொளி யரத்தவாய்க் கணிகை யல்லது, மட்டுடை மணமகண் மலர்ந்த போதினுற், கட்டுடைக் காவலிற் காமர் கன்னியே", ¶"அகழ்கிடங் கந்துகி லார்ந்த பாம்புரி, புகழ்தகு மேகலை நாஞ்சில் பூண்முலை, திகழ்மணிக் கோபுரந் திங்கள் வாண்முகஞ், சிகழிகை நெடுங்கொடி செல்விக் கென்பவே." இவை, அஃறிணை உயர்திணையாக மயங்கி வந்த உருவகம். பிறவுமன்ன.

**"கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாண், மங்கலங் கூறமலிபெய்திக் - கங்கையாள், பூம்புன லாகங் கெழீஇயினான் போரடு தோள், வேம்பார் தெரியலெம் வேந்து.", ††"இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி, னிலமென்னு நல்லா ணகும்", ‡‡"வருந்தி யீன்றாண் மறந்தொழிந்தாள் வளர்த்தாள் சொற்கேட் டில்கடிந்தாண், முருந்தின் காறுங் கூழையை முனிவார் நின்னை யென்முனிவார்,

* சீவக. கசு௦. † திணைமா. எஉ. ‡ பு - வே. பாடாண். க. § சீவக. எஎடு. ‖ ஷை கூஅ. ¶ ஷை கஅசச. ** பு - வே. பாடாண். ௩கூ. †† திருக்குறள், க௦சக. ‡‡ சீவக. ககூகூக.

பொருந்திற் றன்று விதுவென்றுய் பொன்று மளித்திவ் வுயிரென்றுப், திருந்து சோலைக் கருங்குயிலே சிலம்ப விருந்து கூவுதியால்." என்றற்றொடக்கத்தன, உருவகவிலக்கணம் விளங்க நின்றிலவேனும் அதனிடத்து மயங்கி நின்றனவெனக்கொள்க.

"மணியணி வரைநிகர் மாட வாயிலோன்" எ - ம், "திருமகளிவளெனச் செல்வி செல்லுமே", *"இந்திர குமரன் போல விறைமக னிருந்து காண" எ - ம் வருமிவை திணையும் முதலும் மயங்காது வந்த உவமை. †"செம்பவழ மேப்பத் திகழ்ந்திலங்கு சீறடியின், வம்பழகு நோக்கி வழிபடுவ தேசாலும்", "மதிநுதன் மாதர் மதலைபின் சென்றாள்", ‡"கயற்கண் ணிணையுங் காமனன் ஞணையும்" எனவருமிவை, திணைமயங்காது முதலும் சினையும் மயங்கின உவமை. §"மல்லன் மலையனைய மாதவரை வைதுரைக்கும்", ||"ஆளிய மொய்ம்பர்க் களித்தணி சண்பக, நாள்செய் மாலை நகைமுடிப் பெய்பவே" எ - ம், ¶"தேர்ந்தநூற், கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே", **"ஏலங் கமழ்குழ லேழை யவரன்ன, வாலைக் கரும்பி னகநாடணைந்தான்." எ - ம் வருமிவை திணை மயங்கி வந்த உவமை.

இவை பட்டாங்குரைத்தலின், உவப்பினுள் அடங்காவெனக் கொள்க.

'பிறவும்' என்றதனுல், "அடிவண்ண மல்லா லலங்குதார்க் கோதை, முடிவண்ணங் கண்டறியா வேந்து.", ††"நெஞ்சு நடுங் கவலம் பாயத், துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே" இவை, வேத்தியல் அரசியலென்னும் தன்மையையுணர்த்தற்பாலன அத்தன்மையையுடைய மக்களையுணர்த்தி உயர்திணையாய் ஈண்டு அஃறிணையான் முடிதலின், வழுவாயின. இவ்வாறு வருவனவும் பிறவும் அமைத்துக்கொள்க.

(பி - ம்.) 1 பிறழ்வும். (ருகூ)

(410.) யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை [1]விற்பூண்
தாப்பிசை யளைமறி பாப்புக் கொண்டுகூட்
டடிமறி மாற்றெனப் பொருள்கோ ளெட்டே.

எ - ன், பொருள்கோட்பகுதி யுணர்த்துதல் நுதலிற்று.

---

* சீவக. உஉருந. † சூளா. கல். உகூந. ‡ சீவக. கநசசு. § ஷை. உஎஅகூ. || ஷை. கநஉ. ¶ ஷை ருந. ** ஷை கசுகந. †† புறநா. நக.

(இ - ள்.) யாற்றுநீர்ப்பொருள்கோள் முதலாக எட்டாம், பொருள்கொள்ளுமுறைமை. எ - று.

இவற்றை, *"நிரனிறை சுண்ண மடிமறி மொழிமாற், றவைநான் கென்ப மொழிபுண ரியல்பே" என நான்காகவும், †"பூட்டுவில் விதலை யாப்புக் கொண்டுகூட், டொருசிறை நிலையே பாசி [2]நீக்கமென், றுக்கிய வைந்தும் பொருள்கோ ளாகும்" என ஐந்தாகவும், இவ்வெட்டுடனே அடிமொழிமாற்றென்பதொன் றுகூட்டி ‡ஒன்பதாகவும் உரைப்பாருமுளர். அவையும் இவற்றுள்ளே அடங்குமெனக்கொள்க. இம்முறைவைத்தகாரணமும் காண்க.

(பி - ம்.) [1] விற்பூட்டு. [2] நீக்குமென் றுக்கிய வைந்துமப். (௯௦)

(411.) மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொருள்
அற்றற் றொழுகுமஃ தியாற்றுப் புனலே.

எ - ன், யாற்றுநீர்ப்பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஏனை அடிகளை நோக்காது அடிதோறும் பொருள் அற்றுவருவது யாற்றுநீர்ப்பொருள்கோளாம். எ - று.

வ - று. §"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம், விலைப்பாலிற் கொண்டூன் மிசைவதூஉங் குற்றஞ், சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றங், கொலைப்பாலுங் குற்றமே யாம்." எனவரும்.

(412.) ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை
மாற்றியோ ரடியுள் வழங்கன்மொழி மாற்றே.

எ - ன், மொழிமாற்றுப்பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கருதியபொருளுக்குப் பொருந்தியமொழிகளை ஓரடியுள்ளே மாற்றிச்சொல்லுவது, மொழிமாற்றும். எ - று.

வ - று. ||"சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய, யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப, கானக நாடன் சுனை." எனவருமிதனுள்,

* தொல். எச். அ. † இந்த ஐந்துபொருள்கோளையும் இவற்றின் உதாரணங்களையும் இறையனாரகப்பொருள், ௫௬ - ஆம் சூத்திரவுரையிற்காண்க. ‡ பொருள்கோள் ஒன்பதென்பவர், நேமிநாதமுடையார்; (எச். சூ. க); யாப்பருங்கலவிருத்திமுதலியவற்றிலும் பாக்கக்காணலாம். § நான்மணி. உ௬. || "கரையாட".

சுரைமிதப்ப, அம்மி ஆழ எனவும், யானைக்குநிலை முயற்குநீத்தென வும் ஓரடியுள்ளே மாற்றினவாறுகாண்க; இதனைச் சுண்ணமொழி மாற்றென்று ஈரடியிடத்தேகொள்ளின், ஏனையடிகளுள்ளும் ஏனைப் பாக்களுள்ளும் வரப் பெறுதாமெனமறுக்க. (சுஉ)

**(413.) பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும்**
**வேறு நிரனிறீஇ முறையினு மெதிரினும்**
**நேரும் பொருள்கோ [1]ணிரனிறை நெறியே.**

எ - ன், நிரனிறைப்பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுத லிற்று.

(இ - ள்.) பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லுமாகிய இவற்றை யும் இவற்றிற்குப் பொருளாய் வருவனவற்றையும் வெவ்வேறே அடைவே தொகையொப்பவைத்து வைத்தமுறையேயாதல் எதி ரேறேயாதல் பொருளேற்குமாறு சொல்லைக்கூட்டிப் பொருள்கோ டல், [2]நிரனிறைப்பொருள்கோளாம். எ - று.

எனவே, பெயர்ச்சொல்லும் பொருளும் வேறுநிறீஇயது, பெயர் நிரனிறை; வினைச்சொல்லும் பொருளும் வேறுநிறீஇயது, வினைநிர னிறை; நிறீஇய முறையே பொருள்கொள்வன: முறைப்பெயர் நிரனிறை, முறைவினைநிரனிறை யென்பனவாம்; எதிர்தொடங்கிப் பொருள்கொள்வன: எதிர்ப்பெயர்நிரனிறை, எதிர்வினைநிரனிறை யென்பனவாம். இவ்வாற்றான் நிரனிறை நான்காம்.

வ - று. *"கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி, மதிபவள முத்தமுகம் வாய் முறுவல், பிடிபிணை மஞ்ஞைநடை நோக் குச் சாயல், வடிவினளே வஞ்சி மகள்", *"காமவிதி கண்முக மென்மருங்குல் செய்யவாய், தோமி றுகடினி சொல்லமிழ்தந்-தேம லர்க், காந்தள் குரும்பை கனக மடவாள்கை, யேந்திளங் கொங்கை யெழில்", †"முறிமேனி [3]முல்லை முறுவல் வெறிநாற்றம், வேலுண் கண் வேய்த்தோ ளவட்கு" எனவருமிவை முறைப்பெயர்நிரனிறை.

‡"காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப, போது சேர் தார்மார்ப போர்ச்செழிய - நீதியின், மண்ணமிர்த மங்கையர் தோண் மாற்றுரை யேற்றார்க்கு, நுண்ணிய வாய பொருள்." இது முறைவினைநிரனிறை.

---

* (உ) யா - வி. † திருக்குறள், கககரு. ‡ யா - வி.

*"குன்ற வெண்மணை லேறி நின்றியா, மின்னுங் காண்கும் வம்மோ தோழி, களிறுங் கந்தும் போல நளிகடற், கூம்புங் கலனுந் தோன்றுந், தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே." †"ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும், பாடகமு மூரகமும் பஞ்சரமா-நீடியமால், நின்று னிருந்தான் கிடந்தானிதுவன்றோ, மன்றூர் கலிக்கச்சி மாண்பு", ‡"கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர், குழாஅத்துப் பேதை புகல்", §"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல், கற்றாரோ டேனை யவர்" எனவருமிவை எதிர்ப் பெயர்நிரனிறை.

எதிர்வினைநிரனிறை வந்தவழிக்காண்க.

இதனுள், 'நெறி' என்றமிகையான், ஒருசாரார், மயக்கநிர னிறை, ஒருமுதனிரனிறை, இருமுதனிரனிறை, உய்த்துணர்நிர னிறையெனவும் வேண்டுவரென்க.

அவற்றுள், ||"அம்ம் பவள்ள் வரிநெடுங்க ணுய்வஞ்சிக், கொம்ம் பவள்ள் கொடிமருங்குல் கோங்கி, னரும்ம் பவண்முலை யொக்குமே யொக்கும், கரும்ம் பவள்வாயிற் சொல்," ||"கண்ண் கருவிளை கார் முல்லை கூரெயிறு, பொன்ன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ, மின்ன் னுழைமருங்குன் மேதகு சாயலா, ளென்ன் குறமகளா மாறு," ||"இரங்கு குயின்முழவா வின்னிசையாழ் தேனு, வரங்க மணி பொழிலா வாடும்போலு மிளவேனி, லரங்க மணிபொழிலா வாடு மாயின், மரங்கொன் மணந்தகன்றார் நெஞ்சமென் செய்த திளவே னில்." இவை மயக்கநிரனிறையென்று யாப்பருங்கல முடையார் காட்டினர். பிறவும் வந்தவழிக்கண்டுகொள்க.

||"மீனாடு தண்டேறு வேதிய ராதியா, வானுதை வைந்தொன் பா னுயினவுங் - தேனார், விரைக்கமல வாண்முகத்தாய் வெள்ளை முதலா, வுரைத்தனவு மிவ்வாறே யொட்டு." இது முதல் நிறுத்த முறையானே பின்னும் முற்று நிறுவாது ஒருதிறம் முதலாகவென்று சொன்னமையான் ஒருமுதனிரனிறை. ||"வெண்பா முதலாக வேதிய ராதியா, மண்பால் வகுத்த வருணமா - மொண்பா, வினங்கட்கு மவ்வாறே யென்றுரைப்பர் தொன்னூலன், மனந்திட்பக் கற்றோர் மகிழ்ந்து.", இஃது, இருதிறம் முதலாவென்று சொன்னமையான் இருமுதனிரனிறை. ||"ஆரன் மகமே யனுட மவிட்டமென், றீரி

---

* தொல். அகத். சூ. கக. ந; யா - வி. † இந்தவெண்பா, கணிகண்ணர் பாடியதாக வைஷ்ணவ குருபாரம்பரையால் தெரியவருகின்றது. ‡ திருக்குறள், அசo. § ஷை சகo || (சூ) - யாவி.

ரண்டு மாதியா வெண்ணியநாள் - சீரிய, வெண்பா வகவல் 4கலி வஞ்சி யென்றுரைத்தா, ரெண்பா லறிவோ ரெடுத்து." இது முதற் சிலபொருளையோதி இன்னதற்கு இன்னதென்றானும் இன்னது முத லென்றானும் ஓதாது பா நான்கென்று பொதுப்படவைத்தமையான் உய்த்துணர் நிரனிறை.

(பி - ம்.) 1,2 நிரைநிறைநெறியே; (முற்றுமிப்படியேகொள்க.) 3 முத் தமுறுவல். 4 கலிப்பாவஞ் சிக்குரைத்தார். (௬௩)

(414.) எழுவா யிறுதி நிலைமொழி தம்முட்
பொருணோக் குடையது பூட்டுவில் லாகும்.

எ - ன், பூட்டுவிற்பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுத லிற்று.

(இ - ள்.) பாவின்முதலினும் ஈற்றினுநின்றமொழிகள் தம்மிற் பொருள்நோக்கிநிற்பது, பூட்டுவிற்பொருள்கோளாம். எ - று.

வ - று. *"திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாத, ரிறந்து படிற் பெரிதா மேதம்-உறந்தையர்கோன், றண்ணார மார்பிற் றமிழ்நர் பெருமானைக், கண்ணாரக் காணக் கதவு." எனவரும். (௬௪)

(415.) இடைநிலை மொழியே யேனையீ ரிடத்தும்
நடந்து பொருளை நண்ணுத ருப்பிசை.

எ - ன், தாப்பிசைப்பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுத லிற்று.

(இ - ள்.) பாவின் இடைநின்றமொழி முதலினும் ஈற்றினும் சென்று பொருள்கொள்வது தாப்பிசைப்பொருள்கோளாம். எ - று.

வ - று. †"உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண, வண் ணாத்தல் செய்யா தளறு" இதனுள், ஊனென இடைநின்றமொழி ஏனை ஈரிடத்தும் சென்றவாறு காண்க. (௬௫)

(416.) செய்யு ளிறுதி மொழியிடை முதலினும்
எய்திய பொருள்கோ ளளைமறி பாப்பே.

எ - ன், அளைமறிபாப்புப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

* முத். (புறத். காம.) † திருக்குறள், உருரு.

(இ - ள்.) செய்யுளீற்றுநின்றமொழி இடையினும் முதலினும் சென்று பொருள்கொள்வது அளைமறிபாப்புப்பொருள்கோளாம். எ - று.

வ - று. *" தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் தாமும், சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார் தாமு, [1]மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே முனிவார் தாமும், வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலா தாரே." எனவரும். (மூழ்ந்த - வளைந்த.)

(பி - ம்.) [1] மூழ்க்து. (௬௬)

(417.) யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை
ஏற்புழி யிசைப்பது கொண்டு கூட்டே.

எ - ன், கொண்டுகூட்டுப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) செய்யுளது பலஅடிகளுள்ளும் நின்றமொழிகளைப் பொருளேற்குமிடத்தே ஏற்ப வருவித்துப் பொருள்கொள்வது, கொண்டுகூட்டுப் பொருள்கோளாவது. எ - று.

வ - று. *" ஆலத்து மேல குவளை குளத்துள, வாலி னெடிய குரங்கு." இஃது, ஆலத்துமேல குரங்கு, குளத்துள குவளையென ஈரடியுட் பெயரையும் வினையையும் வேண்டுழிக் கூட்டிக்கொண்டமையான் ஈரடிக்கொண்டுகூட்டு; இதனை மொழிமாற்றென்பாரும், ஈரடிமொழிமாற்றென்பாருமுளர். அவ்வாறுகொள்ளின், ஏனைப்பலவடிகளுள்வரினும் பலபெயர்கொடுக்கவேண்டுமென்க. *" தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல், வெண்கோழி முட்டையுடைத்தன்ன மாமேனி, யஞ்சனத் தன்ன பசலை தணிவாமே, வங்கத்துச் சென்றார் வரின்." இஃது, அஞ்சனத்தன்னபைங்கூந்தல் எ - ம், தெங்கங்காய் போலத் திரண்டுருண்டவெண்கோழி முட்டையுடைத்தன்னபசலை எ - ம் பலவடியிற் சொற்களையுங்கூட்டிக் கொண்டமையால், பலவடிக்கொண்டுகூட்டு. (௬௭)

(418.) ஏற்புழி யெடுத்துடன் கூட்டுறு மடியவும்
யாப்பீ றிடைமுத லாக்கினும் பொருளிசை
மாட்சியு மாறு வடியவு மடிமறி.

* (௩) யா - வி.

எ - ன், அடிமறிமாற்றுப்பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொருளுக்கு ஏற்புடையவிடத்திலே எடுத்துக் கொண்டுவந்து கூட்டியுரைத்தற்குப் பொருந்தும் அடியவும், வேண்டினவடியைப் பாவிற்கு முதல் இடை ஈறாகத் தொடுத்துரைத்தாலும் தம் ஓசையும் பொருளும் தப்பா அழகையுடைய அடியவும் அடிமறி மாற்றுப்பொருள்கோளாவது. எ - று.

வ - று. * "நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார், கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டு, மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம், விடுக்கும் வினையுலந்தக் கால்." † "[1]அரித வித் தாசின் றுணர்ந்தவன் பாதம், விரிகடல் சூழ்ந்த வியன்கண்மா ஞாலத், துரியதனிற் கண்டுணர்ந்தா ரோக்கமே போலப், பெரியத னுவி பெரிது." எனவரும். அடியாகவெடுத்துக்கூட்டிப் பொருள்கோடலின், இவை கொண்டுகூட்டுப்பொருள்கோளில் அடங்காவென்க.

‡ "மாறாக் காதலர் மலைமறந் தனரே, யாறாக் கட்பனி வரலானாவே, யேறா மென்றோள் வளைநெகி ழும்மே, கூறாய் தோழி யான்வாழு மாறே," இதனுள், வேண்டியதோரடியை முதல் இடை ஈறாக உச்சரித்து அடிமறியாதல்காண்க. இஃது, ஏனைப்பாக்களினும் வருமாதலால், அடிமறிமண்டிலவாசிரியத்துள் அடங்காவென்க.

அஃதேல், பாட்டிற்குரிய பொருள்கோள்களை ஈண்டுச்சொல்ல வேண்டிய தென்னையோவெனின், அஃதே! நன்றுசொன்னாய், மேல், ஒருமொழி, தொடர்மொழி, பொதுமொழியென்று சொற்கூறு செய்து அவையாமாறு சொன்னாரன்றே; அவற்றுள், தொடர்மொழி அடிமறிமாற்றொழித்த ஏனை ஏழுபொருள்கோளும்படத் தொடர்வனவுள்வாகலின், ஈண்டுவைத்தாரென்க. அஃதேற் பெரும்பாலும் யாப்பிற்கே உரிமையுடைமையின் ஆண்டேவைக்கற்பாலவெனின், முன்னம் சொல்லறிந்து யாப்பறியவேண்டுதலிற் சொல் அறிவுழி வைக்கவேண்டுமென்க.

---

* நாலடி. ௬௯. ௩. † பழமொழி, ௧.—இதுவரையிற் கிடைத்து வந்த பழமொழிப்பிரதிகளிலெல்லாம் முதற்செய்யுள் காணப்படவேயில்லை; உரைமட்டுமே யுள்ளது. இந்தப்பகுதி பதிப்பிக்கப்பெற்றுவருங்காலத்தில், இச்செய்யுளைக்கண்டவுடன் மிக்க வியப்படைந்து, உரைநடையிற்பதிந்திருந்த ஞாபகத்தைக்கொண்டே, "இந்தவெண்பா பழமொழியின் முதற்செய்யுளாக இருத்தல்வேண்டும்" என்று அன்பர் - பிரஹ்மஸ்ரீ, இ. வை. அநந்தராமையாவர்கள் சொன்னார்கள். ‡ யா - வி.

அவைவருமாறு: பாவஞ்செய்தான் நரகம்புகும், புண்ணியஞ் செய்தான் சுவர்க்கம் புகும், தவஞ்செய்தான் வீடெய்தும் ;—இவை யாற்றுநீர்ப்பொருள்கோள் படத் தொடர்ந்த தொடர்மொழி. அவர் தந்த சோறும் கூறையும் உண்டு உடுத்திருந்தோம் ; இவளும் இவ னும் உமையும் உருத்திரனும் ;—இவை நிரனிறைப்பொருள்கோள் படத்தொடர்ந்த தொடர்மொழி. தந்தையைக்கண்டு தலையின் வணங்கினான் ;—இது, பூட்டுவிற் பொருள்கோள் படத்தொடர்ந்த தொடர்மொழி. நன்மக்களுள்ளும் வீடு பேற்றுலகத்துள்ளுஞ் சென்று இன்பமெய்துவர் அறத்தாற் பாவத்தாற் றீய மானிட ருள்ளும் விலங்கினுள்ளும் நரகத்துள்ளும் சென்று துன்பமெய்து வர் ;—இது, தாப்பிசைப்பொருள்கோள்படத் தொடர்ந்த தொடர் மொழி. செல்வமும் சிறப்பும் [2]கல்வியும் மீக்கூற்றமும் வலியும் வனப்பும் ஆற்றலும் புண்ணியத்தா னும்;—இஃது, அளைமறிபாப்புப் பொருள்கோள் படத் தொடர்ந்த தொடர்மொழி.

மொழிமாற்றுப் பொருள்கோளும் கொண்டுகூட்டுப்பொருள் கோளும்படத் தொடர்ந்த தொடர்மொழி வந்த வழிக்கண்டுகொள்க. பிறவுமன்ன.

(பி - ம்.) [1] அரிறவிர்த்து. [2] கல்வியுந் தேற்றமும். (கூஅ)

மூன்றாவது பொதுவியல் முற்றிற்று.



நான்காவது

# இடைச்சொல்லியல்.



(419.) வேற்றுமை வினைசா ரியையொப் புருபுகள்
தத்தம் பொருள விசைநிறை யசைநிலை
குறிப்பெனெண் பகுதியிற் [1]றனித்திய லின்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்
௫ தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல்.

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்னுதலிற்றோவெனின், ஓத்துநுதலியதூஉம் ஓத்தினது பெயருரைப்பவேவிளங்கும்; ஆயின், இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், இடைச்சொற்களது இயல்பு உணர்த்திற் றுதலான், இடைச்சொல்லியலென்னும்பெயர்த்து. மேலோத்தினோடு இதற்கு இயைபு என்னையோவெனின், ஆதியில் நால்வகைச்சொற் களும் உணர்த்துவாமெனடுத்துக்கொண்டார், அவற்றுள், இரண்டு உணர்த்தி அவற்றின் பின் நான்கிற்கும் பொதுவான அதனைச் சிங்க நோக்காக மேல் வருவனவற்றையும் தழுவ வைத்தார்; அதனால், மேலதனோடு இயைபுடைத்தென்க.

இவ்வோத்தினுள், இத்தலைச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இடைச்சொல்லினது இயல்பும் அதனது பாகுபாடும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வேற்றுமையுருபு வினையுருபு சாரியையுருபு உவம வுருபு இவைகளாகியும் தத்தம்பொருள்காட்டுவனவும் இசைநிறைப் பனவும் [2]அசைநிலையனவும் குறிப்பின்வருவனவுமென்னும் எட்டுப் பகுதியவாய்த் தாமாகத் தனித்து நடத்தலின்றிப் பெயர்வினைகளாம் இரண்டின் பின்னும்முன்னும் ஓரிடத்து ஒன்றுனும் பலவா னும் வந்துநிற்பது, இடைச்சொல்லாவது. எ - று.

பிறிதினிடத்தைச்சார்ந்துநடத்தலான் இடைச்சொல்லெனக.

அவற்றுள் வேற்றுமையுருபாவன: ஐ ஆல் முதலாயின; வினை யுருபாவன: அன் ஆன் அள் ஆள் முதலாயின; சாரியையுருபா

வன : அன் ஆன் இன் அல் முதலாயின ; உவமவுருபாவன : போல புரைய முதலாயின ; தத்தம் பொருள ஆவன : ஏ ஓ முதலாய்ப் பிரி நிலைமுதலாகிய 3பொருளைத் தோற்றிநிற்பன ; இசைநிறையாவன: ஏ ஓ முதலாயின ; அசைநிலையாவன: மியா இக மோ மதி முதலாயின ; குறிப்பாவன : விண்ணென, ஒல்லென, கல்லென முதலாயின.

"அதுமன்", "அதுமற் றம்ம", "அதுமற் றம்ம தானே" எ - ம், *"கொன்னூர்", †"ஓஒ வுவம னுறழ்வின்றி" எ - ம், பெயர்ப் பின்னும் முன்னும் ஒன்றும் பலவும் வந்தன. "வருகதில்", ‡ "வரு கதி லம்ம", "வருகதி லம்ம தானே" எ - ம், "ஓஒ தந்தார்", §"ஏஎ அம்பன் மொழிந்தனள் யாயே" எ - ம் வினைப் பின்னும் முன்னும் ஒன்றும் பலவும் வந்தன. தனித்தும்வருங்கொலென்னும் ஐயமறுத் தற்கு, 'தனித்தியலின்றி' என்றாரென்க.

'வருவது' என்னாது, 'வந்தொன்றுவது' என்றதனால், இவற் றில், தம்மீறுதிரிந்துநிற்கப்பெறுவனவும் சிலவுளவெனக்கொள்க ; அவை, மன் மன்னை, கொன் கொன்னை எனவரும்.

(பி - ம்.) [1] தனித்தியல்பின்றி. [2] அசைநிறைப்பனவும். 3 பொருள் தோன்றி நிற்பன. (க)

(420.) தெரிநிலை தேற்ற மையமுற் றெண்சிறப்
பெதிர்மறை யெச்சம் வினாவிழை வொழியிசை
பிரிப்புக் கழிவாக்க மின்னன விடைப்பொருள்.

எ - ன், மேல், "தத்தம்பொருள" என்றார், அவற்றின்பொரு ளாவன இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தெரிநிலைமுதலானபதினாலும் இவைபோல்வனபிற வும் இடைச்சொற்குப்பொருளாம். எ - று.

இவற்றிற்கு உதாரணம், மேல்வருஞ்சூத்திரங்களுட்காண்க.

'இன்னன' என்றதனாற் சிலவருமாறு :—தொறு தோறு ஞெ ரோ அந்தோ அன்னோ கொல்லோ ஆ அஆ இனி என் ஏன் ஏதில் ந கல் ஒல் கொள் துடும் துண் பொள் கம் கோம் என்பன. இவற்றுள், தொறு தோறு என்பன தாம் புணர்ந்தமொழிப்பொருண்மையினைப் பலவாக்கி ஆங்காங்கென்பதுபடநிற்கும். அது, §"குன்றுதொறாடலு

* குறுந். கஙஅ. † களவழி. ௩கூ. ‡ அகநா. உஎகூ. § முருகு. உகஎ.

நின்றதன் பண்பே", *"சேரி தோறிது செல்வத் தியற்கையே", †"அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ், செறிதோறுஞ் சேயி ழை மாட்டு" எனவரும்.

[1]ஞெரேரென்பது ‡[2]"ஞெரேரெனத், தலைக்கோள் வேட்டங் களிறட் டாஅங்கு." என வெருவுதற்பொருளில் வரும்.

அந்தோ அன்னோ கொல்லோ ஆ ஆவா அஆ என்பன இரக் கங்குறித்துவரும்; §"அந்தோ விசயை பட்டன", ||"அரக்காம்ப னாறும்வா யம்மருங்குற் கன்னோ, பரற்கான மாற்றின கொல்லோ", ¶"ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ", **"ஆஅ வளிய வல வன்றன் பார்ப்பினோடு", **"ஆவா வென்றே யஞ்சின ராழ்ந்தார்", ††"அஆ, விழந்தானென் றெண்ணப் படும்" எனக்காண்க.

'இனி' என்றது காலத்தின் மேலும் இடத்தின்மேலும் 'முன்' என்பது படவரும்; ‡‡"அளிதோ தானே நாணே நம்மொடு, நனிநீ டுழந்தன்று மன்னே யினியே", "இனியெம் மெல்லை" என வரும்.

'என்' என்பது சொல்லுதலென்னும் தொழில்குறித்துப் பெயர் வினைகட்குரிய விகுதிகளுடனேவரும்; §§"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங், கண்ணென்ப வாழு முயிர்க்கு", ||||"மிடியென்னுங் காரணத்தின் மேன்முறைக் கண்ணே, கடியென் றார் கற்றறிந் தார்", ¶¶"செல்வா ரல்லரென் றியானிகழ்ந் தனனே, விடுவா ளல்லளென் றவரிகழ்ந் தனரே" எனக்காண்க.

'ஏன்' என்பது, ஒழிதற்பொருள்குறித்துவரும்; ஏனோன், ஏனோள், ஏனோர், ஏனது, ஏனவை, ஏனைய, ஏனுழி எனக் காண்க.

'ஏதில்' என்பது, அயலென்னும் பொருள் குறித்துவரும்; ஏதிலான், ஏதிலாள், ஏதிலார், ஏதிலது, ஏதில, ***"ஏதிலான் செய்த திறப்பவே", †††"ஏதி லாட்டி யிவளெனப், போயின்று கொல்லோ", ‡‡‡"ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பின்" எனக்காண்க.

---

* சீவக. கஉகூ. † திருக்குறள், கககO. ‡ பொருந. கசக - உ. § சீவக. ௬கஉ. || நாலடி. காம. சு. ¶ புறநா. உ௬ரு. ** (உ) யா - வி. †† நாலடி. செல்வ. கூ. ‡‡ குறு. கசகூ. §§ திருக்குறள், ௬கூஉ. |||| நாலடி. துறவு, சு. ¶¶ குறு. சா௬. *** நாலடி. நட்பிற் பிழை. அ. ††† நற். ருசு. ‡‡‡ திருக் குறள், ககூO.

'ந' என்பது சிறப்புப்பொருட்டு; பெயர்முன் அடுத்துவரும்; நக்கீரர், நச்செள்ளையார், நப்பாலத்தனர், [3]நப்பின்னை, நந்நாகனர், நக்கடகமெனக்காண்க.

'கல்' என்பது முதல் நான்கும் ஓசைப்பொருண்மேல் வரும்; *"கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபின்", †"ஒல்லென் றொலிக்கு மொலிபுன லூரற்கு", "புள்ளுங் [4]கொல்லென வொலி செய்யும்.", ‡"நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து." எனக் காண்க.

'துண்' என்றதுமுதல் நான்கும் குறிப்புப்பொருண்மேல் வரும்; "துண்ணென்னு நெஞ்சமொடு", §"போர்த்ததன் னகல மெல்லாம் பொள்ளென வியர்த்துப் பொங்கி.", ||"பொள்ளென வாங்கே புறம்வேரார்", ¶"கம்மென, வம்பு விரித்தன்ன பொங்கு மணற் கான்யாற்று", "கொட்புறு நெஞ்சிற் கொம்மென வுராஅய்" எனக் காண்க. பிறவுமன்ன.

(பி - ம்.) [1] ஞெரோவென்பது. [2] ஞெரோவென. [3] நப்பின்னை, நந்நாகர், நக்குடகம். [4] கொள்ளெனச்செய்யும். (உ)

## (421.) பிரிநிலை வினவெண் ணீற்றசை தேற்றம் இசைநிறை யெனவா றேகா ரம்மே.

எ - ன், வேற்றுமையுருபுமுதலாயின நான்கும் மேலே சொல்லப்பட்டன; தத்தம்பொருளனவும் இசைநிறைப்பனவும் அசைநிலையும் குறிப்புமாவனவுணர்த்துவான்றொடங்கினர், அவற்றுள், இஃது ஏகாரவிடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருகுழுவின் ஒன்றைப்பிரித்தற்கண்ணும் வினதற்கண்ணும் பலவற்றை அடுக்கி எண்ணற்கண்ணும் ஈற்றிலே பொருள் வேண்டாவிடத்தும் ஒருபொருளைத்துணியுமிடத்தும் ஓசைநிறைக்க வேண்டுமிடத்தும் நிற்றலின், அவ்வப்பெயரான் ஆறு கூற்றதாம், ஏகாரம். எ - று.

வ - று. அவனேகொண்டானென்பது பிரிநிலை; நீயேகொண்டா யென்பது வின; நிலனே நீரே தீயே வளியே என்பது எண்; **"கடல் போற் றோன்றல காடிறந் தோரே" என்பது ஈற்றசை; அவனே

* கலி. ஙி. † ஐந் - ஐம். உஅ. ‡ புறநா. உசஉ. § சீவக. உருக. || திருக்குறள், சஅஏ. ¶ அகநா. கக. ** ஷெ க.

கொண்டான், "உண்டேமறுமை" என்பது தேற்றம்; *"[1]ஏயே யிவ ளொருத்தி பேடியோ வென்றார்" என்பது இசைநிறை.

(பி - ம்.) [1] ஏஏ. (ந)

(422.) ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனவெட் டோவே.

எ - ன், ஓகார இடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒரு சொல்லொழியவரும் ஒழியிசையும் வினாவும் ஒன்றைச்சிறப்பிப்பதும் அறிந்தபொருளை எதிர்மறுப்பதும் [1]தெரிநிலையும் ஒரு பொருட்கழிவும் அசைநிலையும் பிரிநிலையுமென்னும் எட்டுப்பொருட்கூற்றதாம், ஓகாரம். எ - று.

வ - று. கொளலோ கொண்டானென்பது ஒழியிசை; கோடற்குத் தகுமாயினும் கொண்டுய்யப் போயினானல்லனென ஒருசொல் ஒழிபு படவந்தமையின். அவனோ அல்லனோவென்பது வினா. "ஓஒ பெரியன்" என்பது சிறப்பு. யானோகொண்டேனென்பது எதிர் மறை. நன்றோ அன்று, தீதோ அன்றென்பது தெரிநிலை; இடை நிகர்த்ததென்பது தெரித்தமையின். "நைதலொன்றி நல்லறஞ் [2]செய் கின்றிலா, ரோஒ தமக்கோ ருறுதி யுணராரோ" என்பது கழிவு. "சாரனாடநடுநாள், வாரல் வாழியோ வருந்துதும்யாமே"," காணிய வம்மினோ [3]கங்குலது நிலையே" என்பன அசைநிலை; †"முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர், விதைக்குறு வட்டி போதொடு பொதுளப், பொழுதோ [4]தான்வந் தன்றே" என்பது பிரிநிலை.

(பி - ம்.) [1] (க) தெரிவு; (உ) தெரியும். [2] செய்கென்றா லோஒதமக் கோ ருறுதி யுணராரே. [3] மாலையதுநிலையே. [4] கான்வந்தன்றே. (ச)

(423.) வினைபெயர் குறிப்பிசை யெண்பண் பாறினும்
எனவெனு மொழிவரு மென்று மற்றே.

எ - ன், எனவெனவும் என்றெனவும்வரும் இடைச்சொற்க ளின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இந்த ஆறு பொருளினும் எனவென்னும் இடைச் சொல் வரும்; என்றென்னுமிடைச்சொல்லும் இவ்வாறுபொருளி லும் வரும். எ - று.

* சீவக. கூருஉ. † குறு. கருரு.

வ - று. கொள்ளெனக்கொண்டான் எ - து வினை. "ஊரெனப்படுவ துறையூர்" எ - து பெயர்; "விண்ணென விசைத்தது" எ - து குறிப்பு; "ஒல்லென வொலித்தது" எ - து இசை; *"கடலெனக் காற்றெனக் கடுங்கட் கூற்றென, வுடல்சின வுருமென வூழித் தீயென," ஒன்றென இரண்டென மூன்றென நான்கென ஐந்தென ஆறென வேழென எட்டெனத் தொண்டெனப் பத்தென எ - து எண்; "வெள்ளென விளர்த்தது" எ - து பண்பு.

இனி என்றென்பது வருமாறு: கொள்ளென்று கொண்டான் எ - து வினை; ஊரென்று சொல்லப்படுவது உறையூர் எ - து பெயர்; விண்ணென்று விசைத்தது எ - து குறிப்பு; ஒல்லென்றொலித்தது எ - து. இசை; கடலென்று காற்றென்று கடுங்கட்கூற்றென்று எ - து எண்; வெள்ளென்று விளர்த்தது எ - து பண்பு; (வெள் - வெண்மையென்றறிக.) (ரு)

(424.) எதிர்மறை சிறப்பைய மெச்சமுற் றளவை
தெரிநிலை யாக்கமோ டும்மை யெட்டே.

எ - ன், உம்மைஇடைச்சொல்லினது இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்வெட்டுப் பொருளினும் வரும், உம்மென்னு மிடைச்சொல். எ - று.

வ - று. கொற்றன் வருதற்குமுரியன் எ - து எதிர்மறை; வாரானென்பதற்கு முரித்தாகலின். †"குறவரு மருளுங் குன்றம்" எ - து சிறப்பு. பத்தானும் எட்டானுங்கொடு எ - து ஐயம்; ஒன்று துணியாமையின். சாத்தனும் வந்தான் எ - து எச்சம்; அவனையே யன்றிப் பிறரையும் வரவுவிளக்கலின். தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார் எ - து முற்று. ஒன்று மிரண்டும், ஒருகழஞ்சும் இருகழஞ்சும், உழக்கும் ஆழாக்கும், ஒருகோலும் அரைக்கோலுமென்பன அளவை. சாத்தனும் கொற்றனுமென்பது எண். நன்றுமன்று தீதுமன்று எ - து தெரிநிலை; இடைநிகர்த்ததென்பதைத் தெரித்தமையின். நெடியனுமாயினான் எ - து ஆக்கம். (சூ)

(425.) முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்.

இதுவுமது.

(இ - ள்.) முற்றும்மை ஒரோவிடத்து எச்சவும்மைப்பொருட்டுமாம். எ - று.

---

* சீவக. கஎரு. † மலைபடு. உஎரு.

வ - று. 'பத்துங்கொடால்' என்றால், 'அனைத்தும் கொடால்' என்றுமாம்; 'அவற்றுட் சிலகொடு' என்றுமாம். 'எல்லாரும் [1]வந்திலர்' என்றால், 'அனைவரும் வந்திலர்' என்றுமாம்; 'சிலர் வந்தார்' என்றுமாம்.

**(பி - ம்.)** [1] வாராரென்றால் அனைவரும் வாராரென்றுமாம் சிலர் வருவாரென்றுமாம். (எ)

**(426.) செவ்வெ ணீற்றதா மெச்ச வும்மை.**

இதுவுமது.

(இ - ள்.) செவ்வெணின்கண் எச்சவும்மை கொடுக்கின் ஈற்றிலே கொடுக்க. எ - று.

வ - று. "*அடகு புலால்பாகு பாளிதமு முண்ணான், கடல்போலுங் கல்வி யவன்" எனவரும்; அடகும் புலாலும் பாகும் பாளிதமுமுண்ணானென்றறிக. (அ)

**(427.) பெயர்ச்செவ் வெண்ணே யென்றா வெனாவெண் நான்குந் தொகைபெறு மும்மையென் [1]றெனவொ டிந்நான் கெண்ணுமஃ தின்றியு மியலும்.**

எ - ன், [2]பெயரும் இடைச்சொல்லும் விராவுழி நிகழ்வதோர் விதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பெயரிடத்துவருஞ் செவ்வெண்ணும் ஏகாரவெண்ணும் என்றாவெண்ணும் எனாவெண்ணும் ஆகியநான்கும் இறுதித் தொகைபெற்று நடக்கும்; உம்மையெண்ணும் என்றெனெண்ணும் எனவெனெண்ணும் ஒடுவெனெண்ணும் ஆகிய நான்கும் தொகை பெறாது நடக்கும். எ - று.

வ - று. சாத்தன் கொற்றன் இருவரும்வந்தார், சாத்தனே கொற்றனே தேவனே மூவரும் வந்தார், சாத்தனென்றா கொற்றனென்றா இருவரும் வந்தார், சாத்தனெனாக் கொற்றனெனா இருவரும் வந்தாரென முறையே நான்கெண்ணும் தொகை பெற்றவாறு காண்க.

இனி, நிலனும் நீரும் தீயும் நல்ல, சாத்தனென்று கொற்றனென்று தேவனென்று சொன்னவர் வந்திலர், 'நிலனென நீரெனத்

* தோல். இடை. சூ. ௩௬, இள. சே. ௩ : உரை.

தீயென வளியென, 3வளவில் காயமென வைந்தறி பூதம்', "பொன்னொடுந் தேரொடுந் தானையிற் பொலிந்தே" என முறையே நான்கும் தொகையின்றி வந்தவாறு காண்க.

உம்மையால், நிலனும் நீருமிரண்டும் வேண்டுமெனத் தொகை பெறலுமாமென்க.

(பி - ம்.) [1] எனவொடு விந்நான்கு. [2] எண்பெயரும். 3 அளவிலா காயமென வறிபூதம். (கூ)

## (428.) என்று மெனவு மொடுவு மோரோவழி நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்.

எ - ன், இம்மூன்றெண்ணிற்கும் ஆவதோர் விதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்றிடைச்சொல்லும் எண்ணின்கண் ஓரிடத்தே நின்றனவேனும் எண்ணும் பொருள்தொறும் பிரிந்துசெல்லும். எ - று.

வ - று. *"வினைபகை யென்றிரண்டி னெச்சம்" என்றவழி, என்றென்பது ஏனை வினையிடத்தும் செல்லும். †"பகைபாவ மச்சம் பழியென நான்கும்" என்றவழி எனவென்பது ஏனை மூன்றிடத்துஞ்செல்லும். ‡"பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்" என்றவழி ஒடுவென்பது ஏனநாலிடத்தும் செல்லும். (க0)

## (429.) வினையொடு வரினுமெண் ணினைய வேற்பன.

எ - ன், எண்வகையெண்கட்கும் ஆவதோர் விதியுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினையொடு கூடிவருமிடத்தும் எண்கள் மேற்சொன்னவாறே தொகைபெற்றும் பெறாதும் வருவனவாம். எ - று.

'ஏற்பன' எனவே என்றும் எனவும் ஒடுவும் அருகியல்லது வாராவெனக்கொள்க.

வ - று. அறுத்தும் குறைத்தும் சுகிர்ந்தும் வகிர்ந்துமிட்டாரென உம்மையெண் வினையொடுவந்தது. அறுத்தெனக் குறைத்தெனச் சுகிர்ந்தென வகிர்ந்தெனத் தந்தாரென எனவெண் வினையொடு

* திருக்குறள், கூஎச. † ஷை கசகூ. ‡ ஷை கூஎரு.

வந்தது. "மண்டில மழுங்க மலைநிறங் கிளர, வண்டின [1]மலர்பாரந் தூத மிசையே, கண்டற் [2]கானற் குருகின மொலிப்ப" என வினைச் செவ்வெண் வந்தவாறு. சாத்தன்வந்தான், கொற்றன் வந்தான்; இருவரும் வந்தமையாற் கலியாணம் பொலிந்ததென அது தொகை பெற்று வந்தவாறு காண்க. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

(பி - ம்.) [1] மலர்ப்பைந்தாதூதமிசைய. [2] கானங் (கக)

## (430.) விழைவே கால மொழியிசை தில்லே.

எ - ன், தில்லென்னும் இடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்று பொருட்கண்ணும் வரும், தில்லென்னு மிடைச்சொல். எ - று.

வ - று. * வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப், பெறுகதில் லம்ம யானே." பெறுவேனாகவென இது விழைவின் கண் வந்தது. *"பெற்றாங் கறிகதில் லம்மவிவ் வூரே." இது, பெற்ற பின் அறிவதாக எனக் காலத்தின்கண் வந்தது. †"வருகதில் லம்ம வெஞ் சேரி சேர." இது வந்தால், இன்னதொன்று செய்வேனென்னும் சொல்லொழிய வந்தமையின், ஒழியிசைக்கண் வந்தது. (கஉ)

## (431.) மன்னே யசைநிலை யொழியிசை யாக்கம்
## கழிவு மிகுதி நிலைபே றாகும்.

எ - ன், மன்னென்னும் இடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்வாறு பொருட்கண்ணும் வரும், மன்னென்னு மிடைச்சொல். எ - று.

வ - று. ‡"மாலை யென்மனார் மயங்கி யோரே." இஃது அசைநிலைக்கண் வந்தது. "பண்டு கூரியமோர் வாண்மன்." இப்போது கோடிற்றென்றானும், வாய் போயிற்றென்றானும், [1]இளநீர்த்த தாயிற்றென்றானும் ஒருசொல்லொழியவந்தமையின், இஃது ஒழியிசை. "பண்டுகாடுமன்" என்பது இப்பொழுது கயல்பிறழும் வயலாயிற்றென ஆக்கப்பொருட்கண் வந்தது. §"சிறியகட் பெறினே

---

* (உ) குறு. கச † அகநா. உஎசு. ‡ குறு. உ௩ச; கலி. ககக.
§ புறநா. உ௩டு.

பெமக்கீயு மன்னே" எ - து அஃது இப்பொழுது கழிந்ததெனக் கழிவின்கண்வந்தது. *"மன்னு மாதர் பெருங்கற்பென் றறிந்தேன் வாழி காவேரி." இது மிகுதிக்கண்வந்தது. †"மன்னு வுலகத்து மன்னியது புரைமே", "பூமன்னும் பொழில்" எ - து நிலைபேற்றின்கண்வந்தது.

(பி - ம்.) [1] (க) இந்நீர்த்தாய்த்தென்றானும்; (உ) இன்னீர்த்தாயிற்றென்றானும். (கங)

## (432.) வினைமாற் றசை நிலை பிறிதெனு மற்றே.

எ - ன், மற்றென்னும் இடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இம்மூன்று பொருட்கண்ணும் வரும், மற்றென்னுமிடைச்சொல். எ - று.

வ - று. ‡"மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது." இது வினைமாற்று. §"மற்றடிகள் கண்டருளிச் செய்க மலரடிக்கீழ்." இஃது அசைநிலை. ||"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந் துறும்." இது பிறிதென்பதன் மேல் வந்தது. ()

## (433.) மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்.

எ - ன், மற்றையதென்னும் இடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மற்றையதென்னுமிடைச்சொல் சுட்டியதனையொழிய, அதற்கு இனமான பிறிதொன்றினைக் காட்டும். எ - று.

வ - று. பலபொத்தகங் [1]கிடந்துழி, ஒருவன் ஏவுவான் ஏவலாளனை, 'பொத்தகங்கொடுவா' என்றால், அவன் ஒருபொத்தகங் கொடுவந்தவிடத்துத் தான்கருதியது அன்றெனின், அவன், 'மற்றையது கொணா' என்னும்; என்றால், கொணர்ந்ததன் இனமாயதனை அச்சொற் சுட்டிற்றாகலான், கொணர்ந்ததனையொழித்து அதற்கினமான பொத்தகம் கொணருமென்பது.

(பி - ம்.) [1] கிடப்புழி. (கரு)

---

* சிலப் - கானல். ங. † கலி. ருச. ‡ நாலடி. இளமை. க. § சீவக. கஅஎங. || திருக்குறள், ஙஅ0.

(434.) கொல்லே யைய மசைநிலைக் கூற்றே.

எ - ன், கொல்லென்னுமிடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கொல்லென்னுமிடைச்சொல் ஒருபொருட்கண் ஐயப்பாடும் அசைநிலையுமான கூறுபாட்டதாம். எ - று.

வ - று. குற்றிகொல்லோ? மகன் கொல்லோ? என்பது ஐயம். *"[1]பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர், வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் [2]கேளினி" என்பது அசைநிலை.

(பி - ம்.) [1] பிரிவெள்ளி. [2] கேளினீ. (கசு)

(435.) ஒடுவுந் தெய்யவு மிசைநிறை மொழியே.

எ - ன், இவ்விரண்டிடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விரண்டிடைச்சொல்லும் இசைநிறைத்தற்கண் வரும். எ - று.

வ - று. †"முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர், விதைக் குறு வட்டி போதொடு பொதுள" எ - ம், "சொல்லேன் றெய்ய நின்னொடு பெயர்த்தே" எ - ம் வரும். (கஎ)

(436.) அந்திலாங் கசைநிலை யிடப்பொரு ளவ்வே.

எ - ன், இவ்விரண்டிடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விரண்டிடைச்சொல்லும் அசைநிலையாயும் இடப்பொருளவாயும் வரும். எ - று.

வ - று. ‡"அந்திற் கச்சினன் கழலினன்" எ - து அசைநிலை; §"வருமோ சேயிழை யந்திற் கொழுநற் காண்டிய" எ - து அவ்விடத்தென இடப்பொருட்டாய் வந்தவாறு. ||"ஆங்கத், திறனல்ல யாங்கழற யாரை நகுமிம், மகனல்லான் பெற்றமகன்" எ - து அசைநிலை; "ஆங்காங் காயினு மாகக் காண்டக" என்பது இடம். (கஅ)

(437.) அம்ம வுரையசை கேண்மினென் றாகும்.

* கலி. கக. † குறு. கநடு. ‡ அகநா. எசு. § குறு. உகூ. || கலி. அசு.

எ - ன், அம்மவென்னுமிடைச்சொல்லின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அம்மவென்னுமிடைச்சொல், உரையசையாயும் கேண்மினென்னுமுன்னிலை ஏவற்பொருட்கண்ணதாயும்வரும். எ-று.

வ - று. *"செயனின்ற பண்ணினுட் செவிச்சுவைக் கொள்ளாமை, நயனின்ற பொருள்கெடப் புரியறு நரம்பினும், பயனின்று மன்றம்ம காமம்" என்பது உரையசை. †"அம்ம வாழி தோழி" என்பது கேளாயென்னும் பொருட்கண்வந்தது. (கக)

## (438.) மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்.

எ - ன், மாவென்பது இப்பொருட்கண்வருமென்பது உணர்த்துதல் நுதலிற்று

(இ - ள்.) மாவென்னுமிடைச்சொல் வியங்கோட்கண் அசைச்சொல்லாய்வரும். எ - று.

வ - று. "[1]மாயக் கடவுட் குயர்கமா வலனே", ‡"உப்பின்று, புற்கை யுண்கமா கொற்கை யோனே" என வியங்கோட்கண் அசைச்சொல்லாய் வந்தவாறு.

(பி - ம்.) [1] காலக் கடவுட்கு. (உ0)

## (439.) மியாயிக மோமதி யத்தை யித்தை
## வாழிய மாளவீ யாழமுன் னிலையசை.

எ - ன், மியாமுதலிய இடைச்சொற்களின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மியாவும் இகவும் மோவும் மதியும் அத்தையும் இத்தையும் வாழியவும் மாளவும் ஈயும் யாழவுமென்னும் இப்பத்திடைச்சொல்லும் முன்னிலைக்கண் அசைநிலையாய்வரும். எ - று.

வ - று. §"சிலையன் செழுந்தழையன் சென்மியா வென்று, மலையகலான் வாடி வரும்" எ - ம், "தண்டுறை [1]யூரயாங் காண்டிக வெனவே" எ - ம், ||"காமஞ் செப்பாது கண்டது மொழிமோ"

---

* கலி. கசஉ. † நற். கடுஅ ; குறு. க0ச ; ஐங். நக - ச0. ‡ தொல். இடை. சூ. உடு : இள. சே. ந. உரை. § யா - வி. || குறு. உ.

எ - ம், "சென்மதி பெரும" எ - ம், *"மெல்லியற் குறுமக ளுள்ளிச், செல்வ லத்தை" எ - ம், †"வேய்நரல் விடரக நீயொன்று பாடித்தை" எ - ம், ‡"காணியவா வாழிய மலைச்சாரல்" எ - ம், ‡"சிறிது தவிர்ந்தீக மாளநின் [2]பரிசில ருய்ம்மார்" எ - ம், §"சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ" எ - ம், ||"நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின், கைபுனை வல்வின் ஞாணுளர் தீயே" எ - ம் முறையேகாண்க.

(பி - ம்.) [1] ஊரன்காண்டிக. [2] பரிசில ருயிர்மார். (உக)

(440.) யாகா பிறபிறக் கரோபோ மாதிகும்
சின்குரை யோரும் போலு மிருந்திட்
டன்றுந் [1]தாந்தான் கின்று நின் றசைமொழி.

எ - ன், யாமுதலிய அசைநிலையிடைச்சொற்களின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விருபதிடைச்சொல்லும் அசைநிலைமொழிகளாம். எ - று.

வ - று. ¶"வாழ்கநின் கழலடி மைந்த வென்னவே, தோழியா சுவாகதம் போது கீங்கென" எ - ம், **"அறநிழ லெனக்கொண்டா யாய்குடை யக்குடைப், புறநிழற்கீழ்ப் பட்டாளோ விவளிவட் காண்டிகா" எ - ம், ††"மேயு நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றோயோ, ராயனை யல்லை பிறவோ வமரருண், ஞாயிற்றுப் புத்தேண் மகன்" எ - ம், "பிறத்தல் பிணிப்படன் மூத்த விறத்த, திறப்பட்ட நான்கினுந் தீர்விதற் கென்னென, விறத்தலு மாங்கொ லெனக்கு மென் றெண்ணிப், பிறக்கதனுட் செல்லான் பெருந்தவப் பட்டான்" எ - ம், ‡‡"தூதவர் விடாராய்த் துறப்பார்கொ னேதக, விருங்குயி லாலுமரோ" எ - ம், "எரியி னன்ன [2]செந்தலை யன்றில், பிரியின் வாழா தென்போ [3]மன்ற" எ - ம், "விளிந்தன்று மாதவர்த் தெளிந்த வெங் கண்ணே" எ - ம், §§"கண்டிகு மல்லமோ கொண்க நின் கேளே" எ - ம், ||||"சாந்த ஞெகிழி காட்டி, யீங்கா கியவா லென்றிசின்" எ - ம், ¶¶"அளிதோ தானேயது பெறலருங் குரைத்

* புறநா. கககூ. † கலி. ச0. ‡ (உ) இ - வி. ரு. உஎசுு - உரை. § அகநா. சசு. || கலி. எ. ¶ சீவக. க0உக. ** கலி. கக. †† ஷை க0அ. ‡‡ ஷை ருரு. §§ ஐங்குறு. கஉக - உஅ. |||| நற். ருரு. ¶¶ புறநா. ரு.

தே" எ - ம், *"அஞ்சுவ தோரு மறனே யொருவனை, வஞ்சிப்ப தோரு மவா" எ - ம், "வடுவென்ற கண்ணாய் வருந்தினை போலும்" எ - ம், †"ஓராற்று லென்கண் ணிமைபொருந்த வந்திலையே, கூரார்வேன் மாறனென் கைப்பற்ற - வோரா, நனவென் றெழுந்திருந்தே னல்வினையொன் றில்லேன், கனவு மிழந்தொழிந்த வாறு" ‡"அஞ்சீ ரசையியல் கூந்தற்கை நீட்டியா, னெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவட்டன், வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்.", §"தேவாதி தேவ னவன்சேவடி சேர்து மன்றே" எ - ம், ||"பணியுமாமென்றும் பெருமை சிறுமை, யணியுமாந் தன்னை வியந்து" எ - ம், "தகைமிகு 4குழைதருந்தாந் தாவில்சீர்த் தம்மடிக்கண், முகைமிகு மலர்க்கண்ணி" எ - ம், "சாந்துய ரெவ்வ முழந்துறு தண்புன, னீந்தியோர் மாண்பினை தோன்றலி னீதான்" எ - ம், "யான்பிறனளியன் வாழ்வா னுசைப்பட் டிருக்கின் றேனே" எ - ம், ¶"அழலடைந்த மன்றத் 5தலந்தயரா நின்றார், நிழலடைந்தே நின்னையென் றேத்திக் - கழலடைய", ஊரினின்று வந்தார் எ - ம் முறையே வந்தவாறு காண்க.

(பி - ம்.) 1 தந்தான். 2 செழுந்தலை. 3 தெய்ய. 4 குழைதந்தார் தாவில்சீர்த் தம்மடிக்கண். 5 அரந்தையராய். (உஉ)

நான்காவது இடைச்சொல்லியல் முற்றிற்று.



* திருக்குறள், ௩௬௬. † முத். ‡ கலி. ௧0௧. § சீவக. ௧. || திருக்குறள், ௯௭௮. ¶ பு - வெ. வஞ்சி. ௭.

ஐந்தாவது

# உரிச்சொல்லியல்.

**(441.) பலவகைப் பண்பும் பகர்பெய ராகி**
**ஒருகுணம் பலகுணந் தழுவிப் பெயர்வினை**
**ஒருவா செய்யுட் குரியன வுரிச்சொல்.**

என்பது சூத்திரம். இவ்வோத்து என்னுதலியதோவெனின், ஓத்துநுதலியதூஉம் ஓத்தினதுபெயருரைப்பவேவிளங்கும்; ஆயின், இவ்வோத்து என்னபெயர்த்தோவெனின், உரிச்சொற்களது இயல்பு உணர்த்திற்றுதலான், [1]உரிச்சொல்லியலென்னும்பெயர்த்து; மேலோத்தினோடு இதற்கு இயைபுஎன்னையோவெனின், நால்வகைச் சொல்லிற் பின்னின்றது உரிச்சொல்லாதலின், அதனோடு இயைபுடைத்தென்க.

இவ்வோத்தினுள் இத்தலைச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், உரிச்சொற்களது [2]பொதுவியல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பலவேறுவகைப்பட்ட பண்புகளையும் அறிவிப்பனவான பெயர்ச்சொல்லாகி, ஒருகுணத்திற்கே உரியவாயும் பலகுணத்திற்கே உரியவாயும் ஏனைப் பெயர்ச்சொல்லையும் வினைச்சொல்லையுந் தழுவிச் செய்யுட்கே நீங்காதுவரும் கிழமையையுடையன, உரிச்சொல்லாவன. எ - று.

உரியசொல் யாது அஃது உரிச்சொல். பல்வகைப்பண்பென்றது, தொழிற்பண்பும் தழுவுதற்கென்க. ஆயின், 'இருவகைப் பண்பும் பகர்பெய ராகி' என்று [3]சூத்திரஞ்செய்யாதுவைத்து, ஞாபகமாகக் கூறவேண்டுவதென்னையோவெனின், தொழிற்பெயரெல்லாம் உரிச்சொல்லெனப்படாவாதலிற் செய்யுட்கே ஏற்றுவருவன சில கோடற்கும் தொழில் கருவியாற் [4]பெறப்படுதலால் ஏனைப் பண்புகள்போல் ஒருதலையான ஒற்றுமைச் சிறப்பினவல்லவென்பது அறிவித்தற்குமெனக்கொள்க.

வ - று. "உறுபுகழ்", *"தவச்சேய் நாட்டா ராயினும்", †"நனிபேதையே", ‡"புண்கூர்யானை" எ - ம், சாலக்கொண்டான்,

---

* நற். ககரு. † புறநா. உஉஎ. ‡ நற். சுகூ.

தவச்சென்றான், நனிசொன்னான், 5நோய்கூர்ந்தது எ-ம் பெயரொடும் வினையொடும் வந்தவாறுகாண்க. பெயர்வினைகட்கு முன் பின்வருமென்றமையின், ஏற்புழிவருமெனக்கொள்க.

(பி - ம்.) 1 உரிச்சொலோத்தென்னும்பெயர்த்து. 2 பொதுவியல்பு. 3 (க) சூத்திரஞ்செய்யலாகாதுவைத்து; (உ) சூத்திரஞ்செய்யாராகவைத்து. 4 பெறப்பாட்டினால். 5 நோய்கூர்த்தது. (க)

(442.) [1]உயிருயி ரில்லதாம் பொருட்குணம் பண்பே.

எ-ன், மேல், "பண்பு" என்றார், அஃது இஃதென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) உலகத்து உயிருள்ளதும் உயிரில்லாததுமாயடங்கும் இருவகைப்பொருள்களினுடைய குணம் பண்பாவது. எ-று.

(பி - ம்.) 1 உயிருயிரல்லதாம். (உ)

(443.) மெய்ந்நா மூக்கு நாட்டஞ் செவிகளின்
ஒன்றுமுத லாக்கீழ்க் கொண்டுமே லுணர்தலின்
ஓரறி வாதியா வுயிரைந் தாகும்.

எ-ன், மேல், "உயிர்" என்றார், அவ்வுயிர்க்கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மெய்முதலான ஐந்தனுள்ளும் ஒன்றுமுதலாகக் கீழ் நின்றதனையுங்கொண்டு மேல்நின்றது அறிதலான், ஓரறிவுயிர்முதலாக உயிர் ஐந்துகூறும். எ-று. (௩)

(444.) புன்மர முதலவுற் றறியுமோ ரறிவுயிர்.

எ-ன், ஓரறிவுயிராவன உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) மேற்சொன்ன ஓரறிவாதியான உயிர்களுட் புல்லும் மாமுமுதலானவை ஊற்றானறியும் ஓரறிவினையுடைய உயிர்களாம். எ-று. (௪)

(445.) [1]முரணந் தாதிநா வறிவொடீ ரறிவுயிர்.

எ-ன், ஈரறிவுயிராவன உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இப்பியும் நத்துமுதலானவை மெய்யுடனே நாவானுமறியும் அறிவுடன் ஈரறிவினையுடைய உயிர்களாம். எ-று.

(பி - ம்.) 1 (க) முறணந்தாதி; (உ) உறணந்தாதி. (௫)

**(446.) சிதலெறும் பாதிமூக் கறிவின்மூ வறிவுயிர்.**

எ - ன், மூவறிவுயிராவன உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கறையானையும் எறும்பையுமுதலாகவுடையன, கீழி விரண்டொடு மூக்கானுமறியும் அறிவுடன் மூவறிவுடைய உயிர்களாம். எ - று.

இன்னை ஒடுப்பொருளிற் கொள்க. (சு)

**(447.) [1]தும்பிஞெண் டாதிகண் ணறிவிஞ லறிவுயிர்.**

எ - ன், நான்கறிவுயிராவன உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தும்பியும் [2]ஞெண்டுமுதலான உயிர்கள், மேலனவற்றோடு கண்ணானுமறியும் அறிவுடன் நான்கறிவுயிர்களாம். எ - று.

**(பி - ம்.)** [1] தும்பிவண்டாதி. [2] வண்டுமுதலான. (எ)

**(448.) வானவர் மக்க ணரகர் விலங்குபுள்**
**ஆதி செவியறிவோ டையறி வுயிரே.**

எ - ன், ஐயறிவுயிராவன உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவை மேலனவற்றோடு செவியானும் அறியும் அறிவுடன் ஐந்தறிவினையுடைய உயிர்களாம். எ - று.

*"ஒன்றறி வதுவே யுற்றறி வதுவே, யிரண்டறி வதுவே யதனொடு நாவே, மூன்றறி வதுவே யவற்றொடு மூக்கே, நான்கறி வதுவே யவற்றொடு கண்ணே, யைந்தறி வதுவே யவற்றொடு செவியே", "புல்லு மரனு மோரறி வினவே, பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே", "[1]நந்து முரளு மீரறி வினவே, பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே", "சிதலு மெறும்பு மூவறி வினவே, பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே", "ஞெண்டுந் தும்பியு நான்கறி வினவே, பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே", "[2]மாவு மாக்களு மையறி வினவே, பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே" என்றார், ஆசிரியர் தொல்காப்பியனாருமென்க.

அஃதேல், அவர் ஆறறிவுயிரும் ஒன்றுண்டென்றாராலோவெனின், அவர் மனத்தையும் ஒருபொறியாக்கி, அதனான் உணருமக்களையும் விலங்கினுள் ஒருசாரனவற்றையும் ஆறறிவுயிரென்றார்; இவர்

* இதுமுதல், "மாவுமாக்களும்" என்பது இறுதியாக உள்ளவை மரபியற்சூத்திரங்கள்.

அம்மனக்காரியமிகுதிக் குறைவானுள்ள வாசியல்லது அஃது எல்லா வுயிர்க்கும் உண்டென்பார்மதம்பற்றி இவ்வாறுசொன்னாரென்க.

(பி - ம்.) [1] நந்துமுறணும். [2] மக்களுமாவும். (அ)

(449.) உணர்விய லாமுயி ரொன்று மொழித்த
உடன்முத லனைத்து [1]முயிரில் பொருளே.

எ - ன், உயிரில்பொருளாவன உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அறிவுமயமாயுள்ள உயிரொன்றையுமொழிந்துநின்ற உடம்புமுதலான உலகத்துப் பொருள்களெல்லாம் உயிரில்பொருள் களாம். எ - று.

(பி - ம்.) [1] உயிரல் பொருளே. (கூ)

(450.) ஒற்றுமை நயத்தி னொன்றெனத் தோன்றினும்
வேற்றுமை நயத்தின் வேறே யுடலுயிர்.

எ - ன், மேலதற்கு ஒருபுறநடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒன்றுபட்டதன்மையான் ஒன்றுபோலத்தோன்று வனவாயினும் வேறுபட்டதன்மையான் உடலும் உயிரும் தம்முள் வேறாம். எ - று.

இஃது என்னைசொன்னவாறோவெனின், மேல், புல்மர முதல உற்றறியும் ஓரறிவுயிரென்றற்றொடக்கத்தனவானவற்றையே உயி ராக ஒற்றுமைபற்றிச்சொன்னாரெனினும் அவ்வுடல்களும்வேறே உயிர்களும்வேறேயென்றவாறென்க.

ஏகாரம் தேற்றேகாரம். (க0)

(451.) அறிவரு ளாசை யச்ச மானம்
நிறைபொறை யோர்ப்புக் கடைப்பிடி மையல்
நினைவு வெறுப்புவர்ப் பிரக்கநாண் வெகுளி
துணிவழுக் காறன் [1]பெளிமை யெய்த்தல்
துன்ப மின்ப மிளமை மூப்பிகல்
வென்றி பொச்சாப் பூக்க மறமதம்
மறவி யினைய வுடல்கொ ளுயிர்க்குணம்.

எ - ன், உயிர்ப்பண்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அறிவுமுதலான இம்முப்பத்திரண்டும் இவைபோல் வனபிறவும் உடம்பொடுகூடிய உயிர்க்குணமாம். எ - று.

உடம்பொடுகூடிய உயிர்க்குணமெனவே கூடாவுயிரும் உள வென்பதூஉம் அவை இணையவல்லவென்பதூஉம் கொள்க.

வ - று. *"அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா, ரஃதறி கல்லா தவர்.", †"அருளிலார்க் கவ்வுலக மில்லை.", ‡"ஆசை மாக்களோ டந்தணர்க் காகென", §"கல்லாமை யச்சங் கயவர் தொழிலச்சம்", ||"மான முடையார் மனம்", ¶"நிறையுடைமை நீங்காமை வேண் டிற் பொறையுடைமை, போற்றி யொழுகப் படும்", **"ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப், பேர்த்துள்ள வேண்டா பிறப்பு", ††"அற்ற தறிந்து கடைப்பிடித்து", ‡‡"மையல் யானையின் மும்மத மார்ந்து", §§"நினைத்துத்தன் கைகுறைத்தான் றென்னவனும்", ||||"வெறுப்ப வெறுப்பச் செயினும்", ¶¶"உறுவர்ப் பேண லுவர்ப்பின்மை", "இரக்கமி லுள்ளத் தவர்", ***"நாணுடைமை நாடாமை நாரின்மை", †††"வெல்வது, வேண்டின் வெகுளி விடல்", ‡‡‡"சூழ்ச்சி முடிவு துணிவெய்தல்", §§§"அழுக்கா றெனவொரு பாவி", ||||||"அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை", ¶¶¶"எளிய னென்றெள்ளி யுரைப்பின்", ****"எய்த்த மெய்யே னெய்யே னாகி", ††††"துன்ப முற்ற வர்க் கலா, லின்ப மில்லை யாகலி, னன்ப மற்றி யானுனைத், துன்பத் தாற்றொ டக்கினேன்", ‡‡‡‡"இளமை நிலைதளர மூப்போ டிறைஞ்சி", §§§§"இகலே துணையா வெரிதவழச் சீறி", ||||||||"வென்றி வினையா விழுமதிலோர்", ¶¶¶¶"பொச்சாப்புக் கொல்லும் புகழை", *****"ஊக்க முடையா னொடுக்கம்", †††††"மறங்கந் தாக வாளமர்", ‡‡‡‡‡"மாதர் வாண்முக மதைஇய நோக்கே", §§§§§"நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல, தன்றே மறப்பது நன்று" எனவும் முறையேகாண்க. பிறவுமன்ன. (௧௧)

(452.) துய்த்த றுஞ்ச றொழுத லணிதல்
உய்த்த லாதி யுடலுயிர்த் தொழிற்குணம்.

எ - ன், உயிர்த்தொழிற்பண்புணர்த்துதல் நுதலிற்று.

---

* திருக்குறள், ௪௨௭. † ஷை ௨௪௭. ‡ சீவக. ௯௧௧. § நாலடி குடிப். ௫. || ஷை மானம், ௧. ¶ திருக்குறள், ௧௫௪. ** ஷை ௩௫௭. †† ஷை ௯௪௪. ‡‡ சீவக. ௩௭. §§ பழ. ௧௦௨. |||| நாலடி. நட்பிற்பிழை. ௨. ¶¶ சீவக ௨௮௧௯. *** திருக்குறள், ௮௩௩. ††† நான்மணி. ௧௭. ‡‡‡ திருக்குறள், ௬௭௧. §§§ ஷை ௧௬௮. |||||| ஷை ௭௮. ¶¶¶ பு - வெ. காஞ்சி. ௨௪. **** பொருந. ௬௮. †††† சீவக. ௫௭௧௯ ‡‡‡‡ பு - வெ. காஞ்சிப்பொது. ௫. §§§§ ஷை வெட்சி. ௮. |||||||| ஷை உழிஞை. ௩௧ ¶¶¶¶ திருக்குறள், ௫௩௨. ***** ஷை ௪௮௬. ††††† புறநா. ௯௩. ‡‡‡‡‡ அகநா. ௧௩௦. §§§§§ திருக்குறள், ௧௦௮.

(இ - ள்.) மெய் வாய் மூக்குக் கண் செவியென்னும் ஐம்பொறிகளானும் ஊறு சுவை நாற்றம் ஒளி ஒலியென்னும் ஐம்புலன்களையும் நுகர்தலும் உறங்குதலும் பிறரைத்தொழுதலும் வேண்டினவற்றை அணிதலும் மடைத்தொழில் உழவு வாணிகம் கல்வி எழுத்துச் சிற்பமென்னும் ஆறுதொழில்களையுமுயறலும் இவைபோல்வனபிறவும் உடம்பொடுகூடிய உயிர்த்தொழிற்பண்பாம். எ - று.

வ - று. *“தீண்டியுங் கண்டும் பயிற்றியுந் தன்செவியால், வேண்டியுங் கங்குல் விடிவளவு - மீண்டிய, மங்கல மாய நுகர்ந்தான் மறமன்னர், வெங்களத்து வேலுயர்த்த வேந்து”, †“துஞ்சுபுலி யிடறிய சிதடன்போல”, ‡“கையிற்றொழு தார்கழிய மூப்பிற்செவி கேளார், மையலவர் போலமனம் பிறந்தவகை சொன்னார், பைய நடக் கென்றுபசிக் கிரங்கியவர் விடுத்தார், தொய்யின்முலை யவர்கள் கடை தோன்றனனி புக்கான்”, §“பரியக நூபுரம் பாடகஞ் சதங்கை, யரியகங் காலுக் கணிபெற வணிந்து”, ||“உழுது பயன்கொண் டொலிநிரை யோம்பிப், பழுதிலாப் பண்டம் பகர்ந்து - முழுதுணர, வோதி யழல்வழிபட் டோம்பாத வீகையா, னாதி வணிகர்க் கரசு”, ¶“வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க, சொல்லே ருழவர் பகை” எனவரும். பிறவுமன்ன. (௧௨)

(453.) பல்வகை வடிவிரு நாற்றமை வண்ணம்
அறுசுவை யூறெட் டுயிரில் பொருட்குணம்.

எ - ன், உயிரில் பொருட்பண்புணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சதுரம் ஆயதம் வட்டம் முக்கோணம் சிலை துடி [1] தோரை முழா எறும்பு கூன் குறள்முதலான வடிவுகளும், நன்றும் தீதுமான இருவகைநாற்றமும், வெண்மை செம்மை கருமை பொன்மை பசுமையான ஐந்துவண்ணங்களும், கைப்பு புளிப்பு துவர்ப்பு உவர்ப்பு காழ்ப்பு [2] தித்திப்பென்னும் ஆறுசுவைகளும், வெம்மை தண்மை மென்மை வன்மை திண்மை நொய்ம்மை இழுமெனல் சருச்சரையென்னும் எட்டூறும் உயிரில்லாத பொருட்பண்பாம். எ - று.

வ - று. “சதுரம் வட்ட மாயத முக்கோண.....” **“கயற் புலால், புன்னை கடியும் பொருகடற் றண்சேர்ப்ப”, “பிறவிக்

---

* பு - வே. பாடாண். ௧௧. † புறநா. எ௩. ‡ சீவக. உ௫௧௩. § சிலப்- கடல். அ௪ - ௫. || பு - வே. வாகை. ௧0. ¶ திருக்குறள், அ௭௨. ** நாலடி. ௬கை. எ.

குருடனுக் கைவண்ணம் காட்டி", *"அறுசுவையுண்டி", †"நீரின் றண்மையுந் தீயின் வெம்மையும்" எனவரும். பிறவுமன்ன.

(பி-ம்.) [1] சூடி முழா வெறுப்புக்கூன். [2] இனிப்பு. (௧௩)

(454.) தோன்றன் மறைதல் வளர்தல் சுருங்கல்
[1]நீங்க லடைத லடுங்க லிசைத்தல்
ஈத [2]லின்னவவ் விருபொருட் டொழிற்குணம்.

எ-ன், அவ்விரு பகுதிப்பொருட்கும் பொதுவான தொழிற் பண்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) தோன்றல்முதலான ஒன்பதும் இவைபோல்வனபிற வும் மேற்கூறிய உயிர்ப்பொருட்கும் உயிரில்பொருட்குமுரிய தொழிற்பண்பாம். எ-று.

வ-று. (பிள்ளை) + (பிறந்தான், தோன்றினான்); [3](பிறை) + (பிறந்தது, தோன்றிற்று) எ-ம், (சாத்தன்) + (செத்தான், மாய்ந் தான்); கதிர் மறைந்தது, பொருள்மாய்ந்தது எ-ம், சாத்தன்வளர்ந் தான், மரம்பெருத்தது; பிறை வளர்ந்தது, நத்தம் உயர்ந்தது, நிலாப் பரந்தது எ-ம் (வீரன்) + (மெலிந்தான், ஓய்ந்தான்); பிறை தேய் ந்தது, ஒளி மழுங்கிற்று, நூல் நொள்கிற்று எ-ம், ஊரின் நீங்கினான், தமரிற் றீர்ந்தான், கிழத்தியிற் பிரிந்தான்; ஆ ஓடிற்று, இருள் நீங்கிற்று, நோய்தீர்ந்தது, நீர் ஓடிற்று எ-ம், அரசைஅடைந்தான், ஊரைச்சேர்ந்தான்; நீர்வந்தது, காற்றறைந்தது எ-ம், (நம்பி) + (நடுங்கினான், அதிர்ந்தான், தடுமாறினான், சுழன்றான், கூத்தாடினான்) பூமி கம்பித்தது, கொடி ஆடிற்று, சுடர் நடுங்கிற்று எ-ம், (நம்பி) + (சொன்னான், ஆர்த்தான், கூவினான், அழைத்தான், பாடினான்); கடல் ஒலித்தது, மழை முழங்கிற்று, இடி இடித்தது, பறை பட்டது எ-ம், (ஏந்தல்) + (ஈந்தான், பயந்தான், கொடுத்தான்); (மழை) + (உதவிற்று, பயந்தது, விளைந்தது) எ-ம் முறையேகாண்க.

இவ்வுதாரணங்களினாலே அத்தொழில் வேறுபாடுகளெல்லாமறிக.

(பி-ம்.) [1] நீங்க லடுங்க லடைதல். [2] இன்னனவிரு. [3] பிள்ளைபிறந்தது.

(455.) சால வுறுதவ நனிகூர் கழிமிகல்.

எ-ன், ஒருபண்பிற்குரியபல சொல்லுணர்த்துதல் நுதலிற்று.

---

* நாலடி. செல்வ. ௧. † யா-வி.

(இ - ள்.) இவ்வாறுசொல்லும் மிகுதியென்னும் ஒருபண்பை விளக்கும் பெயர்களாம். எ - று.

வ - று. "பருவந்து சாலப் பலர்கொலென் றெண்ணி", *"உறுவளி தூக்கு முயர்சினை மாவின்", †"தவச்சேய் நாட்டா ராயினும்", ‡"நனிபே தையே நயனில் கூற்றம்", §"பொறைநில்லா நோய்கூரப் புல்லென்ற நுதலிவள்", ||"சின்னே காமங் கழிகண் ணோட்டம்" என முறையேகாண்க. (௧௫)

(456.) கடியென் கிளவி காப்பே கூர்மை
விரையே விளக்க மச்சஞ் சிறப்பே
விரைவே மிகுதி புதுமை [1]யாப்பு
வரைவே மன்றல் கரிப்பி னாகும்.

எ - ன், பலபண்பிற்குரியஒருசொல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கடியென்னுஞ்சொல் இப்பதின்மூன்று பொருட்கண்ணும் வரும். எ - று.

வ - று. ¶"ஒண்சுடர் நல்வி லருங்கடி நீவி" எ - து காப்பு. "கடிநுனைப்பகழி" எ - து கூர்மை. **"கடிமாலைசூடி" எ - து நாற்றம். ††"கண்ணாடி யன்ன கடிமார்பன்" எ-து விளக்கம். "[2]கடியாமங்காக்குங் கைவிளக்காகி" எ - து அச்சம். "கடிமலர் மிசைபூத்துக் கம்புளோ டன்ன மார்க்கும்" எ - து சிறப்பு. ‡‡"எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மின்" எ - து விரைவு. "கடுங்கா லொற்றவிற் சுடர்சிறந் துருத்து" எ - து மிகுதி. §§"கடியுண் கடவுட்கிட்ட செழுங்குரல்" எ - து புதிது. ||||"அளந்தறியாப் பலபண்டம், வரம்பறியாமல் வந்தீண்டி, யருங்கடிப் பெருங்காப்பின்" எ-து யாப்புடைய காப்பு. ¶¶"கடித்துக் கரும்பினை" எ - ம், 'ஊர் கடிந்தார்' எ - ம் வரும் இவை வரைதற்கண்வந்தன. "கடிவினை முடிகென நொடியினு ளெணிநனி" எ - து மணத்தின்கண்வந்தது; "கடிமிளகுதின்ற கல்லாமந்தி" எ - து காழ்க்குமிளகென்றவாறு.

(பி - ம்.) [1] யாத்தல். [2] கடியர மகளிர்க்குக் கைவிளக்காகி. (௧௬)

(457.) மாற்ற நுவற்சிசெப் புரைகரை நொடியிசை
கூற்றுப் புகறன்மொழி கிளவி விளம்பறை
பாட்டுப் பகர்ச்சி யியம்பல் சொல்லே.

---

* கலி. அ௪. † நற். ௧௧௫. ‡ புறநா. ௨௨௭. § கலி. ௩. || பதிற். ௨௨. ¶ அகநா. ௭. ** சீவக. ௧௫௪௪. †† ஷை ௨௩௨௭. ‡‡ புறநா. ௯. §§ குறு. ௧௦௫. |||| பட்டின. ௧௩௧-௩. ¶¶ நாலடி. மேன்ம. ௬.

எ - ன், சொற்றொழிற் பண்பாவன உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இப்பதினாறும் சொல்லுதற் றொழிற்பண்பின்மேல் வரும். எ - று.

வ - று. *"கோவலர்வாய், மாற்ற முணர்ந்து", †"இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல", ‡"மீனை றுயர்த்த கொடிவேந் தனை வென்ற பொற்பிற், றானை றனையா னுளன் சீவக சாமியென் பான், வானேற நீண்ட புகழான்சரி தம்மிதனைத், தேனூற நின்று தெருண்டா ரவை செப்ப லுற்றேன்", §"உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன், றீவார்மே னிற்கும் புகழ்", ||"அறங் கரை நாவி னான்மறை முற்றிய", ¶"அஞ்சொற் பெரும்பணைத்தோ ளாயிழையார் தாமொடியும்" **"நசையுநர்க் கடையாநன்பெரு வாயி, லிசையேன் புக்கு", "உற்றது பிறர்கள் கூற வுணர்ந்தனை", "புகன்ற வன்றியும் புறமிக வருமே," ††"காமஞ் செப்பாது கண் டது மொழிமோ", "கிளக்குங் கிளவி பாண கேளினி," ‡‡"மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்", §§"அறல்வாரும் வையையென் றறையுந ருளராயின்," ||||"ஒருவன், செய்தி கொன்றோற் குய்தி யில்லென, வறம்பா டின்றே யாயிழை கணவ", "பழனக் கழனி நீர் நாடன் பாவை வார்த்தை பகர்குற்றேன்", ¶¶"ஏற்றையரிமா னிடி போல வியம்பி னானே" என முறையே காண்க. (௧௭)

**(458.) முழக்கிரட் டொலிகலி யிசைதுவை பிளிறிரை**
**[1]இரக்கழுங் கியம்ப லிமிழ்குளி றதிர்குரை**
**கனைசிலை சும்மை கவ்வை கம்பலை**
**அரவ மார்ப்போ டின்னன வோசை.**

எ - ன், ஒலித்தற்றொழிற்பண்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விருபத்திரண்டும் இவைபோல்வன பிறவும் ஒலித்தற்றொழிற்பண்பின்கண் வரும். எ - று.

வ - று. ***"முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇ", †††"குடிஞை யிரட்டுங் கோடுயர் நெடுவரை", ‡‡‡"ஒல்லென் றொலிக்கு மொலிபுன லூரற்கு", §§§"கலிகெழு கடவுள் கந்தங் கைவிட,"

* சீவக. ௪௩௨. † முருகு. ௧௮௨. ‡ சீவக. ௬. § திருக்குறள், ௨௩௨. || தொல். பாயிரம். ¶ பு - வெ. இருபாற்பெருந். ௧௧. ** பொருந. ௬௬-௭. †† குறு. ௨. ‡‡ நன். எழுத். ௮. §§ கலி. ௩௦. |||| புறநா. ௩௪. ¶¶ சீவக. ௪௩௨. *** புறம். ௧௮. ††† மலைபடு. ௧௪௧. ‡‡‡ ஐந் - ஐம். ௨௮. §§§ புறநா. ௫௨.

"பறையிசை யருவி முள்ளூர்", *"தோல், துவைத் தம்பிற் றுனை தோன்றுவ", †"பிளிறுவார் முரசம்", ‡"இரைக்கு மஞ்சிறைப் பறவைகள்", §"இரங்குமுரசி னினஞ்சால் யானை", ||"இரும்பிழி மாரி யழுங்கன் மூதூர்", ¶"காலை முரசங் கனைகுர லியம்பும்", **"இமிழ்கடல் வளைஇய வீண்டகன் கிடக்கை", ††"குளிறுமுரசங் குணில்பாய", ‡‡"களிறுங் களித்ததிருங் கார்", §§"குமைபுனற் கன்னி", ||||"கனைகடற் றண்சேர்ப்ப", ¶¶"சிலைத்தார் முரசங் கறங்க", ***"தள்ளாத சும்மை மிகுதக்கண நாடு நண்ணி", †††"கவ்வைநீர் வேலி கடிதேகாண்", ‡‡‡"விளைக்கம்பலை மனைச் சிலம்பவும்", §§§"அறைகட லரவத் தானை யச்சுவக்கிரீவன்", ||||||"ஆர்த்தபல் வியக்குழாம்" எனமுறையே காண்க.

இவ்விருவகைப்பண்பும் பெயரையும் வினையையும்விட்டு நிகழாமை காட்டிய உதாரணங்களிலே கண்டுகொள்க.

"பலவகைப் பண்பும் பகர்பெய ராகி" என்றமையான், இவ் விருவகைப்பண்புப் பெயர்களுள்ளும் சில உருபேற்றலும் தனியே வருதலும் உளவெனக்கொள்க. (௧௮)

**(459.) இன்ன தின்னுழி யின்னண மியலும்**
**என்றிசை நூலுட் குணிகுணப் பெயர்கள்**
**சொல்லாம் பரத்தலிற் [1]பிங்கல முதலா**
**நல்லோ [2]ருரிச்சொலி னயந்தனர் கொளலே.**

எ - ன், இவ்வோத்திற்கு உரியதோர் புறநடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்வெழுத்து இவ்விடத்து இவ்வாறுரும், இப்பதம் இவ்விடத்து இவ்வாறுரும், இச்சொல் இவ்விடத்து இவ்வாறுருமென்று இலக்கணஞ்சொல்லுநூலுள் உலகிலுள்ள பொருள்கட்கும் குணங்கட்கும் இன்னதற்கு இன்னதுபெயரென்று தனித்தனியே சொல்லலுற்றால் எனைத்தும் பெருகுதலின், ஈண்டுச் சொல்லாதொழிந்தாம்; அவை பிங்கலமுதலான புலவர்களாற் சொல்லப்பட்ட உரிச்சொற்பனுவல்களுள் விரும்பி அறிந்துகொள்க. எ - று.

---

* புறநா. ௪. † சீவக. ௫௫0. ‡ சூளா. கல்யாண. ௫௧. § புறநா. ௧௩௭. || அகநா. ௧௨௨. ¶ சில. ஆய்ச்சியர். ** புறநா. ௧௧. †† பு - வெ. வஞ்சி. ௧௩. ‡‡ ௸ ௨. §§ சீவக. ௩௧. |||| நாலடி. கல்வி. ௮. ¶¶ புறநா. ௩௪. *** சீவக. ௨0. ††† பு - வெ. காஞ்சி. ௨௩. ‡‡‡ "பூந்தாமரை"—யா - வி. §§§ சூளா. சீயவதை. ௧0௮. |||||| ௸ தூது. ௫௫.

அஃதேல், இச்சொல் இவ்வொருபொருட்குரித்து, இச்சொற் பலபொருட்குரித்தென்று சொல்லல் சொல்லிலக்கணமாகலின், ஈண்டுச் சொல்லாதொழிதல் குன்றக்கூறலென்னுங்குற்றமாம்பிறவெனின், ஆகாது; என்னே? பொருளாவன இவை, குணமாவன இவையென்றும் இவற்றைப்பற்றி இவ்வாறுவரும் சொற்களென்றும் பெயரோத்தினுள்ளும் ஈண்டும் இவற்றின்இலக்கணமெல்லாம்சொல்லுதலானும் முடிவிடங்கூறலானும் அவற்றையும் வேறே ஒருநூலாகவே முன்னோர்சொல்லுதலானும் வடமொழிமுதலான பிறகலைக்கடல்களுள்ளும் வேறேசொல்லுதலானுமென்க.

இது முடிவிடங்கூறல் என்னும் தந்திரவுத்தியாம்.

(பி - ம்.) [1] பிங்கலர்முதலா. [2] உரிச்சொலுள். (கசு)

(460.) **சொற்றொறு மிற்றிதன் பெற்றியென் றனைத்தும்**
**முற்ற மொழிகுறின் முடிவில வாதலிற்**
**சொற்றவற் றியலான் மற்றைய பிறவும்**
**தெற்றென வுணர்த [1]றெள்ளியோர் திறனே.**

எ - ன், இவ்வதிகாரத்துட்சொன்ன பொருட்பகுதிகட்கெல்லாம் ஆவதோர் புறநடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சொற்களையெல்லாம் தனித்தனியே எடுத்து இஃது இன்னசொல் இவ்வாறும், இச்சொல் இப்பொருட்டென்று [2]சொல்லப்புகின் வரம்பின்மையாமாதலின், ஈண்டுச்சொன்னவற்றுடனே சொல்லாதவற்றையும் ஒப்பித்துக்கொண்டு விளங்கஅறிதல் உணர்வுடையோர்க்கு வழக்காவது. எ - று.

இஃது என்சொன்னவாறோவெனின், இவ்வதிகாரத்துட்சொன்ன ஒருமொழியே தொடர்மொழியே பொதுமொழியே திணையே பாலே இடனே வழக்கே செய்யுளே வெளிப்படைநிலையே குறிப்புநிலையே பெயரே வேற்றுமையே வினையே தொகைநிலையே பொருண்மயக்கே தொகாநிலையே வழுவே வழுவமைப்பே காலமே வினாவே செப்பே மரபே இயற்கையே செயற்கையே பொருள்கோளே இடைச்சொல்லே உயிர்ப்பொருளே உயிரில்பொருளே அவற்றின்பண்பே உரிச்சொல்லேயென்றிவற்றுட் சொல்லாதொழிந்தன உளவாகிலும் அவற்றிற்கெல்லாம் இதுவே ஒத்தாகக் கொண்டு செலுத்துகவென்று குற்றம்வாராமல் நூலைப் பாதுகாத்தவாறெனக்கொள்க.

(பி - ம்.) [1] தெளிவோர் திறனே. [2] சொல்லின். (௯0)

